DEDICATED

TO

*The Theosophical Society*
*Adyar, Madras*

AS A TOKEN OF MY GRATITUDE TO IT.

சிவமயம்

# பதிப்புரை.

---

இவ்வுரை நூலின் வரலாறு முகவுரையில் விளங்கக் கூறப்பெற்றது. இரண்டாவது பதிப்பாக அச்சிடப்படும் இந்நூலுக்குப் பதிப்புரையும் என்னாலேயே செய்யப்பெறுகின்றது. இதில், முதற்பதிப்பிற்கண்ட பிழைகள் நீக்கப் பெற்றும், சிலபாடல்களின் உரைகள் திருத்தப்பெற்றும் உள்ளன.

சிதம்பரத்திலிருந்து இறைவழிபாடு கருதி, பாண்டி நாட்டுத் தலங்களுக்குச்சென்று தரிசித்து, திருச்செந்தூருக்குப்போய் வழிபட்டுத்திரும்பிவரும் வழியில், திருநெல்வேலியிலிறங்கிச் சிந்துபூந்துறையில் என்னைக் காணவந்தபோது, என் வேண்டுகைக் கிசைந்து, இந்நூல் அச்சிடும்போது என்னுடன் கூடவிருந்து, செம்மையாகப் பார்வைப்படி பார்த்து உதவிய நண்பரும், சிதம்பரம் செந்தமிழ்ப் போதகாசிரியரும் ஆகிய திருவாளர் கு. வேங்கடாசலம் பிள்ளை யவர்களுக்கு எனது மனமார்ந்த நன்றியை உரிமையாக்குகிறேன்.

இதனைக் கருத்துடன் விரைவில் அச்சிட்டுதவிய கணேசன் அச்சுக்கூடத் தலைவர் கொக்கிரகுளம், திருவாளர் எஸ். சுடலைமுத்துப் பிள்ளை யவர்கட்கும் என் நன்றி உரியது.

எத்துணை முயன்றாலும் அச்சுப்பிழைகள் நேர்ந்தேவிடுகின்றன. இதனை ஓதும் அன்பர்கள் இந்நூலிறுதியிலச்சிட்டிருக்கும் பிழை திருத்தங்களைப் பார்த்து, திருத்திக்கொண்டும், குறியீட்டுப்பிழைகளையும் தெரிந்து திருத்தி ஓதுமாறு கேட்டுக்கொள்ளுகிறேன்.

இங்ஙனம்,

சிந்துபூந்துறை,
உ௦, ஐப்பசித்திங்கள்.

அடியார்க்கடியேன்,
மா. வே. நெல்லையப்ப பிள்ளை.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்.

# முகவுரை.

---

உமாபதிசிவம் தேவார அருள்முறைத்திரட்டு என்னும் இந்நூலில் ௯௯ - தேவாரப் பாட்டுக்கள் அடங்கியிருக்கின்றன. இந்த ௯௯ - தேவாரப் பாட்டுக்களையும் இற்றைக்கு ஏறக்குறைய ௯௦௦ - ஆண்டுகட்கு முன்னர் சிதம்பரத்துக்கு அண்மையிலுள்ள கொற்றவன் குடியில் வாழ்ந்திருந்த உமாபதி சிவாசாரியார் திருஞானசம்பந்த அடிகள், திருநாவுக்கரசு அடிகள், சுந்தரமூர்த்தி அடிகள் ஆகிய மூவர்கள் பாடியருளிய தேவாரப்பாட்டுக்களிலிருந்து தேர்ந்தெடுத்துத் திரட்டியருளினார். இந்தத்தேவார அருள்முறைத் திரட்டானது உமாபதி சிவாசரியாரால் தொகுக்கப்பட்டது என்பதற்கு இரண்டு சான்றுகளுள்ளன. ஒன்று, 'ஞானதீக்கை' யிற் காணப்

---

ஞானதீக்கையிற்காணப்படும் கடைசிச் செய்யுள் வருமாறு:—

"தேசுமிகு மருட்பயின்ற சிவப்பிரகா சத்திற்
றிரிந்துபொதுச் சங்கற்ப நிராகரணத் திருத்தி
யாசிலருள் வினாவெண்பாச் சார்புநூ லாலே
அருளொளிதிற் குறிகூட வளித்து ஞானப்
பூசைதக்க காரணமுன் புகன்றதனிற் புரிந்து
புணர்விக்கச் சிவஞான போதசித்தி வழிநூன்
மாசில்சத மணிக்கோவை முன்னூலிற் சான்று
மருவுதிரு முறைத்திரட்டும் வைத்தனன் மன்
னுயிர்க்கே"

படும் கடைசிச் செய்யுள் ஈற்றடியில் "மருவு திருமுறைத் திரட்டும் வைத்தனன் மன்னுயிர்க்கே" என்று வருவது. மற்றொன்று, திருவருட்பயன் வினாவெண்பாவில் "திருமுறைத் திரட்டுணர்த்துந் தேவே" என்று ஒரு செய்யுளில் வருவதாக இந்தத் தேவார அருள்முறைத்திரட்டு எழுதப் பட்டிருக்கிற ஏட்டில் கடைசியில் எழுதப்பட்டிருப்பது. (இதன் விரிவு சித்தாந்தம் ௧௯௨௦-ஆம் ஏப்ரல் ஸ்ரீ வெளியீடு மலர்-௩ இதழ் ௪-ல் பக்கம் ௭௪—௭௮ பார்க்கவும்.) ஒவ்வொரு அதிகாரத்திலும் அதற்குப் பொருந்திய கருத்துடைய தேவாரப் பாட்டுக்கள் சேர்க்கப்பட்டிருக்கும் முறைமையினாலும், வரன் முறையாக வைக்கப்பட்டிருக்கிற முறைமையினாலும் உமாபதி சிவாசாரியார் போன்ற பெரியாரே இதனைத் தொகுத்திருத்தல் வேண்டுமென்பது தெரியவரும். இவ்விரண்டு முறைமைகளும் இப்பதிப்பிற் சேர்க்கப்பட்டுள்ள **நூல் விளக்கத்திற்** கூறப் பட்டுள்ளன.

உமாபதி சிவாசாரியார் சைவசமய சந்தான குரவர்கள் நால்வருள் ஒருவர். தமிழிலுள்ள சைவசித்தாந்த நூல்கள் பதினான்கில் எட்டுநூல்கள் இவரியற்றியவை. இந்த எட்டு நூல்களில் '**திருவருட் பயன்**' ஒன்று. திருவருட்பயன் என்னும் நூலில் இவர் பதிமுதுநிலை, உயிரவை நிலை, இருண்மல நிலை, அருளது நிலை, அருளுரு நிலை, அறியு நெறி, உயிர் விளக்கம், இன்புறு நிலை, அஞ்செழுத் தருணிலை, அணைந்தோர் தன்மை என்னும் பத்து அதிகாரங்கள் வகுத்து, அதிகாரம் ஒன்றுக்குப் பத்துக் குறட்பாக்களாக நூறு குறட்பாக்கள் பாடியருளினார். இவர் இந்த நூறு குறட்பாக்களிலும் சைவசித்தாந்த உண்மைகள் எல்லாவற்றையும் அடக்கிச் சுருக்கமாகக் கூறியருளினார்.

தங்கள் வேலையின் நிமித்தம் ஓதுதற்கு ஒழிவு காலம் இல்லை என்று கூறுகிற சில அன்பர்கள், சிறிய ஆடி ஒன்று தனக்கு எதிர் முகமாக விருக்கிற பெரிய மலையிலுள்ள பொருள்களை யெல்லாம் தன்னகத்தில் தெரித்துக் காட்டுதல் போலப் பெரியதாயுள்ள சைவ சித்தாந்த உண்மைகளை எல்லாம் தன்னகத்தில் அடக்கிக்கொண் டிருக்கிற இச் சிறிய நூலையாவது, அதனை முன்னே கற்றறிந்தோர்வாய்க் கேட்டு, சைவ சித்தாந்த உண்மைகளைத் தெரிந்து பெரும்பயன் அடையலாம். இத்தகைய சிறப்பு வாய்ந்துள்ள இந் நூலில் அடங்கிய ஒவ்வொரு அதிகாரத்தின் கீழும் அவ்வதிகாரப் பொருளுடன் இயைபுடைய மூவர் தேவாரப் பாட்டுக்களும் தொகுத்து வைக்கப்பட்டுள்ளன. இந்தத் தேவாரப் பாட்டுக்களில் சமயாசாரியர்கள் மூவரும் தாங்கள் அடைந்துள்ள சுவாநுபூதி மெய்யுணர்விலே இயல்பாய் விளங்குகிற சைவ சித்தாந்த உண்மைகளைக் கூறியருளினர். ஆதலால், திருவருட் பயன் பத்து அதிகாரங்களிலும் தொடர்பாகக் கூறப்பட்ட சைவ சித்தாந்த உண்மைகளுக்கு இத்தேவார எத்து பாடல்களிற் கூறப்பட்டிருக்கிற கருத்துக்கள் அநுபவ உரைகளாக விளங்கித் திகழ்கின்றன. திருவருட்பயனை ஓதி, அவற்றின் கருத்துக்களை நன்கு தெளிந்த பின், இத் தேவாரப் பாக்களைப் பொருளுணர்ந்து ஓதுகிறவர்கள் சைவ சித்தாந்த உண்மைகளை நன்கு அறிவார்கள்.

சென்ற 1931-ம் ஞு டிசம்பர் மீ 28உ தூத்துக்குடியில், சைவசித்தாந்த சபையின் 48-வது ஆண்டு விழாவுடன், சென்னைச்சைவசித்தாந்த மகா சமாஜ 26-ம் ஆண்டு விழாவும் சேர்ந்து நடந்தபொழுது, (28—12—31) சமாஜத்தார் தேவார அடங்கன் முறையில் சித்தாந்தக் கருத்தமைந்த நூறு

பாடல்களுக்குப் பதவுரை, விசேடவுரை எழுதித்தரும் சிவப் பெரும் பணியை எனக்குப் பணித்தனர். அச்சிவப் பணியைச் செய்தற்குப் போதிய ஆற்றல் இல்லாதவனாயினும், அப்பணிமீதுள்ள எனது பெரு விருப்பத்தினாலும், அப்பணியை மறுத்தற்கு அஞ்சுதலினாலும், நான் அப்பணியைத் தலைமேற்கொண்டு செய்ய ஒப்புக் கொண்டேன். பின் சமாஜ அமைச்சர், திருவாளர், ம. பாலசுப்பிரமணிய முதலியார் அவர்கள் (பி. ஏ. பி. எல்) அடங்கன் முறையிலிருந்து நூறு தேவார பாட்டுக்கள் தெரிந்தெடுத்து அவற்றிற்கு உரை எழுதுதலைப் பார்க்கிலும், முன்னே உமாபதி சிவாசாரியார் தெரிந்தெடுத்துத் தொகுத்து வைத்திருக்கிற 99-பாட்டுக்களடங்கிய தேவார அருள்முறைத் திரட்டுக்கு உரை எழுதித் தரும்படி பணித்தனர். ஷை 99-தேவாரப் பாட்டுக்களில் சில பாட்டுக்களுக்கு உரை எழுதி, சித்தாந்தப் பத்திரிகையில் ஒவ்வொருதிங்களும் வெளியிடுதற்கு அனுப்பும்படி அவர்கள் எனக்குக் கட்டளை யிட்டார்கள்.

அருள்முறைத் திரட்டுக்கு உரை எழுத நான் ஒப்புக் கொண்டபின் இம்மையிலேயே போரா இயற்கைப் பேரின்ப வாழ்வு பெற்றுத் தங்கள் கரண மெல்லாம் சிவகரணமாம்படி அருளொளியோடு விளங்கி, உலகில் வாழ்ந்து தங்கள் சுவாநுபூதி உணர்வில் விளங்குகிற சைவசித்தாந்த உண்மைகளை உலகம் உய்யும்படி தங்கள் அருள்மொழிகளால் உரைத்த மூவர் தேவாரப் பாட்டுக்களுக்கு, மல இருளில் மூடப்பட்டு அறியாமையில் உழலும் சிறியேன் எங்ஙனம் பொருள் உரைப்பது சாலும் என்று மலைந்து திகைத்தேன். திகைப்பினும் ஏற்றுக்கொண்ட சிவப்பணியைச் செய்யாமல்

விடுப்பது யாங்ஙனம் என்று நினைந்து வருந்துமேனன். பின், அருளுண்மைகள் நிரம்பியுள்ள தேவாரப் பாட்டுக்களுக்குச் சிவனது அருளை நாடித் துணையாகக் கொண்டு, நான் உரை எழுதத் தொடங்கின், அவ்வருள் தானே துணைநின்று உரையை எழுதச் செய்யும் என்று நினைந்து ஒருவாறு தேறி, அருள்முறைத் திரட்டுக்கு உரை எழுதத் தொடங்கினேன். அருளை நாடித் துணைக் கொண்டாலும், இடையிடையே மல [illegible]ம வந்து உரைப்பொருளை விளங்கச் செய்யாதிருத்[illegible]னை, நான் அவ்வுரை எழுதுதற்குப் பட்டபாடு திருவருளே அறியும். ஒவ்வொரு பாட்டிலுமுள்ள சொற்களுக்கும், சொற்றொடர்களுக்கும், அவற்றின் ஊடும், அவற்றிற்கு அப்பாலும் என் மனத்தைச் செலவிடுத்துச் சிந்தனை செய்து அவற்றின் பொருள்களைச் சைவ சித்தாந்த உண்மைகளோடு ஒத்து நோக்கி உரை எழுதி வந்தேன். சில பாட்டுக்களுக்கு ஒருதரம் உரை எழுதியதை நினைந்து பார்த்து அவ்வுரை பிழையுடையதென்று நினைத்து அதனைக் கிழித்துவிட்டுத் திருந்திய உரை எழுதியுள்ளேன். சில பாட்டுக்களுக்கு இவ்வாறு இரண்டாந்தரம் எழுதிய உரையையும் கிழித்து விட்டு மூன்றாவதாகத் திருந்திய உரை எழுதியது முண்டு. எடுத்துக்காட்டாக அருள்முறைத் திரட்டு 39, 46, 63, 89-ம் பாட்டுக்களுக்கு நான் மூன்றாவதாகத் திருத்தி எழுதிய உரையே நிலைத்து நின்றது. இங்ஙனம் எழுதிய உரைகளிலும் கருத்துப் பிழைகள் இருக்குமோ என்று ஐயுற்று, அருள்முறைத் திரட்டு உரைத் தலைப்பிலே (சித்தாந்தம் மலர்-ரு-இதழ்-ச-1932ஆ ஏப்ரல்மீ வெளியீட்டில்) நான் எழுதும் உரையில் காணப்படும் கருத்துப் பிழைகளை அறியும் சித்தாந்த அன்பர்கள் எனக்கு அவற்றைக் காரணத்

துடன் விளக்கி எழுதி அனுப்ப ஒருவேண்டுகோள் எழுதியுள்ளேன். நான் மேலே கூறிய அருள்முறைத் திரட்டுக்கு ஒவ்வொரு திங்களுக்கும் சில பாட்டுக்களுக்கு உரை எழுதி 1932-ம் வருடம் ஏப்ரல்மீ முதல் சித்தாந்தப் பத்திரிகையில் வெளியிடுவதற்கு அனுப்பி வந்தேன். அருள்முறைத் திரட்டுத் தேவார உரை முழுவதும் 1933-ம் வருடம் டிசம்பர்மீ திங்கள் வெளியீட்டோடு திருவருளால் முற்றுப்பெற்றது.

சித்தாந்தத்தில் தொடர்ச்சியாக வெளிவந்த 99 - தேவார உரை முழுவதும் தொகுக்கப்பட்டு, நூல் உருவாக ௫00 - படிகள் வெளியிடப்பட்டன. அந்நூல் 1933 ம் வருடம் டிசம்பர்மீ 29-உ முதல், மூன்று நாட்கள் தஞ்சாவூரில் நடைபெற்ற சமாஜ 28-ஆம் ஆண்டு நிறைவு விழாவின் போது, பொது மக்களுக்கு முதலாவதாக விலைக்கு வழங்கப்பட்டது.

இந்த ௫00 படிகளும் ஏறக்குறைய முழுவதும் செலவாய் விட்டதனால், இந்நூல் இரண்டாம் பதிப்பாகப் பதிக்கப் பெற்றது. இதில் முதலாவது பதிப்பில் நேர்ந்த அச்சுப்பிழைகளும், சொற்பிழைகளும் திருத்தப்பட்டும், சில சைவ சித்தாந்தக் கருத்துக்கள் சேர்க்கப்பட்டும், சில பாட்டுக்களுக்குப் புதிதாக உரை எழுதப்பட்டும் இருக்கின்றன.

சைவ சமயமானது, அதன் உண்மையை அறியாத பலர் நினைப்பதுபோல், ஒருபகுதியார்க்கு மட்டும் உரிய சமயம் (Sectional Religion) அல்ல. அது பலதர அறிவுநிலைகளையுடைய பல்வேறு மக்களுக்கு, அவரவருடைய அறிவுநிலைக்குத் தக்கவாறு 36-தத்துவங்களிலும் வைத்து எண்ணப்படுகிற பலசமயங்கள் வேண்டப்படும் என்ற உண்மையை நன்கு அறிந்து, உலகிலுள்ள உலோகாயதம் உள்ளிட்ட பிறபல

சமயங்களையும் அதனதன் தத்துவப் பகுதியில் வைத்து எண்ணி, அவற்றை யெல்லாம தன்னகத்தே தழுவிக்கொண்டு அவற்றைப் பின்பற்றி நிற்கும் மக்களை 36-தத்துவங்களையும் கடந்து நிற்கும் தன்னிடத்தில் சேர்த்தற்குத் தத்துவப் படி முறைகளாய் இருக்கும் 'உலகப் பொதுச் சமயமாக' (Universal Religion) இருக்கிறது. அது பிற சமயங்கள் எல்லாவற்றையும் தன் அகத்தே வருதற்கு அவற்றைப் படிமுறையாகக் கொண்டு அவற்றின் மேலே வீற்றிருக்கும் "உயர்வுடைய சமய" மென்பது, அதன் உண்மைகள் இக்காலத்தில், சமயப் பிணக்கு. சாதிப் பிணக்கு, நிறப்பிணக்கு, நாட்டுப்பிணக்கு, வகுப்புப் பிணக்கு முதலிய பிணக்குகள் காரணமாக உலகில் நிகழும் பல்வகைப்பட்ட தீமைகளை யெல்லாம் நீக்கி, எல்லா மக்களும் ஒருவருக் கொருவர் யாதொரு பிணக்குமின்றி, அன்புடன் ஒழுகி, இன்ப நலம் அடையச் செய்யும் தகுதி யுடையதா யிருத்தலினாலே நன்கு புலனாகும். "எவ்வுயிரு நீங்கா துறையு மிறைசிவனென், றெவ்வுயிர்க்கு மன்பா யிரு" என்பது அதன் ஒழுக்கக் குறிக்கோளாய் இருத்தலினாலே, அது இக்காலத்தில் உலகில் எங்கும் பகைமைபற்றி நிகழும் அமைதிக் குறைவுகள், கலகங்கள், போர் முதலியவற்றை நீக்கும் வன்மையுடையது. எல்லாரும் இன்புற்றிருக்க நினைப் பதல்லால் வேறொன் றறியு மறிவுடைய மக்கள் இறைவன் திருவடியை அடைந் தின்புறுர் என்பது சைவசமயச் செயன் முறையாகும். *

---

* "எல்லாரும் இன்புற் றிருக்க நினைப்பதுவே அல்லாமல் வேறொன்றறியேன் பராபரமே"

தாயுமான அடிகள்.

இத்தகைய சைவசமய உண்மைகள், வடமொழி வேதாகமங்கள், தமிழிலுள்ள பதினான்கு சைவ சித்தாந்த நூல்கள், திருக்குறள் முதலிய நூல்களிலும் விரிவாகக் கூறப்பட்டிருக்கின்றன. அவற்றை எல்லாம் ஓதியறிந்து, ஒழுகிப் பயனடைதற்கு இக்காலத்தில் வாழும் பெரும்பான்மையான மக்களுக்குப் போதிய காலமும் வசதியும் இன்று. அவர்கள் சைவ சித்தாந்தஉண்மையை எளிதில் அறிவதற்கு நூறு குறட்பாக் கடங்கிய "திருவருட் பயன்" நூலும், மேலே கூறப்பட்டபடி அவற்றின் கருத்துக்களை விளக்கும் 99-தேவாரப்பாட்டுக்கள் அடங்கிய இந்தத் தேவார அருள்முறைத்திரட்டு நூலும் சிறப்புற்று விளங்குவன.

உலக வாழ்வை விரும்பி உலக நெறியில் ஒழுகும் சிவ அன்பர்கள் இவற்றிற் கூறப்பட்ட உண்மைகளை அறிந்து, அறநெறியில் ஒழுகிச் சிவனை வழிபடுவார்களானால், உலக இன்பமும், உலக வாழ்வில் புகழும் அடைந்து சிறப்புற்று வாழ்வார்கள். அவர்கள் தாங்கள் அங்ஙனம் வாழும் உலக வாழ்வுப் பயனாக வீட்டு நெறியில் புகுதற்கு அவாவும் உடையவர்களாவார்கள்.

அருள் நாட்டமும், வீட்டின்பமும், எய்தும்விருப்பமும் உடைய சிவ அன்பர்கள் இவற்றிற் கூறப்பட்ட உண்மைகளை அறிந்தும், சாதனங்களிற் பழகியும் ஒழுகுவார்களானால், அவர்களுக்கு உலக இன்பத்தில் உவர்ப்பும், பேரின்பத்தில் விருப்பும் உண்டாகி, பேரின்பமடைதற்கு வழியுந் தோன்றி, முடிவில்பேரின்பமடைதலாகிய பெரும்பயனும் அடைவார்கள். எல்லாம்வல்ல சிவபெருமான் மேலே கூறிய இருவகை மக்களுக்கும் அவரவருக்குத் தக்கவாறு உலகஇன்பமும்வீட்டின்பமும் உதவி அருள்புரிவாராக.

மா. வே. நெல்லையப்ப பிள்ளை,
31—10—39.

சிவமயம்

# உமாபதி [illegible] தேவார அருள்முறைத்திரட்டு

## மூலமும் உரையும்.

### நூல் விளக்கம்.

காப்பு

குறள் வெண்பா.

அருண்முறைத்தி ரட்டுரையை யன்பதனுற் செப்பக்
கரிமுகவன் பேரருளே காப்பு.

---

தேவார அருள்முறை என்ற சொற்றொடர், தேவாரமாகிய அருள்முறை என இருபெயரொட்டுப் பண்புத்தொகையாய் வாயுளது. தேவாரம் என்ற சொல் தே + ஆரம் என்ற இரண்டு சொற்களாலாகியது. தே - கடவுள் (சிவபெருமான்), ஆரம் - மாலை. அருள் - சிவபெருமானினின்றும் வேறாகாத அருளாற்றல்; முறை-புத்தகம். தேஆரம் என்பது கடவுளாகிய சிவபெருமானுடைய (திருவடிகளிற் சாத்தப்படும்) பூமாலை. திருஞான சம்பந்த அடிகள், திருநாவுக்கரசு அடிகள், சுந்தர மூர்த்தி அடிகளாகிய சைவ சமயாசாரியர் மூவரும் சொற்களாகிய பூக்களைத் தங்கள் அன்பு ஆகிய நாரிலே, வாயாகிய கையினாலே தொடுத்து, ஏத்துரைகளாகச் சிவபெருமான்மேற்

பாடின பாடல்கள், அவனுடைய திருவடிகளில் அணியப்படும் பூமாலைகள் போன்று இனிமை பயத்தலின் தேவாரம் எனப் பட்டன. மூன்று சமயாசாரியர்களும், தங்களுடைய தூய உள்ளத்தில் விளங்குகிற சிவபெருமானது அருளிலே முற்றுந் தோய்ந்து, அவைகளை ஓதும் உலக மக்களுடைய உள்ளத்திலே அருள்ஒளி விளங்கும் பொருட்டு, அவர்கள்மேல் வைத்த அருளாலே அத்தேவாரப்பாட்டுக்களைச் சிவனுரை தங்களுரையாகப் பாடியிருத்தலின், அவை அருள்முறை எனப் பட்டன. ஏழு திருமுறைகளாக விரிந்திருக்கிற ௭௯௭ தேவாரப்பதிகப்பாட்டுக்களிலிருந்து, சந்தானுசாரியர் நால்வரிலொருவராகிய உமாபதி சிவம், ௯௯ தேவாரப்பாட்டுக்களைத் தேர்ந்து திரட்டி, அவைகளைத் தாம்பாடிய திருவருட் பயன் நூலினது பத்துத்தலைப்புக்களின் கீழ்வைத்துச் சிவஅன்பர்கள் எளிதில் ஓதிச் சித்தாந்த உண்மையை அறிந்து உணர்ந்து உய்யும்பொருட்டு ஒரு நூலாகச் செய்திருத்தலால், அந்நூல் உமாபதிசிவம் தேவார அருள்முறைத்திரட்டு என்னும் பெயரால் வழங்கப்படுகின்றது.

உமாபதிசிவாசாரியர், தாம் மெய்கண்டதேவ ரியற்றிய சிவஞானபோத முதனூலுக்குச் சார்பு நூலாகப்பாடிய சிவப்பிரகாசநூலைப் போல, திருவருட்பயன் நூலைப் பொதுஇயல், சிறப்பியல் என்று வகுத்துக்கூறுது, சித்தாந்தவுண்மைகளை ௧-வது "பதிமுதுநிலை" முதல், ௧௦-வது 'அணைந்தோர் தன்மை" வரை, பத்துத்தலைப்புக்களின்கீழ் வைத்து ஒவ்வொரு தலைப்புக்கும் பத்துக்குறட் பாக்களாக நூறு குறட்பாக்களைக் கூறியருளினார். இந்த நூறு குறட் பாக்களும், திருக்குறளின் பாக்கள் போல் ஓதி நெட்டுருப்பண்ணுதற்கு எளியனவாயுள்ளன. அப்பத்துத்தலைப்புக்களின் கீழும்

தேவார அட்டவணையிற் குறித்தபடி தொகுக்கப்பட்டிருக்கிற ௯௯ தேவாரப்பாட்டுக்கள், திருவருட்பயன் நூற்பொருளை யறிந்துணர்தற்குத் துணையாயுள்ளன. அங்ஙனந்துணையாயுள்ள ௯௯ தேவாரப் பாட்டுக்களையும் மக்கள் ஓதிப்பொருளறிந்து அவற்றிலடங்கியுள்ளசைவசித்தாந்த உண்மைகளை அறிந்துணர்ந்தும் நற்பயனடையுமாறு என்னாலியன்றவரை பதவுரையும் விளக்கவுரையும் எழுதியுள்ளேன். பதவுரையை மாத்திரம் நேராயோதினாற் பொழிப்புரையாகும். பதவுரையிற் சொற்பொருள் விளக்கமும், விளக்கவுரையில் வேண்டுமிடங்களி லப்பொருளை விரித்துரைக்கும் விரிவுரையும், இயைபுடைய மேற்கோளுடன், சித்தாந்த உண்மைகளுமடங்கியுள்ளன. தேவாரப் பாட்டுக்களை, அவற்றின் கருத்துக்களை அறிந்துணர்ந்து, அன்பினால் மனங்கசிந்துருகி அடிக்கடி ஓதலானது, பாசிபடுகுள நீரில் கல்லெறித லப்பாசியை நீக்குதல்போல, மனத்திலுள்ள மலமாசினைச் சிறிது சிறிதாய் நீக்கி, அதன்கண் மெல்லமெல்ல அருளொளியைப் பெருக்கிக்கொண்டேவரும் பெருந்தகைமையையுடையது. எவருந்தமது அநுபவத்திற் கண்டறியுமுண்மையிது. பத்து அதிகாரத்தலைப்புக்களின் பொருள் விளக்கம் முறையே கீழே கூறப்படும்.

---

## ௧. பதிமுதுநிலை.

"பதிமுதுநிலை" என்பது பதியினது முதுமையானநிலை எனவிரியும். பதி என்பது இங்கே பொதுஇயல், சிறப்புஇயல் என்ற இருவகை நிலைகளிலுமுள்ள இறைவனைக் குறிக்கின்

றது. பொதுஇயல் என்பது இறைவன் உயிர்க ளின்ப நலமடையும்பொருட்டு ஐந்தொழில் செய்தற்கு, உயிரில்பொரு ளாகிய உலகினோடும், உயிரினோடும் அத்துவிதமா யொன்று பட்டிருக்கும் நிலை. அங்ஙனம் அவன் அவற்றோ டொன்று பட்டிருப்பினும் யாதொரு விகாரமுமடைதலில்லை. பொது இயல், தடத்த லிலக்கணம் என்றும் கூறப்படும். சிறப்பியல் என்பது இறைவன் பிறிதொரு பொருளையுஞ் சாராது உண்மை அறிவு இன்பப்பொருளாய் (சச்சிதானந்தப்பொருளாய்)த் தனித்து நிற்கும் நிலை. சிறப்பியல், சொரூப இலக்கணமென் றும், உண்மைஇயல் என்றும், தன்னியல் என்றும் கூறப்படும். இவ்விரண் டியல்களும் பின்னே கூறுகிறபடி இவ்வதிகாரத் தேவாரப்பாட்டுக்களிற் கூறப்பட்டிருக்கின்றன. முதுமை என்னும் பண்புப்பெயர்ச் சொல்லில் 'மை' விகுதிகெட்டு 'முது' எனநின்றது. முதுமை என்பது பழைமை, அதாவது அநாதியாயுள்ள தன்மை. 'நிலை' என்பது விகாரப்படாது, என்றும் ஒருதன்மைத்தாய் நிற்கும் இயல்பு. இறைவன், உயிரினோடும் உலகினோடும் அநாதியாகவே அத்துவிதமாக நிற்கும்நிலை ' பதிமுதுநிலை'' ஆகும்.

இறைவன், உயிரினோடும் உலகினோடும் அத்துவிதமாய் நிற்கும் நிலையினாலே உயிரில்லாத உலகம் யாதொருபயனும் அடைவதில்லை. இறைவன் நிறைவுடைய பொருளாதலால் ஒருபயனும் வேண்டுவான் அல்லன். அநாதியாகவே ஆணவமலத்தினாலே பிணிப்புண்டிருக்கிற உயிரே, அம்மலப் பிணிப்பி னின்று நீங்கி, அறிவுவிளக்கம் பெற்று, இன்பம் அடைதலாகிய பெரும்பயனை அடைதற்கு உரிய பொருளா கும். இங்கே உயிரென்று சொன்னது மாந்தரை, இந்நூல் மாந்தருக்குக் கூறப்பட்டதாகலின்.

முதல் இரண்டு பாட்டுக்களும், இறைவன், தனது அருளி னாலே உயிரின் பொருட்டுச் செய்யும் ஐந்தொழிலையுங்கூறி, அவனே உயிருக்குக்கட்டு நிலையினும் வீட்டுநிலையினும் களை கணுயுள்ளவனென்று கூறுகின்றன. ௩, ௪, ௫, ௬ பாட்டுக் கள், பேரொளிப் பொருளாயிருக்கிற இறைவனை, உயிரானது கட்டுநிலையில் அறியமுடியாதென்றும், வீட்டுநெறியில் உணர லாமென்றும் கூறுகின்றன. ௭-வது பாட்டு, இறைவன், உலகில் உள்ளும் புறமுமாய் ஊடுருவிநின்று முத்தொழிலுஞ் செய்கின்றான் என்றும், மீளப்படைக்கின்றான் என்றும் கூறு கின்றது. ௮-வது பாட்டு, இறைவனுடைய அழிப்பு (சங்கா ர)த்தொழிலைக் கூறுகின்றது. ௯-வது பாட்டு, அங்ஙனம் அழிப் புத்தொழிலைச் செய்தபின், உலகத்தை மீளப்படைக்கின்ற இறைவன், தன்னை அன்புடன் தொழுகின்றவர்களுடைய வினை யை நீக்குகின்றான் என்று கூறுகின்றது. ௧௦-வது பாட்டு, இறைவனுடைய படைப்புத் தொழிலைக் கூறுகின்றது. ௧௧-வது பாட்டு, இறைவன், முத்தொழில் செய்தற்காக எட்டு உருவங்களைக் கொள்கின்றான் என்று கூறுகின்றது. ௧௨-வது பாட்டு, அங்ஙனம் எட்டுருவங்களைக் கொள்கின்ற இறைவன், அவற்றை எவ்வாறு இயக்குகின்றான் என்று கூறுகின்றது. ௧௩-வது பாட்டு, இறைவனுடைய காத்தற்றொழிலைக் கூறு கின்றது. ௧௪-வது பாட்டு, இறைவனுடைய சிறப்பியலையும், பொது இயலையும், பொது இயல்பால் இறைவன் விகாரம் அடையாமையையும் கூறுகின்றது. ௧௫-வது பாட்டு இறை வன் உயிரைப் பக்குவப்படுத்தற்காக அதற்குத் தனு கரண புவனபோகங்களைக் கொடுத்து மயக்குதலையும், பின் அம்மயக் கத்தை நீக்கித் தெளிவித்தலையும் கூறுகின்றது. இங்ஙனம் இறைவனுடைய முத்தொழிலை ௧, ௨, ௭, ௯, பாட்டுக்கள்,

தொகுத்தும், அ, கo, கஙு பாட்டுக்கள் விரித்தும் கூறுதலையும், கக, கஉ பாட்டுக்கள், அவனுடைய பொது இயலையும், ங, ச, ரு, கு, கச பாட்டுக்கள், அவனுடைய சிறப்பியலையும் கூறுதலையும், கரு-வது பாட்டு, இறைவன், தனது பொது இயலாலும், சிறப்பியலாலும் மாந்தருக்குச் செய்யும் அருட்செயல்களைப் பின் உ-வது அதிகாரப் பாட்டுக்களுக்கு தோற்றுவாயாகக் கூறுதலையும் அறிக.

## உ. உயிரவை நிலை.

உயிரவைநிலை என்பது உயிரினது அவையினது நிலை எனவிரியும். உயிர் என்பதில் உயிர்த்தலை (மூச்சுவிடுதலை)ச் செய்கின்ற ஓரறிவுயிர் முதல் ஆறறிவுயிர்வரை எல்லா உயிர்களும் அடங்கும். அவை என்பது தொகுதி. உயிர்கள் எண்ணிலவா யிருத்தலின் ஆசிரியர் உயிர் நிலை என்னது உயிரவை நிலை என்றார். நிலை என்பது நிற்குமியல்பு. அதாவது, தனித்து நில்லாது சார்ந்த வண்ணமாந்தன்மையுடைய மாந்தர் ஒருபால் உலகினோடும் மற்றொருபால் இறைவனோடும் நிற்கும் இயல்பு ஆகும். அங்ஙனம் மாந்தர் ஒருபால் உலகினைச் சார்ந்து நிற்கும் சகல நிலையில் கருவி கரணங்களோடு சேர்ந்து, சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என்னும் அஞ்சவத்தைப்பட்டு அறிவு அறியாமைகளைப் பொருந்தி நிற்கும் நிலை, அவர்களது பொதுவியலாகும். மாந்தர் மற்றொருபால் சிவத்தினைச்சார்ந்து நிற்கும் சுத்த நிலையிற் கருவி கரணங்களினின்று நீங்கி அருளிலடங்கி மெய்யுணர்வுடையவர்களாய்ச் சிவத்தினோடும் அத்துவிதமா யொன்றுபட்டுச்சிவமாய் நிற்கும் நிலை, அவர்களது சிறப்பியலாகும். இவ்விரண்டு இயல்களும் இந்த அதிகாரப்பாட்டுக்களில்கூறப்பட்டிருக்கின்றன.

ஆசிரியர், மேலை அதிகாரத்தில், இறைவனுனவன் உயிரோடும் உலகத்தோடும் நிற்கும் அநாதி நிலை கூறி, இந்த அதிகாரத்தில், உயிர் உலகத்தோடும் இறைவனோடும் நிற்கும் நிலை கூறுகின்ருர். இதனுல் அதிகார இயைபு விளங்கும்.

க, உ பாட்டுக்கள், இறைவன், மாந்தருக்கு அவர்களது சகல நிலையில் தனுகரண புவன போகங்களைக் கொடுத்து உலக இன்பப்பற்றுதலுக்கு ஏதுவாக மயக்கிஞனென்று கூறுகின்றன. ந, ச, ரு, சு, எ, அ பாட்டுக்கள், அங்ஙனம் இறைவனுல் தனுகரணபுவன போகங்கள் கொடுக்கப் பெற்ற மாந்தர், உலகவாழ்வில் திரோத மலவயப்பட்டு இறைவனைச் சாராது, மனம் ஐம்பொறிகளின்வழி மயங்கி, உலக விடயத்தை நாடி, நுகர்ந்து துன்புறுதலைக் கூறுகின்றன. சு-வது பாட்டில் அவ்வாறு மாந்தர் இறைவனைச் சாரா திருத்தலினுலே அவர்களுக்கு உண்டாகும் தீய குணங்கள் கூறப்பட்டிருக்கின்றன. க௦-வது பாட்டு, அங்ஙனம் துன்புறுகின்ற மாந்தர், அத்துன்பத்திற்கு ஆற்ருது, அத்துன்பத்தை நீக்குகின்றவன் இறைவனே என்றறிந்து, அதனை நீக்கும்பொருட்டு இறைவனை நோக்கித் தம்பால் இரங்கி அருள்செய்ய வேண்டுமென்று கூறுகின்றது. கக-வது பாட்டு, அங்ஙனம் தங்கள் துன்பத்தை நீக்கும் பொருட்டு, இறைவனை வேண்டுகின்ற மாந்தர் அதற்குரிய தவஞ் செய்வாராயின், இறைவன் அவர்கள் சிந்தித்தற்கு எளிதாயிருந்து துன்பத்தை நீக்கிச் சிவலோக இன்பத்தைக் கொடுக்க வல்லவனென்று கூறுகின்றது. இதனுல், மாந்தர் தங்கள் உலக நெறிக்குரிய பொதுவியலி லிருந்து வீட்டு நெறிக் குரிய சிறப்பியலையடையும் வழி கூறப்பட்டது. இந்தப் பாட்டு, மூன்ருவது அதிகாரத்திலுள்ள முதலாவது பாட்

டிற்குத் தோற்றுவாயாக விருக்கிறது. கஉ-வது பாட்டு, அங்ஙனம் தவஞ்செய்யும் மாந்தர், இறைவனை எவ்வாறு வழிபடல் வேண்டுமென்று கூறுகின்றது. இங்ஙனம் மாந்தர், இறைவனால் தனுகரண புவன போகங்களை அடைதலும், தனுகரணபுவன போகங்களை அடைந்த மாந்தர், அவற்றைத் தந்த இறைவனை அறிந்து சாராது, உலகவிடயத்தையே நுகர்ந்து துன்புறுதலும், அங்ஙனம் துன்புற்ற மாந்தர் அத்துன்பத்துக்கு ஆற்றாது, இறைவனை அத்துன்பத்தை நீக்கும்படி வேண்டுதலும், அங்ஙனம் வேண்டிக்கொண்ட மாந்தருடைய துன்பத்தை இறைவன் நீக்கிச் சிவலோக இன்பம் கொடுக்க வல்லானென்பதும், அங்ஙனம் தங்களுக்கு இறைவனே சிவலோக இன்பம் கொடுக்க வல்லானென்பதை அறிந்த மாந்தர், அவனை எங்ஙனம் வழிபடல் வேண்டுமென்பதும் வரன்முறையாக இவ்வதிகாரப் பன்னிரண்டு பாட்டுக்களிலும் கூறப்பட்டிருக்கின்றன.

இங்ஙனம் இவ்வதிகாரத்தில் க-முதல், க0-பாட்டுக்களில் மாந்தருடைய பொதுவியலும், கக, கஉ பாட்டுக்களில் அவர்கள் சிறப்பியலும் கூறப்பட்டிருத்தல் காண்க.

## ங. இருண்மல நிலை.

இருள்மலம்நிலை என்பது இருளாகிய மலத்தினது நிலை என விரியும். இருளாகிய மலம் என்பது புறப்பொருளைக் காணவொட்டாது மறைக்கும் இருள் போல எங்கும் நிறைந்திருக்கிற சிவத்தை மறைத்து அறியாமையைச் செய்யும் ஆணவமலம். நிலை என்பது நிற்குமியல்பு. இருண்மல நிலையென்பது மாந்தருடைய அறிவை அநாதியாய் மறைத்து

அறியாமையைச் செய்யும் ஆணவ மலத்தினது நிலையாகும். மூலமலமாகிய ஆணவமலமே மாந்தருக்குண்டாகும் எல்லாக் கேடுகளுக்கும் காரணமாயிருத்தலினாலும் அதன் வலியைத் தேய்த்து அழிக்கும் பொருட்டே அவர்களுக்கு வருவதாகிய உலக வாழ்வில் மாயை மலமும், வினைமலமும் அதனுடன் கூட்டப்படுதலாலும், ஆசிரியர் மல நிலையென்று பொதுவாகக்கூறாது, ஆணவ மலத்தை மாத்திரம் குறிக்கும் பொருட்டு இருண்மல நிலை என்று கூறினார். ஆதலின் இந்த அதிகாரத்தில் ஆணவ மலத்துடன் மாயை, வினை மலங்களும் அதற்கு இனங்களாகக் கொள்ளப்படும்.

ஆணவமலம் உயிரில்லாத சடப்பொருள் ஆதலால் அதற்குத்தனித்து நிற்பதோர் நிலையில்லை. அதனுடைய நிலையானது உயிரினைச்சார்தல் பற்றியே உள்ளது. உயிரினுடைய கேவலநிலையில் அதனைப்பற்றிநின்று அறிவை முழுதும் மறைத்து நிற்றல் ஆணவமலத்தினது பொது இயலாகும். அப்பொது இயலைப்பற்றி இவ்வதிகாரம் ஒன்றும் கூறுவதில்லை. மாந்தர் தங்கள் சகல நிலையில் கருவி கரணங்களுடன் சேர்ந்து ஏகதேசமாயறியும் பொழுது அவர்களுக்கு விபரீத உணர்வைச் செய்வது ஆணவமலத்தினது சிறப்பியலாகும். இந்த விபரீத உணர்வை நீக்கிப் பேரின்பப் பயனடைதற்காக மாந்தர் செய்யும் தவமுயற்சியையும், அத்தவமுயற்சிக்குத் துணையாக, இறைவன் அவர்கள் கருவி கரணங்களுள் நின்று உணர்த்துதலையும் இவ்வதிகாரம் கூறுகின்றது.

மேலே இரண்டாவது அதிகாரத்தில் மாந்தர் மலப்பிணிப்பினின்று நீங்குதற்கு இறைவன் அவர்களுக்கு மாயையின் வடிவங்களாகிய தனு, கரண, புவன போகங்களைக் கூட்டி

மறைத்தல் செய்தல் காரணமாக, அவர்கள் ஐம்புல விடயங்களிற்சென்று துன்புறுதல் கூறப்படுதலினால் ஆணவமலத்தின் செயல் கூறப்பட்டவாறாயிற்று. அங்ஙனம் ஆணவமலம், மாயையையும், வினையையும் துணையாகக்கொண்டு, மைந்தரை மயக்கி அறியாமையைச் செய்து துன்புறுத்தல் மேலை அதிகாரத்தில் கூறப்பட்டிருத்தலின், இவ்வதிகாரமானது அவ்வாறு மலப்பிணிப்பினால் மயங்கி, விபரீத உணர்வு எய்தித்துன்புறும் மாந்தர், அத்துன்பத்தினின்றும் நீங்கும்பொருட்டு, அதனை நீக்க வல்ல இறைவனைச்சார்ந்து பேரின்பமுறுதற்குச் செய்யும் தவமுயற்சியைக் கூறுகின்றது.

மேலை அதிகாரத்தில், ஆசிரியர், மாந்தர் உலகினோடும், அவ்வுலகினோடு சேர்ந்திருக்கிற இறைவனுடைய அருளோடும் (திரோதான சத்தியோடும்) சேர்ந்து மலப்பிணிப்புறுதலால் உண்டாகும் துன்பத்தையும், அத்துன்பத்தினின்று நீங்கும் வகையையும் கூறி, இந்த அதிகாரத்தில் மாந்தர் அம்மலப் பிணிப்பினின்றும் நீங்கிப் பேரின்பமடையும்பொருட்டுச் செய்யத்தகும் தவமுயற்சியைக் கூறுகின்றார். இதனானே அதிகார இயைபு விளங்கும்.

முதல் இரண்டு பாட்டுக்களும், மாந்தர் பேரின்பமடையும்பொருட்டுச் செய்யத்தகும் தவமுயற்சியைக் கூறுகின்றன. ௩-வது பாட்டு, அங்ஙனம் மாந்தர் செய்கிற தவமுயற்சியால் உண்டாகும் பேரின்பப்பயனைக் கூறுகின்றது. ௪, ௫ பாட்டுக்கள், மாந்தருக்கு அவர்கள் சகல நிலையில் ஆணவமலம் செய்யும் விபரீத உணர்வை நீக்குதற்கு இறைவன் அவர்களறியாது அவர்களுடைய தனுகரணங்களின் உள் நின்று ஊன நடனஞ்செய்துணர்த்துதலைக் கூறுகின்றன. இதனாலே

ச-வது அதிகாரத்திற்குத் தோற்றுவாய் செய்யப்பட்டதாயிற்று. ரு-வது பாட்டு, அங்ஙனம் இறைவன் மாந்தருடைய தனுகரணங்களின் உள்நின்றுணர்த்துதலால் அவர்கள், மின்ஞெளிபோலச் சிறிது அருளொளி விளக்கம்பெற்று இறைவனைச் சிறிதே உணர்தலைக் கூறுகின்றது. இங்ஙனம் இவ்வதிகாரம் மாந்தர் மலப்பிணிப்பினின்றும் நீங்கிப் பேரின்பமடைதற்பொருட்டுச் செய்யத்தகும் தவமுயற்சியையும், அத்தவமுயற்சிக்குத்துணையாக இறைவன் மாந்தருடைய தனுகரணங்களின் உள்நின்று ஓவாது உணர்த்திவருதலையும் கூறுகின்றது.

## ச. அருளது நிலை.

அருள் என்பது இறைவனேடு பிரிப்பின்றி, அத்துவிதமாய் நிற்கும் அருட்சத்தி. நிலை என்பது நிற்கும் இயல்பு. அருளது நிலை என்பது இறைவனேடு பிரிப்பின்றி நிற்கும் அருட்சத்தியின் இயல்பு என்று பொருள்படும்; அதாவது ஆணவமலத்தால் பிணிப்புண்டிருக்கும் உயிரினது நிலையை நோக்கி இரங்கி, அம்மலப்பிணிப்பை நீக்குதற்கு ஏதுவாகத் தொழில் செய்யும் இயல்பு. உலகமெல்லாம் ஒடுங்கியிருக்கும்போது சிவனிடத்து ஒடுங்கியிருக்கும் அருட்சத்தி, சற்றே அவனிடமிருந்து பிரிந்து, உயிரினுடைய மலப்பிணிப்பை நீக்கவேண்டுமென்று பொதுவாக இரக்கங்கொண்டபொழுது பராசத்தி என்று பெயர் பெறும். மாயையினேடு சேராத இந்தப் பராசத்தி உயிரினுடைய பக்குவத்தை அறிந்து தொழில்செய்யத் தொடங்குதற்கு மாயையினேடு சேரும்பொழுது, ஆதிசத்தி அல்லது திரோதானசத்தி என்று பெயர் பெறும். இந்தத் திரோதானசத்தி மறைப்புத் தொழிலைச் செய்வதினுலே திரோதமலம் என்ற பெயரும் பெறும்.

னாகத திரோதானசத்தியிலிருந்து இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்திகள் பிறக்கின்றன. இந்த மூன்று சத்திகளாலும் இறைவன் உயிரின்பொருட்டுப் படைத்தல், காத்தல், அழித்தல்களாகிய முத்தொழில்களையுஞ் சங்கற்ப மாத்திரையானே செய்கின்ருன். இச்சத்திகளே உயிரினுடைய வேட்கை, அறிவு, செயல்களுக்குத் தாரகமாயிருந்து, அது உலகில் எத்தொழிலையுஞ்செய்தற்குத் துணைபுரிந்து வருகின்றன.

ஆசிரியர், மேலே அதிகாரத்தில், உயிர் மலப்பிணிப்பினின்றும் நீங்கிப் பேரின்பம் அடையும்பொருட்டுச் செய்யத்தகும் தவமுயற்சியைக்கூறி, இந்தஅதிகாரத்தில் அம்மலப்பிணிப்பை நீக்கி ஐந்தொழில் செய்யும் அருட்சத்தியின் இயல்பைக்கூறுகின்ருர். இதனுல் இவ்வதிகாரத்தினது இயைபு இனிது விளங்கும்.

முதலாவது பாட்டு, இறைவன், அறநெறியில் ஒழுகும் மாந்தருக்கு, அவர்கள் அறியுந்தரமறிந்து அருளால் அறிவிக்கின்ருன் என்று கூறுகின்றது. உ-வது பாட்டு, திரோதமல வயப்பட்டுத்தன்னை அறியாதிருக்கும் மாந்தருக்கு அறிவு சற்று விளங்கும்படி அவர்களது கிரியாசத்தியை எழுப்புகின்ருன் என்று கூறுகின்றது. ங-வது பாட்டு, திரோதமல வயப்பட்ட மாந்தருக்கு அறிவு விளங்கும்படி இறைவன் அவர்களுடைய உள்ளத்தில் ஊன நடனஞ்செய்துகொண்டிருத்தலைக் கூறுகின்றது. ச-வது பாட்டு, திரோதமல வயப்பட்ட மாந்தருக்கு அவர்கள் அடைகின்ற துன்பத்திஞலே மயங்கினும், முன்னையினும் சிறிது அறிவு விளங்கப்பெற்று, தானே அத்துன்பத்தை நீக்குதற்குத் தாரகமாயுள்ளானென்று தன்னை நோக்கினபொழுது, இறைவன் அவர்களைக்கண்டு "அஞ்சாதே!

நம்மிடம் வா" என்று சொன்னதாகக் கூறுகின்றது. ரு-வது பாட்டு, திரோதமல வயப்பட்ட மாந்தர் முன்னையினும் சிறிது அருளொளி விளங்கப்பெற்று, தங்கள் உள்ளத்தில் இறைவன் இருப்பதை ஐயுற்று உணர்ந்தபொழுது இறைவன் அவர்களோடு அத்துவிதமாய்க் கலந்து நிற்றலை அறிவித்ததாகக் கூறுகின்றது. கூ-வது பாட்டு, திரோதமல வயப்பட்ட மாந்தர் தங்கள் துன்பத்தை நீக்க இறைவனே தாரகமாயுள்ளவனென்று தெளிவாய் அறிந்ததாகக் கூறுகின்றது. எ-வது பாட்டு, அங்ஙனம் இறைவனே தாரகமாயிருக்கின்றானென்று அறிந்த மாந்தர், அவனைத்தொழ உயரிய வாழ்வைத்தாங்கள் அடையலாமென்று அறிந்ததாகக் கூறுகின்றது. அ-வது பாட்டு, அங்ஙனம் இறைவனே தாரகமென்று தெளிவாயறிந்த மாந்தருக்கு, இறைவன் அவர்களது திரோதமலமயக்கத்தை நீக்கி அவர்களுடைய சிந்தையைத் தெளியச்செய்து சிவலோக நெறியை அறிவித்ததாக முடிவிற்கூறுகின்றது. இதனானே அடுத்த ரு-வது அதிகாரத்துக்குத் தோற்றுவாய் செய்யப் பட்டதாயிற்று. இந்த "அருளது நிலை" ப்பாட்டுக்கள், மாந்தர் முறையே ஒன்றின்பின் ஒன்றாய்ச் சிறிது சிறிதாகப்படி முறையில் திரோதமல மறைப்பினின்றும் நீங்கிச் சிவலோகம் அடையும் நெறியை அறிந்ததாகக் கூறுதலை நோக்குக.

## ரு. அருளுரு நிலை.

அருளுரு நிலை என்பது அருள்கொள்ளும் உருவினது நிலை என விரியும். அருள்கொள்ளும் உரு என்பது இறைவனோடு பிரிப்பின்றி நிற்கிற அருட்சத்தி, மாந்தருடைய மலப் பிணிப்பை நீக்கி வீட்டின்பம் அருளுதற்குக் கொள்ளுகின்ற சதாசிவமூர்த்தி, அநந்தேசுவரர், சீகண்டபரமேசுவரர்,

உருத்திரன், மால், நான்முகன் ஆகிய இவர்கள் அருள்வடிவங்கள். மாந்தர் சத்திநிபாதம் அடையும் பருவம்நோக்கி அவர்களுக்குத் தீக்கைசெய்து, வீட்டின்பம் அருளுதற்குக்கொள்ளும் அருள்வடிவங்களும், இந்த அருள் உருவில் அடங்கும். அருளுரு நிலை என்பது அங்ஙனம் அருட்சத்தி, தானாகவும், சத்திநிபாதமடைந்த ஆன்மாக்களை அதிட்டித்து நின்றும், மாந்தருக்கு அருள்செய்யும்பொருட்டுக்கொள்கிற அருட்குரவர்களுடைய இயல்பு. திருக்கோயில்களில் மந்திரநியாசத்தாலும் அன்பர்வழிபாட்டினாலும் அருள் விளங்கப்பெறுகிற சிவலிங்கவடிவங்களும், சிவோகம்பாவனை, அஞ்செழுத்தோதல் முதலிய வழிபாடுகளால் அருள் விளங்கப்பெறுகிற சிவனடியார்களும் அருளுருவங்களே.

ஆசிரியர், மேலை அதிகாரத்தில், அருட்சத்தியானது மாந்தர்களின் உள்நின்று உணர்த்தும் இயல்பைக் கூறி, இந்த அதிகாரத்தில் மாந்தருடைய மலப்பிணிப்பை நீக்குதற்குப் பக்குவம் வந்தபோது, அவர்கள் முன்னே வெளிப்பட்டுத் தோன்றும் அருட்குரவர்களுடைய இயல்பைக்கூறுகின்றார். இவ்வதிகாரத்தில் சிவஞானபோதம் அ-ம் சூத்திரத்தில் கூறப்படுகிற சிவரூபமும் அதனுடன் நிகழும் ஆன்ம தரிசனமும் கூறப்படுகின்றன. இதனானே இவ்வதிகார இயைபு இனிது விளங்கும்.

க-வது பாட்டு, இறைவன், மாந்தருக்குத்தனது அருளுருவில் தோன்றி ஆண்டருளுதலைக் குறிக்கின்றது. (இதில் திருநாவுக்கரசு அடிகள் தமக்கு இறைவன் சூலை நோயை ஏவி, திருவதிகை வீரட்டானேசுர இலிங்கவடிவில் அருள் செய்ததைக் கூறுதல் நோக்குக). உ-வது பாட்டு, இறைவன்,

மாந்தருக்குத் தனது அருள் வடிவில் சிவத்தையடையும் நெறி இதுவெனக்காட்டியதாகக் கூறுகின்றது. (இதிலும் திருநாவுக்கரசு அடிகள் தம்மை இறைவன் சமணசமயத்தினின்றும் மீட்டு, சிவநெறி இது என்று காட்டி ஆண்டருளியதைக் கூறுதலை நோக்குக). ௩-வது பாட்டு, இறைவன், தனது அருள்வழி நின்று தாழ்மையாய் வணங்குகிற மாந்தருக்குப் பேரின்ப நலங் கொடுக்கின்றான் என்று கூறுகின்றது. ௪, ௫ பாட்டுக்கள் இறைவன், தனதருளால் மாந்தரிடம் வேட்கை, அறிவு, செயல்களை நிகழ்த்துகின்றான் எனக்கூறுகின்றன. ௬, ௭ பாட்டுக்கள், இறைவன், மாந்தரது உள்ளத்தில் மலம் நீங்கும்படி அருள் உருவோடு விளங்குகின்றான் என்று கூறுகின்றன.

## ௬. அறியுநெறி.

அறியுநெறி என்பது அறியும் முறைமை என்று பொருள்படும். அறியுநெறி என்ற சொற்றொடர், யார் அறியும்நெறி, யாரை அறியும்நெறி, எவ்வாறு அறியும்நெறி என்ற கருத்துக்களை அவாவிநிற்கும். அக்கருத்துக்களை நிரப்பினால், அறியும் பொருள்களாகிய மாந்தர், அறியப்படும் பொருளாகிய சிவத்தை அருளாலே அறியும் முறைமை என விரிந்து பொருள்படும். மாந்தர் இருதிறனறிவுடையவர்கள். அவர்கள் தனித்து நில்லாது உலகினைச்சார்ந்தாவது, சிவத்தைச்சார்ந்தாவது அறியுந்திறனுடையவர்கள். அவர்கள் உலகில் பொருட்பற்று உயிர்ப்பற்றுக்களை யுடையவர்களாய் வாழ்ந்துவரும் காலத்தில், கருவி கரணங்களைச்சார்ந்து அவற்றால் விளங்கும் ஏகதேசக்கருவியறிவால் (பாச ஞானத்தால்) உலகினை அறிந்து உலகச்சிற்றின்பம் நுகர்கின்றார்கள்.

உலகச்சிற்றின்ப நுகர்வில் உவர்ப்பு வரும் பக்குவம் வந்த காலத்தில், அவர்கள் பேரின்பமடைதற்கு ஏதுவாகிய வீட்டு நெறியிற் செல்லுதற்கு அவாவுகிறார்கள் அப்பொழுது மூன் றி-வது அதிகாரப்பாட்டுக்களில் கூறியபடி, இறைவன் யாதா னுமொரு அருள்வடிவில் அவர்கள் முன் வெளிப்பட்டு வீட்டு நெறி உண்மையை உணர்த்துகின்றான். அங்ஙனம் உணர்த் தப்பட்ட உண்மையைக்கேட்ட மாந்தர், சிந்தித்து அரு ளொளியோடு விளங்குகிற தங்கள் உள்ளத்தில் அறிகிறார்கள். இங்ஙனம் மாந்தர், அருட்குரவனிடம் கேட்டுச்சிந்தித்து அருளாலறியும் முறைமையே, இங்கே அறியுநெறி எனக்கூறப் பட்டது. இவ்வாறு கேட்டலாலும், சிந்தித்தலாலும், ஒரு வாறு நிகழும் அருளறிவால் ஆன்மசுத்தியும், அதனுடனி கழும் சிவதரிசனமும், அவர்களுக்குச் சிவஞானபோதம் கூ-ம் சூத்திரத்தில் கூறுகிறபடி உண்டாகின்றன. கேட்டலாலும், சிந்தித்தலாலும் உண்டாகிற அருளறிவில் இந்நூல் அகூ-வது பாட்டின் உரையில் விளக்கிக் காட்டியபடி கருவியறிவு சிறிது கலந்திருத்தலால் இங்கே கூறப்படுகிற ஆன்மசுத்தியும், சிவ தரிசனமும், கருவியறிவு முற்றிலும் நீங்கினபின் நிகழுகிற தெளிவறிவில் முற்றுப்பெறுகின்றன. இந்தத்தெளிவறிவு எ-ம் அதிகாரப்பாட்டுக்களில் கூறப்படுகின்றது.

ஆசிரியர், மேலை அதிகாரத்தில், இறைவன், அருள்வடி வங்கொண்டு மாந்தருக்கு அறிவிக்கும் முறைமையைக்கூறி, இந்தஅதிகாரத்தில் மாந்தர், தங்களுக்கு அந்த அருட்குரவர் கூறுகிற அருள்மொழியை (உபதேச மொழியை) க்கேட்டுச் சிந்தித்து அறியும் அருளறிவை அடையும் முறைமை கூறு கின்றார். இதனானே அதிகார இயைபு விளங்கும்.

௧-வது பாட்டு, மாந்தர் சிவயோகத்தினாலே இறைவனை உணரும் முறைமை கூறுகின்றது. இம்முறைமையை ஆதாரத்தோடுகூடிய யோகமென்று சொல்லலாம். ௨, ௩, ௪ பாட்டுக்கள், இறைவனை உணர்தலினாலே உலகவிடயப்பற்றை விடுத்த மாந்தர்களுடைய உள்ளத்தில் இறைவன் சிவயோகபோகமாக இன்பமளிக்கின்றான் என்று கூறுகின்றன. இவற்றுள் ௩-வது பாட்டு, மனமானது உலகவிடயத்தை நோக்காது ஒருவகைப் பட்டுச் சிவத்தையே நோக்குதலைக்கூறுதல் குறிப்பிடத்தக்கது. ௫, ௬, ௬ பாட்டுக்கள், இறைவனை உணர்தலினாலே, உலக விடயப்பற்றை விடுத்த மாந்தரது உள்ளத்தில் இறைவன் எப்பொழுதும் பிரியாமலிருக்கின்றான் என்று கூறுகின்றன. எ, அ பாட்டுக்கள், இறைவனை உணர்ந்த மாந்தர்தாம் அடையும் சிவயோக இன்பத்துக்குத்தடையாயுள்ள ஐம்பொறிகள் முதலியவற்றோடு சேர்ந்த மனத்தின் சேட்டையை வெல்லுவார்கள் என்று கூறுகின்றன. ௧௦-வது பாட்டு, இறைவனை உணரும் மாந்தர், இறைவனையே எப்பொழுதும் நினைந்து உருகி வாயாலே வழுத்திக் கொண்டிருப்பார்கள் என்று கூறுகின்றது. ௧௧, ௧௨ பாட்டுக்கள், உலகப்பற்றை விடுத்த மாந்தர் தங்கள் உள்ளத்தில் இறைவன் உடனிருந்து உணர்த்திக் கொண்டிருப்பதை அறிவார்கள் என்று கூறுகின்றன. ௧௩, ௧௪ பாட்டுகள், அங்ஙனம் தங்கள் உள்ளத்தில் உடனிருந்து உணர்த்திக்கொண்டிருக்கும் இறைவனை உணர்ந்த மாந்தர் சிவபோதம் அற்றிருப்பார்கள் என்று கூறுகின்றன.

இவ்வதிகாரப் பாட்டுக்களில், மாந்தர் தங்கள் உள்ளத்தில் சிவயோகத்தால் இறைவனை உணர்தலும், அங்ஙனம் இறைவனை உணர்ந்த மாந்தர்களினுடைய உள்ளத்தில் இறைவன்

சிவயோக போகமாயிருத்தலும், அங்ஙனம் சிவயோக போகம் உணர்ந்த மாந்தர்களினுடைய உள்ளத்தில் இறைவன் எப்பொழுதும் பிரியாதிருத்தலும், அங்ஙனம் தமது உள்ளத்தை விட்டுப் பிரியாதிருக்கும் இறைவனது நிலையையடையும் மாந்தரிடத்தில் மனத்தின் சேட்டை செல்லாதிருத்தலும், அங்ஙனம் மனத்தின் சேட்டையை வெல்லும் மாந்தர், இறைவனை எப்பொழுதும் அன்பாலுருகி நினைத்து வழுத்திக்கொண்டிருத்தலும், அங்ஙனம் இறைவனை நினைந்து கொண்டிருக்கும் மாந்தர், தங்களுடைய உள்ளத்தினுள் இறைவன் நின்று உணர்த்துதலை உணர்தலும், அங்ஙனம் இறைவன் உள்நின்று உணர்த்துதலை உணரும் மாந்தர் சிவபோதம் அற்றிருத்தலும் ஒன்றுக்கொன்று ஏற்றமாக, வரன்முறையில் வைத்துக் கூறப்பட்டிருத்தல் காண்க.

## எ. உயிர் விளக்கம்.

உயிர் விளக்கம் என்பது உயிரது, விளக்கம் எனவிரியும். உயிர் என்பது இங்கே மேலைச்சூத்திரத்தில் கூறப்பட்டவாறு ஆன்ம சுத்தியும், சிவதரிசனமும் பெற்ற ஆன்மாவைக் குறிக்கின்றது. விளக்கம் என்பது மலப்பிணிப்பினால் உளதாகிய அறியாமையினின்றும் நீங்கி, அருள் ஒளியோடு விளங்கி நிற்றல். உயிர்விளக்கம் என்பது ஆன்ம சுத்தியையும், சிவ தரிசனத்தையும் அடைந்த உயிர் அருளொளியோடு விளங்கி, அருளில் அடங்கி, யான், எனது என்னுஞ்செருக்கறுதலாகும். இவ்வதிகாரம், சிவஞானபோதம் ௧௦-ம் சூத்திரத்தில் கூறப்பட்ட நிராதார சிவயோக நிலையைக் கூறுகின்றது. மலப்பிணிப்பு நீங்கி அறிவு விளக்கம் பெறுதல் ஒவ்வொரு மாந்தருக்கும் அவரவர் பக்குவத்துக்குத் தக்கவாறு வெவ்வேறாக

இருத்தலின், இவ்வதிகாரத்தின் தலைப்பை ஆசிரியர் "உயிரவை விளக்கம்" என்று கூறாது "உயிர் விளக்கம்" என்று கூறினார்.

ஆசிரியர், மேலே அதிகாரத்தில் மாந்தர், ஆன்ம சுத்தியும், அதனுடனிகழும் சிவதரிசனமும் ஒருவாறு அடையும் வகையைக்கூறி, இந்தச்சூத்திரத்தில் மாந்தர் அருளில் அடங்கி,யான், எனது என்னுஞ்செருக்கற்று அந்த ஆன்ம சுத்தியும், சிவதரிசனமும் முற்றப்பெற்று விளங்குதலைக் கூறுகின்றார். இதனால் அதிகார இயைபும் இனிது விளங்கும்.

க, உ, ங பாட்டுக்கள், இறைவனை சிவயோகத்தால்ஒன்றி நின்று உணரும் மாந்தர், அவனைவிட்டு எப்பொழுதும் பிரியாதிருக்கும் உணர்வினையுடையவர் என்று கூறுகின்றன. ச, ரு, எ பாட்டுக்கள், அங்ஙனம் இறைவனைப் பிரியாதிருக்கிற உணர்வினையுடைய மாந்தர், தங்களுக்கு இறைவன் சிவயோக இன்பமாகிய துரியஇன்பம் அளித்தலை உணர்வார்கள் என்று கூறுகின்றன. கூ, கக பாட்டுக்கள், இறைவனையே அன்பினால் உருகி நினைந்து வழுத்தும் மாந்தர், அவனை நினைப்பு மறப்புமின்றி. யான், எனது என்னுஞ்செருக்கற்று, எப்பொழுதும் நினைந்துகொண்டிருப்பார்கள் என்று கூறுகின்றன. அ-வது பாட்டு, அங்ஙனம் யான் எனது என்னுஞ்செருக்கற்று நினைந்துகொண்டிருக்கும் மாந்தர், தாங்கள்செய்யும் பணியெல்லாம் இறைவனது பணியாளாகச் செய்யும், பணியாகக் கருதுவார்கள் என்று கூறுகின்றது. கூ-வது பாட்டு, யான் எனது என்னுஞ்செருக்கற்று இறைவனோடு கலந்திருக்கும் மாந்தர் ,இறைவனது அருளாலன்றி ஒன்றையும் சிந்தையில் நினையாமல் எவ்வுயிருக்கும் இன்ப நலனையே

நினைத்துக்கொண்டிருப்பார்கள் என்று கூறுகின்றது. க0-வது பாட்டு, யான் எனது என்னுஞ்செருக்கற்று, இறைவனையே எப்பொழுதும் நினைந்துகொண்டிருக்கும் மாந்தருக்குப் பிறவித்துன்பம் இல்லை என்று கூறுகின்றது. கஉ-வது பாட்டு, அங்ஙனம் யான் எனது என்னுஞ்செருக்கற்று,இறைவனையே நினைந்துகொண்டிருக்கும் மாந்தர், இறைவன் முத்தொழில் செய்தலையும் உணர்வார்கள் என்று கூறுகின்றது.

இவ்வதிகாரப் பாட்டுக்களில் மாந்தர், இறைவனோடு சிவயோகத்தால் ஒன்றிநின்று தங்கள் உள்ளத்தில் அவனை விட்டுப் பிரியாதிருக்கும் உணர்வுடையராதல்; அங்ஙனம் பிரியாதிருக்கும் மாந்தர், தங்களுக்கு இறைவன் சிவயோக இன்பம் அளித்தலை உணரும் மாந்தர், யான், எனது என்னுஞ் செருக்கற்று, இறைவனை எப்பொழுதும் நினைந்துகொண்டிருத்தல்; அங்ஙனம் நினைந்துகொண்டிருக்கும் மாந்தர், தங்கள் பணியெல்லாம் இறைவன் பணியாகச் செய்தல்; அங்ஙனம் தங்கள் பணியெல்லாம் இறைவன் பணியாகச் செய்யும் மாந்தர் அருள்வயப்பட்ட தங்கள் சிந்தையில் எவ்வுயிரும் இன்பமடைய நினைத்தல்; அங்ஙனம் நினைந்துகொண்டிருக்கும் மாந்தருக்குப் பிறவித்துன்பம் இலதாதல்; அங்ஙனம் பிறவித்துன்பமற்ற மாந்தர், இறைவனோடு அத்துவிதமாய்ச்சேர்ந்து அவன் முத்தொழில் செய்தலை உணர்தல்; ஆகிய இக்கருத்துக்கள் முறையே ஒன்றுக்கொன்று ஏற்றமாய்க் கூறப்பெற்றன.

## அ. இன்புறு நிலை.

இன்புறு நிலை, இன்பு—உறும்—நிலை ஆக மூன்று சொற்களா லாகியது. இன்பு-இன்பம், அதாவது பேரின்பம். உறு

தல்- அடைதல். நிலை என்றுமொரு தன்மைத்தாயுள்ள இயல்பு. இன்புறு நிலை என்பது மேலைச் சூத்திரத்தில் கூறியபடி அருள் ஒளியிலடங்கிய யான் எனது என்னுஞ் செருக்கற்றுத் தூய அருளொளியாய் விளங்குகிறமாந்தர், இறைவனோடு இரண்டறக் கலந்து, அவன் திருவடி நிறைவிலடங்கிப் பேரின்பமடையு மியல்பு என்று பொருள்படும். இந்தப் பேரின்பம் ஆன்ம லாபம் என்றும், சிவப்பேறு என்றும், திருவடிப் பேறு என்றும், நேயத்தழுந்தல் என்றும் சித்தாந்த நூல்களிற் கூறப் படும். இது சிவஞானபோதம் கக-ம் சூத்திரத்தில் "அயரா வன்பி னரன்கழல் செலுமே" என்பதில் கூறப்படுகின் றது. இதுவே மாந்தர் நிட்டைஉணர்வினால் உலகவாழ்வின் பெரும் பயனாக முடிவில் அடையப்பெறும் சிவபோகம்.

ஆசிரியர், மேலையதிகாரத்தில் மாந்தர், அருள்ஒளியில் அடங்கி, யான் எனது என்னுஞ் செருக்கற்றுத் தூய அரு ளொளியாய் விளங்கி, சிவதரிசனம் கண்டு சிவயோகஞ் செய் தலைக் கூறி, இந்த அதிகாரத்தில் அச்சிவயோகத்தால் அடை யப்பெறும் சிவப்பேறாகிய இன்புறும் நிலையைக் கூறுகின்றார். இதனானே இவ்வதிகார இயைபு இனிது விளங்கும்.

இவ்வதிகாரத்திலுள்ள ஐந்து பாட்டுக்களும், மேலை அதிகாரத்திற் கூறப்பட்டபடி சிவயோக நிலையை யடைந்த மாந்தர் சிவனை அடைந்து, பேரா இயற்கைப் பேரின்ப வாழ்வு பெறுதலைக் கூறுகின்றது. இந்தப் பேரின்ப வாழ்வுணர்வு பிறரால் கேட்டறியப்படாத பெருந்தகைமையுடைய தாதலி னால் இப்பாட்டுக்களில் ஒன்றுக்கொன்று ஏற்றமும் வேற்றுமை யும் கூறுதல் முடியாது.

## ௯. அஞ்செழுத்தருணிலை

அஞ்செழுத்தருணிலை என்பது, அஞ்செழுத்தாகிய அருளினது நிலை எனவிரியும். இங்கே அஞ்செழுத்தென்பது சிகார முதலாகத் தொடங்கும் சூக்கும அஞ்செழுத்து. இந்த அஞ்செழுத்தில் நடுவிலுள்ள யகாரமாகிய உயிருக்குச் சிவ பெருமானுடைய ஊனநடன அருட்செயலால் முன்னை மகார மாகிய ஆணவ மலமும், நகாரமாகிய மறைப்பு மலமும் நீங்கு தலும், பின்னைச் சிவபெருமானுடைய ஞான நடன அருட் செயலால் உயிர், வகாரமாகிய அருளிலடங்கி, சிகாரமாகிய சிவத்தை அடைதலும் உண்டாதலால் அஞ்செழுத்தே அருள் எனப்பட்டது. அருள் என்பது இங்கே சிவன் திருவடி நீழலைக் குறிக்கின்றது. நிலை என்பது நிற்குமியல்பு. அஞ்செ ழுத்தருணிலை என்பது, மேலை அதிகாரத்திற் கூறியபடி வீட் டின்ப நிலையை அடைந்து, எடுத்த உடலோடு உலகில் வாழும் சீவன் முத்தர்கள், தாங்கள் சமாதியை விட்டு நீங்கி யிருக்கும் பொழுது, தங்களை வாதனை மலம் வந்து தாக்கி முன் விடுத்த விருப்பு வெறுப்புக்களை எய்துவித்து, பாசத்தில் வீழ்த்தாமல் அஞ்செழுத்தை ஓதித் திருவடி நீழலை விட்டுப்பிரியாதிருத்த லாகும்.

ஆசிரியர், மேலை அதிகாரத்தில் வீட்டின்பம் அடையும் இயல்பைக்கூறி, இந்த அதிகாரத்தில் அங்ஙனம் வீட்டின்பம் அடைந்த சீவன் முத்தர் சமாதியை விட்டுப் பிரிந்திருக்கும் பொழுது சிவன் திருவடி நீழல் நிறைவிலடங்கிச் சிறிதும் அவனை மறவாதிருத்தற்குச் சாதனமாக அஞ்செழுத்தை ஓதும் இயல் பைக் கூறுகின்றார். இதனாலேயே இவ்வதிகார இயைபு இனிது விளங்கும்.

க-வது பாட்டு, சீவன்முத்தர்கள் சூக்கும அஞ்செழுத்தை, அதன் உட்பொருளை நினைந்து ஓதல் வேண்டுமென்று கூறுகின்றது. உ-வது பாட்டுச் சீவன் முத்தர்கள் தங்களிடம் அருள் நிலைத்திருத்தற்குச் சூக்கும அஞ்செழுத்தோதித் திருநீறு அணிதல் வேண்டுமென்று கூறுகின்றது. ௩-வது பாட்டுச் சீவன் முத்தர்கள் சூக்கும அஞ்செழுத்தோதித் தங்கள் மனத்தைச் சிவன் திருவடி நீழல் நிறைவிலடங்கி நிற்றல் வேண்டுமென்று கூறுகின்றது. ச-வது பாட்டுச் சீவன் முத்தர் அல்லாதாரும் அஞ்செழுத்தை ஓதினால் சிவன் அருளைப்பெறலாமென்று கூறுகின்றது.

## கo. அணைந்தோர் தன்மை.

அணைந்தோர் தன்மை என்பது, அணைந்தோரது தன்மை எனவிரியும். அணைந்தோர் என்பது சிவபெருமான் திருவடி நீழலை அடைந்த சீவன்முத்தர்; தன்மை என்பது இயல்பு. அணைந்தோர் தன்மை என்பது சிவபெருமான் திருவடி நீழலிலேயே, தங்கள் வேட்கையறிவு செயல்கள் நிகழப்பெற்று, உள்ளும்புறமும் ஒரு தன்மைக்காட்சியராய் இன்புற்றிருக்கும் சீவன்முத்தருடைய இயல்பு என்று பொருள்படும்.

ஆசிரியர், மேலை அதிகாரத்தில் சீவன்முத்தர் தங்களை வாதனைமலம் தாக்காதிருத்தற்குரிய சாதனங்கூறி, இந்த அதிகாரத்தில் அவர்களுடைய இயல்பு கூறுகின்றார். இதனானே இவ்வதிகார இயைபு இனிது விளங்கும்.

க-முதல் ரு-பாட்டுக்கள், சிவன் திருவடி நீழலை அடைந்த சீவன்முத்தர்கள், தாங்கள் அடைந்த அத்துவிதநிலையிலிருந்து வழுவாதிருத்தற்கு, சிவன் திருக்கோயில்களில் சரியைப்பணி

கள் செய்து, சிவனை நினைந்து தொழுதல்வேண்டுமென்று கூறுகின்றன. ௬-வது பாட்டு, சீவன்முத்தர்களுடைய உள்ளத்தில் பேரறிவு விளக்கமும், பேரின்ப விளக்கமும், நிகழ்ந்துகொண்டிருக்குமென்று கூறுகின்றது. இதில் திருநாவுக்கரசு அடிகள், தாம் இம்மைவாழ்விலேயே பேரின்ப உணர்வை அடைந்ததைக்கூறுதல் காண்க. ௭-வது பாட்டு, சிவன் திருவடி நீழலை அடைந்த சீவன்முத்தர்கள், சூக்குமதன் மாத்திரைகளால் நிகழும் ஐம்புல விடயங்களிற் செல்லார்கள் என்று கூறுகின்றது. ௮, ௯, ௧௧ பாட்டுக்கள், சிவன் திருவடி நீழலை அடைந்த சீவன்முத்தர் உலகில் எவர்க்கும் அஞ்சாது, நமனுக்கும் அஞ்சாது எந்நாளும் இன்புற்றிருப்பர் என்று கூறுகின்றன. ௧0-வது பாட்டு, சீவன்முத்தர்கள் புறப்பற்று அகப்பற்றுக்கள் அற்றிருப்பர் என்று கூறுகின்றது. ௧௨-வது பாட்டு, சீவன்முத்தர்கள் சிவவேடந்தாங்கிய அடியார்களைக் கண்டால், அவர் அடிமைத்திறம் ஒன்றனையே நினைந்து அவரைத்தொழல் வேண்டுமென்று கூறுகின்றது. ௧௩, ௧௪, ௧௫ பாட்டுக்கள், சிவபெருமானை எப்பொழுதும் மறப்பு நினைப்பின்றி நினைந்துகொண்டிருக்கும் சீவன்முத்தரிலக்கணங் கூறுகின்றன. ௧௬-வது பாட்டு, சீவன்முத்தர்கள் திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானைத்தொழ அவர்களின் பிராரத்துவ உடல் நீங்குமட்டும் அவர்கள் உள்ளத்தில் விருப்பு வெறுப்புக்களும், துயரமும் அணுகாவென்று கூறுகின்றது.

## தொகுத்துரை.

மேலேகூறப்பட்ட திருவருட்பயன் நூலில் உள்ள பத்துத் தலைப்புக்களில் ௧-வது பதிமுதுநிலை முதல் ௮-வது இன்புறு

நிலை வரையுள்ள அ- தலைப்புக்களே மாந்தர், இறைவன் அமைத்தபடி உடல் உட்கருவிகளைப்பெற்றுப் பலபிறவிகளில் உலகில் நுகர்வுப்பொருளை நுகர்ந்து வாழ்ந்தும், அவ்வாழ்வின் அநுபவப்பயனாக உலகநுகர்வுப்பொருளை உவர்த்தும் இம் மையிலேயே சிவநுகர்வை நாடித்தேடிக்கூடி என்றும் பெயராப் பேரின்பவாழ்வு அடைதலைக் கூறுகின்றன. கூ-வது அஞ் செழுத் தருண் நிலையானது, அங்ஙனம் இம்மையிலே பேரின்பப் பெருவாழ்வை அடைந்த சீவன்முத்தர், தாம் எடுத்த உடல் நீங்கும்வரையும் தம்மை உடலூழாய் மெலி தாகத் தாக்குகின்ற மலவாதனையைக்கழிக்கும் வழியையும், ௧௦-வது அணைந்தோர் தன்மையானது, அங்ஙனம்மலவாதனை தம்மைத்தாக்கித் தாம் அடைந்த அத்துவிதநிலையிலிருந்து வழுவாதிருக்கும்பொருட்டுத் தங்கள் வேட்கை, அறிவு, செயல்களை நிகழ்த்தும் வழிகளையுங் கூறுகின்றன. முதல் அ அதிகாரங்களுள் முன் மூன்று அதிகாரங்களும் முறையே சித்தாந்த முப்பொருள்களாகிய க-வது பதிமுது நிலையையும், உ-வது உயிரவை நிலையையும் ௩-வது இருள்மல நிலையையும் விதந்து கூறுகின்றன. பின்மூன்று அதிகாரங்களும் மாந்தர், இருவினையொப்பு, மலபரிபாகம்,சத்திநிபாதம்மூன்றும் அடையப்பெற்றதால்உண்டாகிற அறியுநெறியையும், உயிர்விளக்கத் தையும், இன்புறு நிலையையும் விதந்து கூறுகின்றன. இவ் விருவகை மும்மூன்று அதிகாரங்களுக்கும் நடுவில், ௪-வது அருளது நிலையும், ௫-வது அருளுரு நிலையும், செம்பாகத் தலைப்புக்களாக வைக்கப்பட்டிருத்தல், திருவருட்பயன் நூலின் பெயர் குறிக்கும் பொருளுக்கேற்ப, மாந்தர் இம்மை மறுமை இன்பப்பயன்களை அடைதற்கும், முடிவில் வீட் டின்பப்பயனை அடைதற்கும், இறைவனது அருளே துணை

யாயுள்ளது என்ற உண்மையை வலியுறுத்துகின்றது. ச-வது அருளாது நிலையானது, திரோதானசத்தி அருள், சகல வருக்க மாந்தருக்கு நன்று இது, தீது இது எனப்பகுத்தறியும் அவர்களுடைய கருவியறிவு வளரும் வண்ணம், அவர்களுடைய மனத்துள் நின்று அவர்களறியாது உணர்த்துதலையும், ருவது அருளுரு நிலையானது, அங்ஙனம் அவர்களுடைய மனத்துள் நின்று அவர்களறியாது உணர்த்திய அருளே, பக்குவம்வந்த காலத்தில் அவர்களுக்குமுன் அவர்களறியும்படி நனவில் நேராய் மானிடவடிவில் அருட்குரவனாய் வந்து இறைவனுக்கும் அவர்களுக்குமுள்ள ஆண்டானடிமைத் தொடர்பையும், அவர்கள் இறைவனைச் சேர்ந்து பேரின்பம் அடைதற்குரிய உரிமையையும், அவ்வுரிமையைச் சாதிக்கு முறைமையையு முணர்த்துதலையுங் கூறுகின்றன.

இறைவன் மேலேகூறியவாறு, மாந்தருக்கு அவர்கள் பக்குவத்துக்குத்தக்கபடி இருவகையாக அருள்செய்தலாற் பயனடைகின்ற மாந்தருடைய மனமும், உலகில் சிற்றின்பத்தை நுகரும் கருவியாகவும்; பேரின்பத்தை நுகருங் கருவியாகவும், இருவகையாக அமைகின்றது. மனம் என்பது அருளாது நிலையில் சிற்றின்பத்தை நுகருதற்குக் கருவிகளாயுள்ள இருவகை ஐம்பொறிகள், இருவகைத் தன்மாத்திரைகளோடுகூடிய நான்கு அந்தக் கரணங்களையும், அருளுரு நிலையில் அந்த நான்கு அந்தக் கரணங்களும் ஒன்று பட்டுப் புருடனாகிய உயிருள்ளடங்கி அதனோடொற்றித்து நின்று, இறைவனையே நினைந்துகொண்டிருக்கும் சிவகரணமாய் மாறிய மனத்தையும் (51-வது பாட்டு) குறிக்கின்றன. முன்னைய மனத்தினாலே மாந்தர், உலகநெறிவாழ்வில் தங்கள் வேட்கை, அறிவு, செயல்களை வஞ்சமின்றி நேர்மையாய்நிகழ்த்

திலுலன்றி, அம்மனமானது மலப்பிணிப்பினின்று நீங்கிப் பண்படுத்திருந்திப்பின்னேய செம்மை மனமாகமாறி, அவர்கள் உலகநெறியைவிட்டு வீட்டு நெறியையடைதற்கு ஏதுவாக விருக்கமாட்டாது. அருளது நிலையின்கீழ்க் கூறப்பட்ட தேவாரப்பாட்டுக்களிலும், அருளுரு நிலையின்கீழ்க்கூறப்பட்ட தேவாரப்பாட்டுக்களிலும், இருவேறு வகைப்பட்டமனத்தை நாம் காணலாம். எடுத்துக்காட்டாக, அருளது நிலையின்கீழ் ௩௬-வது பாட்டில் "கள்ளவிழி விழிப்பர்காணுக் கண்ணுற் கண்ணுள்ளார்போலக் **கரந்து நிற்பர்**" என்று இறைவனுக்குக்கூறப்பட்டதையும் ௩௭-வது பாட்டில் "மற்றொருவரில்லைத் துணையெனக்குமால் கொண்டாற்போல் **மயங்குவேற்கு**" என்று மாந்தருக்குக் கூறப்பட்டதையும், அருளுரு நிலையின்கீழ் ௪௫-வது பாட்டில் 'நினையா என் **நெஞ்சை நினைப் பித்தானை**' என்றும், ௪௭-வது பாட்டில் புல்லியமனத்துக் **கோயில் கொண்டனர்**" என்றும், ௪௮-வது பாட்டில் "நெஞ்சுள்நின்று நினைப்பிக்கும் நீதியை" என்றும், இறைவனுக்குக் கூறப்பட்டதையும், ௪௪-வது பாட்டில் "நானடியேன் நினைக்கப்பெற்றுய்ந்தவாறே" என்றும், ௪௮-வது பாட்டில் "வஞ்சனேனினியான் மறக்கிற்பனே" என்றும் மாந்தருக்குக் கூறப்பட்டதையும், ஒப்பிட்டு நோக்கி, இருவகை மனத்திற்குமுள்ள வேற்றுமையை அறிக. ௪-வது அதிகாரத்துக்குமுன் உ, ௩ அதிகாரங்களிலுள்ள பாட்டுக்களிலும், ௫-வது அதிகாரத்திற்குப்பின் ௬, ௭, ௮ அதிகாரப் பாட்டுக்களிலும், இந்த இருவகை மனத்துக்குமுள்ள வேற்றுமை கூறப்பட்டிருத்தலை நாம் தெளிவாய்க் காணலாம். உ-வது ௩-வது அதிகாரங்களைச் சேர்ந்த, ௧௬, ௧௭, ௧௮, ௧௯, ௨௦, ௨௧, ௨௨ பாட்டுக்களில், மலப்பிணிப்புண்டு, திருந்தாதிருக்கிற மனம் கூறப்பட்டிருந்த

தலையும், சு, எ, அ அதிகாரங்களைச் சேர்ந்த ருக, ருஉ, ருங, ருச, ருசு, ருஎ, சுO, சுக, சுஉ, சுங, சுஅ, சுசு, எக, எசு, எஎ, எஅ பாட்டுக்களில், மலப்பிணிப்பினின்று நீங்கிப்பண்பட்டுத் திருந்திய மனம் கூறப்பட்டிருத்தலையும், ஒப்பிட்டு நோக்கின், இருவகை மனத்துக்குமுள்ள வேற்றுமையை நாம் காணலாம். சு, எ, அ அதிகாரப் பாட்டுக்களில் திருந்திய மனமே சிவ போக நுகர்தற்குக் கருவியாகக் கூறப்பட்டிருத்தலை யறிக. க-வது அதிகாரம் கரு-வது பாட்டில் மாந்தருடைய மனத்தை அவர்களது கருத்துக்கும் செயலுக்கு மேற்ப பண்படுத்திச் செம்மையுடைய தாக்கும் இறைவனது அருட் செயல், "மாயமாய மனங் கெடுப்பானை மனத்துளே மதியாயிருப்பானை" என்று கூறப் பட்டிருத்தல் அறிக.

மேலே கூறியவாற்றால் மக்கள் தங்களுடைய உலக நெறி வாழ்வில் இன்பமும் துன்பமும் அடைதற்கும், வீட்டு நெறி வாழ்வில் தூய இன்பமடைதற்கும், அவர்களது மனங்களே காரணமாயுள்ளன என்பதும், அம் மனமானது, அவர்களுடைய உலக நெறி வாழ்வில் அருளைப்பற்றி நின்று அறவழியிலொழுகி, திருந்தியவளவில் இன்பமும், அருளை மறந்து மறவழியிலொழுகி, திருந்தாதவளவில் துன்பமும், அவர்களுக்குண்டாகும் என்பதும் நன்கு தெளிவாகும்.

இக்காலத்துலகில் வாழும் பெரும்பான்மையான மக்கள், உலகச் சிற்றின்பத்தையே நாடி, அதற்கேதுவாயுள்ள செல்வப் பொருளைத் தங்களுடைய உழைப்பினுல் வருந்தித் தேடிப் பெறுகிறுர்கள். அவர்களை ஆட்சி செய்யும் பெரும்பான்மையான அரசியலார்களும், அருள் நாட்டமின்றி பொருள் நாட்டமுடையவர்களாய் ஆண்டு வருகிறுர்கள். அங்ஙனம் மக்கள்

பொருளினது தேட்டத்திலேயே நாட்டமுடையவர்களாயிருத்தல் காரணமாக, செவ்விய உலக நெறி வாழ்வுக்கு இன்றியமையாது வேண்டப்படுவதாகிய இறைவனது அருளை நாடுதலினாலே, தங்கள் மனத்தில் இயல்பாக வுண்டாகத்தக்க மக்க ளொருமைப்பாட்டு ( Human - brotherhood )க் கருத்தும் அதற்குத் துணை செய்யும் உயிர் ஒருமைப்பாட்டு ( Universal - brotherhood )க் கருத்தும் இல்லாத கொடுமை மனமுடையவர்களாய் ஒருவருக்கொருவர் அன்பின்றி ஒழுகி வருகிறார்கள். அவ்வாறு அவர்கள் அருளையும் அதன் வழியிலுண்டாகும் மக்களொருமைப் பாட்டையும் உயிரொருமைப் பாட்டையும் மறந்து கொடுமை மனமுடையவர்களாய் ஒருவருக் கொருவரன்பின்றி ஒழுகுதலினாலேதான் அவர்களுக்குள் அமைதிக் குறைவும், கலகமும், போரும் அவற்றால் விளையும் பெருந்துயரமும், நாம் இப்பொழுது நேரில் காணுகிறபடி உலகெங்கு முண்டாயிருக்கின்றன. இப்பெருந் துயரம் உலகினைவிட்டு நீங்கல் வேண்டுமென்று நல்லறிவுடைய மக்கள் இப்பொழுது நினைந்தும், பேசியும், எழுதியும் வருகிறார்கள். அது நீங்குதற்கு ஒரே வழிதா னுள்ளது. அவ்வழி யாதெனில் இந்த அருள் முறைத்திரட்டு நூல் கூறுகிறபடி மக்கள் இறைவனது அருளை தங்கள் மனத்திலே நினைந்து மக்கள் ஒருமைப் பாட்டுக் கருத்தையும், அதற்குத் துணை செய்யும் உலக ஒருமைப் பாட்டுக் கருத்தையுமுடையவர்களாய்ச் செம்மை நெறியிலொழுகுதலேயாகும். இவ்வாறு மக்கள் செம்மை நெறியிலொழுகி இப்போது உலகிலுள்ள துன்பத்தினின்றுநீங்கி இன்புடன் வாழும்படி எல்லாம் வல்ல இறைவன் அருள் செய்வாராக.

## நேரிசை வெண்பா

### ௧௧-வது திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

" அருளே யுலகெலா மாள்விப்ப தீசன்
அருளே பிறப்பறுப்ப தாலு — லருளாலே
மெய்ப்பொருளை நோக்கும் விதியுடையே னென்றுநான் றும்
எப்பொருளு மாவ தெனக்கு. ' காரைக்காலம்மையார்.

### ௧௦-வது திருமுறை. திருமந்திரம்.

" அருளிற் பிறந்திட் டருளில் வளர்ந்திட்
டருளி லழிந்திளைப் பாறி மறைந்திட்
டருளான வானந்தத் தாரமு தூட்டி
அருளாலெ னந்தி யகம்புகுந் தானே " திருமூலர்.

திருச்சிற்றம்பலம்.

உ

சிவமயம்

# தேவார அட்டவணை

| அதிகாரங்கள் | சம்பந்தர் தேவாரம் | நாவுக்கரசர் தேவாரம் | சுந்தரர் தேவாரம் | மொத்தம் தேவாரம் |
|---|---|---|---|---|
| ௧ பதிமுதுநிலை | ௮ | ௬ | ௧ | ௧௫ |
| ௨. உயிரவை நிலை | — | ௯ | ௩ | ௧௨ |
| ௩. இருண்மல நிலை | ௧ | ௫ | — | ௬ |
| ௪. அருளதுநிலை | ௨ | ௬ | — | ௮ |
| ௫. அருளுரு நிலை | — | ௭ | — | ௭ |
| ௬. அறியுநெறி | ௪ | ௯ | ௧ | ௧௪ |
| ௭ உயிர்விளக் கம் | ௨ | ௬ | ௪ | ௧௨ |
| ௮. இன்புறுநிலை | ௧ | ௩ | ௧ | ௫ |
| ௯. அஞ்செழுத் தருணிலை | — | ௪ | — | ௪ |
| ௧0. அணைந்தோர் தன்மை | ௫ | ௯ | ௨ | ௧௬ |
| மொத்தம் | ௨௩ | ௬௪ | ௧௨ | ௯௯ |

## தேவார அட்டவணை—தொடர்ச்சி.

| திருமுறை | பாட்டு | திருமுறை | பாட்டு |
|---|---|---|---|
| க | கரு | ச | உஎ |
| உ | ங | ரு | க0 |
| ங | ரு | சா | உஎ |

| திருமுறை | பாட்டு |
|---|---|
| எ | கஉ |

உ

சிவமயம்

## உள்ளுறை.

# பாட்டு முதற்குறிப்பகராதி.

## இந்நூலிற் கூறப்பட்டிருக்கிற மேற்கோள் நூல்களின் முதற்குறிப்பகராதி எண், இந்நூலின் பக்கங்களைக் குறிக்கும்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

உமாபதிசிவாசாரியார் திரட்டியருளிய

# தேவார அருள்முறைத் திரட்டு மூலமும் உரையும்.

## க. பதிமுது நிலை

### ச - க திருப்பிரமபுரம். பண் - நட்டபாடை.

திருச்சிற்றம்பலம்.

**தோடுடையசெவி யன்விடை யேறியோர் தூவெண்மதி சூடிக்**
**காடுடையசுட லைப்பொடி பூசியென் னுள்ளங்கவர் கள்வன்**
**ஏடுடையமல ரான்முனை நாட்பணிந் தேத்தவருள் செய்த**
**பீடுடையபிர மாபுர மேவிய பெம்மானிவ னன்றே.**

(பதவுரை) *தோடுடைய செவியன் - தோட்டினை அணிந்த காதை உடையவனாய்; விடையேறி - எருதின்மேல் (ஊர்தியாக ஏறியிருந்து; ஓர் தூவெண்மதிசூடி - தூய்மையையும் வெண்மையையும் உடைய ஒப்பற்ற திங்களை (தலையின்மேல்) அணிந்து; சுடலைக்காடுடைய பொடி பூசி - சுடுகாட்டில்உள்ள திருநீற்றை (திருமேனியில்) அணிந்து; என் உள்ளம் கவர் கள்வன் - (இது வரையும்) எனக்குத் தெரியாமல் என் உள்ளத்*

தில் இருந்துகொண்டு என்னைத் தன் வயப்படுத்த முயன்று கொண்டிருந்தவனாகிய சிவபெருமான்; ஏடுடைய மலரால் - இதழ்களை உடைய பூக்களால்; முன்னாள் பணிந்து ஏத்த - (நான் அவனை) பண்டைப் பிறவிகள்தோறும் தாழ்ந்து வணங்கிய காரணத்தால்; அருள் செய்த - (இன்று உயர் சிவஞானப் பால் கொடுத்து) அடிமையாகக் கொண்டருளின; பீடுடைய பிரமாபுரம் - சிறப்பினை உடைய சீகாழியில்; மேவிய பெம்மான் இவன் - எழுந்தருளி யிருக்கிற ஆண்டவன் (இதோ என் கண்முன்) தோன்றுகிற இவனே. 1

(விளக்க வுரை) திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்க்குச் சீகாழிக்கோயில் பிரமதீர்த்தக் கரையில் தோணியப்பர் உமாதேவியாரோடும் எழுந்தருளிச் சிவஞானங் குழைத்த திருமுலைப்பாலை உண்பிக்க, அவர் வாயிலிருந்து வடிந்த பாலை அவர் பிதாவாகிய சிவபாத இருதயர் அத்தீர்த்தத்தில் முழுகி நியமமுடித்துவந்தபொழுது கண்டு "எச்சில் மயங்க இப்பாலை ஊட்டினவர் யாவர்"? எனக் கைச்சிறுகோலோச்சிக்கேட்டார். அவ்வாறு கேட்ட காலத்தில், திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் "எனக்குப் பாலை ஊட்டியவர் இதோ வான் வெளியில் எருதின்மேல் உமாதேவியாரோடும் எழுந்தருளியிருக்கிற சிவபெருமானே" என்று தமது சுட்டு விரலால் சுட்டிக்காட்டிய பொழுது பாடிய தேவாரப் பதிகத்தில் முதலாவது பாட்டு இது.

தோடு-பெண்கள் அணிந்துகொள்கிற காதணி. இங்கே இது சிவபெருமானுடைய இடது காதணியைக் குறிக்கின்றது. சிவஞானம் குழைத்த திருமுலைப்பாலைத் தாம் உண்ணும்படி யருளிய உமாதேவியாரது திரு உருவத்தை நாயனார்

குறிக்கின்றார். (சிவன் கூட்டிவந்து ஏவிய முறையே நாயனார்க்கு உமாதேவியார் சிவஞானப் பாலை ஊட்டினார்) நாயனார், தமது தந்தையாருக்குத் தம்மைப் பால் உண்பித்தவர் சிவபெருமானே என்று சுட்டிக்காட்டுகிறார். இது உண்மை நிகழ்ச்சியா யிருத்தலோடு சிவபெருமானுக்குத் துதியாயுமிருத்தலினாலே அத்துதியைச் சிவபெருமான் திருச்செவியேற்று அருளுமாறு "தோடுடைய செவியன்" என நாயனார் சிறப்பித்தார். அருள் வடிவினராகிய உமாதேவியாரே, உயிர்கள் கூறும் குறைகளைக் கேட்டு, அவைகளைப்பிறவித் துன்பத்தினின்றும் நீக்கிச் சிவத்தோடு சேர்த்துப் பேரின்பம் அடையச் செய்தலால், நாயனார் சிவபெருமான் திருமேனியில் இடப்பாதியாகிய உமாதேவியார் பாகத்திலுள்ள இடது காதினைச் சிறப்பித்தார்.

இத்தேவாரம் தமிழ்மறையின் முதலாவது பாட்டு. ஆதலின், நாயனார், வேதாகமங்கள் முதலிய எல்லாக் கலைகளின் பொருள்களும் அடங்கியுள்ள பிரணவத்தைத் 'தோடு' என்னும் முதல் மொழியிலுள்ள " ஓ " காரமாக முதலில் அமைத்துக் கூறினார். அது அறிவுவெளியிற் றோன்றும் சுத்த நாதம் ஆதலின், 'த்'கர ஒற்றுடன் 'ஓ'காரத்தைக் கூட்டித் "தோ" என்று உரைக்கப் பட்டது. பிரணவ முதலெழுத்தாகிய இந்த 'ஓ' காரமானது பன்னிரண்டாவது திருமுறையாகிய பெரியபுராணத்தின் ஈற்றுச் செய்யுள் ஈற்றடியின் ஈற்றுமொழியின் ஈற்றெழுத்தாகிய மகரவொற்றோடு புணர்ந்து "ஓம்" என முடிந்து நிற்கின்றது. இதனால் தமிழ்மறைகளெல்லாமும் பிரணவமாகிய அஞ்செழுத்து மந்திரத்திலே தோன்றி அடங்கிநிற்கும் தன்மை உணர்த்தப்பட்டது.

விடை ஏறி-ஊழிக்காலத்தில் அறக்கடவுள் இறைவனைத் தொழுது, பிறப்பு இறப்பு இல்லாது என்றும் நிலவும் தன்மையை வேண்டியபொழுது இறைவன் அறக்கடவுளை வெள் விடையாக்கி அதன்மேல் ஊர்ந்தருளினார். இதுவே விடையேறிய நிகழ்வு. இது சிவபெருமானது படைப்புத் தொழிலை உணர்த்தும். இவ்வரலாறு, இறைவன் அறவடிவினன் அறவாழி என்னும் உண்மையையும், அறவழி நின்று அறம் புரிகிற இயல்பினை உடையவர்களே இறைவனை அடைவர் என்னும் உண்மையையும் உணர்த்துகிறது.

தூவெண் மதிசூடி - தக்கனாலடைந்த சுடு மொழிக்கு (சாபத்துக்கு) ஆற்றாத திங்கள், இறைவனைச் சரண்புகுந்து தனக்குற்ற துன்பந் துடைத்தாள வேண்டினான். இறைவன், திங்களின் துன்பந் துடைத்துத் தன் திருமுடியில் அவனை ஏற்றினான். இதுவே திங்கள் சூடிய வரலாறு. துன்பத்தினின்றும் காத்த தன்மையால், இது இறைவனது 'காத்தல்' என்னும் தொழிலைக் காட்டுவதாகும்.

காடுடைய சுடலைப் பொடிபூசி - மகா சங்கார காலத்தில் நிவர்த்தி கலை முதலிய ஐந்து கலைகளிலும் அடங்கியுள்ள எல்லாப்புவனங்களை (உலகுகளை)யும் அழித்து நடனஞ் செய்யும் இடமே இங்கு 'காடுடைய சுடலை' எனப்பட்டது: அவ்விடத்துக் கிடந்த சாம்பரே "பொடி" எனப்பட்டது. இந்தப் பொடியே, தன்னைத் தொழுது எழுவார் வல்வினை கெட்டொழியும்படி இறைவன் தனது திருமேனியில் அணியும் திருநீறாகும். சைவர்கள் தம்மைச் சார்ந்து பிணிக்கிற மலத்தை நீறாக்கும் கருத்துக் குறியாக அணிந்து கொள்கிறது இந்தத் திருநீற்றையே. சுடலைப்பொடி இறைவனது "அழித்தல்"

தொழிலைக் குறிக்கின்றது. 'காடுடைய சுடலைப்பொடி' என்பதை 'சுடலைக்காடு உடையபொடி' என மாற்றுக. சுடு + அல் + ஐ = சுடலை - சுடு பகுதி, அல்லும் ஐயும் தொழிற் பெயர் விகுதிகள். காடு - இடம். சுடு காடு - சுடுகின்ற இடம். பிணஞ் சுடுகின்ற இடம்; சுடலை.

என் உள்ளம் கவர் கள்வன் - உள்ளம் என்பது மனம்; 'சிந்தை என்பதும் அது' உயிர் என்னும் பொருளும் கொள்ளும். ஆனால் ' அந்தமு மாதியு மில்லா வரும் பொருள் - சிந்தையில் மேவித்தியக்கறுத்தல் வேண்டும்'' (திருமந்திரம் 2963) கூறப்படுதலின் கட்டு நிலையிலுள்ள உயிர்கட்கு அப்பொருள் பொருந்தாது. உயிர்கள் தன்னை அடைந்து பேரின்பம் நுகரும் பொருட்டு அவற்றைப் பக்கு வப்படுத்த வேண்டித் திரோதான மலத்தின் வழிநின்று மறைத்து இறைவன் அவை வேண்டிய போகங்களை ஊட்டி உண்பிக்கிறான்; உயிர்களது இந்தக்கட்டுநிலைக் காலத்தில் இறைவன் உயிர்களுடைய உள்ளத்தில் அவை அறியாதவாறு நிறைந்து கலந்திருப்பதால் "கள்வன் என்று கூறப்பட்டான்; "நினைத்தவர்கள் நெஞ்சுளாய் வஞ்சக் கள்வா" என்று திருநாவுக்கரசு சுவாமிகள் திருவானைக்காத் திருத்தாண்டகப் பாட்டொன்றிற் கூறியிருத்தல் காண்க. ஆதலின் "என் உள்ளங்கவர் கள்வன்" என்பது இறைவனுடைய "மறைப்புத் தொழிலைக்" குறிக்கிறது.

கவர்தல் = வயப்படுத்தல். உயிர்களுடைய பக்குவத்துக்கு ஏற்ப அவைகளின் வினைப்பயனாக, உலக இன்பத்தையும் துன்பத்தையும் நுகர்வித்துப் பக்குவப்படுத்தித் தன் வயப்படும்படி இறைவன் செய்கிறான். இவ்வாறு உயிர்கள் அறியாதபடி அவைகளைத் தன் வயப் படுத்துதல் இங்கே 'கவர்தல்' எனப்பட்டது.

'கவர்கள்வன்' என்ற சொற்களினால் அகப்பொருட்டுறை கூறப்பட்டதெனினும் பொருந்தும். அகப்பொருட்டுறையில் உயிர் தலைவியாகவும் இறைவன் தலைவனாகவும் உருவகம் செய்யப்படுகிறார்கள்.

" முன்னாட் பணிந்தேத்த " என்றதனால், வினைப் பயனாலன்றி, சிவபாத இருதயர் வேண்டியபடி அருட்பணி செய்யவே திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் அவதரித்தார் என்பது குறிப்பிடப்பட்டது. பிரம தேவன் பூசித்த செய்தியைக் கொள்வாரு முளர்.

"அருள் செய்த" என்பது இறைவனது "அருளல்" என்னும் தொழிலைக் குறிக்கிறது. இறைவன் உயிர்களுக்கு முடிவில் இந்த " அருளல் " ஆகிய தொழில் செய்யும் பொருட்டே மறைப்புத் தொழிலையும் அதனுள் அடங்கிய படைத்தல் காத்தல் அழித்தல் என்னும் தொழில்களையும் அவைகளுக்குப் பக்குவம் வருவிக்கும் பொருட்டே செய்கிறான். " அருள் செய்த பெம்மான்" என முடிக்க. 'பெம்மான்' என்பது 'பெருமான்' என்ற சொல்லின் மரூஉ. பெருமான் - தலைவன் - ஆண்டான் - கணவன். " அன்று, ஏ" அசை நிலைகள். இப்பாட்டில் 'விடையேறி', 'மதிசூடி', 'சுடலைப்பொடிபூசி', 'என் உள்ளங் கவர் கள்வன்', 'அருள் செய்தபெம்மான்' என்ற ஐந்து சொற்றொடர்களானும் முறையே இறைவனுடைய ஐம்பெருந் தொழில்களும் குறிக்கப்பட்டன. இத்தொழில்கள், திருவருட்பயன் 'பதிமுதுநிலை' என்னும் அதிகாரத்தில் "ஆக்கி யெவையுமளித்தாசுட னடங்கப், போக்குமவன் போகாப்புகல்" என்ற நான்காவது திருக்குறளால் கூறப்பட்டன.

[நா – ச] திரு அண்ணுமலை - திருநேரிசை.

2. உருவமு முயிரு மாகி யோதிய வுலகுக் கெல்லாம்
பெருவினை பிறப்பு வீடாய் நின்றவெம் பெருமான் மிக்க
அருவிபொன் சொரியு மண்ணு மலையுளா யண்டர்கோவே
மருவிநின் பாத மல்லால் மற்றொரு மாடி லேனே.

(உரை) ஓதிய உலகுக்கு எல்லாம் - (பெரியோர்கள் - நூல்களில்) கூறிய (உயிரில் உலகம் உயிருலகம் என்ற) எல்லா உலகங்களிலும்; உருவமும் (ஆகி) - (உயிரில்லாத உலகிற்கு) உருவமாகியும் ; உயிரும் ஆகி - (உயிர் உலகிற்கு) உயிர் ஆகியும்; பெருவினைப் பிறப்பு (ஆய்)- வல்வினையினால் உண்டாகும் கட்டு (பந்தம்) ஆகியும்; வீடு ஆய் - (மலநீக்கம் பெற்றவர்களுக்கு) வீடாகியும்; நின்ற பெம்மான் - நிற்கிற தலைவனே; மிக்க அருவி - (மலையிலிருந்து) மிகுதியாக வீழும் அருவி நீரானது; பொன் சொரியும் அண்ணுமலை உளாய்- பொன்னைச் சொரிகின்ற திரு அண்ணுமலையில் எழுந்தருளி யிருக்கிறவனே; அண்டர் கோவே - தேவர்கள் தலைவனே; நின்பாதம் மருவி அல்லால் - உன் திருவடிகளைச் சேர்ந்தால் அல்லாமல்; மற்றொரு மாடிலேன் - நான் சேருவதற்கு வேறு இடம் காணேன்; ஏ - ஈற்றசை. 2

(விளக்கம்) உயிர் இல்லாத உலகங்கள் - ஐம்பெரும் பூதங்களும் கதிரவனும் திங்களும் ஆவன. ஐம்பெரும் பூதங்களும் வேறு வேறு உருவம் அடைந்து இயங்குதலும், கதிரவனும் திங்களும் உருவத்துடன் அமைந்து இயங்குதலும், இறைவனுடைய ஆற்றலினாலே உண்டாகின்றன. உயிர் உலகிற்கு இறைவன் உயிராய் நின்று இயக்குகிறான்.

பெருவினை பிறப்பு = பெருவினையினாலுண்டாகும் பிறப்பு, இனம்பற்றி இறப்பும் உடன் கொள்ளப்படும். கட்டினால் உயிர்களுக்குப் பிறப்பு இறப்பு உண்டாதலின், பிறப்பு என்பதற்குக் கட்டு என்று பொருள் உரைக்கப் பட்டது; அது ஆகுபெயர்.

'பெருவினைப் பிறப்பு வீடு' என்பதனை மாணிக்கவாசக சுவாமிகள் "பந்தமுமாய் வீடும் ஆயினார்க்கு" என்று திருப்பொற் சுண்ணத்தில் கூறி அருளினார். 'நின்ற' என்பது எப்பொழுதும் நிற்கிற என்று பொருள்பட்டுத் தெளிவினால் நிகழ்காலம் இறந்த காலம் ஆயிற்று (நன்னூல்-பொது இயல் ௩௪-ம் சூத்திரம்) கோ - தலைவன். ஆண்பால் விகுதியாகிய னகர ஒற்றுப் பெற்றுக் கோன் எனவருதலும் உண்டு. மாடு-இடம்.

[நா - ௫] சித்தத்தொகைத் திருக்குறுந்தொகை.

௩. அண்ட மாரிரு ளூடு கடந்தும்பர்
உண்டு போலுமோ ரொண்சுட ரச்சுடர்
கண்டிங் காரறி வாரறி வாரெலாம்
வெண்டிங்கள் கண்ணி வேதிய னென்பரே.

(உரை) அண்டம் ஆர் இருள் ஊடு (உம்)-உயிரில் உலகில் நிறைந்திருக்கிற புற இருளினூடும், உயிர் உலகில் நிறைந்திருக்கிற அக இருளினூடும் கலந்திருந்தும்; கடந்து உம்பர்-அவைகள் தன்னைச் சாராதபடி தாண்டி மேற் சென்றும்; ஓர் ஒண்சுடர்-ஒரு ஒப்பற்ற பேரொளிப் பொருள்; உண்டு-(உயிர்கள் அறியாது மறைந்து) இருக்கிறது; அச்சுடர்-அப்பேரொளிப் பொருளை; இங்கு - இவ்வுலகத்தில்; கண்டு-

(அவன் வேறு தாம்வேறு என இருபொருள்களாகப்) பார்த்து; யார் அறிவார்-எவரும் அறிவது இயலாததாகும் ; அறிவார் எல்லாம்-அப்பொருள் தம்முடன் இரண்டறக் கலந்து பிரிப் பின்றி நிற்கும் (அத்துவித) தன்மையை உள்ளத்துத் தோன் றும் மெய் யுணர்வினாலே அதன் சிறப்பியல்பை உணர்ந்து அறிகிற பெரியார் எல்லாரும் ; வெண் திங்கள் கண்ணி-வெண்மையான இளம்பிறைத் திங்களை அணிந்த ; வேதியன் என்பர் - முற்றுணர்வுடையான் என்று சொல்வார்கள். ஏ, போலும் - அசைகள். 3

(வி—ரை) அண்டம் என்னும் சொல் அண்டப்படுவது என்று முதலிற் பொருள்தந்து, பின் அண்டப்படுவதாகிய முட்டைக்குப் பெயராய்ப், பின் முட்டை வடிவாயிருக்கிற உலகுக்குப் பெயராய் வந்தது. அது இருவகை உலகங்களை யும் குறிக்கும். ஆர் இருள்-நிறைந்த இருள்; ஆரிருள்- வினைத் தொகை. அதாவது, புற இருளும் மல இருளாகிய அக இருளும். ஊடு - உள்ளும் புறமும் எங்கும். 'உம்' தொக்கி நிற்கிறது. ஆணவமலம் உயிரிலும் மாயையிலும் கலந்திருக் கும் தன்மையைக் குறிக்கிறது. அக இருளாகிய ஆணவமலம் மாயையிலே கலந்திருப்பதினாலேதான் விளக்குப்போல் உயிர் களுக்கு அறிவை விளக்கும் மாயை அவற்றின் அறிவை மயக்கவும் செய்கிறது.

கடந்து- உம் தொக்கி நிற்கிறது. கடல்வெளி, நீர், உப்பு முறையே கடவுள், உயிர், மலம் போல்வன. கடல்வெளியைச் சேர்ந்து நிற்கும்உப்பு, நீரினுடன் மாத்திரம் கலந்து கடல் வெளியைச் சேராதிருத்தல்போல, மாயையிற் கலந்துள்ள ஆணவமலம் மாயையில் நிறைந்து விளங்குகின்ற கடவுளைச்

சேராது. ஓர் ஒண் சுடர் - மிக்க ஒளியுள்ள சுடர். 'ஓர் ஒண்சுடர்' என்றதனால் நாம் கண்ணாற்காணும் திங்கள் கதிரவன் உடுக்கள் முதலிய பொருள்களின் ஒளிகள் எல்லாமும் இறைவனது ஒளிக்குச் சிறிதும் இணையாகா என்பது குறிக்கப்பட்டது. இவ் வொளிப்பொருள்கள் எல்லாமும் அவனது ஒளியால் விளக்க முறுகின்றன. இரண்டாவது முண்டக உபநிடதம் பத்தாவது காண்டம், பத்தாவது மந்திரம் பார்க்க. "சோதியே சுடரே" என்ற திருவாசக அருட்பாவும் இதனையே குறிப்பிடும்.

'கண்ணி' என்பது கொழுந்து. திங்கட்கண்ணி மூன்றும் பிறைச் சந்திரனைக் குறிக்கின்றது. வேதியன் - முற்றுணர் வுடையவன், எல்லாம் அறிந்தவன். மெய்யுணர்வினையுடைய பெரியாரே இறைவனை முற்றுணர்வுடையவன் (வேதியன்) என்றும், தன்னை அடைபவர்களைக் காப்பவன் என்றும் உணர்வாராதலின் அறிவாரெலாம், 'வெண்டிங்கட் கண்ணி வேதியன் என்பரே' என்றார்.

௪ – ௫ திருப்பாசுரம். பண் – கௌசிகம்.

௪. ஏதுக்க ளாலு மெடுத்த மொழி யாலுமிக்குச்
சோதிக்க வேண்டா சுடர்விட்டுள னெங்கள்சோதி
மாதுக்க நீங்கலுறுவீர் மனம்பற்றி வாழ்மின்
சாதுக்கள் மிக்கீ ரிறையேவந்து சார்மின்களே

(ப-ரை) சாதுக்கள் மிக்கீர்—நற்பண்புடையவராகிய பெரியீர் ; இறையேவந்து சார்மின்கள் — (உலகவாழ்வுப்பற்றை விடுத்து) இறைவனை அடைந்து அவனையே பற்றுங்கள் ; எங்கள் சோதி—நாங்கள் வழிபடும் ஒளிப்பொருள் ; சுடர் விட்டு

ளன்—(உங்களைத் தன் வழிப்படுத்த எப்பொழுதும்) தனது ஒளியை உங்கள் மனத்தில் கான்று, மல இருளை நீக்கி ஒளியைப் பெருக்கிக் கொண்டே இருக்கிறான். (ஆதலால்) ஏதுக்களாலும்—கருதல் அளவையாலும்; எடுத்த மொழியாலும்—மேற்கோளாக எடுத்துக்கூறப்படும் உரை அளவையாலும்; மிக்குச் சோதிக்க வேண்டா—ஓர் அளவிலன்றி, அளவுக்கு மிஞ்சி ஆராய்ச்சி செய்ய வேண்டியதில்லை; மனம் பற்றி வாழ்மின்—அங்ஙனம் ஒளி பெருகிக்கொண்டிருக்கும் உங்கள் மனத்தின்கண், அவ்வொளியையேபற்றி நினைந்து கொண்டிருங்கள்; மாதுக்கம் நீங்கல் உறுவீர்—அங்ஙனம் நீங்கள் செய்தலின் பயனாக, பிறவித்துன்பத்தினின்றும் நீக்கம் பெறுவீர். 4

(வி—ரை) சாதுக்கள் மிக்கீர்—சாதுக்களாகிய மிக்கீர்; சாதுக்கள்—நற்பண்புடையவர்; மிக்கீர்—அறிவால் மிக்கீர், விளிப்பெயர். இறையே—ஏ—பிரிநிலைப்பொருள் உணர்த்துகின்றது. சார்மின்கள் — பன்மைப் பொருளுணர்த்தும் விகுதிமேல் விகுதி; சார்மின்களே—என்றதனால் சார்ந்தவண்ணமாகும் உயிர் இறைவனைச் சார்ந்தால் இறைவனுடைய தன்மையை அடையும் என்பது குறிப்பிடப்பட்டது. ஏ-அசை. அடிகள் தம்மோடு ஒப்பானவர்களை உள்ளிட்டு "எங்கள் சோதி" என்கிறார். "சுடர்" என்பது இங்கே தத்துவங்கடந்து நின்றதூவெளி ஒளியைக் குறிக்கிறது. விடுதல்—கான்று கொண்டிருத்தல். ஏதுக்கள்—காரணங்கள்; அச்சொல் இங்கே ஏதுக்களோடு கூடிய கருதலளவையைக் குறிக்கிறது. எடுத்தமொழி-இங்கே உரையளவையைக் குறிக்கிறது. மூதறிவோர் நூல்களிலிருந்து எடுத்துக் கூறப்படும் மொழிகளா

தலால் 'எடுத்த மொழி' என்றார். கருத லளவையும், உரையளவையும் ஆன்மசிற்சத்திக்குத் துணையாக இறைவனுடைய பொது இயல்பை அறிதற்குக் கூறப்படுகின்றது. "காண்டல் அளவை" இறைவனுடைய பொது இயல்பை அறிதற்குப் பயன்படாததாதலின், அது இங்கே கூறப்படவில்லை. உயிர் இறைவனுடைய பொது இயல்பை அறிதற்குக் கருதலளவையும், உரையளவையும், ஓரளவில் மட்டும் பயன் படுதலானும், அவனுடைய சிறப்பியல்பை அறிதற்கு அவனோடு இரண்டறக் கலந்து நின்று ஒற்றித்து, உணர வேண்டுமேயன்றி, அவனுக்கு வேறாக நின்று, அவனைச் சோதித்தல் கூடாதாதலானும், 'மிக்குச் சோதிக்க வேண்டா' என்றார்.

மேலைநாட்டுக் கலையறிஞர்களாகிய, டிண்டால் (Tyndal) ஹக்ஸ்லி (Huxley), ஹெர்பர்ட் ஸ்பென்ஸர் (Herbert Spencer) முதலியோர்கள் சென்ற 19-ம் நூற்றாண்டில் இறைவனுடைய பொது இயல்பை மிக்குச் சோதித்ததினாலே, கடவுள் உண்டோ இல்லையோ என்று அறியமுடியாதவர்க (Agnostics) ளாயினர்.

மாதுக்கம் என்றதனாலே, எல்லாத் துக்கங்களினும் மிக்கதான பிறவித்துக்கம் கூறப்பட்டது.

'மாதுக்கம் நீங்கல்' என்பது மாதுக்கம் நீங்கலால் உண்டாகும் பயனாகிய பேரின்பம்.

'சுடர் விட்டுளன் எங்கள் சோதி' என்றதனாலே இறைவன் உயிர்க்குச் செய்யும் அருட்செயலும் 'மனம் பற்றி வாழ்மின்' என்றதனாலே அவ்வருட்செயற் கருத்துக்கிணங்க உயிர்

செய்யும் தவச் செயலும் 'மாதுக்கம் நீங்கல் உறுவீர்' என்ற தனாலே, அங்ஙனம் உயிர் செய்யும் செயலால் வரும் பயனும் கூறப்பட்டன.

இந்தப்பாட்டில், அடிகள் கட்டுநிலை விடுதியாகிற பருவம் அடைந்த அடியார்களை நோக்கி அவர்கள் அத்துவித நிலை அடைதற்கு என்னசெய்யவேண்டும் என்பதையும், அங்ஙனம் அவர்கள் செய்தால் அடையும் இன்பப்பயனையும் கூறுகின்றார்.

ரு. ச – ரு திருப்பாசுரம். பண்–கௌசிகம்.

வெந்த சாம்பல் விரையெனப் பூசியே
தந்தை யாரொடு தாயிலர் தம்மை யே
சிந்தி யாவெழு வார்வினை தீர்ப்ப ரால்
எந்தை யாரவ ரெவ்வகை யார்கொ லோ.

(ப–ரை) தந்தையாரொடு தாயிலர் - தாயோடு தந்தையும் இல்லாதவராகிய இறைவனார்; வெந்தசாம்பல்விரையெனப்பூசி- தீயினாற் சுடப்பட்ட திருவெண்ணீற்றை நறுமணப்பொருள் களைப் போல விரும்பி உடம்பிலே அணிந்து; தம்மையே சிந்தியா எழுவார் – பிறிதொன்றையும் நினையாது தமது திருவடிகளை மட்டும் இடைவிடாது நினைத்துக்கொண்டிருந்து அந்நிலையிலேயே முயல்கின்றவர்களுடைய; வினைதீர்ப்பர் – ஆகாமிய வினையையும் சஞ்சித வினையையும் ஒழிப்பார்; அவர் எந்தையார் – அங்ஙனம் வினையை நீக்கிப் பிறவியை ஒழிக்கிற வர் எமக்குத் தந்தையார் என்னும் கேண்மையுடைய இறை வனார்; (அவர்) எவ்வகையார் கொல் –எப்படிப்பட்ட பெரிய வரோ! (அவர் பெருமையை யாரால் அறிய முடியும்). 5

(வி—ரை) தந்தையாரொடு தாயிலர் - எழுவாய், தீர்ப்பர் - பயனிலை. அவர் - எழுவாய், எந்தையார் - பயனிலை. அவர் - எழுவாய், எவ்வகையார் - பயனிலை. கொல், ஒ — அசைகள். தங்களை அநாதியே பற்றியிருக்கிற மல இருளை நீக்கி அருள் ஒளியைப் பெறுதற்குக் குறியாகச் சைவர்கள் திருநீற்றைத் தங்கள் உடம்பில் தரித்துக் கொள்கின்றார்கள்.

தந்தையாரொடு தாயிலர் - பிறப்பும் இறப்பும் இல்லாத வர். பிறப்பு இறப்பு இன்மை இறைவனுக்கு முதன்மை யான இலக்கணம். வெந்தசாம்பல் - பசுவின் மலம் தீயினால் சுடப்பட்டுக் களங்கம் நீங்கித் தூய்மை அடைதல்போல, உயிர் களுடைய மலம் ஞானத்தீயால் நீக்கப்படுதலால் அவைகள் தூய்மை அடைந்து, அருள் ஒளியைப் பெறுகின்றன என் பது கருத்து.

விரை எனப் பூசுதல் - மக்கள் எவ்வாறு தம் உடலில் மணம் கமழும்படி மகிழ்ச்சியுடன் சந்தனம் முதலிய நறு மணப் பொருள்களை அணிந்து கொள்கிறார்களோ, அவ்வாறு உயிரில் சிவமணம் விளங்கும் பொருட்டு, உயிர் விளங்குகிற உடலில் அருட்குறியாக வெண்ணீற்றை மகிழ்வுடன் நினைந்து அணிதல் ஆகும். என - போல, உவமைச் சொல்.

சிந்தியா எழுதல் - சிந்தித்தலாகிய முயற்சியைத்துவக்கி அதனில்ஈடுபட்டுநிற்றல்; எழுதல்-முயலுதல். 'எவ்வகைகொல்'- வியப்பினைக்'குறிக்கின்றது. "ஆரறிவார் எங்கள் அண்ணல் பெருமையை" என்றார், திருமூலர்(திருமந்திரம்95வதுபாட்டு).

சு. ச — ந திருப்பாசுரம். பண்—கௌசிகம்.

ஆட்பா லவர்க்கருளும் வண்ணமு மாதி மாண்பும்
கேட்பான் புகிலள வில்லை கிளக்க வேண்டா
கோட்பா லனவும் வினையுங் குறுகாமை யெந்தை
தாட்பால் வணங்கித் தலைநின் றிவைகேட்க தக்கார்.

(ப—ரை) *தக்கார்—நடுவுநிலைமையிலுள்ள அறிவர்களே ; ஆதி மாண்பும்—இறைவனுடைய (எட்டு) அருட் பண்புகளும்; ஆட்பாலவர்க்கு அருளும் வண்ணமும்—அவன் அவ்வருட் பண்புகள் பற்றி ஆட்கொள்ளத்தகுதி யுடையவரை ஆட்கொள்ளும் வகையும் ; கேட்பான்புகில்—(நீங்கள்) ஆராயத் தொடங்கினல் ; அளவில்லை—அவை காண்டல், கருதல் உரை அளவைகளாலே ஆராயும் அளவுக்குட் படுவன அல்ல; கிளக்க வேண்டா — (ஆதலால்) அவற்றைப் பற்றிப் பேசவேண்டிய தில்லை ; கோட் பாலனவும் வினையும் குறுகாமை — (அங்ஙன மாயின் நீங்கள் என்ன செய்யவேண்டும் எனில்) ஒன்பது கோள்கள் (நவக்கிரகங்கள்) வாயிலாக உலகவாழ்வில் நுகரப் படும் இன்ப துன்பங்களும் (அவற்றிற்குக் காரணங்களாகிய) நல்வினை தீவினைகளும் உங்களைச் சேராதபடி ; எந்தைதாட்பால் — எமது தந்தையாகிய இறைவனது திருவடிகளிடத்து ; தலை நின்று — உங்கள் தலையை நிலைபெறவைத்து ; வணங்கி — அவனுடைய வேட்கை, அறிவு, செயல்களுக்குள் உங்களுடைய வேட்கை, அறிவு, செயல்கள் அடங்கும்படி செய்து அவனோடு அத்துவிதமாய் நின்று ; இவை — (ஆதிமாண்பும் ஆட்பாலவர்க்கருளும் வண்ணமுமாகிய) இவைகளை ; கேட்க— உங்கள் உள்ளத்தில் உணர்க.*

(வி—ரை) தக்கார்-தகுதியுடையவர்-தகுதி-நடுவுநிலைமை, வீட்டுநெறியில் ஒழுகும் அறிவர்களைக்குறிக்கிறது. ஆதி-எல்லாந் தோன்றுதற்கு முன்னே உள்ளவன், முன்னவன் - எல்லாப் பொருள்களுக்கும் காரணமாயுள்ளவன். மாண்பு-முற்றறிவுடைமை முதலிய எண்பண்புகள். ஆட்பாலவர்- ஆளத்தகுந்த பருவம் அடைந்தவர்கள் ; உலகப்பற்றுவிட்டு இறைவனைப் பற்றும் பருவம் வந்து, சத்திநிபாதம் (அருள் வீழ்ச்சி) அடையப் பெற்றவர்கள், ஏனையோர்க்கு அருளுதலால் பயனுண்டாகாது. அருளும்வண்ணம்-நான்கு சமயாசாரியார்களையும் நான்கு வகையாய் இறைவன் ஆட்கொண்டமையை நோக்குக. கேட்பான் - கேட்டல் இங்கே ஆராய்ச்சியைக் குறிக்கின்றது ; கேட்டலும் சிந்தித்தலும் ஆராய்ச்சியைச் சேர்ந்தவைகள். குறைகாமை 'மை' வினையெச்சவிகுதி. எந்தைதாட்பால் தலை நின்று வணங்கி - இறைவன் ஆண்டவன் எனவும், உயிர் அடிமை எனவும் தாடலைபோல அடங்கி நிற்றல் ; தாடலைபோல நிற்றலாவது, தாள், தலை என்னும் இரண்டு சொற்கள் தாடலை என்னும் ஒருசொல்லாய் அடங்கி ஒன்றுபட்டு நிற்றல்போல, இறைவனுடைய வியாபக இச்சா சத்தி, ஞானசத்தி (அறிவு), கிரியாசத்தி (செயல்) களில் உயிர் தன்னுடைய வியாப்பியமான இச்சா சத்தி (வேட்கை), ஞான சத்தி, கிரியாசத்திகளை அடங்கச்செய்து தன்முனைப்புக்கெட்டு அவனுடன் வேறற ஒன்றி, அவனது அருள்வழிநிற்றல் ஆகும். இவை-சுட்டுப் பன்மைப் பெயராய்ப் பாட்டின் முதலாவது அடியிற்குறிப்பிட்ட **ஆதிமாண்பு, ஆட்பாலவர்க்கருளும் வண்ணம்** ஆகிய இரண்டையுங்குறிக்கின்றன. கேட்க-இங்கே கேட்டல் என்பது உயிரின்கண் விளங்கித் தோன்றும் மெய்யுணர்வின் முதற்பகுதியாகிய கேட்டல் ஞானத்தைக் குறிக்கின்றது, ஆராய்ச்சி ஞானத்தை அன்று. இது சிவஞான

சித்தியார் அ-ம் சூத்திரம் உ அ-வது பாட்டில் "ஆசாரியன் வந்-தருளாற் றோன்ற. அடி ஞானம் ஆன்மாவின் விளங்கித் தோன்றும்" என்பது கூறப்பட்டிருக்கிறது. ஆதலின் கேட்க என்பதற்கு உணர்க என்று பொருள் உரைக்கப்பட்டது. கேட்டலின் பின் நிகழ்வன, சிந்தித்தல் தெளிதல் நிட்டை ஞானங்கள். 'ஆதி மாண்பும்' 'ஆட்பாலவர்க்கருளும் வண்ணமும்' ஆராய்ச்சி அறிவால் அறியப்படுவன அல்ல; அவை இறைவனோடு வேறற (அத்துவிதமாய்) ஒற்றித்து நின்று உயிரால் உணரப்படுவன என்ற உண்மையை இத்தேவாரப் பாக் கூறுகின்றது.

எ. நா—சு திருவெண்காடு—திருத்தாண்டகம்.

பாதந் தனிப்பார்மேல் வைத்த பாதர்
பாதாள மேழுருவப் பாய்ந்த பாதர்
ஏதம் படாவண்ணம் நின்ற பாத
ரேழுலகு மாய்நின்ற வேக பாதர்
ஓதத் தொலிமடங்கி யூருண் டேறி
யொத்துலக மெல்லா மொடுங்கியபின்
வேதத் தொலிகொண்டு வீணை கேட்பார்
வெண்காடு மேவிய விகிர்தனாரே.

(ப-ரை) வெண்காடு மேவிய விகிர்தனார்-திருவெண்காட்டில் எழுந்தருளியிருக்கிற (பலகோலங் கொள்கிற) இறைவர்; பாதம் தனிப்பார்மேல் வைத்த பாதர்-(அடியார்களை ஆட்கொள்ளும் பொருட்டு மானுட வடிவங்கொண்டு) தம்முடைய திருவடிகளை ஒப்பற்ற உலகின்மேல் வைத்த அருளுடையவர்; பாதாளம் ஏழு உருவப் பாய்ந்த பாதர்-ஏழு பாதல உலகங்களினும் உள்ளும் புறம்பும் நிறைந்துள்ள அருளுடையவர்; ஏதம்படாவண்ணம் நின்ற பாதர்-(தமது அருளால் உலகம்)

பழுதுபடாது (வெற்றி கொள்ளும்படி) நிலைபெற்று நின்றவர்; ஏழுலகுமாய் நின்ற ஏக பாதர்-மேல் ஏழுலகின் உள்ளும் புறம்பும் நிறைந்து நின்ற தனி அருளுடையவர்; ஓதத்து ஒலி மடங்கி- (அழிப்புக்காலத்தில்) கடல்களின் ஒலி அடங்கி நிற்க; உலகம் எல்லாம் ஊர் உண்டு ஏறி - எல்லா வுலகங்களும் பரவுதலைத் தமக்குள் அடக்கி அதற்கு மேலாய் நின்று; ஒத்து ஒடுங்கியபின்-அவை யெல்லாம் ஒருசேரத் தம்முள் ஒடுங்கிய பின்; வேதத்து ஒலிகொண்டு வீணை கேட்பார்=(ஒடுங்கிய உலகங்களை மீளப்படைத்தற்கு) வேதமாகிய பிரணவ ஓசையை வீணையில் எழுப்பி, அவ்வோசையைக் கேட்டுக்கொண்டிருப்பர். 7

(வி=றை) இப்பாட்டின் முதல் இரண்டு அடிகளும், உயிர்களின் பொருட்டு இறைவன் செய்கிற படைத்தல் காத்தல் தொழில்களையும்; மூன்றும் அடி அழித்தற் றொழிலையும், நான்காம் அடி மீளப் படைக்கும் தொழிலையும் கூறுகின்றன.

விகிர்தனார்-இது. 'மாறு' என்று பொருள்படும் வடமொழியாகிய 'விகிர்தம்' என்பதன் வழி வந்தது. படைப்பு முதலிய தொழில்களைப் பிரமன் திருமால் முதலிய பல வேடங்களைக் கொண்டு செய்கிறவர் விகிர்தர். "பல பல வேடமாகும் பரனாரிபாகன்" என்று கோளறு பதிகம் கூறுதல் காண்க.

பாதம் தனிப்பார்மேல் வைத்த பாதர்-மாணிக்கவாசக சுவாமிகளை இறைவன் மானுடவடிவம் கொண்டு உலகிற்கு வந்து ஆண்டது போன்று அடியார்களை ஆட்கொள்ளும் இறைவனது முறைமையைக் குறிக்கின்றது. பாதம் என்பது மானுடவடிவத் திருவடிகளையும், 'பாதர்' என்ற சொல்லினுள்ள 'பாதம்' என்பது அருளையும் குறிக்கின்றது.

'ஏழுலகுமாய் நின்ற ஏகபாதர்' முன்னர் 'பாதாளம் ஏழு' என்று குறிப்பிட்டதால், இவ் வேழுலகு மேல் ஏழு உலகங்களைக் குறிப்பிட்டன. இறைவனை ஏகபாதர் என்றது, மகேசுரவடிவங்கள் இருபத்தைந்தில் ஏக பாத வடிவமும் ஒன்று. இது அவனை விட்டு நீங்காதசிவசத்தி. ஆதி, இச்சை, ஞானம், கிரியை எனப் பலவகையாகப் பிரியாது பராசத்தி என ஒன்ருய் நின்ற தன்மைபற்றி, ஏகபாதப் பெயர் வடிவத்துடன் இறைவன் தோன்றி யருளுகிற முறை என்பர்; இறைவன் பராசத்தியுடன் கூடி உயிர்களுடைய ஆணவ மலத்தை நீக்க வேண்டுமென்ற பேரிரக்கத்துடன் நின்றமுறை. 'வேதத்து ஒலிகொண்டு வீணை கேட்பார்' என்பது மீள உலகங்களை ஆக்கலைக் குறிக்கிறது. நாதத்தை எழுப்பிப் படைத்தல் தொழில் செய்யவேண்டியிருப்பதால் 'ஒலிகொண்டு' என்பது கூறப்பட்டது அந்த நாதத் தொனியிலிருந்து வேதம் முதலிய பல அறிவுக் கலைகள் பிறத்தலால் அது "வேதத்து ஒலி" என்று கூறப்பட்டது வன்மையானது அழித்தலுக்கும், மென்மையானது ஆக்கலுக்கும் உரியனவாகலின், மெல்லிய இசை ஒலி எழுப்பும் "வீணை கேட்பார்" என ஆக்கற்ருெழில் குறிப்பிடப்பட்டது. மீளப் படைப்புக்காக இறைவன் வீணை வாசித்து நாதத்தை எழுப்புகின்ருன் என்ற உண்மையைத் திருநாவுக்கரசு சுவாமிகள்,

"பெருங்கடல் மூடிப் பிரளயங் கொண்டு பிரமனும்போய்
இருங்கடல் மூடி யிறக்கு மிறந்தான் களேபரமும்
கருங்கடல் வண்ணன் களேபரமுங் கொண்டு கங்காளராய்
வருங்கடல் மீளநின் றெம்மிறை நல்வீணை வாசிக்குமே"

என்று கூறி யருளினமை காண்க.

வேதத்து ஒலிமடங்கி - மடங்க எனற்பாலது மடங்கி என நின்றது. ஊர் உண்டு ஏறி - ஊர் - முதனிலைத் தொழிற் பெயர். ஊர்தல் - அதாவது பரவுதல். உண்டு - தமக்குள் அடக்கி. ஏறி - அதற்கு மேலாக நின்று; உலகம் பரவுதலைத் தம்முள் அடக்கி அதற்கு மேலாக நின்று.

ச-க. திருச்சிவபுரம். திருவிராகம். பண்-நட்டபாடை.

அ பழுதில கடல்புடை தழுவிய
படிமுத லியவுல குகண்மலி
குழுவிய சுரர்பிறர் மனிதர்கள்
குலமலி தருமுயி ரவையவை
முழுவது மழிவகை நினைவொடு
முதலுரு வியல்பர னுறைபதி
செழுமணி யணிசிவ புரநகர்
தொழுமவர் புகழ்மிகு முலகிலே.

(ப-ரை) பழுதில் கடல்புடை தழுவிய - குற்றமில்லாத ஏழு கடல்களும் பக்கத்திற் சூழ்ந்திருக்கிற; படிமுதலிய மலி உலகுகள் - நிலவுலகம் முதலிய நிறைந்த உலகங்களில்; குழுவிய சுரர் பிறர் மனிதர்கள் குலம் மலிதரும் உயிரவை அவை முழுவதும் - கூட்டமாயுள்ள தேவர்கள் வகையிலும் அவர்களுக்கு வேறுயுள்ள மனிதர்கள் வகையிலும் கூட்ட மாய் நிறைந்துள்ள உயிர்த் தொகுதிகள் அனைத்தும்; அழி வகை நினைவொடு - அழிதல் வேண்டும் என்ற எண்ணத் துடன்; முதல் உரு இயல்பரன் உறைபதி - முதல்வன் முத லாவது வடிவம் கொள்கின்ற மகா உருத்திரன் எழுந்தருளி யிருக்கின்ற தலமாகிய; செழுமணி அணி சிவபுரம் நகர்-ஒளி நிறைந்துள்ள மணிகளால் அழகு செய்யப்பட்டிருக்கிற சிவ

புரம் என்ற நகரை; தொழுமவர் புகழ் - தொழுகின்றவர்களுடைய புகழ்; உலகில் மிகும் - உலகில் மேலும் மேலும் வளர்ந்தோங்கும். 8

(வி—ரை) பழுதில கடல் - சாதி யொருமையாய்ப் பல கடல்களைக் குறிக்கின்றது. அதனால் இல என்ற பன்மைச் சொல் கடலைக் கொண்டு முடிந்தது. பாற்கடல் முதலிய எழு கடல்களும் குறிக்கப்பட்டன. அழிவகை நினைவொடு - இறைவன் நினைப்பினாலே மாத்திரம் அழித்தற் றொழிலைச் செய்கின்றான் என்பது கூறப்பட்டது. இங்கே அழித்தல் என்றது உடலை. நம்போன்று கருவி கரணங்களால் ஒன்றனையுஞ் செய்வதில்லை. உயிர் அவை அவை முதல் உரு இயல் பரன் - முதலாவது அவை - உயிரொடு சேர்ந்த பகுதிப் பொருள் விகுதி. இரண்டாவது அவை - தொகுதி என்னும் பொருளில் வந்தது. உருவம் ஒன்றுமில்லாத சுத்தசிவம், முதலாவது உருக்கொள்கிற உருத்திர மூர்த்தி. பரன்-மேலானவன். உருவங்கொள்கிற மூர்த்திகளில் மகா உருத்திரன் மேலானவன் ஆதலின் பரன் என்றார். அவனே மகாசங்கார காலத்தில் எல்லாவுலகங்களையும் அழிக்கிறவன். செழுமணி - மணிக்குச் செழுமை ஒளி ஆதலின் ஒளிநிறைந்துள்ள மணி எனப் பொருள் உரைக்கப்பட்டது.

௪ — ௯ திருவீழிமிழலை — பண் — புறநீர்மை.

௧ தாங்கருங் காலந் தவிரவந் திருவர்
தம்மொடுங் கூடினா ரங்கம்
பாங்கினால் தரித்துப் பண்டுபோ லெல்லாம்
பண்ணிய கண்ணுதற் பரமர்

தேங்கொள்பூங் கமுகு தெங்கிளங் கொடிமாச்
செண்பகம் வண்பலா விலுப்பை
வேங்கைபூ மகிழால் வெயிற்புகா வீழி
மிழலையா னெனவினை கெடுமே.

(ப-ரை) தம்மொடும் கூடினார் இருவர் அங்கம் - தம்மொடு சேர்ந்திருக்கிறவர்களாகிய அயன்மால் என்ற இரண்டு தேவர்களுடைய உடல்களை; தாங்க அருங் காலம் தவிர வந்து- அவர்கள் தாங்க முடியாத காலம் கழிய; பாங்கினால் தரித்து- (உயிர்களுக்கு) நலம் உண்டாகும்படி தாம் தரித்துக்கொண்டு; பண்டுபோல் - அழிப்புக் காலத்துக்குமுன் இருந்தபடி; எல்லா வுலகங்களையும் பண்ணிய கண்ணுதற் பரமர் - எல்லா உலகங்களையும் படைத்த நெற்றிக்கண் உடைய சிவபெருமான்; தேங்கொள்பூங் கமுகு (ஆல்) - மதுரமான பூக்களை உடைய கமுக மரங்களாலும்; தெங்கு (ஆல்) இளம் கொடிகள் (ஆல்)-தென்னை மரங்களாலும் (படர்கின்ற) இளங் கொடிகளாலும்; மா செண்பகம் வண்பலா இலுப்பை வேங்கைபூ மகிழால் - மா மரங்கள் செண்பக மரங்கள் செழிப்பான பலாமரங்கள் இலுப்பை மரங்கள் வேங்கை மரங்கள் பூக்களை யுடைய மகிழமரங்கள் ஆகிய இவைகளாலும்; வெயில் புகா வீழிமிழலையான் ஏ என - பகலோன் வெயில் உள்ளே புகாமலிருக்கின்ற திருவீழி மிழலையில் எழுந்தருளி யிருக்கின்றவனே என்று ஒருவன் சொல்ல; வினை கெடும்-அவன் செய்த இருவினைகளின் பலன் அவனை அடையாமற் போகும். 9

(வி-ரை. தம்மொடுங் கூடினார் இருவர் - படைத்தல் காத்தல் அழித்தல் என்னும் மூன்று தொழில்களில், அயன் படைத்தலையும் மால்காத்தலையும் செய்கிற கடவுளர் ஆதலின்

அவர்களை அழித்தலைச் செய்கிற "கண்ணுதற் பரமரொடுங் கூடினார்" என்றார்; "தாங்கரும்காலம்தவிரவந்து" என்றதனால் அயன்மால் கடவுளர்கள் பிரகிருதி மாயையில் அன்றி, சுத்த மாயையிலாவது அசுத்த மாயையிலாவது உடல் தாங்கக் கூடியவர் அல்லர் என்பது பெறப்படுகின்றது. தவிர வந்து என்றதில் வர என்பது வந்தெனத்திரிந்தது. தாங்க என் பதில் அகரம் தொக்கது. வைணவ சமயமும் பிரகிருதி மாயைக்கு மேலுள்ள தத்துவங்களைக் கூறவில்லை. இருவர் அங்கம் பாங்கினால் தரித்து - இருவரங்கம் என்றது பிரம விட்டுணுக்களின் இறுதியில் கழியுடல் முழு வெலும்பாகிய கங்காளம். இக்கருத்து, திருவாசகம், திருச்சாழல் ௧௧-ம் செய்யுள், "கங்காளம் ஆமாகேள் காலாந்தரத்திருவர், தங் காலஞ் செய்யத் தரித்தனன்" கூறுவது காண்க. கண்ணுதற் பரமர்திருவீழிமிழலையானே எனமுடிக்க. பரமர்-மேலானவர்; தனிமுதற் கடவுள். நுதற்கண் - அருளைக் குறிக்கின்றது.

ச-௧. திருச்சிவபுரம். திருவிராகம். பண்-நட்டபாடை.

௪0 புவம்வளி கனல்புனல் புவிகலை யுரைமறை
 திரிகுண மமர்நெறி
திவமலி தருசுரர் முதலியர் திகழ்தரு
 முயிரவை யவைதம
பவமலி தொழில்து நினைவொடு பதுமநன்
 மலரது மருவிய
சிவனது சிவபுரம் நினைபவர் செழுநில
 னினில்நிலை பெறுவரே.

(ப—ரை) புவம்வளி கனல்புனல் புவி - வான், காற்று, தீ, நீர், நிலம் ஆகிய ஐம்பெரும் பூதங்களில்; கலைஉரை மறை திரிகுணம் அமர் நெறி — தத்துவ நூல்கள் கூறுகின்ற உள்

ளடங்கிய தாமதம், இராசதம், சாத்துவிகம் என்னும் மூன்று குணங்களும் தங்கித் தொழிற் படுகின்ற (வேட்கை, அறிவு, செயல்) முறைமையில்; திவமலி தருசுரர் முதலியர் திகழ்தரும் உயிரவை அவை - தேவலோகத்தில் நெருங்கி வாழ்கின்ற தேவர்கள் (நிலவுலகத்தில் வாழ்கின்ற மனிதர்கள்) முதலிய உயிர்த் தொகுதிகள்; தமபவமலி தொழிலது நினைவொடு - தங்களுடைய பிறவிகளில் (வாழ்நாள்களில்) நிறைந்திருக்கும் உலக நுகர்வுப் பொருள்களை விரும்பும் செயலது நினைவை மனத்தில் நினைந்து கொண்டு; பதுமம் நன்மலரது மருவிய - தாமரை நற்பூவில் வீற்றிருக்கின்ற (அயனாகிய); சிவனது சிவபுரம் நினைபவர்-சிவபெருமான் (தன்னை மக்கள் வணங்கி உய்யும்படி திருமேனி கொண்டிருக்கின்ற) திருச்சிவபுரத்தை (உள்ளத்தில்) நினைத்துக் கொண்டிருக்கும் மக்கள்; செழும் நிலனினில் நிலைபெறுவர் - வளம் பொருந்திய நில வுலகத்தில் (உலக நுகர்வுப் பொருள் களுடையவர்களாய்) சிறப்புடன் நிலைபெற்று வாழ்வார்கள். 10

(வி-ரை) இந்தத் தேவாரப் பாட்டுச் சிவபெருமான் அயனை அதிட்டித்து (நிலைக்களமாகக்கொண்டு செலுத்தி) நின்று செய்யும்படைத்தற்றொழிலைக் குறிக்கின்றது. "சிவனாகித் திசை முகனாய்த் திருமாலாகி" என்று திருநாவுக்கரசு சுவாமிகள் திருத்தலையாலங்காட்டுத் திருத்தாண்டகம் ச-வது பாட்டிற் கூறியிருத்தல் காண்க. புவம்வளி கனல் புனல்புவி திரிகுணம் அமர்நெறி- மூலப்பகுதியிலிருந்து உண்டான பிரகிருதி மாயா தத்துவங்கள் முழுவதும் முக்குண உருவங்களாயினும் அத்தத்துவங்களில் ஐம்பெரும் பூதங்கள் மிகத் தடித்த தத்துவங்கள் ஆதலின் புவம்வளி கனல் புனல் புவி திரிகுணமமர்நெறி என்றார். கலையுரை மறை திரிகுணம்

அமர் நெறி என்றதனாலே கலையானது இங்கே தத்துவநூலை உணர்த்துகின்றது. "மறை திரிகுணம்" மூன்று குணங்களும் வேட்கை, அறிவு, செயல்களுக்குக்காரணங்களாய் அவற்றினுள் அடங்கி இருத்தலால் "மறை திரிகுணம்" என்றார். தாமதம் இராசதம் சாத்துவிதம் என்னும் முக்குணங்களில், பரு உடலையே தாம் என்று உணரும் மக்கள் பெரும்பான்மை தாமத இராசத குணங்களின் வயப்பட்டுத் துன்பத்தையும், மோகத்தையும், சிறுபான்மை சாத்துவிகம் வயப்பட்டு உலக இன்பத்தையும் அடைந்து உழல்வர். உயிர் அவை அவை-முதலில் வரும் அவை பகுதிப் பொருள் விகுதி; இரண்டாவது அவை தொகுதி என்று பொருள்படும். தமபலம்-தம — தம்முடைய. அ - ஆறும் வேற்றுமைப் பன்மை உருபு. பவம்-சாதியொருமை. பவம் - பிறப்பு. பவ மலிதொழிலது நினைவொடு - உயிர்கள் உலக நுகர்வுகளை விரும்பும்படி இறைவன் மனத்தால் நினைக்காவிட்டால் உயிர்களுக்கு நுகர்வுகளில் விருப்பம் உண்டாகாது. அது ஆறும் வேற்றுமை உருபு. பதும நன் மலரது-தாமரை - உலகினைக் குறிக்கின்றது; தத்துவங்களாலாகிய உலகம், நாளம் இதழ் மகரந்தம் பொகுட்டு வீசம் முதலிய பகுதிகளை உடைய தாமரை மலர் போன்றிருத்தலின் அயனைத் 'தாமரைப் பூமேலவன்' எனப் புராணங்கள் கூறுகின்றன. உலகினைப் படைத்தற்கு அயன் உலகில் நிறைந்திருக்க வேண்டியது இன்றியமையாதது ஆதலின் 'பதும நன்மலரது மருவிய' என்றார். அது பகுதிப் பொருள் விகுதி. சிவன்-என்பது இங்கே அயனை அதிட்டித்து நின்று படைத்தற்றொழிலைச் செய்கின்ற சிவன். சிவபுரம் நினைபவர் - நினைத்தலாவது: சிவன் பவம் மலி தொழிலை நினைக்கும் நினைப்புக்கு

இணங்க அவனை அற வழியில் நின்று வழிபடுதல். நிலனி னில் நிலை பெறுவர்- நிலனினில் நிலை—நிலன்+இன்+இல் +நிலை. இன்- சாரியை. இல்-ஏழாம் வேற்றுமை உருபு. ஏ- ஈற்றசை.

## நா-சு நின்ற திருத்தாண்டகம்

கக இருநிலனாய்த் தீயாகி நீரு மாகி
யியமான னாயெறியுங் காற்று மாகி
அருநிலைய திங்களாய் ஞாயி றாகி
யாகாச மாயட்ட மூர்த்தி யாகிப்
பெருநலமுங் குற்றமும் பெண்ணு மாணும்
பிறருருவுந் தம்முருவுந் தாமே யாகி
நெருநலையா யின்றாகி நாளை யாகி
நிமிர்புன் சடையடிக ணின்ற வாறே.

(ப-ரை) நிமிர் புன் சடை அடிகள் - நிமிர்ந்திருக்கின்ற சிறிய சடைகளையுடைய சிவபெருமான்; இருநிலனாய்த் தீயாகி நீருமாகி (உம்) -பெரிய மண், தீ, நீர் ஆகியும்; இயமான னாய் எறியும் காற்றும் ஆகி (உம்) - உயிர், வீசுகின்ற காற்று ஆகியும்; அருநிலைய திங்களாய் ஞாயிறு ஆகி (உம்) - (மக்க ளால்) காணுதற்கு முடியாத நிலைகளையுடைய திங்கள், ஞாயிறு ஆகியும்; ஆகாசமாய் அட்டமூர்த்தி ஆகி (உம்) - வான் ஆகியும் (இவ்வாறு) எட்டு உருவங்களை உடையவனு கியும்; பெருநலமும் குற்றமும் (ஆகியும்) - பெரிய நன்மை யாகிய வீட்டின்பமும் (அருட்சத்தியானது ஆணவ மலத்து டன் பொருந்தி திரோதான சத்தியாய் நின்று அதனை இயக்கி உயிர்களைக் கட்டுறுத்தும்) கட்டு ஆகிய குற்றமும் ஆகியும்; பெண்ணும் ஆணும் (ஆகியும்) - பெண் உருவம் ஆண் உரு

வம் ஆகியும்; பிறர் உருவும் தம் உருவும் தாமே ஆகி (உம்)- பிற உயிர்களுடைய உருவங்களும் தாம் கொள்ளுகிற உரு வங்களும் தம்மை அன்றி நிலை பெறுவன அல்லவாகியும்; நெருநலையாய் இன்று ஆகி நாளை ஆகி (உம்) - சென்றகாலம் நிகழ்காலம் வருங்காலம் ஆகிய மூன்று காலங்களாகியும்; நின்ற ஆறு (உடையர்)-(உயிர்களின் பொருட்டு ஐந்தொழில் செய்ய) நிற்கின்ற தன்மையை உடையர். அவருடைய பேரி ரக்கம் தான் என்னே! என்பது குறிப்பெச்சம். 11

(வி-ரை) இந்தத் தேவாரப் பாட்டின் முன் இரண்டு அடிகளும் சிவபெருமான் எட்டு உருவங்களுடையன் (அட்டமூர்த்தி) என்று கூறுகின்றன. மண் புனல் கனல் வளி வெளி ஞாயிறு திங்கள் உயிர் என்ற முறைமையிற் கூறப்பட வேண்டிய எட்டு உருவங்களும், செய்யுள் ஆதலின் முறை பிறழ்ந்து கூறப்பட்டன. பெருநலமும் குற்றமும்- நன்மை கள் எல்லாவற்றினுள்ளும் சிறந்த நன்மை வீட்டின்பம் ஆத லின் வீட்டின்பம் எனப் பொருள் உரைக்கப் பட்டது. இந்த இன்பம் நிலையாயுள்ளது ஆதலின் பெருநலம் என்றார். குற்றம் என்பது இங்கே கட்டு (பந்தம்) ஆகிய குற்றத்தைக் குறிக்கின்றது. இக்குற்றம் உயிர்களை விட்டு முடிவில் நீங்கக் கூடியது. மாணிக்கவாசக சுவாமிகள் திருப்பொற்சுண்ணம் இறுதிப் பாட்டில் சிவபெருமானை, "பந்தமும் வீடுமாயினார்" எனக் கூறியருளினமை காண்க. பெண்ணும் ஆணும் - உல கில் எல்லா உயிர்ப் பொருள்களும் ஆண் பெண் உருவங்க ளாய் நிற்றலுக்கு ஏற்பச் சிவபெருமானுடைய ஆற்றல் (சக்தி) அவனிடமிருந்து வெளிப்பட்டு உலகிற் பலவாறாய்த் தொழிற் படும் பொழுது பெண்ணைக் கூறப்பட்டுள்ளது. உயிரில் பொருள்களும் ஒரு பகுதி ஆண் குணங்களை உடையனவா

யும், மற்றொரு பகுதி பெண் குணங்களை உடையனவாயும் உள்ளன. "சத்தியுஞ்சிவமுமாய தன்மையிவ் வுலக மெல்லாம்- ஒத்தொவ்வா வாணும் பெண்ணு முயர்குண குணியுமாகி- வைத்தனன்" என்று சிவஞான சித்தியாரிற் கூறப்பட்டிருத் தல் காண்க. நெருநலை—நெருநல்+ஐ. ஐ சாரியை, நெருநல்- நேற்று, முன்னை நாள். நெருநலையாய் இன்றாகி நாளையாகி- இறப்பு, நிகழ்வு, எதிர்வு என மூன்று காலங்களில் கூறப்படும் நிகழ்ச்சிகள் கால தத்துவத்தைச் சார்ந்துள்ளன. உலக நிகழ்ச்சிகளெல்லாம் கால தத்துவத்தைப் பற்றியே நிகழ்கின் றன. அக்கால தத்துவத்தை இயக்குகிறவன் சிவபெருமான் ஆதலின் அவன் மூன்று காலங்களுமாயினான் எனக் கூறப்பட் டனன். நின்ற ஆறு- சிவபெருமான் இவ்வாறு நிற்றல் இயல்பு ஆதலின் நிற்கிற ஆறு - என முக்காலத்து மொத்தியல் நிகழ் காலத்துக் கூறற்பாலது, நின்ற ஆறு என இறந்தகாலத்தாற் கூறப்பட்டது. (நன்னூல் பொதுஇயல் ௩௩-வது சூத்திரம்.) ஆறு- தன்மை. அடிகள் நின்ற ஆறு உடையர் என முடிக்க. உடையர் - சொல்லெச்சம். ஏ- ஈற்றசை.

நா-சு. திருப்புள்ளிருக்கு வேளூர் - திருத்தாண்டகம்.

கஉ மின்னுருவை விண்ணகத்தி லொன்றாய் மிக்கு
வீசுங்கால் தன்னகத்தி லிரண்டாய்ச் செந்தீத்
தன்னுருவின் மூன்றாய்த் தாழ்புனலி னான்காய்த்
தரணிதலத் தஞ்சாகி யெஞ்சாத் தஞ்ச
மன்னுருவை வான்பவளக் கொழுந்தை முத்தை
வளரொளியை வயிரத்தை மாசொன் றில்லாப்
பொன்னுருவைப் புள்ளிருக்கு வேளூ ரானைப்
போற்றாதே யாற்றநாள் போக்கி னேனே.

(ப-ரை) மின்னுருவை- மின்னல்போல் மிளிர்கின்ற விந்து உருவமாகியும்; விண் அகத்தில் ஒன்ருய் - விண்ணில் (ஆகாயத்தில்) ஓசை குணம் ஒன்று மாத்திரம் ஆகியும்; மிக்கு வீசுங்கால் தன் அகத்தில் இரண்டாய் - மிகுதியாய் அடிக்கும் காற்றில் ஓசை, ஊறு என்ற இரண்டு குணங்கள் ஆகியும்; செந்தீ உருவில் மூன்று ஆய்-செந்நிறமுள்ள தீவடிவில் ஓசை, ஊறு, உருவம் என்ற மூன்று குணங்களாகியும்; தாழ் புனலில் நான்கு ஆய்-(நிலத்தில்) படிந்து ஓடுகின்ற நீரில் ஓசை, ஊறு, உருவம், சுவை என்ற நான்கு குணங்களாகியும்; தரணி தலத்து அஞ்சு ஆகி-மண்ணில் ஓசை, ஊறு, உருவம், சுவை, நாற்றம் என்ற ஐந்து குணங்களாகியும்; வான்பவளக் கொழுந்தை முத்தை வயிரத்தை - மேலான பவளத்தைப் போலவும் முத்தைப் போலவும் வயிரத்தைப் போலவும் ஒளிர்கின்ற உருவம் ஆகியும்; மாசு ஒன்று இல்லாப் பொன் உருவை- குற்றமில்லாத பொன்போல் மிளிர்கின்ற உருவம் ஆகியும்; எஞ்சாத் தஞ்சம் மன் உருவை - (இவ்வாறு உலகிலே ஒளிரும் உருவப் பொருள்களுக்கெல்லாம்) எஞ்ஞான்றும் நீங்காத புகலிடமாயுள்ள நிலையான நாத ஒளி உருவமாகியும்; வளர் ஒளியை - (மேலேகூறிய உயிரில் பொருள்களில் அன்றி உயிர்ப்பொருள்களில்) மேலும் மேலும் மிகுந்து ஒளிர்கின்ற ஒளியாகியும்; புள்ளிருக்கு வேளூரானை - திருப்புள்ளிருக்கு வேளூர் என்ற வைத்தீசுரன் கோயிலில் எழுந்தருளி யிருப்பவனும் ஆகிய சிவபெருமானை; போற்ருதே - (நான்) வணங்காமல்; ஆற்ற நாள் போக்கினேன்-நீண்ட காலம் வீணாகக் கழித்தேன். 12

(வி-ரை) மின் உருவை - மின் என்பது இங்கே விந்து ஒளியைக் குறிக்கின்றது. திருமந்திரம் ஏழாந் தந்திரம் சமாதிக்கிரியை ௩௦-வது பாட்டில் " மின்னொத்த விந்து நாதாந்

தத்து விட்டிட" என்ற தொடர்மொழி மின்னல் -உருவம் விந்து என்பதை உணர்த்துகிறது. நுண்ணிய விண்ணில் ஒளியாய் விளங்குவது; தடித்த காற்று முதலிய பூதங்களில் ஒலியாயும் விளங்குகின்றது. விண்ணகத்தில் ஒன்றாய்.....தாணி தலத்து அஞ்சாக்கி சிவபெருமான் விண் முதல் நிலம் வரை உள்ள ஐம்பெரும்பூதங்களிலும் முறையே ஓசை, ஊறு, உருவம், சுவை, நாற்றம் ஆகிய ஒன்றுக்கொன்று ஏறி வரும் குணங்களை உடையன். இதனை மாணிக்கவாசக சுவாமிகள்,

"பாரிடை யைந்தாயப பரந்தாய் போற்றி
நீரிடை நான்காய் திகழ்ந்தாய் போற்றி
தீயிடை மூன்றாய்த் திகழ்ந்தாய் போற்றி
வளியிடை யிரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி
வெளியிடை யொன்றாய் விளைந்தாய் போற்றி"

என்று போற்றித் திருவகவலிற் கூறியருளினமை காண்க. ஐம்பூதங்களிலும் விளங்கும் ஒளியைத் திருமந்திரம், கூ-ம் தந்திரம், ச-வது ஒளி, ரு-வது பாட்டு "மேலொளி கீழ தன்....." கூறுதல்காண்க. செந்தீத்தன்னுருவில்-தன் அசை. பவளக் கொழுந்து முத்து வயிரம் பொன்- இப் பொருள்கள் மண் (பிருதிவி) என்ற பூதத்தில் ஒளியாய் விளங்கும் பொருள்கள் என்று குறிக்கப்பட்டன. வேறு வேறு தனிப் பொருள்களில் விளங்கும் ஒளியை நாம் ஐம்பூதங்களில், மண்ணில் மாத்திரம் காணலாம் ஆதலின் இவைகள் கூறப்பட்டன. எஞ்சாத் தஞ்சம் மன் உரு - உயிரைத் தவிர ஏழு உருவங்களிலும் விளங்குகின்ற ஒளி, அவைகளில் நிறைந்து விளங்குகிற நாதத்தின் ஒளியாதலின் அது மன் உரு (நிலையான உருவம்) எனப்பட்டது. அந்த நாதத்தைத்தவிர ஏழு உருவங்

களில் விளங்குகிற ஒளிக்குப் பிறிது புகலிடமில்லை யாதலின் நாதம் எஞ்சாத் தஞ்சம் என்று கூறப்பட்டது. பராசத்தியில் விளங்குகிற அருளொளி முதலாவது, சுத்த மாயையிலுள்ள நாதத்தில் விளங்கி, அந்நாத ஒளி, அது நிறைந்திருக்கின்ற எல்லாப் பொருள்களிலும் விளங்குகின்றது என்பது குறிப் பிடத் தக்கது. எஞ்சாத - எஞ்ஞான்றும் நீங்காத. எஞ்சாத தஞ்சம் - போகாப் புகல். வளர்ஒளி - சிவபெருமான் விளங்கு கின்ற எட்டு உருவங்களில் ஏனைய ஏழு உருவங்கள் முன்னே கூறப்பட்டதனால் வளர்ஒளி என்பதற்கு உயிர்ப்பொருள்களில் விளங்கும் ஒளி எனப் பொருளுரைக்கப்பட்டது. உயிரினது தவம் முதிர முதிர சிவபெருமான் அருள் ஒளி அதனிடத்தில் ஏறி வருதலால் 'வளர் ஒளி' எனப்பட்டது. போற்றுதே ஆற்ற நாள் போக்கினேன் - அடிகள் தாம் சமண சமயத்திலி ருந்து காலங் கழித்ததை நினைந்து கூறுகின்றார். ' இருநில னாய்த் தீயாகி ' என்ற முந்திய தேவாரப் பாட்டு, சிவபெரு மான் மண், நீர், தீ, வளி, வெளி, ஞாயிறு, திங்கள், உயிர் என்ற எட்டு உருவங்களாய் விளங்குகின்றான் என்று கூறியது. இப்பாட்டு அவன் அவ்வுருவங்களில் அருள் ஒளியாயும் (Energising force) விளங்குகின்றான் என்று கூறுகின்றது. (He is not only in Static form but also in dynamic force moving the whole world, both animate and inanimate) முந்திய பாட்டில் ஞாயிறு திங்கள் என்று கூறி யிருப்பவை இப்பாட்டில் நாதம் விந்து எனக் கூறப்பட்டன. ஞாயிறும் திங்களும் முறையே நாதமும் விந்துவுமாகும். திரு மந்திரம், எ-ம் தந்திரம், கஉ-வது குருபூசை, "இந்துவும் பானுவு மென்றெழு கின்றதோர் - விந்துவு நாதமும்" என்ற எ-வது பாட்டுப் பார்க்கவும். மின்னுரு முதலாகக் கூறப்பட்ட,

உரு ஒவ்வொன்றுக்கும் இரண்டாம் வேற்றுமை 'ஐ'யை விரித்துப் பொருள் கூறுதலுக்குப் பதிலாக ஐ வரும் இடங்களில் உம் கொடுத்துக் கூறி முடிவில் இவைகள் எல்லாம் ஆகிய சிவபெருமானை என்று பொருள் கூறப்பட்டது.

ச – க. திருச்சிவபுரம். திருவிராகம் பண்–நட்டபாடை.

கரு மலைபல வளர்தரு புவியிடை
மறைதரு வழிமலி மனிதர்கள்
நிலைமலி சுரர்முத லுலகுக
ணிலைபெறு வகைநினை வொடுமிகும்
அலைகடல நடுவறி துயில்ம
ரரியுரு வியல்பர னுறைபதி
சிலைமலி மதிள்சிவ புரநினை
பவர்திரு மகளொடு திகழ்வரே.

(ப-ரை) மலைபல வளர்தரு புவியிடை - பல மலைகள் வளர்கிற நில உலகில்; மறைதரு வழிமலி மனிதர்கள் - அறிவு நூல்களிற் கூறப்பட்ட வழியில் ஒழுகி வருகிற மனிதர்களும்; நிலைமலிசுரர் முதல் உலகுகள் - நிலைபெற்றுள்ள தேவர் முதலியவர்கள் வாழ்கின்ற தேவலோக முதலிய உலகங்களும்; நிலைபெறும் வகை மிகும் நினைவொடு - நிலையாக நின்று நிலவும்படி (உள்ளத்தில்) நினைக்கும் மேலான நினைவுடன்; அலைகடல் நடு அறிதுயில் அமர் அரிஉரு இயல் பரன் - அலைகள் வீசுகிற கடலின் நடுவில் அறிதுயில் செய்யும் திருமாலின் உருவங் கொண்டுள்ள இறைவன்; உறைபதி - எழுந்தருளி யிருக்கும் இடமாகிய; சிலை மலி மதிள் சிவபுரம் - கற்கள் நிறைந்துள்ள மதிற் சுவர்களாற் சூழப்பட்ட திருச்சிவபுரத்தை; நினைபவர் -

(உள்ளத்தில்) எண்ணிக் கொண்டிருப்பவர்கள்; திருமகளொடு திகழ்வார் - திருமகள் அருட்பார்வையால் உண்டாகும் எல்லாச் செல்வங்களோடுங் கூடிச் சிறப்பாய் வாழ்வார்; ஏ - அசை.

13

(வி—ரை) இத்தேவாரம் இறைவன் திருமாலை அதிட்டித்துக் காத்தற் றொழில் செய்தலைக் கூறுகின்றது. 'மலைபல வளர்தரு' என்பது மலைகள் வளர்ந்து வருவனவாக மேல்நாட்டு இயற்கை ஆராய்ச்சியாளரும் இக்காலத்துக் கூறுகிறார்கள். 'வளர்தரு' என்பதில் 'தரு' துணைவினை. வளர்கின்ற என்பது பொருள். மலையிற் பல நுகர்பொருள்கள் உண்டாதலானும், அதனிடை நின்று வருகிற யாறுகளால் நிலவளமும் நீர் வளமும் உண்டாதலானும், 'மலைபல வளர்தரு புவி' என்று புவி சிறப்பித்துக் கூறப்பட்டது. மறை-மறைவாயுள்ள உண்மைகளை எது மக்களுக்குஉணர்த்துமோ அதுமறை. மறைஎன்பது ஆகுபெயர். அது இங்கேபொதுவாய் அறிவுநூலைக்குறிக்கின்றது. 'மறைதரு' என்பதில், தரு - கூறுகின்ற 'மறைதரு வழிமலி மனிதர்கள் நிலைபெறு வகை' எனவே, மறைகளிற் கூறுகிற அறத்தின் வழி நடவாதார் நிலைபெற்றுச் சிறப்பாக வாழமாட்டார் என்பது பெறப்பட்டது. அறிதுயில் - நனவு அறிவுடன் சிந்திக்கின்ற. நினைபவர் - இறைவன் உயிர்களுக்காக அருளினால் எப்பொழுதும் செய்து வரும் காத்தற் றொழிலையும் அவன் அருளையும் உள்ளத்தில் எண்ணுகிறவர்கள்.

நா — ௪ போது—சிவனெனு மோசை. பண் — பியந்தைக் காந்தாரம்.

௧௪ விரிகதிர் ஞாயிறல்லர் மதியல்லர் வேத
விதியல்லர் விண்ணு நிலனும்
திரிதரு வாயுவல்லர் செறிதீயு மல்லர்
தெளிநீரு மல்லர் தெரியில்

அரிதரு கண்ணியாளை யொருபாக மாக
வருள்கா ரணத்தில் வருவார்
எரியர வாரமார்ப ரிமையாரு மல்ல
ரிமைப்பாரு மல்ல ரிவரே.

(ப—ரை) தெரியில் - நுணுகி ஆராய்ந்து பார்த்தால்; இவர் - இறைவன்; விரிகதிர் ஞாயிறு அல்லர் - விரிந்த கிரணங்களையுடைய கதிரோன் அல்லர்; திங்கள் அல்லர்—திங்களும் அல்லர்; வேதவிதியல்லர் - அறிவு நூல்களிற் கூறப்படும் ஆணையும் (நியமம்) அல்லர்; விண்ணும் நிலனும் திரிதருவாயு அல்லர் - விண்ணும் மண்ணும் திரிகிற காற்றுமல்லர்; செறிதீயுமல்லர் - நெருங்கி எரிகின்ற தீயுமல்லர்; தெளிநீருமல்லர் - தெள்ளியநீரும் அல்லர்; அரிதரு கண்ணியாளை - செவ்வரி பரந்த கண்களை உடைய உமாதேவியாரை; ஒரு பாகமாக அருள்காரணத்தில் வருவார் - உயிர்களுக்கு அருள் செய்யும் பொருட்டுத் தமது இடது பாகத்தில் வைத்திருப்பவர்; எரி அரவு ஆரம் மார்பர் - சினம் கொள்ளும் பாம்பை மாலையாக மார்பில் அணிந்தவர்; இமையாரும் அல்லர் - உயிர்களுக்கு ஒளி செய்யாதிருப்பவருமல்லர்; இமைப்பாரும் அல்லர் - ஒளி செய்கிறவரும் அல்லர். 14

(வி—ரை) இத்தேவாரம், இறைவனுடைய உண்மை இயலை (சொரூப இலக்கணத்தைக்) கூறுகிறது. இறைவனை "இருநிலனாய்த் தீயாகி' என்ற பாட்டில் ஞாயிறாகியும் திங்களாகியும் இருக்கிறான் என்று கூறிவிட்டு, இப்பாட்டில் ஞாயிறுமல்லன், திங்களுமல்லன் எனக் கூறுவது முரணாகாதோ எனின், முரணாது; 'இருநிலனாகி' என்ற பாட்டில் இறைவனுடைய பொது இயலும் (தடத்த இலக்கணமும்) 'இப்பாட்டில், அவ

னுடைய உண்மை இயலும் (சொரூப இலக்கணமும்) கூறப்பட்டன ஆகலின். இறைவனுடைய அருள் ஆற்றல் விளங்கும் உலகில் அவன் ஞாயிறு திங்கள் முதலிய எட்டு வடிவங்களை உடையவனுயிருக்கிருன் என்பதும், உலகில் விளங் காது தானுக நிற்கும் தன்னுடைய உண்மை நிலையில் அவன் ஞாயிறு திங்கள் அல்லன் என்பதும் கூறப்பட்டன. திருநாவு கரசு சுவாமிகள் பிற இடங்களிலும் 'அருக்கனுவான் அரனுரு வல்லனே' என்றும், "அங்கதிரோன்றன்னை யண்ணலாக் கருதவேண்டா" என்றும், "மண்ணல்லை விண்ணல்லை" என்றும் கூறியருளினமை காண்க. வேதங்களும் இறைவனை விசுவன் (உலகினுள்ளான்) எனக் கூறியதுடன் விசுவாதீதன் (உலகினைக் கடந்தவன்) எனவும் கூறுகின்றன. எரி அரவு-வினைத்தொகை. எரி அரவு-எரி என்ற சொல்லுக்கு ஒளி விளங்குகின்ற என் றும் பொருள் கூறலாம். அரவு- ஒளி விளங்கும் விந்து சத்தி யாகிய குண்டலி சத்தியைக் குறிக்கிறது. குண்டலி-பாம்பு. 'இமையாரு மல்லர் இமைப்பாரு மல்லர்' என்பதில் இமைத் தல்- விளங்குதல், ஒளி செய்தல். "மின்னுறழ் இமைப்பிற் சென்னி பொற்பன்" என்ற திருமுருகாற்றுப்படை அடி-வது வரியில், 'இமைப்பு' என்ற சொல்லுக்கு, நச்சினர்க் கினியர் 'விளக்கம்' என்று உரை செய்திருத்தல் காண்க. இமையார்- ஒளி செய்யார். (எதிர்மறை). இமைப்பார்- ஒளி செய்வார். (உடன்பாடு) ஒளி செய்தல் – அறிவு விளங்கச் செய்தல். இறைவனுடைய அளவில் பேரொளிக்கு நாம் உலகிற்காணும் படி எடுத்துக்காட்டாக விளங்குவது கதிரவன் ஒளி. அக்கதி ரவன் ஒளிமுன்னர் எல்லா உயிர்களும் இயங்குவன அன்றி, அவன் ஒருயிர்க்கு ஒளி செய்தலும் பிறிதோர் உயிருக்கு ஒளி செய்யாதிருத்தலும் இலன். அதுபோல், பேரொளியாய்

விளங்குகிற இறைவன் திருமுன்பு எல்லா உயிர்களும் தங்கள் வினைக்கு ஏற்ப அறிவு விளங்கப்பெற்று இயங்கும் தகுதி அடைகின்றன. அவன் உயிர்கள் எல்லாமும் தகுதி அடைய வேண்டும் என்ற எண்ணங் கொண்டு(சங்கற்பித்து) அவைகளை இயங்க வைக்கிறான் (அதிட்டிக்கிறான்) அன்றிக் கரணத்தால் இயங்க வைக்கிறான் (அதிட்டிக்கிறான்) அல்லன். ஆதலின், உயிர்கள் பொருள்களை நுகர்ந்து வேற்றுமைப்படுவனபோல், அவன் வேற்றுமைப்படான். "மன்னுசிவன் சந்நிதியில்மற்றுல கஞ் சேட்டிக்கும்" என்னும் மறை என்பதும்இதுவே. *இமை யாரு மல்லர் இமைப்பாரு மல்லர்' என்பது உலக இயக்கத் துக்கு இறைவன்காரணனா யிருப்பினும் வேற்றுமைப்படான் என்பதை உணர்த்துகிறது.

சு-எ. திருநீடூர். பண்-தக்கேசி.

கூ மாயமாயம னங்கெடுப் பானை
மனத்து ளேமதி யாயிருப் பானைக்
காய மாயமு மாக்கு விப்பானைக்
காற்று மாய்க்கன லாய்க்கழிப் பானை
ஓயு மாறுறு நோய்புணர்ப் பானை
யொல்லை வல்வினை கள்கெடுப் பானை
வேய்கொ டோளுமை பாகனை நீடூர்
வேந்த னைப்பணி யாவிட லாமே.

(ப-ரை) மாயம் ஆய மனம் கெடுப்பானை-வஞ்சனையைச் செய்வதாகிய மனத்தை அவ்வஞ்சனை யில்லாதிருக்கச் செய்கி

---

* இமையார் இமைப்பார் என்பனவற்றிலுள்ள இமைத்த லுக்குக் கண்ணிமைத்தல் எனப்பொருள்கொண்டு, அவை முறையே தேவர்கள் மக்கள் என்று பொருள்படும் என்று கூறுதலுமுண்டு.

றவனை; மனத்துஉள்ளே மதியாய் இருப்பானை-வஞ்சனையில்லா மற் செய்யப்பட்ட அம்மனத்தினுள்ளே தூய அறிவாய் விளங் குகின்றவனை; மாய காயமும் ஆக்குவிப்பானை-மாயையால் உடலை உண்டுபண்ணி அவ்வுடலில் உயிரைச் சேர்ப்பானை; காற் றுமாய்க் கனலாய்க் கழிப்பானை — அவ்வாறு உண்டுபண்ணின உடலைக் காற்றையும் தீயாயும் கழியச் செய்கிறவனை; உரு ஒயும் ஆறு நோய் புணர்ப்பானை - உயிர் உடலோடு கூடிய உலக நுகர்வில் தளர்வு அடையும்படி துன்பங்களைக் கூட்டுவிக்கின் றவனை; ஒல்லை வல்வினைகள் கெடுப்பானை- (அவ்வாறு உயிர் துன்பம் நுகரும்படி செய்து) அது செய்த கொடிய வினை களின் பயனைப் போக்குவித்து விரைவில் பக்குவப் படுத்து கிறவனை; வேய்கொள் தோள் உமை பாகனை - மூங்கிலைப்போ லும் தோள்களையுடைய உமாதேவியாரை இடது பாகத்தில் வைத்திருப்பானை; நீடூர் வேந்தனை-திருநீடூரில் திருக்கோயில் கொண் டெழுந்தருளி யிருக்கும் (பெரிய) மன்னனை; பணியா விடலாமே- வணங்காமல் இருக்க முடியாது. (அதாவது வணங்கியே தீரவேண்டும் என்றபடி.) 15

(வி-ரை) முதல் மூன்று அடிகளிலும் உள்ள ஒவ்வொரு அடியிலும் எதிரிடைப்பட்ட இவ்விரண்டு கருத்துக்கள் அடங்கிய இவ்விரண்டு சொற்றொடர்கள் வைக்கப்பட்டு உயி ருக்குப் பக்குவம் (தகுதி) வருவித்தற்பொருட்டு, முன்னைய சொற்றொடரால் கட்டினுற் செய்யும் தொழிலும்; பின்னைய சொற்றொடரால் அக்கட்டை நீக்கும் தொழிலும் கூறப்பட்டி ருக்கிற அழகு நோக்கற்பாலது.

முதலடி: முதலாவது உயிரானது மலத்தினுலாகிய அறியா மையால் மனத்தின்பாலும்,மனத்தை ஈர்த்துப்பொருள் நுகர்வு களிற் செல்கிற ஐம்புலன்களின்பாலும், வயப்பட்டுக் காமம்,

வெகுளி, மயக்கங்களுக்கு உட்பட்டுத் தீயநெறியிற் செல்கிறது. துன்பநுகர்வினால், அது தீயநெறியினின்று விலகி மனத்தூய்மை அடைந்தபொழுது இறைவன் அவ்வுள்ளத்தில் விளங்கித் தோன்றுகிறான். "மாற்றினின் றென்னை மயக்கிடும் வஞ்சப்புல னைந்தின் வழியடைத்து" என மாணிக்க வாசக சுவாமிகள் கூறியிருப்பது காண்க

இரண்டாவது அடி: காயமாயமும், என்பதை 'மாயகாயமும்'என மாற்றிவைத்துப் பொருள் உரைக்கப்பட்டது. மாயை என்பது மாய எனக் குறைந்து நின்றது. காயம் என்பது இங்கே பரு (தூல)உடலைக் குறிக்கிறது. சைவசித்தாந்தத்திற் கூறியுள்ள "உள்ளது தோன்றல்" என்னும் வழக்கப்படி (சற்காரிய வாதப்படி) அழிவு என்ப தெல்லாமும் பருமை (தூலம்) யானது நுண்மை (சூட்சுமம்) ஆவதன்றிப் பிறிதன்று. ஐம்பெரும்பூதக் கூட்டத்தாலாகிய பரு உடலிலுள்ள மண் நீர் என்னும் பரும் பூதங்கள் தீ, காற்று என்னும் நுண் பூதங்களாக மாறி உலகப்பரப்பைச் சேர்கின்றது ஆதலின் "காற்றுமாய்க்கனலாய்க் கழிப்பானை" என்று அடிகள் கூறினார். வெளி (ஆகாயம்) புறக்கண்ணுக்குத் தெரியாது. ஆதலின் கூறப்படவில்லை போலும்.

மூன்றாவது அடி: உயிரானது தான் செய்த வினைப்பயனாக இறைவனாற் கொடுக்கப்பட்ட துன்பம் நுகர்தலினாலேயே விடய நுகர்வுகளில் ஓய்வடைந்து பயன் கருதிச் செய்யும் வினைகளைச் செய்யாமலிருக்கின்றது என்ற கருத்தைக் கூறுகிறது.

நாலாவது அடி: மூன்று அடிகளினும் கூறப்பட்ட செயல்களை இறைவன் உயிர்மேல் வைத்த பேரருளாற்

செய்கிறான் என்னும் கருத்து வெளிப்படுத்த அடிகள் இறைவனை, 'வேய்கொள்தோள் உமைபாகன்' என்றாகூறியருளினார். அடியார்களாகிய நமக்கு நம்பொருட்டு இத்துணை அருள்செய்கின்றவனை வணங்கி, அவன் வழியில் நின்று, அவனுக்குள் அடங்காமல் இருத்தல் உய்யுந் தீர்வு இல்லாத செய்நன்றி மறத்தல் ஆகும் என்பது ஈற்றிலுள்ள வினாப்பொருளுடைய ஏகாரத்தாற் றெளிவிக்கப்பட்டது.

வேந்தன்-உயிர்களை ஆள்கின்ற மன்னன். இறைவன் உயிர்களை ஆளுகிற வேந்தன் என்றும், அவனை உயிர்கள் பணிதல் வேண்டும் என்றும் கூறப்படுதலினால் இறைவனுக்கும் உயிர்களுக்கும் என்றும் உள்ள தொடர்பு ஆகிய ஆண்டான் அடிமைத் தொடர்பு குறிப்பிடப் பட்டது. பணிதல் என்பது அடிமைகளாகிய உயிர்கள், ஆண்டான் ஆகிய இறைவனுக்குத் தன்முனைப்பு இல்லாமல் தாழ்மையுடன் அடங்கி அவனது அருள்வழி நிற்றல். வழிபாடும் அதுவே யாகும். பணியா விடலாமே- என்பதன் ஈற்றிலுள்ள ஏகாரம் - வினாப் பொருள் குறித்து எதிர்மறைப் பொருள்தந்து நின்றது. "அத்தாவுனக் காளாயினி யல்லே னெனலாமே" என்பது போல.

திருச்சிற்றம்பலம்.

---

## உ. உயிரவை நிலை.

### நா - ௬ திருவாரூர் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

௧௬ கருவாகிக் குழம்பிருந்து கலித்து மூளை
கருநரம்பும் வெள்ளெலும்புஞ் சேர்ந்தொன் றாகி

உருவாகிப் புறப்பட்டிங் கொருத்தி தன்னால்
வளர்க்கப்பட் டுயிராருங் கடைபோ காரால்

மருவாகி நின்னடியே மறவே னம்மான்
மறித்தொருகால் பிறப்புண்டேன் மறவா வண்ணம்

திருவாரூர் மணவாளா திருத்தெங் கூராய்
செம்பொனே கம்பனே திகைத்திட் டேனே.

(ப – ரை) *அம்மான் - தந்தையே! திருவாரூர் மணவாளா - திருவாரூரில் உமாதேவியாருடன் மணக்கோலங் கொண்டிருப்பவனே ; திருத்தெங்கூராய் - திருத்தெங்கூரி லிருப்பவனே; செம்பொன் ஏகம்பனே - சிவந்த பொன்னிற முடையவனாய்த் திரு ஏகம்பத்தில் (காஞ்சிபுரத்தில்) இருப்பவனே; உயிரார் - உயிரானது; கரு - (தாயாரது) கருப்பையில்; குழம்பு ஆகி இருந்து (உம்) - சுக்கிலமும் சுரோணிதமும் கலந்த நெகிழ்ச்சிப் பொருளாகியிருந்தும்; மூளைகளித்தும்-(பின் அதனிடமிருந்து) மூளை உண்டாகியும்; கருநரம்பும் வெள்ளெலும்பும் சேர்ந்து ஒன்றாகி (உம்) - பின் கருமையான நரம்புகளும் வெண்மையான எலும்புகளும் (இரத்தம், தோல்,செந்நீர்,தசை முதலிய தாதுக்களும்) சேர்ந்து திரண்ட பிண்டப் பொருளாகியும்; உருவாகிப் புறப்பட்டு (உம்) - (இவ்வாறு) ஓர் உடல் உருவாகித் தாயாரது கருப்பையிலிருந்து வெளியே பிறந்தும்; இங்கு ஒருத்தி தன்னால் வளர்க்கப்பட்டு (உம்)-இந்த உலகில் அத்தாயாரால் பேணி வளர்க்கப்பட்டும்; கடைபோகார் - வாழ்நாள் எல்லை முடிவு வரையும் உடலில் நிலைத்திராது இடையிலே இறந்து போகின்றது, (உடலில் உயிர் நிற்கும் நிலை இவ்வளவு நிலையில்லாததாயிருக்கின்றது); மருஆகி - (உடலில் உயிர் நிற்கும் வரை நான்) சிவமணம் கமழப் பெற்றவனாயிருந்து; நின் அடியே மறவேன் - உனது*

இரண்டு திருவடிகளையே மறவாது நினைந்து கொண்டிருப்பேன். (இது என்னாற் செய்யக்கூடியது); மறித்து- (ஆனால் இந்த உடலை விட்டு எனது உயிர் நீங்கினபின்) மறுபடியும்; ஒருகால் பிறப்புஉண்டேல்-ஒரு முறை உலகிலே பிறக்க நேரிடுமானால்; மறவாவண்ணம்-நினது திருவடிகளைமறவாமல் இருப்பேனோ என்று; திகைத்திட்டேன் - மயங்குகின்றேன்; ஆதலின் நான் அவ்வாறு பிறந்தால், நினது திருவடிகளை மறவாதிருக்கும்படி அருள் செய்யல் வேண்டும் என்பது குறிப்பெச்சம். 1

(வி — ரை) கருஆகிக் குழம்பு இருந்து - என்பது கரு(வில்) குழம்பு ஆகியிருந்து என மாற்றிப் பொருளுரைக்கப்பட்டது. 'கருவி லுருவாகி வந்து' என அருணகிரி நாதர் திருப்புகழிற் கூறியருளினர். குழம்பு - இரண்டு முதலிய பொருள்கள் கலந்து மண்போல கடினமில்லாமலும் நீர்போல் நெகிழ்ச்சியில்லாமலுமிருக்கிற நெகிழ்ச்சிப் பொருள். சுக்கிலமும் சுரோணிதமும் கலந்த பொருள் இங்கே குழம்பு எனப்பட்டது. கலித்தல் - என்பது உள்ளே அடங்கி யிருப்பது வெளிப்பட்டுத் தோன்றல்; உண்டாதல். கருநரம்பும் வெள்ளெலும்பும்-இனம் பற்றிப் பிற தாதுக்களும் கொள்ளப்படும். உயிரார் கடை போகார் - ஆர் என்ற பன்மை உருபு இகழ்ச்சிக் குறிப்பாய் உயிருடனும் அது கொண்டு முடிகிற பயனிலை 'கடை போகார்' என்ற வினைமுற்றுடனும் சேர்க்கப்பட்டன. "ஆவியார்" என அடிகள் வேறிடத்தும் இவ்வாறு கூறி அருளினர். கடைபோதல் - கடைநாள் வரையும் நிலைநிற்றல். உயிருள்ள உடல் இன்ன காலம் அழியும் என்ற உறுதியின்றிக் குழந்தைப்பருவம், இளமைப் பருவம், காளைப்பருவம் முதலிய பருவங்களில் ஒன்றில் அழிவ

தாயிருத்தலின் "கடை போகார்" என்றார். கடை போகாரால் என்பதில், ஆல் அசை. மரு - மணம், இங்கே சிவமணத்தைக் குறிக்கிறது. சிவமணங் கமழ்தலாவது - உயிர் தனக்குச் சிவனிடத்துள்ள அத்துவிதத் தொடர்பினால் தன்னை மறந்து, அவனை எப்பொழுதும் நினைந்து, இன்பம் நுகர்ந்து கொண்டிருத்தல். இந்த நிலையில் திருவருளை மறத்தல் முடியாது ஆதலின் 'மறவேன்' என்றார். நின்னடியே - என்பதிலுள்ள ஏகாரம் தேற்றப் பொருளில் வந்தது. திகைத்திட்டேனே - திகைத்தல் என்பது மயங்குதல், மறுகுதல். திருவடிகளை மறவாதிருத்தல் வேண்டுமே, நுண்ணுடலை விட்டுப் பரு உடலுக்கு வந்தபொழுது ஒரு வேளை மறந்து விடுவேனோ என்று மயங்குதல்; இந்தக்கருத்தை அடிகள் "துறக்கப் படாத" என்ற முதற்குறிப்புடைய தேவாரப் பாட்டில் "பிறந்தாற் பிறையணி வார்சடைப் பிஞ்ஞகன் பேர்-மறப்பன் கோலோ வென்றென் னுள்ளங்கிடந்து மறுகிடுமே" என்று கூறி அருளினர்.

## நா — ச. திருமறைக்காடு. திருநேரிசை.

கஎ. கால்கொடுத் திருகை யேற்றிக்
கழிநிரைத் திறைச்சி மேய்ந்து
தோல்படுத் துதிர நீராற்
சுவரெடுத் திரண்டு வாசல்
ஏல்வுடைத் தாவ மைத்தங்
கேழுசா லேகம் பண்ணி
மால்கொடுத் தாவி வைத்தார்
மாமறைக் காட னாரே.

(ப-ரை) மாமறைக்காடனார் - பெருமை பொருந்திய திருமறைக்காட்டில் திருமேனி கொண்டருளியிருக்கும் சிவ பெருமான்; கால் கொடுத்து (உம்)-(கீழே இரண்டு) கால்களை நிறுத்தியும்; இருகை ஏற்றி (உம்)-இரண்டு கைகளை (மேலே இரண்டு தோள்களுடன்) சேர்த்து வைத்தும்; கழி நிரைத்து (உம்)-(எலும்புகளாகிய பல கம்புகளை இரண்டு கால்களுக்கும் இரண்டுகைகளுக்கும் ஊடே எல்லா உடல் உறுப்புக்களிலும்) ஒழுங்காய்க் கொழுவி வைத்தும்; இறைச்சி மேய்ந்து (உம்) - (எலும்புகளுக்கு ஊடே அவைகள் உரசாதபடி) தசைகளை நிரைத்து வைத்தும்; உதிரநீரால் சுவர் எடுத்து (உம்) - செந்நீராகிய நீருடன் தசைகளைப்பிசைந்து (முன் பின் பக்கங் களாகிய) சுவர்களை எழுப்பியும்; தோல்படுத்து (உம்) - (இவை களை எல்லாம் தோலால் பொதிந்து மூடியும்; இரண்டு வாசல் ஏல்வு உடைத்துஆக வைத்து (உம்)-வாய் குதம் என்ற இர ண்டு வாயில்களை அவ்வுடலுக்குப் பொருந்தவைத்தும்; அங்கு - இவ்வாறு அமைத்த அவ்வுடலில்; ஏழு சாலேகம் பண்ணி (உம்) – கண்கள் இரண்டு, காதுகள் இரண்டு, நாசி கள் இரண்டு, குறிஆகிய ஏழு பலகணிகள் செய்துவைத்தும் (உண்டாக்கப்பட்ட உடலில்) ; ஆவி - உயிரை; மால்கொடு த்து வைத்தார் - (உடலை நிலையான மெய்ப்பொருள் எனக் கருதும்) மயக்கத்துடன் உலகில் வாழும்படி செய்தார். ஏ - அசை 2

(வி-ரை) உயிர் உலகில் வாழ்தற்கு இறைவன் உடலை அமைத்தது, உயிரோடு விளங்கும் உடல் இருத்தற்கு மக்கள் ஒரு வீடு அமைத்தல் போல்வது என்று உருவகப்படுத்தி இத் தேவாரப் பாட்டுக் கூறப்பட்டது. இரண்டு வாசல்-உணவுப் பொருள் உடலினுட் கொள்ளுதற்கு வாயும், அவ்வுணவுப்

பொருள் செறித்துச்சாரமாய் உடலுடன் சேர்ந்தபின், எஞ்சி நிற்பது கழிதற்குக் குதமும் ஆகிய இரண்டு வாசல்கள் ஒன்பது வாசல்களினின்றும் பிரித்துக் கூறப்பட்டன. ஏழு சாலேகம்-ஒரு வீட்டினுள்ளே வெளியே யிருந்து காற்றும் ஒளியும் வருதற்கும் வீட்டிலிருக்கிற காற்று வெளியே போதற்கும் பலகணிகள் அமைத்திருத்தல்போல், வெளியே உள்ள விடய உணர்ச்சிகள் உடலினுள்ளே சென்று உயிரை அடைதற்கும், உயிர் வெளியே உள்ள விடயங்களிற் செல்லுதற்கும் உடலின்கண் ஏழுவாயில்களும் அமைகின்றன. எல்வு உடைத்து ஆக—என்பதில், 'ஆக' என்பது ஆ எனக் ககர உயிர்மெய் ஈற்றில் தொக்கது. மாமறைக் காடனார் ஆவியை (உடலில்) மால்கொடுத்து வைத்தார் எனக் கொண்டுகூட்டி முடிக்க. கால்கொடுத்தும், இருகை ஏற்றியும், கழி நிரைத்தும், இறைச்சி மேய்ந்தும், தோல்படுத்தும், சுவர் எடுத்தும், இரண்டு வாசல் வைத்தும், ஏழு சாலேகம் பண்ணியும் உண்டாக்கப்பட்ட உடல். இந்த வினையெச்சங்கள் ஒவ்வொன்றிலும் 'உம்' தொக்கி நிற்பது விரித்துப் பொருள் உரைக்கப்பட்டது. கேவல நிலையில் ஆணவ மலத்தினால் அறியாமையில் மூழ்கிக்கிடந்த உயிரைச் சகல நிலையில் உலக வாழ்வில் விட்டுக் கருவி அறிவினால் மயக்கிப் பக்குவப்படுத்தித் தெளிவித்துச் சுத்த நிலையை அடையச் செய்தற்கு உயிருக்கு உடல், உட்கருவி, உலகு, நுகர்ச்சிகள் (தனு கரண புவன போகங்கள்) இறைவனாற் கூட்டப்பட்டன. ஆதலின், 'மால் கொடுத்து ஆவி வைத்தார்' என அடிகள் கூறி யருளினர். இக்கருத்தை அடிகள் 'குறுவித்தவாகுற்றநோய் வினைகாட்டி' என்ற முதற் குறிப்பு உடைய திரு ஐயாற்றுத் திருவிருத்தம் பத்துப் பாட்டுக்களிலும் உரைத்தருளினர்.

நா – ச. திருக்கோண்டீச்சரம்–திருநேரிசை.

கஅ போக்கமாய் நின்ற பொல்லாப்
புழுமிடை முடைகொ ளாக்கை
தொக்குநின் றைவர் தொண்ணூற்
றறுவருந் துயக்க மெய்த
மிக்குநின் றிவர்கள் செய்யும்
வேதனைக் கலந்து போனேன்
செக்கரே திகழு மேனித்
திருக்கோண்டீச் சரத்து ளானே.

(ப–ரை) செக்கர் திகழுமேனி -சிவந்த வானம் போன்று விளங்கும் நிறமுடைய வடிவினனாய்; திருக்கொண்டீச்சரத் துளானே – திருக்கொண்டீச்சரத் தலத்தில் திருமேனி கொண்டிருப்பவனே; பொக்கமாய் நின்ற பொல்லாப் பு ழு மி டை முடைகொள் ஆக்கை – நிலையில்லாத தும், பொல்லாத புழுக்கள் நிறைந்ததும், புலால் நாற்றம் உடையதுமாகிய உடலின்கண்; ஐவர் தொண்ணூற்று அறு வரும் தொக்கு நின்று-ஐம்பொறிகளும் தொண்ணூற் றாறு தத்துவங்களும் ஒன்று சேர்ந்துகொண்டு; துயக்கம் எய்த மிக்கு நின்று - நான் சோர்வு அடையும்படி (என்னை அடக்கி) எனக்கு மேற்பட்டு நின்று கொண்டு; இவர்கள் செய்யும் வேதனைக்கு-இந்த ஐந்து பொறிகளும் தொண் ணூற்றாறு தத்துவங்களும் எனக்குச் செய்கின்ற சகிக்க முடியாத துன்பங்களினால்; அலந்து போனேன் - வருந்தி னேன். இத்துன்பங்களினின்றும் அடியேனைக் காத்தருள வேண்டும் என்பது குறிப்பெச்சம். 3

(வி-ரை) செக்கரே - என்பதிலுள்ள ஏ - அசைநிலை. செக்கர் என்பது செவ்வானம். மேனி – நிறம். பொக்கமாய்

நின்ற - உரு உடல் மாறி மாறி அழிந்து நிலையில்லாததாயிருத்தலால் அது பொய் எனப்பட்டது. நின்ற - எப்பொழுதும் உள்ள இயல்பு பற்றி, நிற்கிற என்பது நின்ற என இறந்த காலத்தாற் கூறப்பட்டது. ஐவர் தொண்ணூற்றறுவர் - ஐம்பொறிகள் (பஞ்சேந்திரியங்கள்) தொண்ணூற்றாறு தத்துவங்களில் அடங்குமாயினும், அவைகள் மனத்துடன் சேர்ந்து உயிரை உலக போகத்தில் அமிழ்த்தி மயக்குஞ் சிறப்புத் தொழில்பற்றி வேறாகப் பிரித்தும் கூறப்பட்டன. இத்தத்துவங்கள், உயிரில்லாத அஃறிணைப் பொருள்களாயினும் உயிர் அவைகளைத் தன்னின்றும் வேறாகப்பிரித்து உயிரில்பொருள் என்று அறியாது உயிர்ப்பொருள்கள் போலக் கருதி, அவைகளுக்குள் அடங்கி ஒழுகலால், அவைகள் உயர்திணைப் பொருள்களாகக் கூறப்பட்டன. மிக்கு நின்று-மேற்கொண்டு நின்று (dominate) வேதனைக்கு-வேதனையினால்; உருபு மயக்கம். இவர்கள்-மேலேகூறிய ஐவர் தொண்ணூற்றறுவர்களைக் குறிக்கின்ற சுட்டுப் பெயர். ஏ - ஈற்றசை.

சு. எ. திருவிடை மருதூர். பண்-தக்கேசி.

கக. ஐவ கைய ரையரவ ராகி
யாட்சி கொண்டொரு காலவர் நீங்கார்
அவ்வ கையவர் வேண்டுவ தானு
லவர வர்வழி யொழுகிநான் வந்து
செய்வ கையறி யேன்சிவ லோகா
தீவ ணாசிவ னேயெரி யாடீ
எவ்வ கையெனக் குய்வகை யருளா
யிடைம ருதுறை யெந்தை பிரானே.

(ப-ரை) சிவலோகா - சிவலோகத்திலிருக்கிறவனே; தீ வண்ணு - தீப்போல் செந்நிறமுடைய உருவனே; சிவனே- எப்பொழுதும் நன்மையையே செய்கின்றவனே; எரி ஆடீ-தீ யைக் கையில் வைத்துக்கொண்டு பொதுவில் நடனம் செய் கிறவனே; இடை மருது உறைஎந்தை பிரானே - திருவிடை மருதூரில் எழுந்தருளியிருக்கின்ற எனது தந்தையே, எனது தலைவனே; ஐவகையர் - ஐந்து ஐந்து இனமாய் அமைந்தி ருக்கின்ற தத்துவக் கூட்டங்கள்; ஐயர் அவர் ஆகி - எனக் குத் தலைவர்களாகி; ஆட்சிகொண்டு - (என்னைத் தங்கள் வயப்படுத்தி) ஆளுகை செய்து; அவர் ஒரு கால் நீங்கார் - அவர் என்னை விட்டு ஒருபொழுதும் விலகி யிருக்கமாட்டார்; அவர் - அந்த ஐந்து இனங்களாயுள்ள தத்துவக் கூட்டங்கள்; அவ்வகை வேண்டுவது ஆனல்-என்னை அவ்வாறு வயப்படுத்தி ஆள விரும்புவார்களானல்; நான் அவர் அவர் வழி ஒழுகி வந்து - நான் அவரவர் ஏவின்படி நடந்து உலக போகம் நுகர்ந்து கொண்டு (உன்னை நினையாமல் இருப்பேனுகில்) ; செய்வகை அறியேன் - அவர்களுடைய ஆட்சியினின்றும் தப்பி உய்வதற்கு என்ன செய்ய வேண்டும் என்பது அறிய மாட்டேன்; உய்வகை எவ்வகை அருளாய் - (ஆதலின்) நான் எவ்வழியில் உய்யலாமோ அந்த வழியை எனக்குத் தெரிவிப் பாயாக. 3

வி—ரை) ஐவகையர் - ஐந்து ஐந்து இனமாயுள்ள (Sets of five) தத்துவக் கூட்டங்கள். அவ்வினங்களாவன: தூல தன்மாத்திரை (ஐம்பூதங்கள்) ஐந்து, சூக்குமதன் மாத்திரை ஐந்து, ஞானேந்திரியம் ஐந்து, கன்மேந்திரியம் ஐந்து, அந்தக் கரணங்கள் நான்கும் மூலப்பகுதியும் சேர்ந்து ஐந்து, காலம் நியதி கலை வித்தை அராகம் ஐந்து, சுத்த

வித்தை ஈசுரம் சாதாக்கியம் சத்தி சிவம் ஐந்து. ஐவர் என்று சொல்லாது ஐவகையர் என்று சொன்னதனால் ஐம்புலன்கள் என்று பொருள் கொள்வதற்கு இல்லை. திருவள்ளுவர் "சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின் வகை" என்று கூறியதற்குப் பரிமேலழகர் எழுதிய உரையை நோக்குக. ஐயர் அவர் - ஐயர்—தலைவர்; அரசர். அவர் பகுதிப் பொருள் விகுதி. நீவணா - நீவண்ணா என்றது நீவணா எனக் குறுகிற்று. வண்ணன் என்னும் னகர ஈற்று உயர் திணைப் பெயர் ஈறு கெட்டு ஈற்றில் குறில் நீண்டு விளிப் பெயர் ஆயிற்று. வண்ணம்—நிறம். எரி ஆடீ-என்பதிலுள்ள டகர இகரம் நீண்டு விளிப் பெயர் ஆயிற்று. எந்தை பிரானே-எனக்குத் தந்தையும் தலைவனுமா யிருப்பதால் என்னைக் காத்தல் உன் கடன் என்பது குறிக்கப்பட்டது. பிரானே என்பதிலுள்ள ஏ-விளியுருபு. சிவன்-என்ற சொல்லுக்குப் பேராசிரியர் 'எவ்வுயிர்க்கும் எப்பொழுதும் நன்மையைச் செய்தலாற் சிவன்' என 358-வது திருக்கோவையாருரையிற் கூறியிருத்தல் காண்க.

நா. ச. திருக்கோணமச்சரம்-திருநேரிசை.

௨௦ வரைகிலேன் புலன்க ளைந்தும்
வரைகிலாப் பிறவி மாயப்
புரையிலே யடங்கி நின்று
புறப்படும் வழியுங் காணேன்
அரையிலே மிளிரு நாகத்
தண்ணலே யஞ்ச லென்னாய்
திரையுலாம் பழன வேலித்
திருக்கோணமச் சரத்து ளானே.

(ப-ரை) அரையிலே மிளிரும் நாகத்து அண்ணலே- அரையிலே ஒளி செய்கின்ற பாம்புகளை அணியாக அணிந்த தலைவனே; திரை உலாம் பழன வேலி - நீர் பெருகி அலை வீசுகின்ற வயல்களை வேலியாகவுடைய; திருக்கொண்டீச்சரத்துளானே- திருக்கொண்டீச்சரப்பதியில் எழுந்தருளியிருக்கின்றவனே; புலன்கள் ஐந்தும் வரைகிலேன் - மெய் வாய் கண் மூக்குச்செவி என்னும் ஐம்பொறிகளையும் அடக்கி ஆளமுடியாமலிருக்கிறேன்; வரைகிலாப்பிறவி- இத்தனையென்று அளவுபடுத்த முடியாது நான் எடுத்த பிறவிகளில்; மாயப்புரையிலே அடங்கி நின்று - நிலையில்லாத உடலிலே (ஐம்புலன்களையும் என்வயப்படுத்தி உனக்குள்ளே) அடங்கி நின்று; புறப்படும் வழியும் காணேன் - உடலோடுகூடிய பிறவியை விட்டு நீங்கி (உன்னை அடையும்) வழியையும் நான் அறிய மாட்டேன்; அஞ்சல் என்னாய்-(இவ்வாறு தயங்கிக்கொண்டிருக்கிற என்னை) அஞ்சாதே என்று சொல்லிக் காத்தருள்வாய். 5

(வி-ரை.) வரைகிலேன் - வரை—அளவு. வரைதல் - அளவு படுத்தல், அடக்கல்; கில் என்பது ஆற்றல் உணர்த்தும் இடைநிலை. ஏன் - தன்மை ஒருமை விகுதி. மாயப்புரை-மாயம்—பொய்-அதாவது நிலையில்லாதது. புரை—குடில்; அது இங்கே குடில் போன்ற உடலைக்குறிக்கிறது. மாயப்புரையிலே அடங்கி நின்று புறப்படும் வழி என்பது உயிரானது மனம் ஐம்பொறிகளை ஐம்புலன்களிற்(விடயங்களிற்)செல்லவொட்டாது அடக்கி உலகப்பற்றைவிட்டு இறைவனுடைய திருவடிகளிலே நிறுத்தி, நினைந்துகொண்டிருந்து அவ்வாறு நினைத்ததின் பயனாகப் பிறவி நீங்கும் வழி. மிளிரும் நாகம்-பாம்பு, ஒளியோடு விளங்கிற குண்டலி சத்தியாகிய சுத்தமாயையைக்குறித்தலால் 'மிளிரும்' என்றார். என்னாய் - என்று சொல்லாய் - ஆய் என்பது முன்னிலை ஏவல் ஒருமை வினைமுற்று விகுதி.

நா: — ச. திருவதிகை வீரட்டானம்-திருநேரிசை.

உக. கழித்திலேன் காம வெந்நோய்
காதன்மை யென்னும் பாசம்
ஒழித்திலே னூன்க ணோக்கி
யுணர்வெனு மிமை திறந்து
விழித்திலேன் வெளிறு தோன்ற
வினையெனுஞ் சரக்குக் கொண்டேன்
அழித்திலே னயர்த்துப் போனே
னதிகைவீ ரட்ட னீரே.

(ப-ரை.) அதிகை வீரட்டனீரே-திருவதிகை வீரட்டானத்தில் எழுந்தருளி யிருக்கிறவரே; காமவெந்நோய் கழித்திலேன் - விருப்பம் என்னும் கொடிய நோயை நீக்கமாட்டேன்; காதன்மை என்னும் பாசம் ஒழித்திலேன் - அந்த விருப்பத்துக்குக் காரணமாயுள்ள மயக்கத்தைப் (அவிச்சை) போக்கமாட்டேன்; ஊன்கண் நோக்கி - உடலினுள்ளே இறைவனை எனது அறிவின்கண்ணே ஆராய்ந்து அறிந்து; உணர்வு எனும் இமை திறந்து விழித்திலேன் - மெய்யுணர்வு என்று கூறப்படும் அகக்கண்ணைத் திறந்து பார்க்கமாட்டேன்; வெளிறு தோன்ற-(ஏனெனில் அவ்வாறு அகக்கண் பார்வையின்மையால்) எனது அறிவின்மை வெளிப்பட அதுகாரணமாக; வினையெனும் சரக்குக்கொண்டேன் - நல்வினை தீவினை என்று சொல்லப்படும் பொருள்களைக் (எனது நெஞ்சத்துப் பாரமாக) கொண்டேன்; அழித்திலேன் - நல்வினை தீவினைப் பொருள்களை அகக்கண் பார்வையால் எனது நெஞ்சத்தில் இல்லாதிருக்கும்படி கெடுக்கவில்லை; அயர்த்துப்போனேன்-(நல்வினை தீவினைகளைக் கெடுத்தல் எனக்கு நலம் என்பதை

யும் அகக்கண் பார்வை யின்மையால்) நான் மறந்துவிட்டேன். இந்த நிலையில் நீர் எனது அகக்கண்ணைத் திறக்கச் செய்து காத்தருளல் வேண்டும் என்பது குறிப்பெச்சம். 6

(வி-ரை.) இந்தத் தேவாரப்பாட்டில் உயிர், "ஊனக் கண்ணினிற் பாசமுணராப்பதியை – ஞானக்கண்ணினிற் சிந்தை நாடி......பாசம் ஒருவத்–தண்ணிழலாம் பதி" யை நாடச்செய்தல்வேண்டும் என்ற வேண்டுகோளைத் திருநாவுக்கரசு அடிகள் இறைவனிடத்துச் செய்கின்றார். உயிர் இறைவனை அடைதற்குத் தடையாயுள்ளன, உலக போக நுகர்ச்சியில் உன்முகத்திற் கேதுவாகிய பும்ஸ்துவமலம் என்றோதப்படும் பஞ்சக்கிலேசங்கள்; அப்பஞ்சக் கிலேசங்கள், 1. அவிச்சை, 2. ஆங்காரம், 3. அவா, 4. ஆசை, 5. வெகுளி என்பன. இப்பஞ்சக்கிலேசங்களும் திருவள்ளுவ நாயனார் கூறுகின்ற காமம் வெகுளி மயக்கம் என்னும் மூன்றிலும் அடங்கும். இத் தேவாரத்தில் விருப்பம் (காமம்) மயக்கம் (அவிச்சை) என்ற இரண்டு கிலேசங்களும் கூறப்பட்டன. இனம்பற்றி வெகுளியுங் கொள்ளப்படும். இப்பஞ்சக் கிலேசங்கள் நீங்கினாலன்றி, இருவினை நீக்கமும் அதுபற்றி அகக்கண் பார்வை என்னும் மெய்யுணர்வும் உண்டாகா. ஆதலின் அவைகள் இப்பாட்டில் முதலாவது கூறப்பட்டன. ஊன்கண் நோக்கி - ஊன்-ஆகுபெயராய் உடலைக் குறிக்கின்றது.—ஊன் கண்நோக்குதலாவது, வெளியே உலகிற் செல்கின்ற பார்வையைத் தடுத்து யோகத்தால் உடலினுள்ளே இறைவனை நோக்குதலாகும். இது யோகப்பார்வை. 'உணர்வு எனும் இமை திறந்து விழித்திலேன்' - உணர்வு—இறைவனை அவனது அருளினால் உணரும் மெய்யுணர்வு. இது ஞானப்பார்வை. என்னும் என்பது எனும் எனக் குறைகின்றது. இமை என்

பது இங்கே அகக்கண்ணைக் (ஞானக்கண்ணை) குறிக்கின்றது. இறைவன் அவனது அருளினால் உணரப்படுகிறவனன்றி அறியப்படுகிறவனும் ஓதப்படுகிறவனும் அல்லன். இக்கருத்தைக் காரைக்காலம்மையார் தமது அற்புதத் திருவந்தாதியில் "பிறரறியலாகாப் பெருமையருந்தாமே - பிறரறியும் பேருணர்வுந்தாமே" என்று கூறியருளினர். 'உலகெலா முணர்ந்தோதற் கரியவன்' என்பதும் இக்கருத்தையே விளக்குகின்றது. காதன்மை - பாசம் காதல் X மை - ஆசை, விருப்பம். பாசம்—பற்று (Passion) இங்கே பற்றுக்குக் காரணமாகிய அவிச்சை (மயக்கம்) யைக் குறிக்கின்றது. வெளிறு தோன்ற-வெளிறு —வெண்மை, அது அறியாமையைக் குறிக்கின்றது; திருக்குறள் 503-வது பாட்டில் பரிமேலழகர் உரை பார்க்க. வினை எனுஞ் சரக்குக்கொண்டேன் - வினை என்னும் சரக்குக் கொள்ளுதலாவது உலகத்தில் சில பொருள்கள் மேல் விருப்பும், சில பொருள்கள்மேல் வெறுப்பும், சில உயிர்கள் மேல் நட்பும், சில உயிர்கள்மேல் பகைமையும் நெஞ்சில் நிறைந்து நின்று அவை காரணமாக நல்வினை தீவினைகளைச் செய்தலாகும். வினை தீரினன்றி மெய்ஞ்ஞானம் விளையாது; ஆதலின், அடிகள் இவ்வாறு கூறினார். அடிகள் சரக்கறைத் திருவிருத்தத் தேவாரத்தில் (கக௨-பதிகம்) தமது நெஞ்சத்தை இறைவனுடைய மழுவாட்படையும், பல பூதமும், புலித்தோலுடையும், தலைமாலையும், பிறையொதுங்குஞ் சடை முதலியவைகளிருக்கும் சரக்கறை எனக்கூறியதை நோக்குக.

## ௩௪. போது. குறைந்த திருநேரிசை.

௨௨ மாட்டினேன் மனத்தை முன்னே
மறுமையை யுணரமாட்டேன்

மூட்டிநான் முன்னை நாளே
முதல்வனை வணங்க மாட்டேன்
பாட்டினுய் போல நின்று
பற்றதாம் பாவந் தன்னை
ஈட்டினேன் களைய மாட்டே
னென்செய்வான் றோன்றி னேனே.

(ப-ரை.) முன்னே - முற்காலத்திலே; மனத்தை மாட்டினேன் - நான் எனது மனத்தை (உலகநுகர்ச்சிகளிற்) செலுத்தினேன்; மறுமையை உணரமாட்டேன் - அவ்வாறு செலுத்தின காரணத்தால் நான் இப்பொழுது இறப்புக்குப் பின் மறுமையில் வரும் நிரயத் துன்பத்தை மனத்தில் உணர்ந்து நடக்கமாட்டேன்; முன்னை நாளே நான் முதல்வனை மூட்டி - முற்காலத்திலே நான் எனது மனத்தை இறைவனிடத்தில் பற்றும்படி செய்து; வணங்கமாட்டேன்-அவனை வழிபடாமற் போய்விட்டேன்; பாடு இல் நாய்போல நின்று-(அதனால் இப்பொழுது) பெருமையில்லாத நாய்போல் நின்று; பற்று அது ஆம் பாவம் தன்னை ஈட்டினேன்-பாவச்செயல்களையேசெய்து, அவைகளின் பயனைச்(எனது புத்தி தத்துவத்தில்)சேர்த்து வைத்துக்கொண்டேன்; களையமாட்டேன்-(அவ்வாறு நான் சேர்த்து வைத்திருக்கிற தீவினைப் பயன்களை வேண்டுவனசெய்து) அடியோடு நீக்கவுமாட்டேன்; என் செய்வான் தோன்றினேன் - (பாவஞ்செய்யாமலாவது அல்லது ஒரு காலத்தில் அறியாமையினுற் பாவஞ் செய்தாலும் அதனை நீக்காமலாவது இருக்கிற இந்த உலக வாழ்வில்) நான் என்ன நற்பயனை அடைதற்காகப் பிறந்தேனே தெரியவில்லை.

(வி – ரை) மறுமையை உணர மாட்டேன்-மறுமை என்பது இறப்புக்குப் பின்வரும் நிரயத்துன்பம். இம்மையில் ஒருவன் எம்மட்டில் வேட்கை வயப்பட்டு உலகபோக நுகர்வு களிற் பயில்வானோ அம்மட்டில் அவன் மறுமையில் துன் பம் நுகருதல் நியதி ஆகும். முன் போக நுகர்வுகளிற் பழகின பழக்கம், பின்னே மறுமையில் துன்பம் தரும் என்று அறிந்தாலும், அத்துன்பத்தைத் தீவினை உணர வொட்டுவதில்லை யாதலின் 'உணர மாட்டேன்' என்றார். முதல்வனை மூட்டி - உருபுமயக்கம் - முதல்வனிடத்தில் மூட்டி என ஏழாம் வேற்றுமைப் பொருளில் வந்தது; மூட்டு தல்=பற்றச் செய்தல்; உலக வழக்கில் தீ மூட்டுதல் என வருகின்றது. வணங்கமாட்டேன் - வணங்கல் - வளைதல். அடிமை நிலையில் உயிர் தனது அறிவு வேட்கை செயல்களை முதல்வனுடைய அறிவு வேட்கை செயல்களில் அடங்கச் செய்து தன்முனைப்பின்றி நிற்றலே வணங்கலாகும். வழிபடு தலும் அதுவே. இவ்வாறு வணங்குதலே உயிர் தனது வினைப் பயன்களை வேரோடு களையும் வழியா யிருத்தலின், வணங் காமலிருத்தலினால், 'பற்றதாம்பாவத்தைக் களையமாட்டேன்' என்று அடிகள்பின்னே கூறியருளினார். பாட்டினாய் - பாடு+ இல் + நாய். எதுகை நோக்கி விகாரப்பட்டது. பாடு= பெருமை - பாடில் - பெருமையில்லாத அதாவது இழிவான. பற்றதாம் பாவம் ஈட்டினேன் -பற்று+அது+ஆம்+பாவம். அது பகுதிப் பொருள் விகுதி. பற்று=பற்றுதல் - முதனி லைத் தொழிற் பெயர். ஒருவன் பாவத்தைப்பற்றி அதனைச் செய்து பழகினால் பாவம் அவனைப்பற்றிக் கொள்கிறது ஆத லின் 'பற்று ஆம் பாவம்' என்றார். பாவச் செயல் ஒவ்வொன் றும் கழிந்த பின்னும் அதன் பயன் புத்தி தத்துவத்திற்கிடந்து

பக்குவப்பட்டுப் பின் அதனைச் செய்தவனுக்குத் துன்ப மாய் விளைதலால் 'ஈட்டினேன்' என்றார். ஈட்டுதல் — தொகுத் தல். என்செய்வான் தோன்றினேன் - செய்வான் எதிர்கால வினையெச்சம். தோன்றுதல் - பிறத்தல். "பிறப்பினாற் பெற்ற பயனுவ தெல்லாந்-துறப்பதாந் தூநெறிக்கட் சென்று" என்று ஔவையார் கூறியபடி, இறைவனை அடையச் செய்யாத பிறப்பினாற் பயனில்லை என்பதை அடிகள் கூறினார்.

நா — ச. திருக்கடவூர் — திருநேரிசை.

உரு பழியுடை யாக்கை தன்னிற்
பாழுக்கே நீரி றைத்து
வழியிடை வாழ மாட்டேன்
மாயமுந் தெளிய கில்லேன்
அழிவுடைத் தாய வாழ்க்கை
யைவரா லலைக்கப் பட்டுக்
கழியிடைத் தோணி போன்றேன்
கடவூர்வீ ரட்ட னீரே.

(ப — ரை) கடவூர் வீரட்டனீரே - திருக்கடவூர் வீரட் டம் என்ற தலத்தில் எழுந்தருளியிருக்கின்றவரே; பழியுடை யாக்கை தன்னில் - பழிக்கப்படும் பாவச் செயல்களைச் செய் தற்கு இடமாயிருக்கிற இந்த உடலில்; பாழுக்கே நீர் இறை த்து-உலக வாழ்வைப் பயன்பட வாழாது வீணுகக் கழிப் பதல்லாமல்; வழியிடை வாழமாட்டேன் - பயன்படும் முறை மையில் நான் வாழமாட்டேன்; மாயமும் தெளியகில்லேன் - இவ்வாறு நான் உயிர் வாழ்தற்குக் காரணமாயிருக்கிற வஞ் சனையையும் தெளிவாய் அறிந்து கொள்ள முடியாமலிருக்

கிறேன்; அழிவுடைத்தாய வாழ்க்கை- அடிக்கடி பிறந்தும் இறந்தும் அழிகின்ற உடலிலுள்ள உயிர் வாழ்க்கையானது; ஐவரால் அலைக்கப்பட்டு - ஐம்பொறிகளால் ஆட்சி செய்யப் பட்டுத் துன்பம் அடைதலால்; கழியிடைத் தோணி போன் றேன் - உப்பங்கழியிற் செல்கிற தோணி அங்கும் இங்கும் அலைகளால் மோதப்பட்டு நேர்வழியிற் செல்லாதிருத்தல்போல் நானும் ஐம்பொறிகளால் ஆட்டுண்டு எனது வாழ்க்கையை நேர் வழியிற் செலுத்த இயலாது வருந்துகின்றேன். ஆத லால் தேவரீர் என்னைக் காத்தருள்செய்தல் வேண்டும் என்பது குறிப்பெச்சம். 8

**(வி — ரை)** பழி - பழிக்கப்படும் பாவச் செயல்கள். யாக்கை, யாத்தல் - கட்டுதல். தசை, நரம்பு முதலிய ஏழு வகைத் தாதுக்களால் கட்டப்படுதலின் இவ்வுடல் யாக்கை எனப்பட்டது. யாக்கை தன்னில் - தன் அசை. பாழுக்கே நீர் இறைத்து-என்பது உருவகம். பாட்டில் உவமைப் பொருள் விளக்கப்படவில்லை - பாழ் என்பது பாழ்நிலம், உவர் முதலிய வற்றால் விளையாத நிலம்; பயிர் முளையாத நிலத்துக்கு வீணாக நீர் இறைத்தல்போல உயிர்வாழ்வைப் பயன்பட வாழாது வீணாகக் கழித்து என உவமையும் உவமப் பொருளும் விரி யும். இறைத்து என்ற சொல்லுக்கு அடுத்து ‘ அன்றி ’ என்ற சொல் தொக்கி நிற்கிறது. அது சொல்லெச்சம். வழி இடை - வழி — முறைமை. இடை ஏழாம் வேற்றுமை உருபு. முறைமையாக - அதாவது பயன்படும்படியாக. கழி- கடலுக்கு அருகிலுள்ள உப்பங்கழி (Back waters) கழி யிடைத் தோணி போன்றேன் என்பதும் உருவகம். இத னுடைய உவமப் பொருள் விளக்கிப்பதவுரை கூறப்பட்டது. ஏ - ஈற்றசை.

நா — சு. தனித்திருத்தாண்டகம்.*

உச குலம்பொல்லேன் குணம்பொல்லேன் குறியும் பொல்லேன்
குற்றமே பெரிதுடையேன் கோல மாய
நலம்பொல்லேன் நான்பொல்லேன் ஞானியல்லேன்
நல்லாரோ டிசைந்திலேன் நடுவே நின்ற
விலங்கல்லேன் விலங்கலா தொழிந்தேனல்லேன்
வெறுப்பனவும் மிகப்பெரிதும் பேச வல்லேன்
இலம்பொல்லே னிரப்பதே யீய மாட்டே
னென்செய்வான் றோன்றினே னேழை யேனே.

(ப — ரை குலம் பொல்லேன் - நற்குலத்தினிற் பிறவாததனு லாகிய குற்றமுடையேன்; குணம் பொல்லேன் - நற்குணத்தினைப் பொருந்தாததனு லாகிய குற்ற முடையேன்; குறியும் பொல்லேன் - வாழ்க்கையில் நற்குறிக்கோ ளில்லாமையை உடையேன்; குற்றமே பெரிது உடையேன்-இவ்வாறு குலம் குணம் குறிகளால் மிகுதியாகக் குற்றங்களையே உடையேன்; கோலமாய நலம்பொல்லேன் - உடல் உரு அழகு இல்லாமையா லாகிய குற்ற முடையேன்; நான் பொல்லேன்- உயிர்நல மில்லாமையாலாகிய குற்ற முடையேன்; ஞானி அல்லேன் - இறைவனை வழிபட்டு அதனுனுண்டாகும் மெய் யறிவினை யுடையே னல்லேன்; நல்லாரோடு இசைந்திலேன்- (அந்த மெய் யறிவு எனக்கு உண்டாகும் வண்ணம்) மெய் யறிவுடைய நல்லாரோடிணங்கி யொழுகினே னல்லேன்; நடுவே நின்ற விலங்கு அல்லேன் - (மேற்கண்ட குற்றங்கள் உள்ளவனுய் நான் மனிதப்பிறவியிற் பிறத்தலைப் பார்க்கினும் குற்றங்கள்என்று எண்ணப்படாதிருத்தற்கு) மனிதப் பிறவிக் கும் ஏனை நாலறிவு உயிர்களுக்கும் நடுவே உள்ள பகுத்தறி

வற்ற ஐயறிவு விலங்குப் பிறவியிற் பிறவாமற்போனேன்; விலங்கு அல்லாது ஒழிந்தேன் அல்லேன்- மனிதப் பிறவியிற் பிறந்தாலும் விலங்குகளுக்கு உரிய பண்புகள் என்னிடத்தில் இல்லாதபடி எனது அறிவினால் விடுத்தவனும் அல்லேன்; வெறுப்பனவும் மிகப்பெரிதும் பேச வல்லேன்-பிறர் வெறுக்கிற இன்னாச் சொற்களை மிக்குப் பேசும் வன்மையை உடையேன்; இலம்பொல்லேன் - (குற்றங்களுடன் ஒருவன் பிறந்தாலும் அவனுக்குச் செல்வ மிருந்தால் அக்குற்றங்கள் பிறரால் கவனிக்கப்படாதபடி) செல்வம் இல்லாமையாலுண்டாகும் குற்றம் உடையேன்; இரப்பதே ஈயமாட்டேன்-செல்வம் இல்லாமையினால் நான் பிறரிடம் பொருளை இரந்து வாங்குதல் அல்லாமல் அவருக்குக் கொடுக்கமாட்டேன்; ஏழையேன் என்செய்வான் தோன்றினேன் - (இவ்வளவு குற்றங்களையும் குறைவுகளையும் உடைய) ஏழையேனாகிய நான் உலகில் என்ன பயன் அடையும் பொருட்டுப் பிறந்தேனோ தெரியவில்லை. 9

(வி-ரை) 'பொல்லேன்' என்ற சொல் பொல்லாப்பு அல்லது பொல்லாங்கு என்ற பண்புப் பெயரடியாகப் பிறந்த உயர்திணை ஆண்பால் தன்மை ஒருமைக் குறிப்பு வினை முற்று. பொல்லாப்பு அல்லது பொல்லாங்கு என்ற சொல் குற்றம் என்னும் பொருளில் வந்தது. அல்லேன்-அன்மை என்னும் பண்புப்பெயரடியாகப் பிறந்த உயர்திணை ஆண்பால் தன்மையொருமைக் குறிப்பு வினைமுற்று. குறி என்பது வாழ்க்கையின் குறிக்கோள். "குறிக்கோள் இலாது கெட்டேன்" என்று அடிகள் திருக்கொண்டீச்சரம் தேவாரப் பதிகம் ௬-வது பாட்டிற் கூறினமை காண்க. கோலமாய நலம்-கோலம்—உடல் உரு. நலம்—அழகு. கண்டாரால் விரும்பப்

படும் உடல் உருவழகு. நான் பொல்லேன்-மேலே கோலமாய நலம் என்று உடல்நலம் குறிக்கப்பட்டபடியால் நான் என்ற சொல்லுக்கு உயிர்நலம் என்று பொருள் கூறப்பட்டது. 'நான் பொல்லேன்' என்பதற்கு 'நான்' என்னும் அகங்காரம் உடைமையால் குற்றமுடையேன் என்றலும் பொருந்தும். அக்குற்றமும் உயிர் நலம் இல்லாத குற்றம் ஆதலின் பொருள் வேறு படாது. நடுவே நின்ற விலங்கு - மக்களுக்குக் கீழும், ஓரறிவுமுதல் நான்கறிவுவரை யுள்ள உயிர்களுக்கு மேலும் உள்ளன விலங்குகள் ஆதலின், அவை 'நடுவே நின்ற விலங்கு' எனக் கூறப்பட்டன. விலங்கு அலாது ஒழிந்தேன் அல்லேன் - இங்கே விலங்கு என்ற சொல் விலங்குப்பண்பைக் குறிக்கின்றது. ஒழிதல் - விடுதல். இலம்-பண்புப் பெயர்; வறுமை. இரப்பதே யென்றதன்பின், அன்றி என்பது தொக்கது. இத்தேவாரப் பாட்டின் கருத்துக்களை அடிகள் பிறர்க்கு அறிவுறுத்துவதற்காகத் தம்மேலேற்றிக் கூறினார் என்று நாம் நினைக்க வேண்டியிருக்கிறது.

(நா-ச) திருவேகம்பம் - திருவிருத்தம்

௨௫ கருவுற்ற நாண்முதலாகவுன்
பாதமே காண்பதற்கு
உருகிற்றெ னுள்ளமும் நானுங்
கிடந்தலந் தேய்த்தொழிந்தேன்
திருவொற்றி யூரா திருவால
வாயா திருவாரூரா
ஒருபற்றி லாமையுங் கண்டிரங்
காய்கச்சி யேகம்பனே.

ப-ரை. கச்சி ஏகம்பனே-திருக்கச்சியேகம்பத்தில் (காஞ்சிபுரத்தில்) எழுந்தருளியிருக்கும் ஏகாம்பர நாதனே; திரு

ஒற்றியூரா, திருஆலவாயா, திருஆரூரா - திருக்கச்சி யேகம்பத்திலன்றித் திருவொற்றியூரிலும், திருவாலவாயிலும், திருவாரூரிலும் எழுந்தருளி யிருக்கின்றவனே; உன் பாதமே காண்பதற்கு - உன் திருவடிகளையே நான் பார்ப்பதற்கு; கரு உற்ற நாள் முதலாக - தாயாரது கருப்பையில் நான் உருவடைந்த காலந் தொட்டு; என் உள்ளம் உருகிற்று-எனது மனம் அன்பினால் உருகிக் கரைந்தது; நானும் கிடந்து அலந்து எய்த்து ஒழிந்தேன்-உயிராகிய நானும் கருப்பையிற் கிடந்து, துன்புற்றிளைத்தேன்; ஒருபற்று இல்லாமையும் கண்டு இரங்காய் - நின் திருவடிகளைத் தவிர வேறொரு பொருளிலும் நான்பற்றுவையாதிருத்தலை நீ யறிந்து என்மேல் இரக்கம் கொண்டு அத்திருவடிகளை எனக்குக் காட்டி, அருளல் வேண்டும். 10

(வி-ரை.) உன்பாதமே - ஏ இங்கே தேற்றப் பொருளில் வந்தது; பிரிநிலையுமாம். என்னுள்ளமும்-உம் என்பது அசைநிலை. நானும் - இங்கே உம் என்பது எனது உள்ளம் அன்றி, நானும்என இறந்தது தழீஇய எச்ச உம்மை. எய்த்தொழிந்தேன்-ஒழி, என்பது துணிவுப் பொருள் உணர்த்தும் விகுதி; எய்த்தேன் என்று பொருள்படும். திருவொற்றியூரான், திருவாலவாயான், திருவாரூரான் என்ற னகரமெய்யீற்று உயர்திணைப் பெயர்கள் எட்டாம் வேற்றுமை விளிப்பெயர்களாகும்பொழுது அவைகளின் ஈற்று னகரமெய்கள் கெட்டுத் திருவொற்றியூரா, திருவாலவாயா, திருவாரூரா என வந்தன.

சு.-எ. திருவலிவலம். பண்-தக்கேசி.

உகூ பந்தித் தவ்வினைப் பற்றறப் பிறவிப்
படுக டற்பரப் புத்தவிர்ப் பானைச்

சந்தித் ததிற லாற்பணி பூட்டித்
தவத்தை யீட்டிய தம்மடி யார்க்குச்
சிந்தித் தற்கெளி தாய்த்திருப் பாதஞ்
சிவலோ கந்திறந் தேற்றவல்லானை
வந்திப் பார்தம்ம னத்தினுள் ளானை
வலிவ லந்தனில் வந்துகண் டேனே.

ப-ரை. *சந்தித்த திறலால்-(மானிட வடிவில் குருவாய் வந்து தனக்கும் உயிருக்கு முளதாகிய தொடர்பை உணர்த் தியபின் சிவோகம்பாவனை, அஞ்செழுத்தோதல் முதலிய பயிற்சிகளினது பயனாக மலங்களினின்று நீங்கப் பெற்று) தன்னைத் தங்களுடைய உள்ளத்தில் விளங்கும் அருளொளியா கக் கண்டு அதனால் அடைந்த மெய்யுணர்வினது வலிமையால்; பணிபூட்டி - அவனுடைய சரியைத் தொண்டைத் தன்முனைப் பின்றித் தாங்களாகவே மேற்கொண்டு செய்து; தவத்தை ஈட்டிய தம் அடியார்க்கு-அதனால் சிவபுண்ணியத்தைத் தேடிச் சேர்த்து வைத்த தனது மெய்யடியார்களுக்கு; பந்தித்த வல்வினைப் பற்று அற-அப்புண்ணியத்தால் அவர்களைப் பிணித் துக்கொண்டிருந்த வலிமையான நல்வினை தீவினைகளினது கட்டு முழுவதும் நீங்க; பிறவிப் படுகடற் பரப்புத் தவிர்ப் பானை-ஆழமும் பரப்புமுடைய பிறவியாகிய பெரிய கடலி னின்றும் அவர்களை நீக்குகிறவனும்; திருப்பாதம் சிந்தித் தற்கு எளிதாய் - தனது இரண்டு திருவடிகளை அவ்வடியார் கள் எப்பொழுதும் நினைத்துக் கொண்டிருத்தற்கு எளிதாயி ருத்தலினால்; சிவலோகம் திறந்து ஏற்ற வல்லானை-அவர்களைச் சிவலோகத்திலே ஏறும்படி செய்து, அங்கே தங்கியிருந்து, சாலோகப் பேரின்பத்தையனுபவிக்கச் செய்யும் திறனுடை வனும்; வந்திப்பார் மனத்தினுள்ளானை-தன்னை உண்மையான*

அன்புடன் வழிபடுகிறவர்களுடைய உள்ளத்தில் அவர்கள் அறிய விளங்கி யிருக்கிறவனும் ஆகிய சிவபெருமானை; வலிவலந்தனில் வந்து கண்டேன்-திருவலிவலம் என்ற தலத்திற்கு வந்து நான் கண்டு வழிபட்டேன். 1

(வி-ரை.) இப்பாட்டு, ஞானத்திற் சரியை நிலையிலுள்ள அடியார்களுக்குச் சிவபெருமான் அருள்செய்கின்ற திறத்தைக் கூறுகின்றது. சந்தித்த திறல்-சந்தித்தல் என்பது எதிர்ப்பட்டுக் 'காண்டல்' அதாவது உள்ளத்தில் விளங்கும் அருளொளியைக் காண்டல். இப்பாட்டில் சுந்தரமூர்த்தி அடிகள் மந்ததரம் சத்திநிபாதம் கைவரப்பெற்ற சரியையாளரைக் குறித்தலால் (சிவத்தினுடன்) 'ஒன்றுன' என்னுது (சிவத்தைச்) 'சந்தித்த' என உரைத்தருளினர். திறல் என்பது வலிமை. ஒளி என்று பொருள் கூறினும் பொருந்தும். 'சந்தித்த திறல்' என்பது அடியார்கள் தங்கள் உள்ளத்தில் அருளொளி விளங்கப்பெற்று அதனுல் உண்டாகிற சிவத்தினுடைய மெய் அறிவு வலிமை. பணிபூட்டி - பணி—தொண்டு. சிவனுடைய கருவியாகத் தன்முனைப்பின்றிச் செய்யும் சரியைத்தொண்டு. மூன்ருவது அடியில் சிவலோகம் அடையும் வீட்டின்பங் கூறப்பட்டிருத்தலால், இங்கேபணி என்பதுசரியைத்தொண்டு என்று கூறப்பட்டது. பூட்டி—பிறருடைய ஏவுதலின்றித்தாங்களாகவே மகிழ்வுடன் செய்து. தவத்தை ஈட்டிய தம அடியார்க்கு-தவம் என்ற சொல் இங்கே ஆகுபெயராய்த் தவத்தினுற் செய்யப்படும் சிவபுண்ணியத்தைக் குறிக்கிறது. வல்வினைகளெல்லாம் சிவபுண்ணியத்தின் முன்பு தீயின்முன் பஞ்சுபோல ஆகின்றன ஆதலின், 'ஈட்டிய அடியார்' என்ருர். அடியார்—சிவனுடைய திருவடிகளைச் சார்ந்திருப்பவர்.

உயிர்ப்பற்றுப் பொருட் பற்றுக்களை விட்டுச் சிவனுடைய திருவடிகளாகிய திருவருளிலே பற்று உடையராய் அத்திருவருளேயே எப்பொழுதும் நினைந்துகொண் டிருப்பவர்கள். 'மேலேதவிர்ப்பானை' என்று கூறியதற்கேற்பத் 'தன் அடியார்' என்றிருத்தல் வேண்டும். பிறவிப் படுகடற் பரப்பு - படு என்ற சொல் பிறவித் துன்பம் மிகுதியையும், பரப்பு என்ற சொல் அளவில் பிறவிகளையும் குறிக்கின்றன. எளிதாய் — என்பதிலுள்ள ஆக்கவினை காரணப் பொருட்டாய் வந்தது. சிவலோகம் திறந்து ஏற்றவல்லானை — மாணிக்கவாசக சுவாமிகள் திருவாசகம் யாத்திரைப்பத்தில் "செடிசேருடலைச் செல நீக்கிச் சிவலோகத்தே நமை வைப்பான்" என்றும், "அடைவோம் நாம் போய்ச் சிவபுரத்துளணியார்கதவ தடையாமே" என்றும் அடியார்களை நோக்கிக் கூறி -யருளினமை காண்க. 'வந்திப்பார்தம் மனத்தினுள்ளானை' - சிவனை வழிபடுதலின்பயன் வழிபடுகிறவர்களுடைய உள்ளத்தில் சிவன் விளங்கி நிற்பன் என்பதும், சிவன் உள்ளத்தில் விளங்க, மலமும் அதற்கேற்ப நீங்கும் என்பதும் இதனுற் பெறப்படுகின்றன. உயிர்கள் சார்ந்ததன் வண்ணமாகும் இயற்கைத் தன்மை உடையவை. ஆதலின் அவை சிவனைச் சாரச்சார அவனது தன்மையை அடைகின்றன. தம் - அசை. 'வலிவலந்தனில் வந்து கண்டேன்' — காண்டல் என்பது இங்கே நம்போல்வார் ஊனக் கண்ணுற் சிவலிங்கத்தைத் திருக்கோயிலிற் காணுதல்போல்வதன்று; அகக்கண்ணால் சிவலிங்கத் திருமேனியைக் குறியீடாகக் கொண்டு சிவனுடைய தன்மையை அறிதலாகும். தன் - அசை. திருநாவுக்கரசு அடிகள், திருவாய்மூர்த் திருத்தாண்டகத்தில் "பாட வடியார் பரவக் கண்டேன் பதினெண் கணங்களும்

பாடக்கண்டேன்.......... திருவாய்மொழிகளை நான் கண்ட வாறே" என்று கூறியருளினமை காண்க. ௭. ஈற்றசை.

## ௬ — ௭. திரு எதிர்கோள்பாடி—பண்—இந்தளம்.

௨௭ கூசநீக்கிக் குற்றநீக்கிச் செற்ற மனநீக்கி
வாசமல்கு குழலினார்கள் வஞ்ச மனைவாழ்க்கை
ஆசைநீக்கி யன்புசேர்த்தி யென்பணிந் தேறேறும்
ஈசர்கோயிலெதிர்கோள் பாடி யென்ப தடை
வோமே.

(ப — ரை) கூசம் நீக்கி-(சிவபெருமானை வழிபடுதற்கு) நாணுகையை நீக்கி; (மனம்) குற்றம் நீக்கி - மனத்திலே உள்ள அவிச்சையாகிய குற்றத்தை நீக்கி; வாசம் மல்கு குழலினார்கள் வஞ்சம் மனைவாழ்க்கை (மனம்) ஆசை நீக்கி- (அது பற்றி உலக இன்ப நுகர்வின் பொருட்டு) மணம் கமழ்கின்ற கூந்தலையுடைய பெண்களுடன் கூடி வாழ்கின்ற கபடமான இல்வாழ்க்கைமேல் வைத்துள்ள மன ஆசையை நீக்கி; மனம் செற்றம் நீக்கி-(அவ்வுலக இன்ப நுகர்வு கிடையாதபொழுது) மனத்தில் எழுகின்ற வெகுளியை நீக்கி; அன்பு சேர்த்தி - (சிவபெருமானிடத்தில்) நிலையான அன்புவைத்து ; என்பு அணிந்து - (அயன் திருமால் இருவர்களுடைய) எலும்பு களை(தோள்மேலே)த்தரித்துக்கொண்டு; ஏறு ஏறும் - (ஊர்தியாக) அறவடிவாகிய எருத்தின்மேல் ஏறுகின்ற; ஈசர்கோயில்- சிவபெருமான் எழுந்தருளியிருக்கிற திருக்கோயில்; எதிர் கொள் பாடி என்பது அடைவோம் - திரு எதிர்கொள்பாடி யென்னுந்தலத்தில் உள்ளது என்பது அறிந்து (அடியார் களாகிய நாம்) அங்கே சென்று வழிபடுவோம். 12

(வி – ரை) சுந்தரமூர்த்தி அடிகள் பாடின இந்தத் தேவாரப்பாட்டு வீடுபேற்றை விரும்பும் அடியார்கள் சிவ பெருமானை எவ்வாறு திருக்கோயிலில் வழிபடுதல் வேண்டும் என்பதைக் கூறுகின்றது. கூசம் நீக்கி கூச்சம் என்ற சொல் கூசம் எனக்குறுகி நின்றது. வணங்குதற்கு நாணுகை. அதாவது வணங்குதற்கு மனத்தில் விருப்பமற்று, உடலுறுப்புக்கள் நிலமுற வணங்குதல் முதலிய செயல்களைச் செய்தற்கு ஒருப்படாதிருத்தல். (மனம்) குற்றம் நீக்கி - குற்றம் என்பது இங்கே பஞ்சக்கிலேசக் குற்றங்களில் ஏனைய குற்றங்களுக்குக் காரணமாயுள்ள அவிச்சை (அறியாமை)யைக் குறிக்கிறது. அவிச்சை என்பது நிலையான பேரின்பந்தருஞ் சிவபெருமானை நிலையாயுள்ள மெய்ப்பொருளென் றுணராது, நிலையில்லாத உலகத்தை மெய்ப்பொருள் என மயங்கி அறிதல். திருவள்ளுவர் இதனை மயக்கம் எனக் கூறுவர். செற்றம் என்ற சொல்லுடன் சேர்த்துக் கூறப்பட்ட மனம், குற்றம் என்ற சொல்லுடனும் சேர்த்துப் பொருளுரைக்கப்பட்டது. வஞ்சமனை வாழ்க்கை (மனம்) ஆசை நீக்கி - உலக இன்ப நுகர்வுகளைக் குறியாக உடைய இல்வாழ்க்கை, இன்பந் தருவது போலக் காட்டித் துன்பம் தருதலால் அது வஞ்சமனை வாழ்க்கை எனக் கூறப்பட்டது. அறநெறிப்பட்ட சிற்றின்ப இல்வாழ்க்கையானது உயிர்ப்பற்றும் பொருட்பற்றும் உடையதாதலின், அவ்விருபற்றுக்களையும் நீக்கி ஒருமை மனத்துடன் சிவபெருமானைப் பற்றி நிற்கும் அடியார்களுக்கு அவ்வில் வாழ்க்கை பொருந்தாது என்பார், 'வஞ்சமனை வாழ்க்கை ஆசை நீக்கி' என்றார். அதே கருத்தைத் திருஞானசம்பந்த அடிகள் திருச்சோற்றுத்துறைப்பதிகம் முதலாவது பாட்டில், "செப்பநெஞ்சே நெறிகொள் சிற்றின்பந், துப்பனென்

ளுதரு ளேதுணையாக, வொப்ப ரொப்ப ரொளிகொள் வெண் ணீற் - றப்பர் சோற்றுத் துறைசென் றடைவோமே" என் றும், திருநாவுக்கரசு அடிகள் கோயில் பெரிய திருத்தாண் டகப் பதிகம் ரு-வது பாட்டில் "மடவாரோடும் - பொருந் தணைமேல் வரும்பயனைப் போக மாற்றிப் பொதுநீக்கித் தனை நினைய வல்லார்க்கென்றும் - பெருந்துணையை" என்றும் கூறியருளினர். மனம், என்ற சொல் ஆசையுடனும் சேர்த் துப் பொருளுரைக்கப்பட்டது. மனம் செற்றம் - மனத்தி லிருந்து நீக்கப்படும் குற்றம் செற்றம் ஆதலின், செற்றமனம் என்பது மனம் செற்றம், எனமாற்றிப் பொருளுரைக்கப் பட்டது. குற்றம் (அவிச்சை), ஆசை, செற்றம் ஆகிய - இப்பாட்டிற் கூறப்பட்ட இந்த மூன்று குற்றங்களும் பிரகிருதி மாயா உலகபோக நுகர்வுகளுக்கு ஏதுக்களாயிருப்பனவாகும். இக்குற்றங்கள் மூன்றும் சிவபெருமானை நேரே யுணரும் மெய்யுணர்தலுக்குத் தடைகளாயுள்ளன. திருவள்ளுவ நாயனுர் திருக்குறள் 36-ம் அதிகாரம் மெய்யுணர்தல் 10-வது குறளில் இம்மூன்று குற்றங்களையும் காமம் (ஆசை) வெகுளி (செற்றம்) மயக்கம் (அவிச்சை) எனக் கூறுகின்றார். சைவ சமய நூல்களிற் கூறப்பட்ட அவிச்சை, அகங்காரம், அவா, ஆசை, வெகுளி (செற்றம்) ஆகிய பஞ்சக் கிலேசங்களில் அகங்காரம் அவிச்சையிலும், அவா ஆசையிலும் அடங்கும். அவிச்சையால் ஆசையும் ஆசையால் செற்றமும் உண்டா கின்றன. செய்யுள் ஆதலின் இம்முறை பிறழ்ந்து மூன்று குற்றங்களும் கூறப்பட்டன. அன்பு சேர்த்தி - இங்கே அன்பு என்பது வேண்டா தொன்றும் வேண்டாது மேவும் நிலையாயுள்ள அயரா அன்பு (Whole-hearted unchanging impersonal love.) என்பது அணிந்து-என்பு என்பது

அயன் திருமால் இருவர்களுடைய எலும்புகள். அவர்களுடைய ஆயுள் முடிவில் சிவபெருமான் அவர்களுடைய எலும்புகளைத் தமது தோளின்மேலே தரித்தருளுகின்றார். இக்கருத்து மேல் 'பதிமுது நிலை' 9-வது செய்யுளிற் காண்க. எதிர்கொள் பாடி என்பது - என்பது என்ற சொல்லுக்கு முன் 'உள்ளது' என்ற சொல்லும், அதற்குப் பின் 'அறிந்து' என்ற சொல்லும் அவாய்நிலையான் வந்தன. அவை சொல்லெச்சங்கள். அடைவோம் - அடைந்து வழிபடுவோம் என்ற பொருளில் வந்தது. அது அடியார்கள் என்ற படர்க்கைப்பெயரையும் தன்னுடன் கூட்டும் உளப்பாட்டுத் தன்மைப் பன்மைத் தெரிநிலை வினைமுற்று; நாம் என்ற தொகைச் சொல்லை எழுவாயாகக் கொண்டது. ஏ - ஈற்றசை. திருச்சிற்றம்பலம்.

## ௮. இருண்மல நிலை.

திருச்சிற்றம்பலம்.

நா-ச. தனித்திருநேரிசை.

உ௮. மெய்ம்மையா முழவைச் செய்து
விருப்பெனும் வித்தை வித்திப்
பொய்ம்மையாங் களையை வாங்கிப்
பொறையெனு நீரைப் பாய்ச்சித்
தம்மையு நோக்கிக் கண்டு
தகவெனும் வேலி யிட்டுச்
செம்மையுள் நிற்ப ராகிற்
சிவகதி விளையு மன்றே.

(ப — ரை) மெய்ம்மையாம் உழவைச் செய்து - (ஒருவர், அந்தக்கரணம் ஐம்பொறிகளால் நுகரும் உலக இன்ப

மானது நிலையில்லாத சிற்றின்பம் என்றும், சிவனை அடைந்து பெறும் இன்பமே நிலையான பேரின்பம் என்றும் தமக்குக் குரவன் அறிவுறுத்தின உண்மையைக் கேட்டுச் சிந்தித்துத் தெளிவுற அறிந்தபின்) சிவத்தன்மை என்னும் உழவைத் தமது உள்ளத்திலே உழுது; விருப்பு எனும் வித்தை வித்தி - அவ்வாறு உழுத உள்ளமாகிய நிலத்தில் சிவத்தை அடைதல் வேண்டும் என்ற விருப்பம் ஆகிய விதையை விதைத்து; பொய்ம்மையாம் களையை வாங்கி - அங்ஙனம் விதைத்த உள்ளமாகிய நிலத்தில் முளைத்து வளர்ந்த சிவத்தன்மையாகிய பயிருடன் வளர்ந்திருக்கிற பழைய மலவாசனையாகிய களையைப் பிடுங்கியெறிந்து; பொறை எனும் நீரைப் பாய்ச்சி - அவ்வாறு வளர்ந்த சிவத்தன்மையாகிய பயிர் காய்ந்துபோகாதபடி, பிராரத்துவ வினையால் உடலுக்குவருந் துன்பங்களைப் பொறுத்தல் என்னும் நீரைப் பாய்ச்சி; தம்மையும் நோக்கிக் கண்டு - அங்ஙனம் வளர்ந்து முதிர்கின்ற சிவத்தன்மையாகிய பயிரிலிருந்து வெளிப்படுகின்ற சிவத்தையும், அச்சிவத்தினுள்ளே(௩௬)தத்துவக் கூட்டங்களிலிருந்தும் வேறாக விளங்குகிற தம்மையும் (உயிரையும்) தம்முள்ளே உணர்ந்து; நகவு எனும் வேலி இட்டு - அங்ஙனம் சிவத்தினுள் விளங்குகிற தம்மிடத்தில் உயிர் உணர்வு (தற்போதம்) வந்து பொருந்தாதபடி தாம் சிவத்தைவிட்டுத் தனித்து நில்லாத சேடப்பொருள் என்ற உரிமையை நினைந்து அஞ்செழுத்தோதல், சிவோகம் பாவனை செய்தல் ஆகிய வழிகளால் தடுத்துக் காத்து; செம்மையுள் நிற்பர் ஆகில் - சிவத்தினுடன் ஒற்றுமைப் பட்டு நிற்கும் அத்துவித நிலையில் நிலைத்து நிற்பாராயின்; சிவகதி விளையும் - சிவபோகமாகிய தானியம் (பலனாக) விளையும்.

இந்த அருமையான தேவாரப்பாட்டு, சிவம் நிலையான பேரின்பந் தரும் மெய்ப்பொருள் எனத் தெளிந்த ஒருவர், அப்பேரின்பத்தை அடைதற்குத் தமது உள்ளத்தில் என்ன சாதனங்கள் செய்தல் வேண்டும் என்னும் அநுபவ உண்மையை, உழவன் ஒருவன் தனது நிலத்தில் உழுது தானியம் விதைத்துப் பயிர்செய்து தானியம் விளையச் செய்கிற உருவகத்தில் வைத்துக் கூறுகின்றது. இதனால் சைவசமயம் செயல் முறைச் சமயம் என்பதும், சைவ சமயத்தில் வாழ்க்கையின் குறிக்கோளாகக் கூறப்படும் பேரின்பமானது, எவராலுந் தமது முயற்சியால் இம்மையிலேயே பெறப்படும் என்பதுங் கூறப்படுகின்றன. இந்தப் பாட்டிற் கூறப்படும் உழவன் தொழில் உருவகம், பரஞ்சோதி மாமுனிவர் திருவிளையாடற் புராணம் வாதவூரடிகளுக்கு உபதேசித்த படலம் ௬௭-வது "சிந்தை யாகிய செறுவினுட் சிவமுத லோங்கப்-பந்த பாசம்வே ரறக்களைந் தருட்புனல் பாய்ச்சி-யந்த மாதியின் றாகிய வானந்த போகந்-தந்த தேசிக வுழவன்றன் கோயிலைச் சார்ந்தார்" பாட்டிலும் கூறப்பட்டிருத்தல் காண்க. 1

(வி – ரை) மெய்ம்மை ஆகும் உழவைச் செய்து - மெய்மை – சத்துத் தன்மை, உண்மைத் தன்மை, சிவத் தன்மை. (Reality) உழவைச் செய்தல் என்பது வித்தை விதைக்க நிலத்தை உழுது பண்படுத்தல்போல, சிவத்தன்மையை அடையச் செய்யப் பயன் கருதாது அறிவுவேட்கை செயல்களை மனம் மொழி மெய்களால் இயற்றப்படும் பணியைச் செய்து பயின்று பயின்று உள்ளத்தைப் பண்படுத்தல் ஆகும். விருப்பு எனும் வித்தை வித்தி - விருப்பு - சிவத்தை அடைதல் வேண்டும் என்னும் பெரும் (விருப்பம்). (Intense desire). என்னும் என்பது எனும் எனக்குறுகி

நின்றது. பின்னே வருகிற எனும் என்பதற்கும் இவ்வாறே கொள்க. விதை விதைத்தல் என்பது ஒரு உழவன் தான் பெற வேண்டுமென்று விரும்புகிற தானியத்தைத் தனது நிலத்தில் விதைத்தல்போல, சிவத்தை அடைந்து பேரின்பம் பெற விரும்புகிறவர் அக்கருத்தைத் தமது உள்ளத்தில் உண்டாகச் செய்தல். பொய்ம்மை ஆம் களையை வாங்கி - பொய்ம்மை — அசத்துத்தன்மை, மலத்தன்மை, (unreality). பொய்ம்மையாம் களையை வாங்குதல் என்பது உழவன் தான் விதைத்துப் பயிர் வளர்ந்திருக்கிற நிலத்தில் அப்பயிர் வளம் பெற உண்டாகும் பொருட்டு, அதனுடன் சேர்ந்து வளர்ந்திருக்கிற களைகளைப் பிடுங்கி எறிதல் போலப் பேரின்ப விருப்பர், சிவத்தன்மைக் கருத்து உண்டாயிருக்கிற தமது உள்ளத்தில் அக்கருத்துத் தடையின்றிப் பெருகி வளரும் பொருட்டு அதனிடத்தில் சேர்ந்துள்ள பழைய மலவாசனையை நீக்குதல். பொறை எனும் நீரைப் பாய்ச்சி - பொறை— எடுத்த உடலில் பிராரத்துவ வினையாலுண்டாகும் துன்பங்களை வெறுக்காது அமைதியுடன் பொறுத்தல். இனம்பற்றிப் பிராரத்துவ வினையால் வரும் இன்பங்களையும் விரும்பி மகிழ்ச்சி அடையாது நுகருதலும் கொள்ளப்படும். இவ்வெறுப்பு விருப்புக்கள் வழியில் மலமும் மலவாசனையும் உள்ளத்திற்புகுந்து சிவத்தன்மையைக்கெடுக்கும் ஆதலின், "பொறை என்னும் நீரைப் பாய்ச்சி" என்றார். "கமையெலா முடையராகிக் கழலடி பரவுந் தொண்டர்க் - கமைவிலா வருள் கொடுப்பரையனையாறனார்க்கே" என அடிகள் திரு வையாற்றுத் திருநேரிசைப் பதிகத்தில் கூறியிருத்தல் காண்க. பொறை எனும் நீரைப் பாய்ச்சுதல் என்பது உழவன் தன்னிலத்தில் வளர்ந்திருக்கிற பயிர் கருகாது வளரும் பொருட்டு அந்நிலத்

துக்கு நீரைப் பாய்ச்சுதல் போல, பேரின்ப விருப்பர் தமது உள்ளத்தில் பெருகி வளருகின்ற சிவத்தன்மை குன்றுதபடி, தமக்குப் பிராரத்துவ வினையால் வரும் துன்ப இன்பங்களை உள்ளத்தில் யாதொரு எதிர்ப்பும் (Reaction) உண்டாகாத படி வெறுப்பு விருப்புக்களின்றி அமைதியாய் நுகருதல். தம்மையும் நோக்கிக் கண்டு - தம்மையும் என்பதிலுள்ள 'உம்' இறந்தது தழீஇய எச்ச வும்மையாகச் சிவத்தை நோக்கிக் காணுதலும் என்னும் பொருள்பட நின்றது. தம்மையும் நோக்கிக் கண்டு என்பதில் உவமம் வெளிப்படக் கூறப்பட வில்லை. தம்மையும் நோக்கிக் காணுதல் என்பது உழவன் தனது நிலத்தில் வளர்கிற பயிரிடமிருந்து தானியக் கதிர்களை வெளிப்படக் காணுதல்போல, பேரின்ப விருப்பர் தமது உள்ளத்தில் பெருகி வளரும் சிவத்தன்மையிலிருந்து சிவமும் அச்சிவத்தினுள்ளே அடங்கித் தாமும் (உயிரும்) வெளிப்பட்டு விளங்கக் காணுதல் ஆகும். முன் சிவமும் தாமும் வெளிப்படாமல் இப்பொழுது வெளிப்பட்டு விளங்குதற்குக் காரணம் மலம் நீக்கமும் அதுபற்றி மெய்ஞ்ஞானமும் (அருளறிவும்) உண்டாதலாகும்; இக்கருத்தைப் பட்டினத்துப் பிள்ளையார் திருவிடை மருதூர் மும்மணிக் கோவையில் "நின் - தெய்வத்திருவருள் வந்து கிடைத்தலின் - மாயப் படலங் கீறித் தூய - ஞானநாட்டம் பெற்றபின் யானும் - நின்பெருந் தன்மையுங் கண்டேன் காண்டலும் - என்னையுங் கண்டேன் பிறரையுங் கண்டேன் - நின்னிலை யனைத்தையுங் கண்டே னென்னே - நின்னைக் காணா மாந்தர் - தன்னையுங் காணாத் தன்மை யோரே" என்று கூறியருளினமை காண்க. தகவு எனும் வேலி இட்டு - தகவு, உரிமை. தகவு என்னும் வேலி இடுதல் என்பது, உழவன் தானியக் கதிர்களை உடைய

பயிர்களுள்ள தன்னிலத்தில் மாடு முதலியன வந்து பயிர்களைத் தின்று சேதப்படுத்தாத வண்ணம் நான்கு பக்கங்களிலும் வேலி போட்டுத் தடுத்தல் போலப் பேரின்ப விருப்பர், தம்முடன் (உயிருடன்) சிவத்தை விளங்கக் கண்ட தமது உள்ளத்தில் உயிருணர்வு (தற்போதம்) தோன்றி அவ்விளக்கக் காட்சியைக் கெடுக்காதபடி, தாம் தம்மை ஆண்டானாகிய சிவத்தை விட்டுப் பிரிந்து தனித்து நில்லாத அடிமைப் பொருள் என்னும் தமது உரிமையை நினைந்து அஞ்செழுத் தோதல், சிவோகம் பாவனை செய்தல் ஆகிய வழிகளால் தடுத்துக்காத்தல் ஆகும். "சிவமான சிந்தையிற் சீவன் சிதைய" என்று திருமூலர் கூறுதல் காண்க. (2428) செம்மையுள் நிற்பராகில்- செம்மை – ஒற்றுமை. செம்மையுள் நிற்றல் – உயிர் சிவத்தினுடன் அத்துவிதமாய்க் கலந்து ஒற்றுமைப்பட்டு நிற்றல். இதிலும் உவமம் கூறப்படவில்லை; உவமப்பொருள் மாத்திரம் கூறப்பட்டிருக்கிறது. உழவன் தன் னிலத்திலுள்ள தானியப் பயிர்க் கதிர்களைக் கண்ணுங் கருத்துமாய்ப் பார்த்து அவைகள் முதிர்ந்து விளையுமாறு செய்தல்போல, பேரின்ப விருப்பர், தமது உள்ளத்தில் அடைந்திருக்கிற அத்துவித அநுபவ நிலையில் உறைத்து நின்று, அதனை முற்றும் வண்ணம் செய்தல் என உவமமும் உவமப் பொருளும் விரியும். சிவகதி விளையும்-சிவகதி – சிவபோகமாகிய பலன். இதனிலும்உவமம் வெளிப்படக் கூறப்படவில்லை. உழவனுடைய நிலத்தில் தானியக் கதிர்கள் விளைந்து தானியத்தை அவனுக்குப் பலனாகக் கொடுத்தல்போல, பேரின்ப விருப்பருடைய உள்ளத்தில் முற்றிய அத்துவித அநுபவ நிலையானது அவருக்குப் பேரின்பத்தைப் பலனாகக் கொடுக்கும் என உவமமும் உவமப் பொருளும் விரியும். அன்று - ஏ - அசை நிலைகள். ஒருவர்

(பேரின்ப விருப்பர்) 'உழவைச்செய்து வித்தை வித்திக் களையைவாங்கி நீரைப்பாய்ச்சி நோக்கிக்கண்டு வேலியிட்டுச் செம்மையுள் நிற்பராயின் சிவகதி விளையும்' என முடிக்க. சிவகதி — எழுவாய், விளையும் — பயனிலை. உள்ளத்தில் (சிந்தையில்) உயிர் சிவனைக் காணுதலைப் பற்றித் திருமூலர் திருமந்திரத்தில், "சிந்தைய தென்னச் சிவ னென்ன வேறில்லை-சிந்தையி னுள்ளே சிவனும் வெளிப்படும்-சிந்தை தெளியத் தெளிய வல்லார்கட்குச் - சிந்தையி னுள்ளே சிவனிருந் தானே" என்று கூறியருளினார். "செறிவிலேன் சிந்தையுள்ளே சிவனடி தெரியமாட்டேன்" என்றும், "ஊனை யே கழிக்க வேண்டில் உணர்மின்கள் உள்ளத்துள்ளே" என்றும், "சிந்தையுள்சிவமதானார் திருச்செம்பொன் பள்ளி யாரே" என்றும், திருநாவுக்கரசு அடிகள் பிற இடங்களிலும் கூறியருளினமை காண்க. இப்பாட்டில் "மெய்ம்மையாம் உழ வைச்செய்து விருப்பெனும் வித்தைவித்திப், பொய்ம்மையாங் களையை வாங்கிப் பொறையெனு நீரைப்பாய்ச்சி" என்பவற் ரூல் ஞானத்தில் சரியையும், சிவஞான போதம், அ—ம் சூத்திரக் கருத்தும், தம்மையும் நோக்கிக்கண்டு, தகவெனும் வேலியிட்டு என்பவற்ருல் சிவஞானபோதம் கூ—ம் சூத்திரக் கருத்தும், ஞானத்தில் கிரியையும், செம்மையுள் நிற்பராகில் என்பதனுல் சிவஞான போதம் க௦—ம் சூத்திரக் கருத்தும், ஞானத்தில் யோகமும், சிவகதி விளையும் என்பதனுல் ஞானத் தில் ஞானமும் கக—ம் சூத்திரக் கருத்தும் கூறப்பட்டன. இப் பாட்டில் பொய்ம்மையாம் களையை வாங்கி என்று வருதலினு லே இருண்மல நிலையில் வைக்கப் பட்டிருக்கிறதாகத் தெரிகிறது.

## நா-ச. தனித்திருநேரிசை.

உகூ. உடம்பெனு மனையகத்து ளுள்ளமே தகழி யாக
மடம்படு முணர்நெய் யட்டி யுயிரெனுந் திரிமயக்கி
இடம்படு ஞானத்தீயா லெரிகொள விருந்து நோக்கிற்
கடம்பமர் காளை தாதை கழலடி காணலாமே.

(ப-ரை.) உடம்பு எனும் மனை அகத்துள்—(முத்திநெறி யுள்ள ஒருவர் தன்னுடைய) உடம்பு என்று கூறப்படும் வீட்டினுள்ளே; உள்ளமே தகழியாக—உள்ளத்தை அகலாக வைத்து; மடம்படும் உணர்நெய் அட்டி—(அந்த உள்ளமாகிய அகலில்) அவிச்சையை ஒழிக்கின்ற தெளிவுணர்வாகிய நெய்யைப் பெய்து; உயிர் எனுந் திரி மயக்கி—(அங்ஙனம் பெய்யப்பட்ட நெய்யில்) உயிர் என்னும் திரியைச்சேர்த்து; இடம்படு ஞானத்தீயால்—(அங்ஙனம் சேர்க்கப்பட்ட தெளிவுணர்வுடைய உயிர் என்னும் திரியில்) சிவனுடைய வியாபக அருள் ஒளியினால்; எரிகொள—(மலஇருள் முற்றும் நீங்கி) விளங்கும்படி; இருந்து நோக்கில்—அசைவற்ற நிட்டையிலிருந்து அகக்கண்ணாற் பார்த்தால்; கடம்பமர் காளை தாதைகழலடி காணலாம்—கடப்ப மரத்தடியில் வீற்றிருக்கின்ற குமரக் கடவுளுடைய தந்தையாராகிய சிவபெருமானுடைய வீரக்கழல் அணிந்த இரண்டு திருவடிகளையும் உணர்ந்து பேரின்பம் அடையலாம். 2

(வி – ரை) இடம்படுஞானம்—இடத்தைக் கொடுக்கின்ற உணர்வு, அதாவது ஏக தேசத்தைச் (Limitation) செய்கின்ற இடத்தையும் (காலத்தையும்) இல்லாமற் செய்கிற எங்கும் நிறைந்துள்ள மெய்யுணர்வு; இந்த உணர்வு தென்று

ணர்வுடைய ஒருவர் நிட்டையிலிருந்து சிவனோடு அத்துவித மாய்க் கலந்து நிற்றலால் அடைகிறார், ஆதலின் உயிர் என்னுந்திரிமயக்கி இடம்படு ஞானத்தீயால் எரிகொள இருந்து நோக்கில்'' என்றார். எரிகொள—எரிய; கொள்-துணைவினை; எரிய—விளங்க, அதாவது சிவனை முழுதுஞ் சார்தலால் மல இருள் முற்றும் ஒழிந்து சிவனொளியோடு விளங்க; இது காரியப் பொருளில் வந்த செயவென்னும் வாய்பாட்டு வருங்கால வினையெச்சம். அது நோக்கில் என்ற வினையெச்சத்தைக் கொண்டு முடிந்தது, "குளம் நிறைய மழை பெய்யின்'' என்றாற்போல. தெள்ளுணர்வு—துரியநிலையின்கண் ஒருவர் அடையும் உணர்வு. இது சிவஞான போதம் கo-ம் சூத்திரத்தில் கூறப்பட்டிருக்கிறது. இந்தத்துரிய நிலையிலுள்ள ஒருவர் அருள் விளக்கம் பெற்று இன்பப்பிரபை அடைவாரே யன்றி இன்ப விளக்கம் அடையமாட்டார். அருளில் அடங்கி அருள் விளக்கம் பெற்ற அவர் சிவனோடு அத்துவிதமாய்க் கலத்தலாலே இன்ப விளக்கம் பெறுகின்றார். இந்த நிலை சிவஞான போதம் கக-ம் சூ. கூறப்பட்ட துரியாதீத நிலை. ஒரு வீட்டினுள்ளே புறவிருளாலே மறைபட்டுக் கிடக்கும் ஒரு மாணிக்கமானது, அவ்வீட்டினுள் ஒருவருக்கும் தெரியாதிருந்து, பின் ஒரு அகழியில் நெய் பெய்து திரியிட்டு அதனில் ஏற்றப்பட்ட தீயொளியினாலே காணப்படுதல் போல, சிறு உலகமாகிய உடம்பினுள்ளே, மலவிருளாலே மறைபட்டிருக்கும் அவ்வுடம்பினுள் இருக்கிற உயிருக்குக் காணப்படாமலிருந்து, பின் உயிர் தெள்ளுணர் வடைந்து நிட்டை கூடிய பொழுது, அந்நிட்டையின் பயனாக சிவனுணர்வு, தெள்ளுணர் வுடனே வந்து முற்றிலுங் கலந்து நிரம்பிய பொழுது, உயிர் வியாபக வுணர்வடைந்து, அவ்வியாபக வுணர்வாலே சிவனைக் காணலாம் என்று இத்தேவாரத்தில் அடங்கிய உவமும் உவ

மப் பொருளும் விரியும். கருவியறிவும், (பாசஞானமும்) உயி ரறிவும் (பசுஞானமும்) இரண்டும் முற்றிலும் நீங்குதல் தெளிவுணர்வின்கண் உண்டாவதால், அதனை யடைந்த உயி ரினுடைய உள்ளத்தில் பேரறிவொளிவந்துகலந்து, உயிருக்கு இன்ப விளக்கம் நிகழச் சிவபோகம் உண்டாகும் என்பது இப்பாட்டிற் கூறப்பட்டது.

நா - சு. திருவாலவாய்-திருத்தாண்டகம்.

கூ0 வானமிது வெல்லா முடையான் றன்னை
வரியரவக் கச்சானை வன்பேய் சூழக்
கானமதில் நடமாட வல்லான் றன்னைக்
கடைக்கண்ணால் மங்கையுமை நோக்கா வென்மேல்]
ஊனமது வெல்லா மொழித்தான் றன்னை
யுணர்வாகி யடியேன துள்ளே நின்ற
தேனமுதைத் தென்கூடற் றிருவா லவாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே.

(ப-ரை.) நான்-நான்; வானம் இது எல்லாம் உடையான் தன்னை-துறக்க வுலகம் நிலவுலகம் முதலிய எல்லா வுலகங்களை உடையவனும்; வரி அரவக் கச்சானை-வரியையுடையபாம்பைக் கச்சாக (அரையிலே) கட்டினவனும்; வன்பேய் சூழக் கானம் அதில் நடம்ஆட வல்லான் தன்னை-வலிய பேய்கள் தன்னைச் சூழ்ந்து நிற்கச் சுடுகாட்டில் சங்கார நடனம் ஆடுகின்ற வலிமை உடையவனும்; மங்கை உமை நோக்கா கடைக்கண் ணால் - (தனது இடது பாகத்திலுள்ள) உமாதேவியாரது அருள் நோக்காகக் கண்ணைக் கடைப்பக்கத்திற் சாய்த்துப் பார்த்து; என்மேல் ஊனம் அது எல்லாம் ஒழித்தான் தன்னை-

என்னிடத்தி னுள்ளே குற்றங்களை யெல்லாம் நீக்கினவனும்; அடியேனது உள்ளே - அடியேனுடைய உள்ளத்தினுள்ளே; உணர்வு ஆகி நின்ற தேன் அமுதை - நான் உணரும் உணர்வாகித் தேன் போலவும் அமுது போலவும் நின்று நிலையான இன்பம் தருகின்றவனும்; தென்கூடல் திருவாலவாய்ச்சிவன் - தென்னாட்டிலே கூடல்என்னும் திருவாலவாயின்(மதுரையின்) கண் எழுந்தருளி யிருக்கின்றவனும் ஆகிய சிவபெருமானுடைய; அடியே - இரண்டு திருவடிகளையே; சிந்திக்கப் பெற்றேன் - நினைக்கப்பெறும் பேற்றினைப் பெற்றேன். இப் பேறு கிடைத்தற்கு அரியது என்பது குறிப்பெச்சம். 3

(வி—ரை) நானே - ஏ அசை. வானம் இது எல்லாம் உடையான் தன்னை-வானம் — துறக்க உலகம். இது என்னும் சுட்டுப்பெயர் உலகறிசுட்டாய் நாம் வாழும் நிலவுலகத்தைக் குறிக்கின்றது. எல்லாம் என்பதனால் இங்கே கூறப்படாத ஏனைய ஐந்து உலகங்களும் கொள்ளப்படும். தன் - அசை. கச்சு - அரைப்பட்டி (Belt). கானம் அதில் நடம் ஆடவல்லான் தன்னை - அது - பகுதிப்பொருள் விகுதி. கானம் என்பது அழிப்புக் காலத்தில் மாயா உருவங்களை யெல்லாம் சிவபெருமான் அழித்து நிற்கின்ற சுடுகாடு. இந்தச் சுடு காட்டில் (மாயையில்) அவன் செய்கின்ற நடனம் அழித்தல் (சங்காரம்) ஆகிய தொழிலைக் குறிக்கின்றது. தன் - அசை. மங்கை உமை நோக்கா - நோக்காக என்பது நோக்கா எனக் கடை உயிர்மெய் குறைந்து நின்றது. நோக்கு அருள்நோக்கு ஆதலின், அருளைக் குறிக்கும் 'மங்கை உமை நோக்காக' என்று அடிகள் கூறினார். "அருள் சூற்கொண்ட அங்கயற் கண் அமுதே" எனக் குமரகுருபர அடிகள் மீனாக்ஷியம்மைப் பிள்ளைத் தமிழில் கூறியிருத்தல் காண்க. கடைக்கண் -

கண் + கடை; கண் கடை என்பது கடைக்கண் எனமாறி நின்றது, இல்முன் என்பது முன்றில் என நின்றாற்போல. கண்ணினது கடை (Side look) அருட்குறிப்புடன் கண்ணைச்சாய்த்து நோக்கும் பார்வை கடைக்கண் பார்வை என்று கூறப்படும். ஊனம் அது எல்லாம் ஒழித்தான் தன்னை - ஊனம் — குற்றம். மலத்தினாலாகிய குற்றம். அது-பகுதிப் பொருள் விகுதி. “எல்லாம் ஒழித்தான்” என்றதனால் சிவபெருமான், தம்மிடம் மலத்தினாலாகிய குற்றங்களை எல்லாம் நீக்கி அருட்சத்தி முழுவதும் பதியச் செய்தான் என்று அடிகள் கூறுகின்றார். “ஊனந் தன்னை ஒருங்குடனறுத்து” என்று மாணிக்கவாசக அடிகள் கீர்த்தித் திரு அகவலிற் கூறியிருத்தல் காண்க. உணர்வாகி - அருட்சத்தி முழுவதும் பதியப்பெற்ற பின் நிறைவான மெய்யுணர்வு உண்டாகின்றது. உணர்வு என்பது உள்ளத்தினுள்ளே காண்பான், காட்சி, காட்சிப் பொருள் என்னும் வேற்றுமையின்றிச் சிவபெருமானுடன் அத்துவிதமாய்க் கலந்து ஒன்றுதலால் உண்டாகும் உணர்வு. தேன் அமுதை - தேனும் அமுதும் உலகினுள்ளார்க்குத் தித்தித்து இன்பந் தருதல்போல நிலையான பேரின்பமாயிருக்கின்றவனை. தேனமுது - உம்மைத் தொகை. “இன்பதனை யெய்துவார்க் கீயு மவர்க்குருவம், இன்பகனமாதலினா லில்” என்று உமாபதி சிவாசாரியார் திருவருட்பயன் இன்புறுநிலை ௯-ஞ் செய்யுளிற் கூறியிருத்தல் காண்க. மலம் முற்றும் ஒழிந்தபின் நிறைவான மெய்யுணர்வும், மெய்யுணர்வினால் பேரின்பமும் உண்டாகும் தன்மையை அடிகள் தமது அநுபவத்தில் வைத்து இப்பாட்டிற் கூறுகின்றார். சிவன் அடியே, ஏ - பிரிநிலை ஏகாரம். சிவபெருமானுடைய திருவடிகளை யன்றிப் பிறிதொன்றினையும் சிந்திப்பதில்லை என்று

அடிகள் கூறுகின்றார். "மதுமலர்நற் கொன்றையா னடியலாற் பேணு-வெம்பிரான் சம்பந்தன்" என்று திருத்தொண்டத் தொகையிற் கூறப்பட்டிருத்தல் காண்க.

நா — ௬. திருவானைக்கா — திருத்தாண்டகம்.

௩௧ ஊனாகி யுயிராகி யதனுள் நின்ற
வுணர்வாகிப் பிறவனைத்தும் நீயாய் நின்றாய்
நானேது மறியாமே யென்னுள் வந்து
நல்லனவுந் தீயனவுங் காட்டா நின்றாய்
தேனாருங் கொன்றையனே நின்றி யூராய்
திருவானைக் காவிலுறை சிவனே ஞானம்
ஆனாயுன் பொற்பாத மடையப் பெற்றா
லல்லகண்டங் கொண்டடியே னென்செய்
கேனே.

(ப — ரை) தேன் ஆரும் கொன்றையனே - தேன் நிறைந்திருக்கின்ற கொன்றை மாலையைத் தரித்தவனே; நின்றியூராய் - திருநின்றியூரில் எழுந்தருளி யிருக்கின்றவனே; திருவானைக்காவில் உறை சிவனே - திருவானைக்காவில் எழுந்தருளியிருக்கின்ற சிவபெருமானே; ஞானம் ஆனாய் - (இத்தலங்களில் இலிங்கத் திருமேனி கொண் டெழுந்தருளி யிருத்தலன்றி) அறிவுருவாய் இருக்கின்றவனே; ஊன் ஆகி - உடலாகி; உயிராகி-(அவ்வுடலினுள்ளே விளங்குகின்ற) உயிராகி; அதனுள் நின்ற உணர்வாகி-அவ்வுயிரினுள்ளே விளங்குகின்ற உணர்வாகி; பிற அனைத்தும் நீயாய் நின்றாய்-இவைகள் அன்றிப் பிறபொருள்களெல்லாம் நீயாகவே விளங்கி நிற்கின்றாய்; நான் ஏதும் அறியாது - நான் (நினது அருள்பற்றி)

சிறிதும் அறியாமல்; என் உள்வந்து - எனது உள்ளத்தி னுள்ளே (அறிவாக) விளங்கி; நல்லனவும் தீயனவும் காட்டா நின்றாய் – நல்லன இவை தீயன இவை என்று எனக்குக் காட்டி அறிவுறுத்துகின்றாய்; அடியேன் – உனது அடிமை யாகிய நான்; உன் பொற்பாதம் அடையப்பெற்றால்; ஆண்ட வனாகிய உனது அழகிய இரண்டு திருவடிகளையும் சேரப் பெற்றால்; அல்லகண்டம் கொண்டு – துன்பத்துக்கு இட மாயிருக்கிற உடலினால்; என் செய்கேன்-நான் என்ன பயனை அடைவேன் (ஒரு பயனுமில்லை என்றபடி) 4

(வி – ரை) ஞானம் ஆனாய்-சிவபெருமானுக்கு அருட் சத்தியாகிய ஞானமே உருவம் ஆதலின் ஞானம் ஆனாய் என்றார். ஊன் ஆகி - ஊன் - தசை, அது இங்கே ஆகு பெயராய் உடலைக் குறிக்கிறது. உணர்வு – என்பது முன் னைய ௩௦-வது பாட்டில் விளக்கப்பட்டது; அங்குப் பார்க்க. நல்லனவும் தீயனவும் காட்டாநின்றாய்-உள்ளத்தி னுள்ளே நின்று நல்லனவும் தீயனவும் காட்டுவது மனச்சான்று (Conscience) என்று கூறப்படும். அல்லகண்டம்-துன்பம்; பழைய தமிழ்ச் சொல். இக்காலத்து வழங்கப்படுதலின்று. இங்கே அது ஆகு பெயராய்த் துன்பத்துக்கு இடமாயிருக்கிற உடலைக் குறிக்கின்றது. கொண்டு-மூன்றாம் வேற்றுமைச் சொல்லுருபு கருவிப் பொருளில் வந்தது. என் செய்கேன்-செய்கேன் என்பதில், கு-எதிர் காலத்தைக் காட்டும் விகுதி; ஏன்-தன்மை யொருமை விகுதி; இது விகுதிமேல் விகுதி யாய் வந்தது. சிவனது திருவடி அடையப்பெற்ற பின் உட லால் அடையத்தக்க பயன் ஒன்றுமில்லை. வினைப் பயன் நுகரு தற்கு உலக வாழ்வில் உடம்போடு கூடிய பிறவி உண்டாத லால், வினை முற்றிலும் நீங்கி மெய்யுணர்வு பெற்றுத்

திருவடி அடைந்தபின் உடல் வேண்டப் படுவதில்லை என் பது கருத்து. ஏ- ஈற்றசை. இந்தப் பாட்டில் முதல் இரண்டு அடிகளிலும் திரோதானமல நிலையும் பின் இரண்டு அடிகளி லும் அம்மலம் நீங்கிய அருள் நிலையும் கூறப்பட்டன.

## நா-ச. தனித்திரு நேரிசை.

௩௨ விள்ளத்தா னென்று மாட்டேன்
விருப்பெனும் வேட்கை யாலே
வள்ளத்தேன் போல நுன்னை
வாய்மடுத் துண்டி டாமே
உள்ளத்தே நிற்றி யேனு
முயிர்ப்புளே வருதி யேனுங்
கள்ளத்தே நிற்றி யம்மா
வெங்ஙனங் காணு மாறே.

(ப — ரை) உள்ளத்தே நிற்றி எனும் - (சிவபெருமானு கிய நீ) எனது உள்ளத்தில் நிலையாக இருந்தாலும்; உயிர்ப்பு உளே வருதி எனும் - நான் எனது மூச்சை உடலினுள்ளே இழுத்து வாங்கும்பொழுது நீ அம்மூச்சுடனே வருகிறதாயி ருந்தாலும்; வள்ளத்தேன் போல—(ஒருவன் தன் முன்னே வட்டிலில் வைத்திருக்கிற தேனை அதன் மேலுள்ள வேட்கை யால் அதிலே தன் வாயை வைத்து மிக்க ஆவலாய் உறிஞ்சி உண்ணுதல் போல; விருப்பு எனும் வேட்கையாலே எனது உள்ளத்தில் நின்னிடத்தில் அன்பு காரணமாக எழுகின்ற வேட்கையால்; நுன்னை வாய் மடுத்து உண்டிடாமே - எனது உள்ளத்திலிருக்கிற உன்னை எளிதில் அறிந்து எனது ஆசை தீர இன்பம் நுகராதபடி; கள்ளத்தே நிற்றி-உன்னை அறியா

திருக்கும்படி வஞ்சகமாய் நிற்கிறாய்; காணும் ஆறு எங்ஙனம்- (ஆதலின் உன்னை) உணர்ந்து இன்ப நுகரும் தன்மை எப்படி? (உணரமுடியாது என்றபடி); அம்மா - இதுஎன்ன வியப்பு! ஒன்றும் விள்ளமாட்டேன்-நான் இதைப்பற்றி எவரிடத்தி லும் வாய்திறந்து சிறிதும் சொல்லமாட்டேன். 5

(வி-ரை.) இந்தத் தேவாரப்பாட்டில் ஒருவர் தமது தவ முயற்சியின் பயனாகச் சிறிதளவு திரோத மலம் நீங்கித் தமது உள்ளத்திலே சிவபெருமானது அமுத வொளி ஒவ் வொரு நேரத்தில் சிறிது விளங்கி மறைந்துபோதலை உணர்ந்து ஆற்றாமையால் வருத்தமும் வியப்பும் எய்துகின்ற அனுபவத் தை அடிகள் தம்மேல் வைத்துக் கூறுகின்றார். உயிர்ப்பு - உள்ளேஎன்பது உளே எனக் குறுகி நின்றது. சிவசக்தி இயக் கத்தால் மூச்சு இயங்குதலால் உயிர்ப்புள்ளேவருதியேனும் என் றார். வள்ளத்தேன்போல - உவமப்பொருளுக்குக் கூறப்பட்ட "விருப்பெனும் வேட்கையாலே வாய் மடுத்துண்டல்' என் பதை உவமைக்கும் வருவித்துப் பதவுரையில் பொருள் கூறப் பட்டது. வள்ளத்தேன் என்றதனால் சேய்மையிற் சென்று வருந்திப் பெறும் மலைத்தேன்போல் அல்லாது எளிதில் உண் ணத்தகுந்த அண்மையிலுள்ள தேன் உள்ளத்திலுள்ளது என் பது குறிப்பிடப்பட்டது. தேன், உண்ணும் பொருளில் மிக்க இனிமையான பொருளா யிருத்தலுடன், உடல் நோயைத் தீர்க்கும் மருந்தாகவு மிருத்தல்போலச் சிவபெரு மான் உயிர்களுடைய மலநோயைத் தீர்க்கும் மருந்தாயும், மலம் நீங்கின உயிர்களுக்கு நுகரும் இன்பப் பொருளாயு மிருத்தல் பற்றி அவனைச் சைவ சமயாசாரியர்களும் பிற பெரியார் களும் 'தேனே' என விளித்துப் பல இடங்களிலே பாடியிருக் கின்றார்கள். விருப்பு எனும் வேட்கை- என்னும் என்பது

எனும் எனக் குறுகி நின்றது; விருப்பு, உள்ளத்திலே நிகழும் அன்பு; வேட்கை, உள்ளத்திலே நிகழும் அன்பு காரணமாக வெளியிலுள்ள பொருள்களைப் பற்றுதல், வேட்கை—ஆசை. 'அன்பீனும் ஆர்வமுடைமை' என்றார் திருவள்ளுவநாயனார். ஆர்வம், வேட்கை, ஆசை என்பன ஒரு பொருட்சொற்கள். விருப்பின் காரியமாகிய வேட்கை என்பதற்குப் பதிலாக விருப்பென்னும் வேட்கை என்று, காரணம் காரியமாக உபசரித்துக் கூறப்பட்டது. கள்ளத்தே நிற்றி-சிவபெருமான் உயிர்களுடைய உள்ளத்திலே அவைகள் அறியாது நிற்றலால் கள்ளத்தே நிற்றி என்றார். விள்ளத்தான் ஒன்றும் மாட்டேன் என்பதை ஒன்றும் விள்ளமாட்டேன் என மாற்றுக. ஒன்றும் - சிறிதும்; தான் - அசை. பெரியார்கள் தங்கள் உள்ளத்தில் சிவபெருமானைப் பற்றி உணரும் அநுபவத்தைப் பிறரிடம் சொல்லமாட்டார்கள். 'கண்டவர் விண்டிலர்' என்பது பழமொழி. காணும்ஆறே-காணுதல் என்பது உள்ளத்தில் உணர்தல்- ஆறு—தன்மை. ஏ-ஈற்றசை.

### ச-க. திருக்கழுக்குன்றம். பண்-குறிஞ்சி.

௧௧ வெள்ள மெல்லாம் விரிசடை
மேலோர் விரிகோன்றை
கோள்ள வல்லான் குரைகழ
லேத்துஞ் சிறுத்தோண்டர்
உள்ள மெல்லா முள்கிநின்
றுங்கே யுடனுடுங்
கள்ளம் வல்லான் காதல்சேய்
கோயில் கழுக்குன்றே.

(ப-ரை) வெள்ளம் எல்லாம் விரிசடை கொள்ள வல்லான்-(பகீரதன் தனது தவவலியால் வானுலகி லிருந்து வர

வழைத்த) கங்கை யாற்றின் பெருக்கை யெல்லாம் (ஒரு துளி யாகச் செய்து தனது சென்னியின்மே லுள்ள) விரிந்த சடையிலே தாங்கும் ஆற்றல் உடையவனும்; மேல் ஓர் விரி கொன்றை கொள்ள வல்லான் - அக் கங்கையின்மேல் ஒரு விரிந்த கொன்றை மாலையைத்தரிக்கும் ஆற்றல் உடையவ வனும்; சிறுத்தொண்டர் உள்ளம் எல்லாம் உள்கி நின்று- தன்முனைப்புக் கெட்டுத் தாழ்மையாந் தன்மையுடன் ஒழுகு கின்ற அடியார்களுடைய உள்ளம் முழுவதிலும் கலந்து நினைத்துக்கொண்டிருந்து; ஆங்கே உடன் ஆடும் கள்ளம் வல்லான் - அவர்களுடைய உள்ளத்தில் அவர்களை ஆட்டு வித்துத் தானும் அவர்களுடன் அவர்கள் அறியாது நடனம் செய்யும் ஆற்றல் உடையவனும் ஆகிய சிவபெருமான்; காதல் செய்கோயில்-உயிர்களுக்கு அருள் செய்யும் பொருட்டு அவர் கள்மேல் அன்பு கொண்டு எழுந்தருளி யிருக்கின்ற திருக் கோயிலானது; கழுக்குன்று - திருக்கழுக்குன்றம் என்னும் தலத்தில் உள்ளது. 6

(வி-ரை) வெள்ளம் எல்லாம் விரிசடை மேலோர் விரி கொன்றை கொள்ள வல்லான் - உலகமெல்லாம் அழிக்கும் தன்மையுடைய கங்கைப் பெருக்கை ஒரு துளியாகச்செய்து, சடைமேல் வைத்ததும் அவ்வாறு துளியாகச் செய்யப்பட்ட கங்கையின்மேல் கொன்றை மாலையைத் தரித்ததும், சிவபெரு மானுடைய முழு ஆற்றலைக் குறித்தலால் அவனை வல்லான் என்று அடிகள் கூறினர். சிறுத்தொண்டர், சிறுமை + தொண் டர். தாழ்மையாம் மனத்தினை உடைய அடியார்கள். உள்கி நின்று - சிவபெருமான் பொதுவாக மக்கள் எல்லாருடைய உள்ளத்திற் கலந்து நின்று அவர்களுடைய வேட்கை அறிவு செயல்களை விளக்குகின்றான். அவ்வாறு அவன் உயிருக்கு

வேட்கை அறிவு செயல்களை விளக்காவிட்டால் உயிர்ஒன் றனை வேட்டலும், அறிதலும், செய்தலும் முடியாது. இது காட்டும் உதவி என்று கூறப்படும். சிவபெருமான் பொதுத் தன்மையி லன்றிச் சிறப்பாகத் தொண்டர்களுடைய உள்ளத் திற் கலந்து நின்று உள்குதலால் சிறந்தொண்ட ருள்ள மெல்லாம் உள்கிநின்று என அடிகள் கூறியருளினார். உடன் ஆடும் கள்ளம் வல்லான் - தொண்டர்களுடைய உள்ளத்தில் உடன் ஆடுதல் என்பது சிவபெருமான் தொண்டர்களுடைய உள்ளத்திற் கலந்து நின்று அவர்களை அதிட்டித்து அவர்கள் சிவபோகம் நுகர்தலிலும் கலந்து நிற்றலாகும். இவ்வாறு சிவ பெருமான் செய்யாவிடின் அவர்கள் போகம் நுகருதல் செல்லாது. இது காணும் உதவி என்று கூறப்படும். காரைக் காலம்மையார் தாம் பாடிய அற்புதத் திருவந்தாதி ௨0-வது பாட்டில் 'அறிவிப்பான் றானே' என்று காட்டுமுதவியைக் கூறியபின் 'அறிவா யறிகின்றான் றானே' என்று காணும் உதவியையும் உடன் கூறியருளியது காண்க. ஆடுதல்—நட னம் செய்தல். அது உயிர்களை இயக்கி ஐந்து தொழில்களை யும் செய்தலைக் குறிக்கிறது. இது திரோதான சத்தியின் செயல். தொண்டர்கள் அறியாது அவர்களுக்குச் சிவபெரு மான் காட்டு முதவியும் காணுமுதவியும் செய்து வருதலின் அவனைக் 'கள்ளம் வல்லான்' என அடிகள் கூறினார். ஏ- ஈற்றசை.

திருச்சிற்றம்பலம்

---

## ௪. அருளது நிலை.

### ௪-௧. இடும்பாவனம். பண்-நட்டபாடை.

திருச்சிற்றம்பலம்.

௩௪ நெறிநீர்மையர் நீள்வானவர் நினையும்நினை வாகி

அறிநீர்மையி லெய்துமவர்க் கறியுமறி வருளிக்
குறிநீர்மையர் குணமார்தரு மணமார்தரு குன்றில்
எறிநீர்வயல் புடைசூழ்தரு மிடும்பாவன மிதுவே.

(ப-ரை) நெறிநீர்மையர் - (நில வுலகில்) அருள்வழியில் ஒழுகும் தன்மை யுடைய மாந்தரும்; நீள்வானவர் - (வானுலகில் வாழும்) நீண்ட வாழ்நாளை உடையதேவரும்; நினையும் நினைவுஆகி (உம்)-தங்களுடைய உள்ளத்தில் நினைக்கின்ற நினைவாகியும்; எய்தும் அவர்க்கு - (அவ்வாறு அருள் வழியிலொழுகித் தமது திருவடிகளை) அடைய விரும்பும் அம்மாந்தருக்கும் தேவருக்கும்; அறிநீர்மையில் அறியும் அறிவு அருளி (உம்)-அவரவர் தத்தம் உள்ளத்தில் அறியும் இயல்பினை அறிந்து அவ்வியல்புக்குத் தக்கவாறு; தம்மை அறியும்படி அறிவித்து (விடயத்திற் செலுத்தியும் அருள் செய்கின்ற); குணம் ஆர்தரு - அருட் பண்பு நிறைந்துள்ள; குறிநீர்மையர் - உயிர்களெல்லாம் பேரின்பம் அடைதற்குக் குறியிடமாம் தன்மையை உடைய சிவபெருமான் (திருக்கோயில் கொண்டிருக்கின்ற); மணம் ஆர்தரு குன்றில் - நறுமணங்கமழ்கின்ற மலைப்பக்கத்திலுள்ள; எறி நீர்வயல் புடைசூழ்தரும் - அலைவீசுகின்ற நீருள்ள வயல்களாற் சூழப்பட்டிருக்கின்ற; இடும்பாவனம் இது-திரு இடும்பாவனம் என்ற தலம் (நாம் காண்கின்ற) இந்த இடம் ஆகும். ஆகலான், அடியார்கள் இக்கோயிலுக்குச் சென்று வழிபடுக என்பது குறிப்பெச்சம். 1

(வி - ரை) நெறி நீர்மையர் - நெறி - அருள்நெறி. அதாவது அருளையே குறியாகக் கொண்டு ஒழுகும் நெறி. நீர்மை - இயல்பு, தன்மை. நெறிநீர்மையர் என்பது நீர்

பள்ளத்தை நோக்கிச் செல்லுதல் இயல்பாதல் போல, அருளினையே நோக்கும் நெறியிலே ஒழுகும் இயல்பினை உடையவர். நீள்வானவர் - தேவர்கள் நுண்ணுடல்களை உடையவர் ஆதலின், அவர்கள் நமது புறக்கண்களால் அறியப்படமாட்டார்கள்; அவர்கள் மாந்தரை நோக்க நீண்ட வாழ்நாளை உடையவர் ஆதலின் 'நீள்வானவர்' என்றார். தேவர்களுக்கு ஒருநாள், மாந்தருக்கு ஓர் ஆண்டு ஆகின்றது. பொதுவாக எல்லாத் தேவர்களும் கூறப்பட்டிருத்தலால் மாந்தரைப்போல் அவர்களுக்குள் அருள் நெறியில் ஒழுகாதவர் பெரும்பான்மை இலர் என்பது பெறப்பட்டது. நினையும் நினைவாகி - அருள் நெறியில் ஒழுகுகிறவர்களுடைய நினைவும், அவர்கள் பேரின்பம் அடைதல் வேண்டும் என்ற சிவபெருமானுடைய நினைவும் ஒன்றுபட்டிருத்தலால், அடிகள் "நினையும் நினைவாகி" என்றார். இதனால் கண்ணொளியானது தன்னுடன் கலந்துள்ள கதிரவனொளியின் துணையின்றி உலகப் பொருள்களைக் காண்டல் செல்லாததுபோல உயிருடைய ஏகதேச அறிவு, வேட்கை, செயல்கள் அவைகளுடன் சிவபெருமானுடைய நிறைவான அறிவு, வேட்கை, செயல்கள் கலந்து உணர்த்தினாலன்றி விளக்க முறா ஆதலின், உயிரினது தூல அறிவுக்குள்ளே சிவபெருமானுடைய சூக்கும அறிவு நின்று உயிருக்குக் 'காட்டும் உதவி'யைச் செய்கிறது என்ற உண்மை கூறப்பட்டது. "அறிவினுள்ளான் அறிவுக்குக் காட்டாகி நின்றானை" என்று சிவஞானபோத வெண்பாக் கூறுதல் காண்க. திருநாவுக்கரசு அடிகள் திருமாற்பேறு திருத்தாண்டகம் ஏ-வது பாட்டில் "நினையாதாரை நினையானை நினைவோரை நினைவோன் றன்னை" என்று கூறி யருளினர். நினைவாகி என்பதற்குப் பின் 'உம்' தொக்கி நிற்பதை விரித்துப் பொருளுரைக்கப்பட்டது. அறிநீர்மையில் அறியும் அறிவு அருளி

(உம்) - உயிர்களெல்லாம் தத்தம் பக்குவத்துக்கு ஏற்பப் படிமுறையில் அறிவிக்க அறியும் தன்மையுடையன ஆதலின், அடிகள் இவ்வாறு கூறினார். திருமூலர் திருமந்திரம் 130-வது பாட்டில் "எவ்வாறு காண்பா னறிவு தனக்கெல்லை - அவ்வாறருட்செய்வ னாதியரன் றானும்" என்று கூறி யருளினார். இதனால் உயிர் ஒன்றனை விடயித்தற்கண் சிவபெருமான் அதனை அதிட்டித்து அவ்விடயத்திலுஞ் சென்று கலந்தாலன்றி விடயியாது என்ற 'காணும் உதவி' கூறப்பட்டது. இந்தக் காணும் உதவி மேலே கூறப்பட்ட 'காட்டும் உதவி' யின் பின் நிகழ்வது. குணம் - அருட்குணம்; மாயையின் தொடர்புடைய சாத்துவிக முதலிய குணங்கள் அல்ல. அருட்குணம் என்பதில் அறிவு வேட்கை செயல்கள் அடங்கும், இன்னும் முற்றறிவு முதலிய எண்குணங்களும் அடங்கும். ஆர்தரு - ஆர்தல் = நிறைதல். தரு - என்பது துணைவினை. பின் வருகிற மணம் ஆர்தரு, சூழ்தரு என்பனவற்றிற்கும் இவ்வாறே கொள்க. ஆர்தரு வினைத்தொகை. குறிநீர்மையர்- குறி – குறியிடம் - முடிவிடம். எல்லா உயிர்களும் முடிவில் அடைதற்கு இலக்கு ஆம் தன்மையர். திருநாவுக்கரசு அடிகள் திருக்கடம்பூர்க் கரக்கோயில் திருக்குறுந் தொகை ௬-வது பாட்டில் 'மல்லை ஞாலத்து வாழுமுயிர்க்கெல்லா மெல்லையான பிரானார்' என்று கூறியருளினமை காண்க. இப்பாட்டின் கருத்தை "**நெறியே** யென்னும் **நெறிநின்றார்கள் நினைக்கின்ற** நீதி வேதாந்த நிலைக் - **குறியே** யென்னுங் **குணக்குன்றே** யென்னுங் குலாத்தில்லை யம்பலக் கூத்தனையே" என்ற திருமாளிகைத் தேவர் திருவிசைப்பாப் பாட்டுக் கருத்துடன் ஒத்து நோக்குக. ஏ - ஈற்றசை.

நா — ௬. திருப்புறம்பயம் — திருத்தாண்டகம்.

௩௫. நஞ்சடைந்த கண்டத்தர் வெண்ணீ றடி
நல்ல புலியதள்மேல் நாகங் கட்டிப்
பஞ்சடைந்த மெல்விரலாள் பாக மாகப்
பராய்த்துறை யேனென்றோர் பவள வண்ணர்
துஞ்சிடையே வந்து துடியுங் கொட்டத்
துண்ணென் றெழுந்திருந்தேன் சொல்ல மாட்டேன்
புன்சடையின் மேலோர் புனலுஞ் சூடிப்
புறம்பயம்நம் மூரென்று போயி னாரே.

(ப — ரை) *நஞ்சு அடைந்த கண்டத்தர் - கடலில் நின்றெழுந்த நஞ்சினை உண்டதனால் ஆகிய நீலநிறக் கழுத்தினரும்; ஓர் பவள வண்ணர் - ஒப்பற்ற பவள நிறமேனியினருமாகிய சிவபெருமான்; வெண்ணீறு ஆடி (உம்)-தமது திருமேனி முழுவதும் வெண்மையான திருநீறு பூசியும்; நல்ல புலி அதள்மேல் நாகம் கட்டி (உம்) - அழகான புலித்தோல் அரையில் உடுத்தி அத்தோலின்மேல் பாம்பினைக் (கச்சாகக்) கட்டியும்; பஞ்சு அடைந்த மெல்விரலாள் பாகமாக (உம்) - செம்பஞ்சு ஊட்டிய மென்மையான விரல்களை உடைய உமாதேவியாரை இடது பாகத்தில் வைத்தும்; புன் சடைமேல் ஓர் புனல் சூடியும் - தமது சிறிய சடையின் மேலே ஒப்பற்ற கங்கையை அணிந்தும்; துஞ்சு இடையே வந்து-நான் தூங்குங்காலத்து என்னிடத்தில் வந்து; பராய்த் துறையேன் என்று - தாம் தங்கியிருக்கும் இடம் திருப்பராய்த்துறை என்று சொல்லி; துடியும் கொட்ட - (அவ்வாறு சொன்னதும் அன்றித் தமது வலது கையில் வைத்திருக்கிற)*

உடுக்கையையும் கொட்டி ஒலிசெய்ய; துண் என்று எழுந் திருந்தேன்-(அவ்வொலியைக் கேட்டு நான்) அச்சங்கொண்டு நித்திரை நீங்கி எழுந்தேன்; சொல்லமாட்டேன் - நான் அவரிடம் ஒன்றும் சொல்லமுடியவில்லை; நம் ஊர் புறம்பயம் என்று போயினார் - "நமது ஊர் திருப்புறம்பயம்" என்று சொல்லி என்னை விட்டுச் சென்றனர். நமது ஊருக்கு 'வா' என்பது குறிப்பெச்சம். 2

**(வி - ரை)** இத்தேவாரப்பாட்டுத் திரோத மலத்தின் வயப்பட்டுச் சிவபெருமானை மறந்து உலக போக வாழ்வில் உழல்கின்ற ஒருவனிடம் சிவபெருமான் வந்து தம்மை ஆய்ந்து நினைந்து துதிக்கும்படி சொல்லி அபயம் கூறிப் போனதாக, அகப்பொருட்டுறையில் வைத்துத் தலைவி தனது பாங்கியிடம் கூறினதாகக் கூறுகின்றது.

நஞ்சடைந்த கண்டத்தர் - இதனால் சிவபெருமான் உயிர் களுக்குவந்த இடர்களை நீக்கி அருள் செய்கிறவர் என்பது குறிக்கப்பட்டது. வெண்ணீறு ஆடி-ஆடுதல் – பூசுதல், ஆடி என்ற வினையெச்சத்தின் பின் 'உம்' தொக்கி நின்றது; அதனை விரித்துப்பொருள் உரைக்கப்பட்டது. இவ்வாறே பின்வருகிற 'கட்டி, பாகமாக' என்பவற்றிற்கும் 'உம்' விரித்து உரைக்க. 'வெண்ணீறாடி' என்பதனால் சிவபெருமான் இயல் பாகவே பாசங்களினின்று நீங்கிய தூய்மை உடையர் என் பதும், உயிர்ப் பொருளையும் உயிரில் பொருளையும் அழிப்புக் காலத்தில் தம்மிடத்தில் ஒடுக்கி நிற்பவர் என்பதும் குறிப் பிடப்பட்டன. நல்ல புலியதள்மேல் நாகம் கட்டி – புலியும் பாம்பும் தாருகாவனத்து முனிவர்களால் சிவபெருமான்மேல் விடப்பட்டவை. பேரருளுடைய சிவபெருமானிடத்து,

தீங்கு செய்யும் பிராணிகளும் யாதொரு ஊறுசெய்யும் ஆற்றலிலவாயின என்பது குறிப்பிடப்பட்டது. பஞ்சு அடைந்த மெல்விரலாள் பாகமாக—என்பதனால் சிவபெருமான் அருளின் வேறல்லாதவர் என்பது குறிப்பிடப்பட்டது. பாகமாக என்ற சொற்றொடருக்குப் பின் 'வைத்து' என்ற சொல் அவாய்நிலையான் வந்தது. புன்சடைமேல் ஓர் புனல் சூடியும்-இதனால் சிவபெருமான் வரம்பில்லாத ஆற்றல் உடையர் என்பது குறிப்பிடப்பட்டது. புன்சடை-புன்மை, சிறிய சடையைக் குறிக்கின்றது. புனல் என்ற சொல்லுக்குப்பின் னுள்ள (உம்) என்பதைச் சூடி என்ற சொல்லுக்குப்பின் வைத்துப் பொருள் உரைக்கப்பட்டது. துஞ்சு இடையே வந்து-துஞ்சுதல் - தூங்குதல். அது இங்கேஉயிர் திரோதமலத்தால் சிவனை மறந்திருத்தலை உள்ளுறைப் பொருளாகக் குறிக்கிறது; இடை – பொழுது, சமயம். பராய்த்துறையேன்-பர+ஆய்—பராய். நெட்டுயிர் ஆகாரங் கெட்டது. பரவு, பராஎன ஆயது. சுறு—சுறவு, உணு—உணவு, பிணு—பிணவு என வருதல் போல; இரண்டும் முதனிலைத் தொழிற்பெயர்கள். பரா ஆய் என வருதலை ஆய்ப்பரா என மாற்றி ஆய்தலுக்கும் பரவுதலுக்கும் என்று விரித்துப் பொருள் உரைக்க. துறை—தங்குமிடம். ஆகவே, பராய்த்துறையேன்-என்பதற்கு "உயிர்கள் ஆய்தலுக்கும் பரவுதலுக்கும் இடமாயுள்ள பொருள் நானாயிருக்கிறேன்" என்பது உள்ளுறைப்பொருள். ஆய்தல் சிவனுடைய பொது வியலை யறிதற்கேதுவான கேட்டல் சிந்தித்தல்களையும், பரவுதல் அவனுடைய சிறப்பியலை யறிதற்கேதுவான கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டைகூடல் நான்கினையும் குறிக்கும். இந்த உண்மையை மறந்து நீ உலக போகத்தில் உழல்கின்றாய் என்று சிவபெருமான் திரோதமல

வயப்பட்டிருக்கும் உயிருக்குச் சொன்னார் என்பது கருத்து. சிவஞானபோதம் அ-ம் சூத்திரத்தில் "ஐம்புலவேடரின் வளர்ந்து அயர்ந்தனை" என்றகருத்துக்கூறி உயிருக்கு அதன் உரிமையைச் சிவபெருமான் அறிவித்தவா றாயிற்று. துண் என்று-துண்-. அச்சத்தைக் குறிக்கும் ஓர் இடைச்சொல். அது விரைவினையும் குறிக்கும். சொல்லமாட்டேன் - மாட்டாமை -- இயலாமை. சிவன்வந்து அறிவித்ததை உணரலாமே அன்றி உணர்ந்ததைப் பிறருக்குச் சொல்ல முடியாது ஆதலின், சொல்லமாட்டேன் என்றார். துடியுங்கொட்ட-துடி-உடுக்கை. அதனைக் கொட்டுதலால் நாதம் உண்டாகின்றது. நாதம் அறிவுக்குக் காரணமா யிருத்தலால் துடிகொட்ட என்பது, அறிவிக்க என்று பொருள்படும். சிவபெருமான் தமது இயல்பினை உயிருக்குக்காட்டித் தாம் உயிருக்குந் தந்தையாந் தொடர்பு உடையவர் என்று அறிவித்தார் என்பது கருத்து. "உமையறியக் கொந்தணை தாரீருரைமினென்றேன் துடி கொட்டினரே" என்ற வாக்கியம் வருகிற பொன் வண்ணத் தந்தாதி சகூ-வது பாட்டில் 'துடிகொட்டினரே' என்பதற்கு "தாம் இன்னாரென உயிருக்குச் சிவபெருமான் அறிவித்தார்" என்ற பொருள் வெளிப்படையாய் விளங்குதல் காண்க. துடியும் என்பதிலுள்ள 'உம்' இறந்தது தழீஇய எச்சவும்மை. "பராய்த்துறையேன்' என்று உரைத்ததன்றி துடியும் கொட்ட என்று "உம்" இறந்தது தழுவியது. துடிகொட்ட என்பதினால், சிவஞான போதம் அ-வது சூத்திரத்தில் "தம் முதல்குருவுமாயுணர்த்த" என்ற கருத்து உரைக்கப்பட்டது. எழுந்திருந்தேன்-எழுந்தேன்-'இரு' பகுதிப்பொருள் விகுதி. எழுந்தேன்என்பதற்கு "இனிஉலகப்பற்றைவிட்டுச் சிவபெருமானை அடைதல்வேண்டும்" என்ற மன எழுச்சியை உடை

யவனுயினேன் என்பது உள்ளுறைப் பொருள். "ஆசான் முன்னே துயின்மாணவகரைத்-தேசாய தண்டா லெழுப்புஞ் செயல்போல்,நேசாயவீசனு நீடாணவத்தரை-யேசா தமாயாடன் னாலே யெழுப்புமே" என்று திருமூலர் திருமந்திரம் 2163-வது பாட்டிற் கூறியிருத்தல் காண்க. நம் ஊர் புறம்பயம் என்று போயினுர்-வெளிப்படையாகப் புறம்பயம் என்பது திருப்புறம்பயம் என்ற தலத்தைக் குறிக்கின்றது. இந்தத் தேவாரம் திரும்புறம்பயத்திலுள்ள சிவபெருமானுக்குத் துதியாகப் பாடப்பட்டது. புறம்பயம் என்பதைப் பயம் புறம் என மாற்றி, "பயம் (உனக்குப்) புறம் (ஆகுக)" என விரித்து நீ அஞ்சவேண்டாம்; நான் உன்னை உலகப்பற்று மயக்கத்திலிருந்து நீக்கிப் பேரின்பந் தந்து காத்தருளுவேன் நீ நம்மிடம் வா என்றகருத்தை உள்ளுறைப் பொருளாகக் கொள்க. உள்ளுறைப் பொருள் கொள்ளுங்கால் பராய்த்துறை என்பதிலுள்ள துறையை 'மிகு சைவத்துறை' என்றும் 'புறம்பயம் நம் ஊர்' என்பதிலுள்ள ஊரினை சைவ (சமய)த் துறையாலடையும் அருள்வெளி என்றும் நாம் கொள்ளலாம். ஏற்றதை. இத்தேவாரப்பாட்டு, அகப்பொருட்டுறையில் வைத்து ஞானத்திற் சரியையும், சிறப்பியலுக்கு உரிய கேட்டல் ஞானத்தையும் கூறுகின்றது. இது பக்குவமுள்ள உயிருக்குச் சிவபெருமான் வெளிப்பட்டு உணர்த்துதலைக் கூறுகின்றது. பவளவண்ணர்- என்பதனுல் தமது பெயர் சிவன் என்பதும் நஞ்சடைந்த கண்டம் முதலிய கோலங்களால் தமது அருட்பண்பும், புறம்பயம் நம் ஊர் என்றதனுல் தமது ஊர் (பேரின்பத்துறை) இன்னது என்பதும் சிவபெருமான் கூறினதாக நாம் அறிந்து கொள்ளலாம்.

## நா - சு. திருவெண்காடு-திருத்தாண்டகம்.

கக. கோள்ளைக் குழைக்காதிற் குண்டைப் பூதங்
கொடுகொட்டி கொட்டிக் குனித்துப் பாட
உள்ளங் கவர்ந்திட்டுப் போவார் போல
வுழிதருவர் நான்றெரிய மாட்டேன் மீண்
டேன்
கள்ள விழிவிழிப்பார் காணுக் கண்ணுற்
கண்ணுள்ளார் போலே கரந்து நிற்பர்
வெள்ளச் சடைமுடியர் வேத நாவர்
வெண்காடு மேவிய விகிர்த னாரே.

(ப-ரை.) காதில் - இரண்டு காதுகளிலும்; ஒக்குழை கொள்-அழகான குண்டலங்களை அணிந்திருக்கின்ற; குண் டைப்பூதம்-குறுகித் தடித்திருக்கிற உடல்களை யுடைய பூதங் கள்; கொடுகொட்டி கொட்டிக் குனித்துப் பாட - கொடு கொட்டி என்னும் பறையைக் கொட்டிக்கொண்டு ஆடிப்பாட; வெள்ளச் சடைமுடியர் - கங்கையாற்றுப் பெருக்கை (ஒரு துளியாகச் செய்து) சடையுடைய தமது தலையிலே தரித்தி ருக்கிறவரும்; வேதம் நாவர்-வேதங்களை நாவினாலே சொன்ன வரும்; வெண்காடு மேவிய விகிர்தனார் - திருவெண்காட் டில் திருக்கோயில்கொண் டெழுந்தருளி யிருக்கிறவரும் ஆகிய சிவபெருமான்; உள்ளம் கவர்ந்திட்டுப் போவார் போல எனது உள்ளத்தைத் தன்வயப் படுத்திக்கொண்டு நீங்கும் கருத்து உடையவர் போன்று; உழிதருவர் - (அதன்கண்) ஊன நடனம் செய்துகொண்டிருப்பர்; நான் தெரியமாட் டேன் மீண்டேன் - (அவ்வாறு சிவபெருமான் எனது உள் ளத்தில் ஞான நடனம் ஆடி அதனைத் தம்வயப் படுத்துவதை)

நான் அறியாதவனாய் அவரோடும் ஒன்றுபட்டுச் சேராது என் வழியிலே திரும்பினேன்; காணக்கண்ணால் - (நான் அவ்வாறு திரும்பினதை அவர் பார்த்துத் தமது கருத்தை நான் அறிந்து கொள்ளும் வண்ணம்) தமது நெற்றி மேலுள்ள ஞானக் கண்ணினால்; கள்ள விழி விழிப்பர் - எனது ஊனக் கண்களுக்குத் தெரியாதபடி என்னைப்பார்ப்பர்; கண்ணுள்ளார் - எனது அறிவுக்குள் அறிவாயிருப்பவராகி; கரந்து நிற்பர் - எனது உயிரறிவுக்குத் தெரியாமல் மறைந்து நிற்பர். இது என்ன புதுமை என்பது குறிப்பெச்சம்.

இத் தேவாரப் பாட்டில் அடிகள், காமரச மறியும் பருவம் வந்த ஒரு தலைவி, தான் எதிர்ப்பட்ட தலைவன் தன்னிடம் வந்து செய்த புதிய அநுபவ நிகழ்ச்சிகளைத் தனது பாங்கிக்குக் கூறும் கூற்றாகச் சொல்லும் அகப்பொருட்டுறையில் வைத்துப் பேரின்பச் சுவை அறியும் பருவம் வந்த ஒருயிர், தான் சிவபெருமானிடம் புதிதாய் அடைந்து வருகிற அநுபவ நிகழ்ச்சிகளைக் கூறுகின்றார். 3

(வி—ரை.) 'கொள்ளைக் குழைக்காதில்' - என்பதைக் 'காதில் ஊக் குழை கொள்' எனக் கொண்டு கூட்டுக. ஊக்குழை - ஒற்று மிக்கது. 'காது' என்பது இரண்டு காதுகளையும். 'குழை' என்பது இரண்டு குண்டலங்களையும் குறிக்கின்றது குண்டைப்பூதம்-பூதங்கள் குறுகியனவும், தடித்தனவுமாயுள்ள உடல்களை உடையன ஆதலின், குண்டைப்பூதம் என்றார். பூதம்-பூதங்கள்; சாதியொருமை. திருஞானசம்பந்த அடிகள் "குண்டைக் குறட் பூதம் குழும" என்று திருவதிகை வீரட்டானத் தேவாரம் க—வது பாட்டிற் (46–1) கூறியிருத்தல்

காண்க. கொடுகொட்டி - ஒருவகைப் பறை; திரிபுரமழித்த காலத்தில் சிவன் கூத்தாடும்பொழுது அடிக்கப்படும் பறை; கலித்தொகைக் காப்புச் செய்யுளிற் காண்க. கொட்டிக் குனித்துப் பாட-சிவபெருமான் நடனஞ் செய்யும் பொழுது பூதங்கள் தாளம் போட்டுப் பாடி யாடுதலை அடிகள், "குழலோடு கொக்கரைகைத் தாளம் மொந்தைக் குறட் பூத முன்பாடத் தானுடும்மே" என்று திருவதிகை வீரட் டானம் அடையாளத் திருத்தாண்டகம் எ—வது பாட் டிற் கூறியிருத்தல் காண்க. உள்ளம் கவர்ந்திட்டுப் போவார் போல—'உள்ளம் கவர்தல், என்பது சிற்றின்பத் துறையில் காமரசம் அறியும் பருவம் அடைந்திருக்கிற தலைவி, தனது உள்ளத்தை அவளை எதிர்ப்பட்ட தலைவன் வயப்படுத்தித் தன்னை அடையச் செய்தலாகும். பேரின்பத் துறையில் பேரின் பச் சுவையை அறியும் பருவமடைந்திருக்கிற உயிரைச் சிவ பெருமான் உலகவாழ்வு வழியினின்று திருப்பி அதன் வய மொழித்துத் தம்வயப் படும்படி செய்தலாகும். உயிர் தன் னுடைய ஏகதேச அறிவு வேட்கை செயல்கள், சிவபெருமானு டைய வியாபக அறிவு வேட்கை செயல்களுக்குள் அடங்கி நின்று ஒழுகுதல், உயிர் சிவபெருமானுடைய வயப்படு தலாகும். போவார் போல—ஒருவாறு பக்குவம் அடைந்து வருகிற உயிருக்குச் சிவபெருமானது அருட்செயல் நன்கு விளங்காததால் "போவார் போல" என்றார். உழிதருவர்—உழி தருதல்—திரிதல். சிற்றின்பத் துறையில் உள்ளத்தில் உழிதரு தல் என்பது தலைவியினுடைய உள்ளத்தைவிட்டுத் தலைவன் நீங்காதிருத்தல். "நெஞ்சத்தார் காதலவ ராக வெய்துண்டல்- அஞ்சுதும் வேபாக் கறிந்து" என்ற 1128—வது திருக்குறட் கருத்தை நோக்குக. பேரின்பத் துறையில் சிவபெருமான் உயிரினுடைய உள்ளத்தில் நடனம் செய்தலாகும். சிவ

பெருமான் அண்டத்திற்போலப் பிண்டத்திலும் உயிரினது உள்ளத்தில் ஐந்தொழிலாகிய நடனத்தை எப்பொழுதும் செய்துகொண் டிருக்கிறார். இங்கே பக்குவமடைந்து வருகிற உயிருக்குச் சிவபெருமான் அருளால் ஆகிய நடனம் செய்தலால் அந்நடனம் ஞானநடனம் என்று கூறப்பட்டது. நான் தெரியமாட்டேன் மீண்டேன்—மாட்டாமை—இயலாமை. சிற்றின்பத் துறையில் தலைவன் தனது உள்ளத்தைவிட்டு நீங்காமலிருத்தலைத் தலைவி அறிந்துகொண்டாலும் அவன் வயப்படாம லிருத்தலாகும். பேரின்பத்துறையில் உயிர் தனது உள்ளத்தில் சிவபெருமான் நடனம் செய்துகொண்டிருத்தலை அறிந்தாலும் நடனம் செய்யும் கருத்தை அறிந்து அவன் வயப்படாமலிருத்தலாகும். "மறுத்தனன் யானுன் னருளறியாமையில்" என்று மாணிக்கவாசக அடிகள் கூறுதல் காண்க. நீத்தல் விண்ணப்பம் ௬—வது பாட்டு காணுக் கண்ணுற் கள்ளவிழி விழிப்பர் — சிற்றின்பத்துறையில் தலைவன் தலைவிக்குத் தனது கண்களாற்பார்க்கும் பொது நோக்காலன்றித் தனது உட்கருத்தை அறிவிக்கும் சிறப்பு நோக்காற் பார்த்தல். அந்நோக்கு உட்கருத்தை மறைத்துவைத்திருத்தலால் 'கள்ளவிழி விழிப்பர்' என்றார். தலைவியைத் தன் வயப்படுத்துதல் அந்நோக்கத்தின் உட்கருத்தாகும். "நெற்றிமேற் கண்காட்டி நிறையுங் கொண்டீர்" என்று அடிகள் திருஆமாத்தூர்த்திருத்தாண்டகம் அ—வது பாட்டிற் கூறியருளினமைகாண்க. பேரின்பத்துறையில் ஒருவாறு பக்குவமடைந்தும் தமது ஞான நடனத்தின் கருத்தாகிய அருளை அறியாதிருக்கிற உயிருக்கு அதனை அவ்வுயிர் அறியும்படி செய்யச் சிவபெருமான் தமது அருட் பார்வையால் மெய்யுணர்வு உண்டாகும்படி நோக்குதல் ஆகும். ஊனக்கண்களுக்கு

வேறாகப் பக்குவமடையாத உயிர்கள் காணக்கூடாத கண்ணு பிருத்தலால் நெற்றிக்கண்ணைக் 'காணுக்கண்' என்றார். அந் நோக்குப் பருவமடையாத உயிர்களுக்குத் தெரியாது மறை வாயிருத்தலால், "கள்ள விழி விழிப்பர்" என்றார். காணுக் கண்ணுற் 'கள்ள விழி விழிப்பர்' என்றதனால் சிவபெருமான் உயிரினுடன் கலந்து நின்று உயிருக்குச் செய்யும் காட்டும் உதவியும் சிவபெருமான் பாசஞானத்தால் அறியப்படுவாரல் லர் என்ற உண்மையும் கூறப்பட்டனவாயின. "காண்பாரார் கண்ணுதலாய்க் காட்டாக்காலே" என்ற தேவார வாக்கியம் இக்கருத்தினையே கூறுவதாகும். கண்ணுள்ளார்போலக் கரந்து நிற்பர்-பேரின்பத்துறையில் கண்—அறிவு—கண் உள்ளார்-உயி ரினது தூல அறிவுக்குள் சூக்கும உயிராய் வேறறக் கலந்து இருப்பவராகி. வினைமுற்று வினையெச்சப் பொருளில் வந்தது. போல-அசைநிலை. சிவபெருமான் உயிரினது அறிவுக்குள் அறிவாய் வேறறக் கலந்திருத்தலினால் அவர் உயிர் அறிவால் அறியப்படுவார் அல்லர் என்பது கூறப்பட்டது. சிவபெரு மான் உயிர் அறிவால் (பசுஞானத்தால்) அறியப்படுவார் அல் லர் ஆதலின், 'கரந்து நிற்பர்' என்றார். சிற்றின்பத்துறையில் தலைவன் தலைவியினுடைய நினைப்பினுள்ளாராய் அவள் உள் ளத்தைவிட்டு நீங்காதிருந்தாலும் அவளுக்கு மறைவாய்ப் பிரிந்திருக்கிறார் என்பது கூறப்பட்டது. உழிதருகின்றார், விழிக்கின்றார், கரந்து நிற்கின்றார் என்று நிகழ்காலத்தாற் கூறற்பாலன தெளிவு அல்லது இயல்புபற்றி உழிதருவர், விழிப்பர், கரந்துநிற்பர் என எதிர்காலத்திற் கூறப்பட்டன.இப் பாட்டுச் சிவபெருமான், பக்குவம்வரும்படி உயிருக்கு அதன் உள்ளத்தில் நின்று அருள் செய்தலைக் கூறுகின்றது.

நா - சு. திருப்புறம்பயம்-திருத்தாண்டகம்.

௯.எ முற்றொருவர் போன் முழுநீ றாடி
முளைத்திங்கள் சூடிமுந் நூலும் பூண்டு
ஒற்றொருவர் போல் வுறங்கு வேன்கை
யொளிவளையை யொன்றொன்றா [வெண்ணு கின்றார்
மற்றொருவ ரில்லைத் துணை யெனக்கு
மால்கொண்டாற் போல மயங்கு [வேற்குப்]
புற்றரவக் கச்சார்த்துப் பூதஞ் சூழப்
புறம்பயம்நம் மூரென்று போயி னாரே.

(ப-ரை.) ஒருவர் - ஒப்பற்றவராகிய சிவபெருமான்; முழுநீறு ஆடி(உம்)-தமது திருமேனி முழுவதும் வெண்ணீறணிந்தும்; முளைத்திங்கள் சூடி(உம்) -மூன்றாம் பிறைத் திங்களைச் சடையிலே அணிந்தும்; முந்நூல் பூண்டு (உம்) - (மார்பிலே) முப்புரிகளாலாகிய பூணூல் தரித்தும்; முற்று ஒருவர் ஒற்றுப்போல - முழுவதும் ஒருவரால் அனுப்பப்பட்ட தூதர் போல; உறங்குவேன் கை ஒளிவளையை ஒன்று ஒன்றா எண்ணுகின்றார்-உறங்குகின்றவளாகிய என்னுடைய ஒளிபொருந்திய கைவளையல்களை ஒன்று ஒன்றாகத் தள்ளி எண்ணிக்கை செய்கின்றார்; மால் கொண்டால்போல மயங்குவேன்-பித்துப்பிடித்த ஒருவர் அறிவின்றிச் செய்வகை அறியாது மயங்குதல்போல மயங்குகிறவளாகிய நான்; மற்று ஒருவர் எனக்குத் துணை இல்லை (என்று கூற) - (அப்பொழுது உம்மைத் தவிர) வேறு ஒருவரும் எனக்குத் துணையில்லை என்று சொல்ல; புற்றரவக் கச்சு ஆர்த்து - அவர் புற்றிலே யிருக்கின்ற பாம்புகளைக் கச்சாக (அரையிலே) கட்டி; பூதம் சூழ - பூத

கணங்கள் தம்மைச் சூழ்ந்து செல்ல; நம் ஊர் புறம்பயம் என்று போயினார் - "நாம் இருக்கும் ஊர் திருப்புறம்பயம்" என்று கூறிக்கொண்டு (என்னைவிட்டு நீங்கிப்) போனார். 4

(வி - ரை) அடிகள் இத்தேவாரப் பாட்டில், திரோத மலம் வயப்பட்டு வாழ்ந்துவந்த உலகவாழ்வில் நுகர்ந்த சிற்றின்பத்தினது நிலையாமையையும், சிறுமையையும் அறியலுற்ற, உலகவாழ்வினை விட்டுநீங்கி, நிலையான இன்பம் அடைதற்கு வழியுண்டோ என மயங்கி நிற்கும் சமயத்தில் சிவபெருமான் தோன்றி அருள் செய்தலை, அகப்பொருட்டுறையில் சிற்றின்பச் சுவையை அறியலுறும் பருவம் வந்துள்ள ஒரு தலைவி தனது உறக்கத்தில் நிகழ்கிற கனவிற் றன்றலைவன் தோன்றித் தன் வளையல்களை எண்ணித் தனது ஊருக்கு வரும்படி சொன்னார் என்று தன்பாங்கிக்குக் கூறும் கூற்றில் வைத்துக் கூறுகின்றார். "முழு நீறாடி" என்பதனால், சிவபெருமான் உலக முழுவதையும் அழிப்புக்காலத்தில் தம்மிடத்து ஒடுக்குகிறவர் என்பதும், இயல்பாகவே பாசங்களினின்று நீங்கிய தூயர் என்பதும் 'முளைத்திங்கள்சூடி' என்பதனால் அவர் தம்மை அடைந்தவருடைய இடர் நீக்குவர் என்பதும் குறிப்பிடப்பட்டன. முற்று ஒருவர் போல - 'முற்று' என்ற சொல் இரண்டாவது வரியில் வருகிற 'ஒற்று' என்ற சொல்லுக்கு அடைமொழியாகச் சேர்த்துப் பொருள் உரைக்கப்பட்டது. போல-அசை நிலை. முற்று ஒருவர் ஒற்றுப் போல-'முற்றும்' என்பது மகர ஒற்றுக் கெட்டு நின்றது. முற்றும்-முழுவதும். ஒற்று - தூதன்; நிகழும் செய்திகளை மறைந்து நின்று அறிந்து, தன்னை அனுப்பின முதல்வனுக்குச் சொல்லுகிறவன். (Spy). தலைவி தான் உறங்குங் காலத்து மறைவாய் நின்று தன் வளையல்களைத் தலைவன் எண்ணிப் பார்த்த

தனால் அவரைத் தலைவர் என்று கூறாது, 'முற்றிலும் ஒரு தூதன் போல வந்தார்' என்று கூறினார். சிற்றின்பத் துறையில் உறங்குதல் என்பது தலைவி தலைவனால் அடையும் இன்பத்தை மறந்து தூங்குதல். உறங்குவேன் கை ஒளிவளையை ஒன்று ஒன்றாய் எண்ணுகின்றார் - உறங்குதல் - பேரின்பத் துறையில் திரோதமலம் காரணமாக உலகவாழ்வில் மயங்கி இறைவனால் அடையப்பெறும் பேரின்பத்தை அறியாதிருத்தல். உறங்குவேன் - தெரிநிலை ஒருமைத்தன்மை எதிர்கால வினையாலணையும் பெயர். 'உறங்கினேன்' என இறந்தகாலத்தாற் கூறற்பாலது இயல்புபற்றி எதிர்காலத்தாற் கூறப்பட்டது. 'வளை' என்பது உயிரை வளைந்திருக்கிற உலக வாழ்வுப் பற்றுக்களை உள்ளுறைப் பொருளாகக் குறிக்கும். இப்பற்றுக்கள் திரோதமலத்தால் உண்டாகியவை. அம்மலம் திருவருட்சத்தியால் இயக்கப்படுதலால் 'ஒளிவளை' என்றார். சிற்றின்பத் துறையில் 'ஒளிவளை' என்பது பொன்னாலாகிய வளையலைக் குறிக்கும். ஒன்று ஒன்றாய் எண்ணுதல் - என்பது உள்ளுறைப் பொருளாகத் திரோத மலத்தினாலுண்டாகும் பற்றுக்களை ஒன்று ஒன்றாய்ச் சோதனை செய்து அவைகள் ஒவ்வொன்றும் எவ்வளவு உயிரை விட்டு நீங்கியிருக்கின்றன என்று ஆராய்ந்து பார்த்தல் ஆகும். இது, தீக்கையில் அத்துவ சோதனை என்று கூறப்படும். உயிர் பேரின்பச் சுவை அறியும் தகுதி அடைதற்கு உலக வாழ்வுப் பற்றுக்கள் முழுவதும் நீங்குதல் வேண்டப்படுதலின், அப்பற்றுக்கள் உயிரினை விட்டு நீங்கினவா என்று சிவபெருமான் பார்த்தார் என்பார், 'ஒன்றொன்றாய் எண்ணுகின்றார்' என்றார். "பாதம் பணிவார்தம் பல்பிறவி - ஆய்ந்தாய்ந் தறுப்பாய்" என்று இக்கருத்தைத் திருநாவுக்கரசு அடிகள் திருச்சத்தி

முற்றத் திருவிருத்தம் 2-வது பாட்டிற் கூறியிருத்தல் காண்க. ௪-வது அடியில் 'போயினார்' என்று சொன்னதற்கேற்ப, 'உறங்கினேன்' என்றிருத்தற்பாலது 'உறங்குவேன்' என எதிர்காலத்தாற் கூறினார். இது காலவழுவமைதி. மால் கொண்டால் போல மயங்குவேன்-மால் - பித்து. பைத்தியம் கொண்டால்+போல - கொண்டாற்போல மயங்குவேன்+கு- மயங்குவேன். தெரிநிலை ஒருமைத் தன்மை எதிர்கால வினையாலணையும் பெயர் 'மயங்கினேன்' எனற்பாலது 'மயங்குவேன்' என நின்றது காலவழு வமைதி. மயங்குதல் - இன்னது செய்தல்வேண்டும் என்று அறியாது திகைத்தல். மயங்குதல் - சிற்றின்பத்துறையில் காமரசமறியாத தலைவி தலைவனால் அடையப்பெறும் சிற்றின்பத்தை அடைய வழி தெரியாது மயங்குதல்; பேரின்பத்துறையில் பேரின்பச் சுவை அறியும் பக்குவம் வராத உயிர் உலகவாழ்வு நிலையிலிருந்து தப்பிப் பேரின்பத்தை அடைதற்கு வழி தெரியாது மயங்குதல். நம் ஊர் புறம்பயம் என்று போயினார் - நம் ஊர் புறம்பயம் என்பது சிற்றின்பத்துறையில் தலைவன், சிற்றின்பமடையவழி அறியாது மயங்கிக்கொண்டிருக்கிற தலைவிக்குத் தனது ஊர் திருப்புறம்பயம் என்று கூறி அந்த ஊருக்கு வரும்படி தெரிவித்தல். "பின்னை அவனுடைய ஆரூர் கேட்டாள்" என்ற தேவார வசனத்தை ஒத்துநோக்குக; பேரின்பத்துறையில் பேரின்பமடைய வழி அறியாது மயங்கிக் கொண்டிருக்கிற உயிருக்கு, இறைவர் தாம் அருள் செய்தற் பொருட்டுத் திருக்கோயில் கொண்டருளியிருக்கின்ற திருப்புறம்பயத்துக்கு வந்து தம்மைத் தமது வியாபக அறிவு வேட்கை செயல்களில் அடங்கி நின்று வழிபடல் வேண்டும் என்று தெரிவித்தல். சிவபெருமான் சுந்தரமூர்த்தி சுவாமி

களைத் தமக்கு அடிமையாகப் பணிசெய்தல் வேண்டுமென்று அவரிடம் கூறி ஆவண ஓலைகாட்டி மெய்ப்பித்த பொழுது 'நாமிருக்குமிடம் அருட்டுறை' என்று திருவெண்ணெய் நல்லூர்க்கோயிலுக்குட் புகுந்து வழி காட்டினதை நோக்குக. 'புறம்பயம்' என்ற சொற்றொடருக்கு உள்ளுறைப் பொருளாக, முன் "நஞ்சடைந்த கண்டத்தர்" என்ற 35-வது பாட்டின் கருத்துக்களைக்கொள்க. "அஞ்சலென்றடித் தொண்டனேற் கருள் நல்கினாய்" எனச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருப்பாண்டிக் கொடுமுடித் தேவாரம் 5-வது பாட்டிற் கூறியிருத்தல் காண்க. பேரின்பம் நுகருமிடம் அச்சமில்லாத இடம் ஆதலின் 'புறம்பயம்' என்றார். சிவபெருமானுடைய திருவுருவங்களில் வலது கைகளில் ஒருகை அபயக்கையாயிருத்தலை நோக்குக. ஏ - அசை. பின்னே வருகிற 38வது-பாட்டில் 'நின்றார்' என்று கூறியதுபோல அன்றிப் 'போயினார்' என்று இப்பாட்டிற் கூறப்படுதலால், சிவபெருமான் உயிரினுடைய பக்குவத்தை ஆய்ந்து பார்த்துத் தாம் அதற்கு அருட்பார்வை செய்து மலம் நீக்குதற்குத் தகுதி உண்டாகவில்லை என்று அறிந்து, இன்னம் தம்மை அறிதல்வேண்டும் என்று அறிவித்து விட்டுப் 'போயினார்' என்பது குறிப்பிடப் பட்டது. பாட்டில் சிவபெருமான் வந்தார், சோதனை செய்தார், போயினார் எனக் கூறப்பட்டனவெல்லாம் சிற்றறிவுடைய நம்போல்வார் அறிதற்கு உருவகமாய்க் கூறப்பட்டுள்ளன. அவர் ஒவ்வொரு உயிர்க்கும் அதனதன் பக்குவம் அறிந்து அறிந்து அருள் செய்துகொண்டிருக்கிறார் என்பது கருத்து.

நா - ௪. தனித்திருநேரிசை.

௩அ. வெள்ளநீர்ச் சடைய னார்தாம் வினவுவார்
போல வந்தென்

உள்ளமே புகுந்து நின்றார்க் குறங்குநான்
புடைகள் போந்து
கள்ளரோ புகுந்தீ ரென்னக் கலந்துதான்
நோக்கி நக்கு
வெள்ளரோ மென்று நின்றார் விளங்கிளம்
பிறைய னாரே.

(ப — ரை) வெள்ளம்நீர்ச் சடையனார் - கங்கையாற்றுப் பெருக்கை அடக்கி அதனை ஒருதுளியாகச் சடையில் வைத்தவரும்; விளங்கு இளம்பிறையனார் - ஒளிவிளங்கும் மூன்றாம் பிறைச் சந்திரனை அணிந்தவரும் ஆகிய சிவபெருமான்; வினவுவார் போலவந்து - (உறங்குகின்ற என்னிடம்) கேள்வி கேட்கிற குறிப்புடனே வந்து; என் உள்ளமே புகுந்து நின்றார் -(நான் அறியும்படி) எனது உள்ளத்தில் வேறாக விளங்கி நின்றார்; உறங்கும் நான் - உறங்கிக்கொண்டிருக்கின்ற நான்; புடைகள் போந்து-(அவர்) பக்கத்திலே போய்; புகுந்தீர் கள்ளரோ என்ன-எனது உள்ளத்தினுள்ளே நான் அறியாது புகுந்தவராகிய நீர் கள்ளரோ என்று அவரைக் கேட்க; தாம்-சிவபெருமான்;நோக்கி- (எப்பொழுதும் எனது உள்ளத்தில் உறைகின்றவர் என்று நான் அறிய எனது மலம் நீங்கும் வண்ணம் தமது அருட்பார்வையால்) என்னைப் பார்த்து;கலந்து-(முன்னே அவரை எனக்கு வேறாக நின்றார் என்று கருதிய என்னை இப்பொழுது அவரோடு அத்துவிதமாய்க்) கலக்கும்படி செய்து; நக்கு —(அவ்வாறு நான் அவருடன் அத்துவிதமாய்க் கலந்ததற்காக அகமகிழ்ச்சியினால்) புன்முறுவல் செய்து; வெள்ளரோம் என்று நின்றார்-(நாம் முன் நீ அறியாது கூறியபடி கள்ளர் அல்லர்; இப்பொழுது நீ அறிகிறபடி உனது உள்ளத்தில்

எப்பொழுதும்) கள்ளமில்லாமல் (மெய்மையாக) இருக்கிறவர் என்று கூறிக்கொண்டு நின்றார்.

(வி-ரை) 'வெள்ளம் நீர்ச் சடையனார்,' என்பதனால் சிவபெருமான் பேராற்றலுடையவர் என்பதும், 'இளம்பிறையனார்' என்பதனால் சிவபெருமான் தம்மை அடைந்தவர்களுடைய இடரைத் தீர்ப்பவர் என்பதும் குறிப்பிடப்பட்டன. 'இளம்பிறையனாரே' என்பதிலுள்ள ஏ - அசை. வினவுவார் போலவந்து-கேள்விகேட்கிற குறிப்பு முகத்திலே விளங்கியது என்பார், 'வினவுவார்போல' என்று கூறினார். கேள்வி கேட்கிறதற்கு வேறாகநிற்றல் வேண்டப்படுதலால் 'வேறாகநின்று' என்று பதவுரை செய்யப்பட்டது. 'நமது அருமை மகனே! நீ மலப்பற்று நீங்கி நம்மைச்சேர்ந்து பேரின்பம் அடையும் தகுதி பெறுதற்கு நாம் உனக்கு உலகவாழ்வும் அதற்கு வேண்டப்படும் தனுகரண புவனபோகங்களும் கொடுத்தோமே, அவைகளை நமது கருத்து நிறைவேறும்படி பயன்படுத்திக் கொண்டாயா? என்பது கேள்வி. 'என் உள்ளமே புகுந்து நின்றார்' - 'உள்ளமே' என்பதிலுள்ள ஏகாரம் தேற்றம். 'புகுதல்' என்பது இங்கே விளங்கிநிற்றல், சிவபெருமான் எப்பொழுதும் எல்லா உயிர்களுடைய உள்ளத்திலும் இருப்பவராதலின். உள்ளத்தில் ஒளி உருவாய் விளங்கியது உறுதியாய்த் தெரிந்தது என்பார் 'உள்ளமே புகுந்து நின்றார்' என்றார். உள்ளத்திலே விளங்கியது மறையாமல் விளங்கியவாறே 'நிலைபெற்று நின்றார் என்பார் 'நின்றார்' எனக்கூறினார். 'நின்றார்க்கு' என்பதிலுள்ள கு-சாரியை. "இரந்திரந் துருக வென் மனத்துள்ளே யெழுகின்ற சோதியே" எனவும், "சோதியாய்த் தோன்று முருவமே" எனவும் மாணிக்கவாசக அடிகள் கூறியிருத்தல் காண்க. உறங்கும் நான்-பேரின்பத்துறையில் உறங்

குதல், என்பது உள்ளுறைப்பொருளாகத் திரோத மலத்தின் வயப்பட்டு சிவபெருமானை அறியாதிருத்தலைக் குறிக்கின்றது. சிற்றின்பத்துறையில் தலைவி தலைவனை அறியாதிருத்தலைக் குறிக்கின்றது. புடைகள் போந்து - புடை - பக்கம். கள் - அசை. சிவபெருமான் உயிரினது உள்ளத்தில் வேறாய் விளங்கி நிற்றலால் "உயிர் புடைபோந்து" என்று கூறப்பட்டது. புகுந்தீர் கள்ளரோ என்ன-புகுந்தீர் - முன்னிலைத் தெரிநிலை இறந்தகால வினையாலணையும் பெயர். சிவபெருமான் இதுகாறும் உயிரினுடைய உள்ளத்திலே விளங்காமல் மறைந்து நின்று, திரோதமலம் நீங்கின பருவம் வந்த இப்பொழுது ஒளி உருவில் விளங்கி நின்றாள்ளதை அறிந்த உயிர் புதிதாய் விளங்கினவரைக் 'கள்ளர்' என மயங்கி அறிந்தது என்பார் 'கள்ளரோ' என்றார். 'கள்ளரோ' என்பதிலுள்ள ஓகாரம் வினாப்பொருளைத் தந்து நின்றது. நோக்கி - நோக்கம் - அருட்பார்வை - சிவபெருமான் தாம் உயிருக்கு இன்ன தொடர்பு உடையவர் என்று அறியாதிருந்த உயிரை அத்தொடர்பை அறியச் செய்ய அதன் மலம் நீங்கும்வண்ணம் அருட்பார்வையாற் பார்த்தல், இது, நயன தீக்கை என்று கூறப்படும். முதலாவது வரியிலுள்ள 'தாம்' என்ற சொல் மூன்றாம் வரியில் வருகின்ற 'நோக்கி' என்ற வினைக்கு எழுவாயாகவும், மூன்றாவது வரியிலுள்ள 'தான்' அசைநிலையாகவும் கொள்ளப்பட்டன. கலந்து-சிவபெருமான் உயிரினிடத்து அருட்பார்வை செய்து அதனோடு தாம் எப்பொழுதும் அத்துவிதமாய் (இரண்டற)க் கலந்து நிற்றலை அது அறியும்படி செய்தல் இங்கே கூறப்பட்ட கலத்தல் ஆகும். முன் கலவாது, இப்பொழுது கலந்தது உயிரே அன்றிச் சிவபெருமான் அல்லர். திரோதமல நிலையில் சிவபெருமான் உயிரினோடு அத்துவிதமாய்க் கலந்து நின்ற முறைமை போல, திரோத

மலம் நீங்கின அருள் நிலையில் உயிர் சிவபெருமானோடு அத்து விதமாய் நிற்கின்றது என்ற உண்மை கலந்து என்பதினால் இங்கே கூறப்பட்டது. இவ்வாறு உயிர் சிவபெருமானோடு அத்துவிதமாய்க் கலந்து ஒன்றாகும் நிலை சிவயோகம் ஆகும். சிவயோகத்தின் பின் நிகழும் சிவபோகம் நிகழ்ந்ததாக இத் தேவாரப்பாட்டுக் கூறவில்லை. நோக்குதலின்பின் கலப்பு நிகழ் தல் முறைமையாதலின், பாட்டில் 'கலந்து நோக்கி' என்றிருப் பதை நோக்கிக் கலந்து என மாற்றிப் பொருளுரைக்கப் பட்டது. நக்கு-நகுதல்-புன்முறுவல் செய்தல்; சிறுநகை செய் தல். அகமகிழ்ச்சி காரணமாக முகம் மலர்ந்து சிறு நகை செய்தல் ஒருயிர் திரோத மலத்தினின்று நீங்கித் தமது அருளை அறிந்து, தம்மோடு கலந்ததற்காகச் சிவபெருமான் அகம் மகிழ்ந்து முகம் மலர்ந்து சிறு நகை செய்தார் என்பது 'நக்கு' என்ற சொல்லாற் கூறப்பட்டது. வெள்ளரோம் என்று நின் றார்-வெள்ளர் - கள்ளமில்லாதவர் "வெள்ளைக்கில்லை கள்ளச் சிந்தை" என்னும் ஔவையார் முதுமொழியில், 'வெள்ளை' என்பது கள்ளம் இன்மையைக் குறிக்கின்றது என்பது நன்கு விளங்குகின்றது. திருஞான சம்பந்த அடிகளுடைய திருக்கா ஹூர்த் தேவாரம் ௧௦-வது பாட்டில் "தாமோர் கள்வர் வெள் ளர் போல" என்று வரும் சொற்றொடரில் 'வெள்ளர்' என்ற சொல்லுக்கு இப்பொருள் தெளிவாய் விளங்குதல் காண்க. ஓம்-தன்மைப் பன்மை விகுதி; உளப்பாட்டுத் தன்மைப் பன்மை விகுதி அன்று. தன்மைப் பன்மை சிவபெருமான் உலகிற்கு முழுமுதற்றலைவர் என்பதைக் குறிக்கின்றது. 'உளோம் போகீர்' என்று சிவபெருமான் சுந்தரமூர்த்தி சுவா மிகளுக்குத் திருவெண்பாகத்தில் கூறி யருளினமை காண்க. நின்றார்-போயினார் என்று முன்னைய 37-வது பாட்டிற் கூறி யது போலக் கூறாமல் இப்பாட்டில் 'நின்றார்' எனக் கூறப்படு

தலினால் உயிர் சிவபெருமானுடைய அருட்பார்வையால் மல நீக்கம் அடைந்தபின் சிவபெருமானோடு கலந்திருக்கும் சிவ யோக நிலையில் நிலைத்திருந்தது என்பது குறிப்பிடப்பட்டது. இப்பாட்டில்(ஒளி உருவில்) 'உள்ளமே புகுந்து நின்றார்' என்ப தனால் சிவரூபம் என்னும் தமது சத்துத்தன்மையையும், 'நோக்க' என்பதனால், சிவதெரிசனம் என்னும் தமது சித்துத் தன்மையையும், 'கலந்து' என்பதனால் தமது ஆனந்த ஒளி விளங்குகின்ற சிவயோக நிலையையும் சிவபெருமான் உயிருக்கு விளங்கும்படி செய்தார் என்பது உய்த்துணர்க. இந்தச் சிவ யோக நிலையில் சிவஞானபோதம்-௧௦-ஆம்: சூத்திரத்தில் கூறப் பட்ட அருள் விளக்கத்தால் ஆனந்த ஒளி தோன்றுமேயன்றி ஆனந்த விளக்கம் உண்டாகாது. திருநாவுக்கரசு அடிகள் இந்தத் தேவாரப் பாட்டில் திரோதமலம் நீங்கிப் பேரின்பச் சுவை உணரும் பருவமடைந்த ஒருயிரிடத்தில் சிவபெருமான் வந்து தமது அருட்கண்ணால் நோக்கி, மல நீக்கம் செய்து சிவ யோக நிலையை அடையச் செய்தான் என்ற உண்மையைச் சிற்றின்பச் சுவையை உணரும் பருவமடைந்த ஒரு தலைவி, தன்னிடம் உறங்கும்பொழுது முன் ஊழினாற் காட்சிப்பட்ட தனது தலைவன் வந்து அவனுடைய உருவ நலமும் பண்பு நலமும் காட்டித் தன்னோடு கலந்தான் என்ற செய்தியைத் தன் பாங்கிக்குச் சொன்னாள் என்னும் அகப்பொருட்டுறையில் வைத்துக் கூறினாள்.

நா-ரு. சித்தத்தொகை. திருக்குறுந்தொகை.

௩௯ சரண மாம்படி யார்பிற ரியாவரே
கரணந் தீர்த்துயிர் கையிலி கழ்ந்தபின்
மரண மெய்திய பின்னவை நீக்குவான்
அரண மூவெயி லெய்தவ னல்லனே.

(ப-ரை) உயிர்-உயிரானது; 'கரணம் தீர்த்து கையில் இகழ்ந்தபின்' தனது கருவி அறிவை விட்டு (அக்கருவி அறிவின் வழி செய்யப்படுகின்ற) செயலினும் மறத்தலைச் செய்த பின்னும்; மரணம் எய்திய பின் - எல்லா அறிவுக் கருவிகளும் செயற் கருவிகளும் தன்னிடம் ஒடுங்கிய பின்னும்; நவை நீக்குவான்-உயிரினுடைய 'நான்' என்னும் அகப்பற்று 'எனது' என்னும் புறப்பற்று ஆகிய குற்றங்களை உயிரினை விட்டு நீக்குகின்றவன் ; அரணம் மூ எயில் எய்தவன் அல்லனே - கோட்டைகளாற் சூழப்பட்ட முப்புரங்களையும் வில்லினுல் எய்து அழித்தவனுகிய சிவபெருமான் அல்லவா? (சிவபெருமானே என்றபடி); (ஆதலின்) சரணம் ஆம்படியார் - உயிர்கள் முடிவில் பேரின்பம் அடைதற்குச் சேரும் புகலிடமாயுள்ளவர் ; பிறர் யாவரே - அச்சிவபெருமானை யல்லது வேறு யாருமில்லை. ஆகலால் மாந்தர்களே சிவபெருமானை அடைந்து வழிபடுங்கள் என்பது குறிப்பெச்சம். அவ்வழிபாடு அடுத்த 40-வது தேவாரப்பாட்டிற் கூறப்படுகிறது. 6

(வி-ரை) கரணம் தீர்த்து - கரணம் என்பது கருவி; அது இங்கே ஆகுபெயராய்க் கருவி அறிவைக் குறிக்கின்றது. ஐம்பொறிகள் அந்தக்கரணங்களால் அறியும் அறிவு. தீர்த்தல் - விடுதல். "தீர்தலும் தீர்த்தலும் விடற் பொருட்டாகும்" என்பது தொல்காப்பியச் சூத்திரம். கையில் இகழ்ந்தபின் - கை என்பது இங்கே ஆகுபெயராய்க் கைகளினும் பிற புற உறுப்புக்களாலும் செய்யப்படும் செயலைக் குறிக்கின்றது. கை என்னும் சொல் திருக்குறள் 1036-வது பாட்டு "உழவினர் கைம்மடங்கின்" என்பதில் செயல் என்ற பொருளில் வழங்கப்பட்டிருத்தல் காண்க. இகழ்தல்-மறத்தல். திருக்குறள் 538—வது குறளில் வருகிற 'இகழ்ந்

தார்" என்ற சொல்லுக்கு 'மறந்தவர்' என்று பரிமேலழகர் உரை கூறியிருத்தல் காண்க. கருவி அறிவை விட்ட பின்னும் அவ்வறிவின் வழி நிகழும் செயல் பழையவாசனையால் நிகழும் ஆதலின், அடிகள் 'கரணந் தீர்த்து' என்றுகூறியபின் "கையி லிகழ்ந்தபின்" என்றும் கூறினார். "நற்றவா வுனைநான் மறக் கினும் சொல்லும் நா நமச்சிவாயவே" என்று சுந்தர மூர்த்தி சுவாமிகள் நமச்சிவாயப் பதிகத்தில் கூறியருளினார். கரணம் தீர்த்தலும், கையிலிகழ்தலும் பின்வருகிற மரணம் எய்தலைவிட ஒன்றுக்கொன்று மிக நெருங்கிய தொடர்புடை யன ஆதலின், அடிகள் அவை இரண்டினையும் ஒன்றுசேர்த்து அவைகளுக்குப் பின்னர் 'பின்' என்ற அடைமொழி கூறி னார்; மரணம் எய்தியபின் 'மரணம்' என்பது உயிர் பரு உடலிலிருந்து நுண்ணுடலில் ஒடுங்குதல். அது, இங்கே ஒடுக்கம் என்ற பொருளில் வந்தது. உயிரினிடத்தில் எல் லாக் கருவிகளும் ஒடுங்குதல் இங்கே மரணம் என்று கூறப் பட்டது. கேவல சாக்கிர அவத்தையிலிருந்து எண்ணினால் சகலத்தில் துரியாதீத அவத்தை பத்தாவது அவத்தையா கின்றது. இந்த அவத்தையில் உயிர் கருவிக் கூட்டத்திலிருந்து நீங்கித் தனித்து நிற்கின்றது. கரணம் தீர்த்தல், கையில் இகழ்தல், மரணம் எய்தல் என்ற மூன்று நிலைகள் முறையே ஒன்றினொன்று அதிகமாய் இப்பாட்டில் கூறப்பட்டிருக் கின்றன. இந்த மூன்று நிலைகளையும் முறையே சிவ சமவாத சைவர், பாடாணவாத சைவர், பேதவாத சைவர் என்ற மூன்று அகச்சமயவாதிகள் கூறுகின்றார்கள். இந்த மூன்று அகச்சமய வாதிகளும் சுத்தாத்துவித சைவரைப்போலப் பதி பசு பாசம் என்ற முப்பொருள்களையும் ஒப்புக்கொண்டு உயிர் வீட்டினை அடையுந் தன்மையில் அவரினின்றும் வேறுபடுகிறார்கள்.

உயிர் சிவத்தினைக்கூடி வீட்டின்பம் அடைதல் வேண்டியதில்லை என்ற கொள்கையில் மூன்று வாதிகளும் ஒத்தகொள்கை யுடையவர்களாயிருக்கிறார்கள். இந்த ஒத்த கொள்கையை அவர்கள் மூவருங்கொள்ளுதலினும் அவர்களுக்குள் சிறிது பேதமிருக்கின்றது. சுத்தாத்துவித சைவசமயத்தின்படி வெவ்வேறு வாதிகளுடைய கொள்கையானது அவரவருடைய அறிவு நிலையைப் பொறுத்து உள்ளது. சுருங்கக் கூறின், சிவ சமவாதிகள், உயிர், கருவி யறிவினை நீங்கி உலகத்தை அசத்து என்று கண்டவிடத்து உலகத்துக்கு மேற்பட்டு நான் சிவம் எனத் தோன்றும் உயிரறிவால் பதியைக் காண்டலே முத்தியாகும் என்பர். பாடாணவாத சைவர் 'நான் சிவம்' என நிகழும் ஞானமன்றி உயிர் கருவியறிவைக் கீழாக நாடிச் சுட்டிக்காணும் காட்சியும் சுகதுக்க அநுபவ உணர்ச்சியு மில்லாமல் கற்போல இருக்கும் நிலையை முத்தி என்பர். பேதவாத சைவர் உயிர், தன்மாட்டு ஒருவனது நிழல், உச்சிப் பகற் பொழுதில் அவன் அடிக்குள் அடங்கி நிற்றல்போலக் கருவிக் கூட்டமெல்லாம் வந்து ஒடுங்கிய பொழுது பக்குவம் அடைந்து சிவனுடைய அருளால் அவன் திருவடியைக் கூடாமல், நிரந்தரமாய் நின்று முத்தியை அடையும் என்பர். (விரிவைச் சங்கற்ப நிராகரணம் நூலிற் பார்க்க). இந்த மூன்று வாதிகளும் உயிர் பாசஞானம் (கருவி அறிவு) நீங்கியபின் பதி ஞானத்தால் பதியைக் கூடுதல் வேண்டாது பசு ஞானத்தால் முத்தி அடைதல் கூடும் என்று கூறுகிறவர்கள். இவர்கள் யான் எனது என்னும் செருக்கு நீக்காதவர்கள். வேதாந்திகள் என்னும் ஏகான்ம வாதிகளும் "நான் பிரமம்" என்னும் பசு ஞானம் உடையவர்களாயினும் பசு பாசங்களை ஒப்புக் கொள்ளாதவர்கள் ஆதலின், அவர்கள் அகப்புறச் சமயத்தார்

ஆகக் கொள்ளப்படுவர். உயிரினிடம் கருவிக் கூட்டமெல்லாம் ஒடுங்கி நின்ற நிலை முடிவான பசு ஞான நிலையாதலின் அதனை அடிகள் கடைசியாகக் கூறியருளினர். இந்த நிலைக்குப் பின் நிகழ்வன, மேற் கூறிய மூன்று வாதிகளும் அறியாமலிருக்கிற நின்மல சாக்கிரம் முதல் நின்மல துரியாதீதம் வரை உள்ள நிலைகள். நவை-பின் + நவை = பின்னவை, நவை -குற்றம். 'நான்' என்ற அகப்பற்றினும் 'எனது' என்ற புறப்பற்றினும் உண்டாகும் குற்றம். நீங்குவான் அரணம் மூ எயில் எய்தவன் அல்லனே - உயிர் பசு ஞானத்துக்கு உரிய யான் எனது என்ற குற்றங்களினின்று நீங்கிப் பதி ஞானத்தாற் பதியோடு அத்துவிதமாய்ச் சேர்ந்து முத்தி அடைதல் கூடுமே யன்றி மேலேகூறிய மூன்று நிலைகளிலு முள்ள பசுஞான முடையவர்கள் கூறுகிறபடி முத்தி அடைதல் முடியாது என்பார், அடிகள் "நவை நீக்குவான் அரணமூ வெயி லெய்தவனல்லனே" என்றார். "யானெனதென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்குயர்ந்த வுலகம் புகும்" என்று திருவள்ளுவ நாயனார் கூறியருளினமை காண்க. அல்லனே என்பதிலுள்ள ஏகாரம் வினா பொருளில் "நவை நீக்குவான் அவனே யாவன்" என்னும் பொருள்பட நின்றது. சரணம் ஆம்படியார் - சரணம் - புகலிடம்; சேரும் முடிவிடம் (Goal) சிவபெருமான் "மல்லை ஞாலத்து வாழு முயிர்க்கெலா - மெல்லையான பிரானு"யிருக்கின்றான் என்ற உண்மை கூறப்பட்டது. படியார்-தன்மை உடையவர்; அருட் பண்புடையவர்; தமக்கென ஒன்றும் வேண்டாது உயிர்களின் பொருட்டுப் படைத்துக் காத்து அழித்து மறைத்து அருள் செய்யும் கருணையாளர். ஆகும் என்ற ஆக்க வினை இடையிலுள்ள 'கு' கெட்டு 'ஆம்' என நின்றது. பிறரியாவர் "தன்

ஞெழிமெய்ம்முன் யவ்வரினிகரம், துன்னுமென்றா துணி நரு முளரே " நன். மெய். 2ஞ் சூத்திரப்படி இகரச் சாரியை பெற்றது. யாவரோ என்பதிலுள்ள ஓகாரம் பிறர் யாவரும் இல்லர் என்ற எதிர்மறைப் பொருளில் வந்தது. சிவபெரு மான் ஒருவரே சரணமாம்படியார் என்பது பொருள். திரு நாவுக்கரசு அடிகள் இந்தத் திருக்குறுந்தொகைத் தேவாரப் பாட்டில் "இருதிறனறிவுள திரண்டலா வான்மா" அசத்தி னைச் சார்ந்து அசத்தின் வண்ணமாய் அசத்தினை அறிந்து அசத்தின் மேலாய் அடைந்த பசுஞான நிலைக்குப்பின், சத் தினைச் சார்ந்து சத்தின் வண்ணமாய்ச் சத்தினுள் அடங்கி சத்தினை அறிந்து அடைகிற பதிஞானத்தால் சிவபெருமா னோடு (சத்தினோடு) அத்துவிதமாய்க் கலந்து பேரின்பம் அடைதல் வேண்டுமே அன்றிப் பசுஞான நிலையில் பேரின் பம் அடைதல் முடியாது என்ற உண்மையைக் கூறியருளினர்.

௪ - ௨ திருநாரையூர்-பண் - பியந்தைக்காந்தாரம்.

௪௦ வேறுயர் வாழ்வு தன்மை வினைதுக்க
மிக்க பகைதீர்க்கு மேய வுடலில்
தேறிய சிந்தை வாய்மை தெளிவிக்க
நின்ற கரவைக் கரந்து திகழுஞ்
சேறுயர் பூவின் மேய பெருமானு மற்றைத்
திருமாலு நேட வெரியாய்ச்
சீறிய செம்மை யாகு சிவன்மேய
செல்வத் திருநாரை யூர்கை தொழவே.

(ப-ரை) சேறுஉயர் பூவின் மேயபெருமானும்—சேற்றில் (முளைத்து நீர்மட்டம் வரை) ஓங்கி வளர்கின்ற தாமரைப் பூமே

விருக்கின்ற படைப்புக் கடவுளாகிய அயனும்; மற்றைத் திருமாலும்-மற்றும் காப்புக் கடவுளாகிய திருமாலும்; நேட-(முறையே தமது முடி அடிகளை அன்னப் பறவையாய் உயரப் பறந்தும், பன்றியாய்க் கீழே அகழ்ந்தும்) தேட அவர்கள் காண முடியாதபடி; எரியாய்ச் சீறிய-(அவர்களுக்குமுன்) தீப் பிழம்பாய்த் தோன்றி அவர்களைக் கோபித்த; செல்வத் திரு நாரையூர்மேய-வளம் பொருந்திய திருநாரையூரில் திருக்கோ யில் கொண்டெழுந்தருளி யிருக்கின்ற; செம்மை ஆகு-எல்லார்க்கும் எப்பொழுதும் நன்மையாகின்ற; சிவன்-சிவபெருமானை; கைதொழ -(ஒருவன் மனத்தினால் நினைத்து நாவினால் மந்திரஞ்சொல்லி வாழ்த்திக்) கைகளினால் வணங்க; உடலில்மேய-உடலிலும் (அந்தக் கரணத்திலும்) பொருந்தியுள்ள; வினை-வினைமலமும்; துக்கம் - துன்பத்தை விளைக்கின்ற உலக போக நுகர்ச்சிக்குப் பற்றுக்கோடாயுள்ள மாயாமலமும்;மிக்க பகை - (வினைமலத்தையும் மாயாமலத்தையும் துணையாகக் கொண்டு மோகம் மதம் இராகம் கவலை தாபம் வாட்டம் விசித்திரம் ஆகிய இவைகளுக்கு மூலகாரணமாய் நின்று) உயிருக்கு மிக்க பகைமையைச் செய்கின்ற ஆணவமல வலியும்; நீங்கும் -(அவனை விட்டு) நீங்கும்; வாய்மை தெளிவிக்க - (மலங்கள் அவ்வாறு நீங்குதல் காரணமாகத் தன்னாலே தொழப் பெற்ற சிவன் தனது சிந்தையில் அருளொளி விளங்கச் செய்து) சிவமே மெய்ப்பொருள் என்ற உண்மையைத் தெளிவாய் அறியும்படி செய்ய; தேறிய சிந்தை — அவ்வாறு தேறப்பட்டதனால் ஐயம் திரிபுகளினின்று முற்றிலும் நீங்கித் தெளிவறிவை யடைந்த சிந்தை ; நின்றகரவைக் கரந்து திகழும் - (திரோதமலம் வயப்பட்ட காலத்தில்) நிலைத்திருந்த பொய்த்தன்மையினின்று முழுவதும் நீங்கிச் சிவம்

பிரகாசித்தலுடன் விளங்கும்; வேறு - (அவ்வாறு அவனுடைய சிந்தையில் சிவம் பிரகாசித்து விளங்குதலால் முன் வாழ்ந்து வந்த வாழ்வுக்கு) வேருக அவனுக்கு; உயர்வாழ்வு-மேலான பேரின்ப வாழ்வும்; உயர்தன்மை - அவ்வாழ்வுக்கு உரிய மேலான குணங்களும்; திகழும்-உண்டாகும். 7

திருஞானசம்பந்த அடிகள் இந்தத் தேவாரப் பாட்டில் சிவன் திருக்கோயில் வழிபாட்டினது பயனைக் கூறியருளினுர். அவ்வழிபாடு எவ்வாறு செய்யப்படல் வேண்டும் என்பது முன் "கூசம் நீக்கி" என்ற 27-வது பாட்டிற் கூறப்பட்டது. வழிபாட்டினது பயன் வழிபடுகிறவருடைய உள்ளத்தில் அவரது அநுபவத்தில் நிகழ்வது.

(வி – ரை)-சேறுயர் பூவின்மேய பெருமான்-சேறுயர்பூ-தாமரைப்பூ-வடமொழியில் தாமரையைக் குறிக்கும் பங்கஜம் (பங்கயம்) என்ற சொல் சேற்றில் உண்டானது என்று பொருள்படும். பெருமான் - தலைவன். படைப்புத் தலைவன். நேட எரியாய்ச் சீறிய - அயனும் மாலும் சிவனைத் தங்கள் தவவலியாற் காண முயலாமல் தங்களுக்குள் ஒவ்வொருவரும் தாம் தாம் பெரியர் என்று செருக்குற்றுக் காண முயன்றதனுல் அவர்கள் தம்மைக் காண முடியாதபடி அவர் தீ உருவாய் நின்றுர். அவ்வாறு சிவன் தீ உருவாய் நின்றது அவர்கள் கொண்ட செருக்குக்காகத் தாம் கொண்ட கோபத்தின் பொருட்டு என்பார் 'சீறிய' என்றுர். செம்மையாகு சிவன் மேய செல்வத்திருநாரையூர் - இதனை செல்வத் திருநாரையூர் மேய செம்மையாகு சிவன் என உரைநடைசெய்து பொருளுரைக்கப்பட்டது. செம்மை - நன்மை. ஆகு சிவன்-வினைத் தொகை. செம்மை ஆகு சிவன்-எக்காலத்திலும்

எல்லா உயிர்களுக்கும் நன்மை ஆகிற சிவன். திருநாவுக்கரசு அடிகள் திருக்கற்குடித் திருத்தாண்டகம் 9-வது பாட்டில் 'செம்மை தரும் பொருளானை' என்ற சொற்றொடரிலும், 'திரி புரத்தோர் மூவருக்குஞ் செம்மை செய்த தலையானை' என்ற சொற்றொடரிலும் செம்மை என்ற சொல் நன்மை என்று பொருள் படுதல் காண்க. இன்பம் ஈதலே நன்மையாதலின் செம்மை என்ற சொல்லுக்கு இன்பம் என்றும் பொருள் கொள்ளலாம். திருக்கோவையார் 358-வது பாட்டில் சிவன் என்ற சொல்லுக்குப் பேராசிரியர் "எவ்வுயிர்க்கும் எப்பொழுதும் நன்மையைச் செய்தலாற் சிவன்" என்று உரை செய்திருத்தல் அறிக. கைதொழ - மனத்தினால் நினைத்தலும் நாவினால் வாழ்த்தலும் கையினால் தொழுதலுடன் இனம் பற்றிச் சேர்த்துக்கொண்டு பொருள் உரைக்கப்பட்டது. "மனமது நினைய வாக்கு வழுத்த மந்திரங்கள் சொல்ல - இனமலர்கையில் கொண்டங் கிச்சித்த தெய்வம் போற்றி" என்று அருணந்தி சிவாசாரிய சுவாமிகள் சிவஞான சித்தியார் சுபக்கம் உ௫௬-ம் உசபாட்டில் உரைத்தருளினர். மனத்துடன்கூடாத எந்தப் புறச் செயலும் பயனிலதாகும். இங்கே சிவபெருமானுக்குத் தன் முனைப்பின்றிச் செய்யும் வழிபாடு கூறப்பட்டது. தன்முனைப் பின்றிச் செய்யும் வழிபாடாவது உயிர்கள் சிவபெருமானுடைய வியாபக வேட்கை அறிவு செயல்களுக்குள், தங்கள் வேட்கை அறிவு செயல்கள் வியாப்பியமாய் அடங்கி நிற்கும்படி வழிபடுதலாகும். தொழ - அது தான்கொண்டு முடியும் தீர்க்கும், திகழும், (உண்டாகும்) என்ற வினைமுற்றுக்களால் உணர்த்தப்படும் தொழில்களுக்குக் காரணப் பொருட்டாய் வந்த இறந்த காலவினை யெச்சம்; மழை பெய்யக் குளம் நிறையும் என்றாற்போல. ஏ-அசை. உடலின் மேய வினைதுக்கம் மிக்க பகை தீர்க்கும் - மேய-மேவிய என்ற சொல்லின்

இடைக் குறை. உடலின் மேய-இனம் பற்றி அந்தக் கரணத் திலும் எனச் சேர்த்துப் பொருளுரைக்கப்பட்டது. அந்தக் கரணங்கள் சேராமல் உடலில் யாதொரு தொழிலும் நிகழாது. வினை என்ற சொல் இங்கே ஆகுபெயராய் வினைமலத்தை (கன்ம மலத்தை) க் குறிக்கிறது. துக்கம் - துன்பம். வினைப் பயனாகிய இன்பத் துன்பங்களை உயிர் நுகர்தற்குப் பற்றுக் கோடாக உடல் அந்தக் கரணங்கள் உள்ளன. இந்த உடல் அந்தக்கரணங்கள் மாயையிலிருந்து உண்டாதல் பற்றி துக்கம் என்பது இங்கே ஆகுபெயராய் மாயைமலத்தைக் குறிக்கிறது - பேரின்பத்தை நோக்க உலக வாழ்வு இன்பமும் துக்கமே ஆதலின் மாயை மலம் இங்கே துக்கம் என்று குறிப் பிடப்பட்டது. மிக்க பகை என்ற சொற்றொடர் இங்கே உலக வாழ்வில் உயிருக்கு எல்லாத் துன்பங்களுக்கும் காரணமாயி ருக்கிற ஆணவ மலத்தைக் குறிக்கின்றது. வினை மாயை ஆண வம் ஆகிய மூன்று மலங்களும் அநாதியாயினும் ஆணவ மலம் உயிருடன் அநாதியே கூடியுள்ள சகசமலம் ஆகும்; ஏனைய வினை மாயை மலங்கள் ஆணவமல வலி நீக்கத்தின் பொருட்டு இடையே வந்து கூடிய ஆகந்துக மலங்கள் இவ்வாறு ஆணவ மலம் மூலமலமாய் உயிரினுடைய எல்லாத் துன்பங்களுக்கும் காரணமாயிருத்தல் பற்றி அதனை அடிகள் 'மிக்க பகை' என் றார். உடல் உட்கரணங்களானவை ஆணவமலமும் அதற் குத் துணையாயுள்ள வினை மாயை மலங்களும் தொழிற்பட்டு, உயிருக்கு மயக்க அறிவையும் துன்பத்தையும் விளைத்தற் குப் பற்றுக் கோடாகும் இடங்களாயிருத்தலின், 'உடலில் மேய' என்றார். தீர்க்கும் - நீங்கும்; ஒழியும். தன்வினை கைதொழ- வினை துக்கம் மிக்கபகை தீர்க்கும் திகழும் (உண்டாகும்) என் பது தொழுதல் காரணமாக (Cause) தீர்த்தல் திகழ்தல் உண் டாதல் நிகழும்-உயர்வாழ்வு தன்மைஎன்பது உயர்வாழ்வுஉயர்

தன்மை எனப் பிரியும். உயர் என்ற அடைமொழியைத் தன்மைக்கும் கூட்டுக. உயர்வாழ்வு-வாழ்வுக்கு அடையாளம் இன்பம் அடைதல் ஆகும். தன் கணவனோடு சேர்ந்து வாழாத ஒரு பெண்ணை உலகர் வாழாத பெண் என்று கூறுகின்றார்கள். உலகில் அடையும் வாழ்வு சிற்றின்பம் அடையும் வாழ்வு. அதற்கு மேலான பேரின்பம் அடையும் வாழ்வு இது ஆதலின் 'உயர் வாழ்வு' எனக் கூறினார். உலக வாழ்வையும் பேரின்ப வாழ்வையும் மாணிக்கவாசக சுவாமிகள் ஒருசேரக் குறிப்பிட்டு "வாழ்வு அற வாழ்வித்த மருந்தே" என்று பிடித்த பத்து க-வது பாட்டிற் கூறியருளினார். பெருந்துறைப் பெருமானை "நன்றிறைஞ்சி யேத்துகிற அடியார்களே வாழ்ந்தார்கள் ஆவார்கள்" என்று பண்டாய நான்மறை ச-வது பாட்டில் அவர் கூறியிருத்தலும் காண்க. உயர்வாழ்வு அடைதல் இங்கே சிவபோகத்தைக் குறிக்கின்றது. சிவபோகத்தில் உண்டாகும் இன்பநிலையை அடிகள் 'உயர்வாழ்வு' என்றார். உலக வாழ்வுக்கு உரிய தாமத இராசத சாத்துவிகக் குணங்களுக்கு மேலான குணங்கள் ஆதலின் 'உயர் தன்மை என்றார். உயர் தன்மை (இகழும்), திகழும் என்னும் வினைமுற்றாக்கூட்டி உரைக்க. உடலின் மேய, வினை தாக்கம் – மிக்கபகை "தீர்க்கும் என்றதனாலே மல நீக்கமும், அதுபற்றி உண்டாகும் தத்துவசுத்தியும், அதுபற்றி ஆன்மதரிசனமும், உடன் நிகழும் சிவரூபமும் கூறப்பட்டன. "வாய்மை தெளிவிக்கத் தேறிய சிந்தை நின்ற கரவைக் கரந்து திகழும்" என்றதனாலே அருள்விளக்கமும், அதுபற்றி ஆன்மசுத்தியும் உடன் நிகழும் சிவதரிசனமும் கூறப்பட்டன. வேறு உயர் வாழ்வு தன்மை (உண்டாம்) என்றதனாலே ஆனந்த விளக்கமாகிய

சிவபோகமும் கூறப்பட்டது. சிவபோக வாழ்வுக்கு உரிய தாய் உயிரினிடத்தில் பதியப்பெற்ற சிவனுடைய எட்டுஅருட் குணங்கள்.

எ - சு திருப்புள்ளிருக்குவேளூர் - திருத்தாண்டகம்.

௪க. இருளாய வுள்ளத்தி னிருளை நீக்கி
யிடர்பாவங் கெடுத்தேழை யேனை யுய்யத்
தெருளாத சிந்தைதனைத் தெருட்டித் தன்போற்
சிவலோக நெறியறியச் சிந்தை தந்த
அருளானை யாதிமா தவத்து ளானை
யாறங்க நால்வேதத் தப்பால் நின்ற
பொருளானைப் புள்ளிருக்கு வேளூ ரானைப்
போற்றாதே யாற்றநாள் போக்கி னேனே.

(ப - ரை) ஏழையேனை உய்ய - அறியாமையிலே கிடந்து உழல்கின்றவனாகிய என்னை யீடேற்ற; உள்ளத்தில் - (எனது) சிந்தையில்; இருளாய இருளைநீக்கி - அறியாமைக்குக் காரணமான ஆணவமல வலியை நீக்கி; இடர் - (உலகத் துன்பத்துக்குப் பற்றுக்கோடாயுள்ள உடலுக்குக் காரணமாயுள்ள) மாயை மலத்தையும்; பாவம் - (பாவபுண்ணியங்களுக்குக் காரணமான) வினைமலத்தையும்; கெடுத்து - (என்னை வந்து தாக்காதிருக்கும்படி) அழித்து; தெருளாத சிந்தைதனை - தானாக மயக்கத்தினின்று நீங்கித் தெளியாத என்னுடைய சிந்தையை; தெருட்டி - மயக்கத்தினின்று நீங்கித்தெளிவறிவு அடையும்படி செய்து; (அவ்வாறு சிந்தை தெளிவறிவை அடைந்ததனால்; தன் சிவலோக நெறி அறிய - தான் இருக்

கிற சிவலோகத்தை யடையும் வழியை நேரே யறியும் வண்ணம்; சிந்தை தந்த - அச்சிந்தையைப் பொய்த்தன்மை நீங்கி சிவத்தன்மை எய்தும்படி செய்த; அருளானை — பேரருளுடையவனும்; ஆதியானை - எல்லாப் பொருள்களும் தோன்றுதற்குக் காரணமா யிருக்கிறவனும்; மாதவத்துளானை- பெருந்தவப் பயனு யுள்ளவனும்; நால்வேதம் ஆறு அங்கத்து அப்பால் நின்ற பொருளானை-நான்கு வேதங்களையும், அவற்றை ஓதியறிதற்கு உறுப்புக்களா யுள்ள மந்திரம், வியாகரணம், நிகண்டு, சந்தோபிசிதம், நிருத்தம், சோதிடம் என்னும் வேதாங்கங்களையும் கடந்து நிற்கின்ற பொருளா யுள்ளவனும்; புள்ளிருக்குவேளூரானை - திருப்புள்ளிருக்குவேளூரில் (வைத்தீசுவரன் கோயிலில்) திருக்கோயில் கொண்டருளி யிருக்கிறவனும் ஆகிய சிவபெருமானை; போற்றாது - வணங்காமல்; ஆற்றநாள் போக்கினேன் - நீண்ட காலம் வீணுகக் கழித்தேன். ஆதலால் மாந்தர்களே நீங்கள் உங்கள் வாணுளை வீணுளாகக் கழிக்காமல் சிவபெருமானை வணங்குங்கள். அவன் உறுதியாய் உங்கள் சிந்தையை மயக்கத்தினின்று தெளிவித்துச் சிவமாந் தன்மையாக்கி ஆண்டு கொள்வன் என்பது குறிப்பெச்சம். 8

(வி — ரை) ஏழையேன் - ஏழைமை என்னும் பண்புப் பெயரடியாகப் பிறந்த ஒருமைத் தன்மைக் குறிப்பு வினையாலணையும் பெயர். ஏழைமை-அறியாமை. ஏழையேன் - அறிவில்லாதவனுகிய நான். உள்ளத்தில் இருளாய இருளை நீக்கி-முதலாவது இருள் அறியாமையையும் இரண்டாவது இருள் அந்த அறியாமைக்குக் காரணமான ஆணவ மலத்தையும் குறிக்கின்றன. இருளுக்குக் காரணமான

இருள் என்பதற்குப் பதிலாக இருளாய இருள் என்று காரியத்தைக் காரணமாக உபசரித்துக் கூறினர். ஆய என்பது ஆகிய என்பதன் இடைக்குறை. ஆணவமலம் மாயையாலாகிய உடல் முழுவதும் நிறைந்திருந்தாலும் உள்ளம் (சிந்தை), அறிதலுக்குச் சிறப்புக் கருவியா யிருத்தலின் உள்ளத்தில் என்று கூறினர். "அளப்பருங் கரணங்கள் நான்கும் சிந்தையே யாக" என்று சேக்கிழார் பெரியபுராணத்திற் கூறி யருளினமை காண்க. ஆணவமல வலி நீங்குமே யன்றி ஆணவமலம் என்றும் அழியாது ஆகலின் "ஆணவமல வலியை நீக்கி" என்று உரை செய்யப்பட்டது. இடர் - துன்பம். முன்னைய 40-வது பாட்டில், அடிகள் மாயைமலத்தைத் துக்கம் என்று குறித்ததுபோல, இப்பாட்டில் அதனை இடர் என்ற சொல்லால் குறிப்பித்தருளினர். அங்கே கூறிய குறிப்பு உரைகளை இதற்கும் கொள்க. பாவம்-இங்கே பாவம் என்ற சொல் ஆகுபெயராய்ப் புண்ணிய பாவங்களுக்குக் காரணமான இருவினையை அதாவது வினைமலத்தைக் குறிக்கிறது. திரோதமலத்தினது வயப்பட்ட உலக வாழ்வு நெறியில் செய்யப்படுகிற புண்ணியமும் பாவத்தைப்போலவே பிறவிக்குக் காரணமாய் அருள்நெறியிலுள்ள புண்ணியத்தை நோக்கப் பாவம் ஆகலின் புண்ணிய பாவம் என்னாது பாவம் என்றார். நீக்கி - ஆணவமலம், என்றும் உள்ள பொருள் ஆகலின் அதனை 'நீக்கி' என்றும், ஆகந்துக மலங்களாகிய வினை மாயை மலங்கள் முற்றிலும் அழியுந் தன்மையன ஆதலின் அவைகளைக் 'கெடுத்து' என்றும் கூறினர். தெருளாத சிந்தைதனைத் தெருட்டி - உயிருக்குச் சிந்தையானது உலக வாழ்வு நெறியில் உலகமே மெய்ப்பொருளென்னும் மயக்க அறிவு (விபரீத உணர்வு)க்கு இடமாகியும், மயக்க அறிவு

நீங்குகிற பருவம் வந்தபொழுது சிவபெருமான் மும்மலங் களையும் அறுத்து, அச்சிந்தையில் விளங்கித் தோன்றிச் சிவமே மெய்ப்பொருள் என்று தெளிவித்தற்கு இடமாகியும் இருத்தலின் "தெருளாத சிந்தைதனைத் தெருட்டி" என்றார்; தெருட்டி - பிறவினை; தெருள் - தன்வினை. "சிந்தைய தென்னச் சிவமென வேறில்லை" என்று திருமூலர் திருமந் திரத்திலும், "சிந்தையுட் சிவமாய்" என்று அடிகள் திருக் கச்சியேகம்பம் திருக்குறுந்தொகை 5-வது பாட்டிலும், உயிருக்குச் சிந்தையானது தெளிவறிவை அடையும் இடம் என்று கூறியருளினார்; மாணிக்கவாசக அடிகள் "சித்தமல மறுவித்துச் சிவமாக்கி" என்றார். சிவலோக நெறியறியச் சிந்தை தந்த - சிந்தை தெளிவறிவை யடைதலும் பேரின்பம் பெறுதற்குச் சிவலோகம் அடைதலிலேயே தாம் நாட்டம் வைத்தலால் "சிவலோக நெறியறியச் சிந்தை தந்த" என்றார். சிந்தை தருதலாவது சிற்றின்ப வாழ்வை நினைந்துகொண்டி ருந்த சிந்தையைப் பேரின்ப வாழ்வையே நினைக்கும்படியான சிந்தையாக மாறுதலை அடையச் செய்தல். அருளானை - சிவ பெருமான் உயிர்கள்மேல் வைத்த பேரருளினால் அவைகளு டைய சிந்தையிலுள்ள மலமறுத்துச் சிந்தையைத் தெளிவித் துப் பேரின்பம் அடையச்செய்கின்றான் என்பார் 'அருளானை' என்றார். ஆதிமாதவத்துளானை-ஆதியானை, மாதவத்துளானை எனப் பிரித்துக்கூட்டி உரை செய்யப்பட்டது. உயிர்கள் தனு கரண புவனபோகங்களுடன் வாழ்தற்கு இறைவன் காரண மாயிருத்தலின் அவைகளைச் சிந்தை தெளிவித்துச் சிவலோக நெறியறியச் செய்தல் அவன்கடன் என்பார், "ஆதியான்" என்றும், அவ்வாறு செய்தல் இறைவனுக்குக் கடனாயினும் உயிர்களும் முயன்று மெய்ஞ்ஞானம் தரக்கூடிய தவம் செய்

தல் வேண்டும் என்பார், "மாதவத்துளானை" என்றும் கூறி னார். ஆற்ற நாள்-நாள் இங்கே காலத்தைக் குறிக்கிறது; ஆற்ற நாள் - நீண்ட காலம்; ஆற்ற என்பது உரிச்சொல். போக்கினேன் - அடிகள் தாம் சமண சமயத்தில் வீணாக் கழித்த காலத்தை எண்ணி அத்தன்மையில் பிறரும் அவ் வாறு காலங் கழியாது இறைவனை வழிபடல் வேண்டும் என்று அறிவுறுத்த வேண்டி இவ்வாறு கூறினார். ஏ-ஈற்றசை.

திருச்சிற்றம்பலம்.

---

## ரு. அருளுரு நிலை.

நா.-சு. திருக்குடந்தைக் கீழ்க்கோட்டம்-திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

சஉ ஏவியிடர்க் கடலிடைப்பட் டிளைக்கின் றேனை
யிப்பிறவி யறுத்தேற வாங்கி யாங்கே
கூவியம ருலகனைத்து முருவிப் போகக்
குறியிலறு குணத்தாண்டு கொண்டார் [போலும்
தாவிவரு காவிரிநல் யமுனைகங்கை
சரசுவதிபோற் றமரைபுட் கரணி [தெண்ணீர்க்
கோவியோடு குமரிவரு தீர்த்தஞ் சூழ்ந்த
குடந்தைக்கீழ்க் கோட்டத்தெங் [கூத்தனாரே.

(ப-ரை) தாவி வரு காவிரி நல்யமுனை கங்கை சரசுவதி- பாய்ந்து ஓடுகின்ற காவிரி,நல்லகங்கை,யமுனை,சரசுவதி; பொற் றமரை புட்கரணி தெண்ணீர்க் கோவியொடு குமரி தீர்த்தம்-

பொற்றாமரையாகிய புட்கரணி, தெளிந்த நீரையுடைய கோவி, கன்னியாகுமரி ஆகிய புண்ணிய தீர்த்தங்களெல்லாம்; சூழ்ந்த - சூழ்ந்திருக்கிற; குடந்தைக் கீழ்க்கோட்டம் என்ற நாகேசுவர சுவாமி கோயிலில் திருமேனிகொண் டருளியிருக்கும் சிவபெருமான்; இப் பிறவி இடர்க்கடல் இடைப்பட்டு இளைக்கின்றேனை - இந்தப் பிறவித்துன்பமாகிய கடலின் கண் அகப்பட்டுத் தளர்ந்து கிடக்கின்றவனாகிய என்னை; அறுத்து - (இப்பிறவித் துன்பத்தினின்று நீங்கும்படி பிறவிப்பற்றை) ஒழித்து; ஏறவி - பிறவிக்கடலினின்று கரை யேறி வரும்படி ஆணை செய்து; ஆங்கே வாங்கி - (அவ்வாணையின் படி நான் நடக்க) அப்படியே எடுத்து; அமர் உலகு அனைத்தும் உருவிப்போகக் கூவி - இருக்கின்ற உலகங்களை எல்லாம் ஊடுருவிச் சென்று அவைகளுக்கு அப்பால் வரும்படி என்னை அழைத்து; குறியில் அறுகுணத்து ஆண்டுகொண்டார் - (திருவதிகை வீரட்டானத்தில் எழுந்தருளி யிருக்கின்ற சதாசிவ மூர்த்தியாகிய) சிவலிங்க அருள் உருவில் தன் வயத்தனாதல், முற்று முணர்தல், இயல்பாகவே பாசங்களினீங்குதல், முடிவிலாற்றலுடைமை, பேரருளுடைமை, வரம்பிலின்பமுடைமை ஆகிய ஆறு குணங்களையும் (அவரை நான் சேர்ந்த பொழுது) என்னிடம் பதியும்படி செய்து என்னோடு அத்துவிதமாய்க் கலந்து தமது அடிமையாக ஆண்டு கொண்டார்.

**(வி-ரை)** கோவி - ஒரு தீர்த்தம். புட்கரணி - தீர்த்தம், வடமொழிச் சொல். காவிரி முதலிய ஒன்பது தீர்த்தங்களும் கும்பகோணத்திலுள்ள மாமகத் தீர்த்தத்திற் சேர்ந்திருப்பதை அத்தல புராணத்திற் காண்க. எல்லாத் தீர்த்தங்களும் சேர்ந்திருக்கும் திருக்குளத்தில் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு

ஒருதரம் (சிங்கராசியில் குரு வருகிற காலம்) மாமகம் நடப்பது தமிழுலகம் அறிந்தது. குடந்தைக்கீழ்க்கோட்டம்-குடந்தை-கும்பகோணம். கோட்டம் - கோயில். குடந்தைக் கீழ்க்கோட்டம் என்பது கும்பகோணத்திலுள்ள நாகேசுவரசுவாமி கோயில். கூத்தனார் - நடனம் செய்யும் பெருமான். இடர்க் கடல் இடை - பிறவித்துன்பம் மிகுதியைக் குறிக்க இடர்க் கடல் என்றார். இடை-ஏழாம் வேற்றுமை உருபு. இளைக்கின்றேனை-ஒருமைத்தெரிநிலை தன்மை நிகழ்கால வினையாலணையும் பெயர். ஏற-பிறவித் துன்பம் கடலுக்கு உவமிக்கப்பட்டதால் அதனைக் கடத்தலை (க்கடலினின்றும் கரை) ஏற என்றார். வாங்கி - எடுத்து; கடற்கரைமேலிருக்கிற ஒருவன், கடலினுளகப்பட்டுக் கரையேற முடியாது தயங்கும் வேறு ஒருவனைக் கரைமேல் விடுக்க ஒரு கை பிடித்து எடுத்தல் போல, இறைவன் என்னைப் பிறவிக்கடலினின்றும் எடுத்து; வாங்கி என்பதனால் அடிகள் இறைவனது உதவியின்றிப் பிறவிக்கடலைக் கடக்க முடியாது என்ற உண்மையைக் கூறினார். அமர் உலகு அனைத்தும் - அமர் - இருக்கின்ற (உள்ளதாய) (Existing);உலகு அனைத்தும்-பிருகிருதிமாயை அசுத்தமாயை சுத்தமாயை என்ற மூவகை மாயாபுவனங்கள் முற்றும்; ஊடுருவிப்போக - கீழேயிருந்து ஒவ்வொரு புவனத்தையுங் கடந்து முடிவில் எல்லாப் புவனங்களையும் தாண்டிப்போக, புவனங்கள் பருமை நுண்மை பேதங்களின்றி (Different States of matter) இடபேதங்களுடையன அல்ல. பேரின்பம் அடைதலுக்கு எல்லாத் தத்துவங்களையும் புவனங்களையும் கலைகளையுங் கடந்துபோக வேண்டியிருத்தலின் உலகு அனைத்தும் என்றார். கூவி - "இருளைத் துரந்திட்டிங்கே வாவென்றங்கே கூவும்-அருளைப் பெறுவானுசைப்பட்டேன் கண்டா யம்மானே" என்று மாணிக்கவாசக சுவாமிகள் திரு

வாசகத்திலருளியிருத்தல் காண்க. குறியில் அறுகுணத்து ஆண்டுகொண்டார் - அறுகுணங்கள் பதவுரையிற் கூறப்பட்டன. இந்த அறுகுணங்களும் எட்டுக் குணங்களாகவும் கூறப்படுதலுண்டு. இவை சத்து சித்து ஆனந்தம் (உண்மை அறிவு இன்பம்) என்ற மூன்று குணங்களிலும் அடங்கும். இக்குணங்கள் இறைவனை விட்டுப் பிரியாத குணங்கள். குறி என்பது இங்கே அருள் உருவாகிய சிவலிங்கத்தைக் குறிக்கின்றது. அடிகள் திருவதிகை வீரட்டானத்தில் வீற்றிருக்கின்ற சிவலிங்க அருள் உரு முன்பாக இறைவன் தம்மை ஆண்டருளியதை நினைந்து, குறியில் அறுகுணத்து ஆண்டு கொண்டார் என்றார். இறைவன் அடிகளை அறுகுணங்களால் ஆண்டுகொள்ளுதல் என்பது இறைவன் தமது வியாபகக் குணங்களில் அடிகளுடைய குணங்களை அடங்கும்படி செய்து அத்துவிதமாய்க் கலந்துநிற்றல் ஆகும். அவ்வாறு இறைவன் செய்யுங்கால் அடிகளிடத்தில் இறைவனுடைய குணங்கள் முற்றிலும் பதிந்து பேரின்பம் உண்டாகிறது. அடிகள் இந்தப் பேரின்பநிலைப் பேற்றைத் திருமறைமாற்றத் திருத்தாண்டகம் 10-வது பாட்டில் "எண்குணத்துளோமே" என்றார். கொண்டார்போலும் என்பதில் போலும் அசை. ஆதலின், உலகத்தீரே நீங்களும் இறைவனை வழிபடுங்கள் என்பது குறிப்பெச்சம்.

## நா — கூ. திருப்பூந்துருத்தி. திருத்தாண்டகம்.

சஅ. வெறியார் மலர்க்கொன்றை சூடி னானை
வெள்ளானை வந்திறைஞ்சும் வெண்காட் டானை
அறியா தடியே னகப்பட் டேனை
யல்லற் கடல்நின்று மேற வாங்கி

நெறிதா னிதுவென்று காட்டி னானை
நிச்சல் நலிபிணிகள் தீர்ப்பான் தன்னைப்
பொறியா டரவார்த்த புனிதன் தன்னைப்
பொய்யிலியைப் பூந்துருத்திக் கண்டேன் நானே.

(ப - ரை) *வெறியார் கொன்றை மலர் சூடினானை* - நறுமணம் பொருந்திய கொன்றைமலர் மாலையைத் (தனது சென்னியின்மேல்) அணிந்தவனும்; *வெள்ளானை வந்து இறைஞ்சும் வெண்காட்டானை* - தேவேந்திரனுடைய வெள்ளை யானை வந்து வணங்குகின்ற திருவெண்காட்டி லிருக்கின்றவனும்; *அறியாது* - (பிறவித் துன்பம் இன்னது என்று) தெரியாமல்; *அகப்பட்டேன் அடியேனை* - பிறவிக் கடலிற் சிக்கிக்கொண்ட அடியவனாகிய என்னை; *அல்லல் கடல்நின்று* - அப்பிறவித் துன்பக் கடலினின்று; *ஏறவாங்கி* - கரை ஏறும் வண்ணம் எடுத்து; *நெறி இது என்று காட்டினானை* - (வீட்டின்பத்தைச் சேர்தற்கு வழி அறியாது திகைத்துக்கொண்டிருந்த எனக்கு) வழி இது என்று காட்டினவனும்; *நிச்சல் நலி பிணிகள் தீர்ப்பானை* - எப்பொழுதும் என்னை வருத்துகின்ற மலநோய்களை ஒழிக்கிறவனும்; *பொறி ஆடு அரவு ஆர்த்த புனிதனை* - புள்ளிகளை உடைய ஆடுகின்ற பாம்பைக் (கச்சாக அரையிலே) கட்டின தூய்மையானவனும்; *பொய்யிலியை* - பிறப்பு இறப்பின்றி நித்தியமா யிருப்பவனும் ஆகிய சிவபெருமானை; *நான்* - நான்; *பூந்துருத்திக் கண்டேன்* - திருப்பூந்துருத்தி என்கிற தலத்திலே திருக்கோயில் கொண்டருளி யிருப்பதைப் பார்த்தேன்.

(வி. ரை) *வெள்ளானை வந்து இறைஞ்சும வெண்காட்டான்* - தேவேந்திரனுடைய வெள்ளையானை சாப நீக்கத்தின் பொருட்டுத் திருவெண்காட்டில் எழுந்தருளியிருக்கின்ற

சிவபெருமானை வணங்கிய வரலாற்றை அத்தலத்துப்புராணத் திற் காண்க. அகப்பட்டேன் அடியேனை - அடியேன் அகப் பட்டேன் என்பதை அகப்பட்டேன் அடியேன் என மாற்றுக. அகப்பட்டேன் தன்மையொருமை இறந் தகாலத் தெரிநிலை வினையாலணையும் பெயர். அடியேன் - அடி மை என்னும் பண்புப்பெயரடியாகப் பிறந்த குறிப்பு வினையா லணையும் பெயர். அல்லற்கடல் - மக்களது உலக வாழ்க்கை யிலுள்ள துன்பம் மிகுதியாயிருத்தல்பற்றி அது கடல் எனறு உருவகம் செய்யப்பட்டது. ஏறவாங்கி - உலக வாழ்க்கைத் துன்பம் அல்லற் கடலுக்கு உவமிக்கப்பட்டதால் உலகவாழ்க் கைப்பற்றை ஒழித்துப் பேரின்ப நெறிக்குச் செல்லுதலை கரை ஏறுதலுக்கு உவமித்தார். வாங்கி—எடுத்து; பிறப் பிறப்பு இல்லாத இறைவன் பிறவித் துன்பத்தில் அழுந்தும் என்னை எடுத்து. அடிகள் சமண நெறியிலிருந்த தமக்கு இறைவன் சூலைநோயை ஏவித் திருவதிகைக்கு வரும்படி செய்து ஆண்டமையை 'வாங்கி' என்றார். இது நெறி என்று காட்டினானை - அடிகள் தாம் சமண சமயத்தி லிருந்த பொழுது பேரின்பம் அடைதற்கு நெறி அறியாதிருந்து பின் அந்நெறி இறைவனாற் காட்டப்பட்டதால் இது நெறி என்று காட்டினானை என்றார். தான் - அசை. நிச்சல் - நித்தல் என் பதன் போலி, வைத்த என்பது வைச்ச என வருதல்போல. புனிதன்—மலரகிதன். பொய்யிலி - உண்மைப் பொருள், சத்துப்பொருள், பிறப்பு இறப்பின்றி நித்தமா யுள்ளவன்; தான் ஒன்றனையுஞ் சாராது தன்னை எல்லாப் பொருள்களும் சார்ந்து நிற்றற்கு ஆதாரமாயுள்ள தனிப்பொருள். இருப் பான்-உயர்திணை ஆண்பால் ஒருமைப் படர்க்கை எதிர்காலத் தெரிநிலை வினையாலணையும் பெயர். இயல்புபற்றி இருக்கின்றவன்

எனக் கூறற்பாலது, திர்ப்பான் எனக் கூறப்பட்டது. திர்ப்பான் தன்னை - புனிதன் தன்னை என்பவைகளில் 'தம்' இரண்டும் அசைநிலைகள். கண்டேனே என்பதிலுள்ள ஏ - யும் அசைநிலை. ஆதலின் உலகத்தீரே நீங்களும் இறைவனை வழிபடுங்கள் என்பது குறிப்பெச்சம்.

நா — ௬. திருநள்ளாறு. திருத்தாண்டகம்.

சச. குலங்கெடுத்துக் கோணீக்க வல்லான் றன்னைக்
குலவரையின் மடப்பாவை யிடப்பாலானை
மலங்கெடுத்து மாதீர்த்த மாட்டிக் கொண்ட
மறையவனைப் பிறைதவழ் செஞ் சடையினானைச்
சலங்கெடுத்துத் தயாமூல தன்ம மென்னுந்
தத்துவத்தின் வழிநின்று தாழ்ந்தோர்க் [கெல்லாம்
நலங்கொடுக்கு நம்பியை நள்ளாற் றானை
நானடியே னினைக்கப்பெற் றுய்ந்த வாறே.

(ப-ரை) தயாமூல தன்மம் என்னும் தத்துவத்தின் வழி நின்று - அருளாகிய காரண அறம் என்று கூறப்படும் உண்மைப்படி நிலைபெற்று நின்று ஒழுகி; தாழ்ந்தோர் எல்லார்க்கும் - தன்னை வணங்குகின்றவர்கள் எல்லாருக்கும்; குலம் கெடுத்து (உம்)-அவர்கள் குடும்பம், கோத்திரம், குடி, குலம், நாடு முதலிய மக்கள் இனங்களுக்குச் சேர்ந்தவர்கள் என்று தங்களை மதிக்கும் செருக்கை நீக்கியும்; கோள் நீக்க வல்லான் - அச்செருக்கினாற் கொள்ளப்படும் தீமைக்குணத்தை நீக்கும் வன்மை உடையவனாகியும்; குலவரையின் மடப்பாவை இடப்பாலான் - சிறந்த மலையாகிய இமயமலை அரசனது புத்திரியாகிய பார்வதியை (மணந்து அவளை)த் தனது

இடது பக்கத்தில் வைத்தவனுகியும் ; மலம் கெடுத்து (உம்)-உயிரினது அழுக்காகிய அவா மிருதியை நீக்கியும் ; மாதீர்த்தம் ஆட்டிக்கொண்ட மறையவனும்-மிக்க மாண்புடைய தீர்த்தம் என்று கூறப்படும் அருள்நீரிலே முழுகுவித்து அநுக்கிரகம் செய்த வேதாகமப் பொருளாயிருப்பவனுகியும்; பிறைதவழ் செஞ்சடையினுனும் - மூன்றும் பிறைச் சந்திரன் தங்கியிருக்கின்ற சிவந்த சடையை உடையவனுகியும் ; சலம் கெடுத்து (உம்)-வெகுளியை நீக்கியும் ; நலம் கொடுக்கும் நள்ளாற்றுன் நம்பியை - பேரின்பத்தை அருளும் திருநள்ளாற்றில் திருக்கோயில் கொண்டருளிய உத்தமனுகிய சிவபெருமானை ; அடியேன் நான் - அவனுக்கு என்றும் மீளா அடிமையாயிருக்கும் நான் ; நினைக்கப்பெற்று - மனத்தினுல் நினைத்தும் (நாவினுலே துதித்தும் உடலினுலே தொழுதும்) வழிபாடு செய்யப் பெற்றதனுல் ; உய்ந்த ஆறு (இது ஆகும்) - (பிறவித் துன்பத்தினின்றும் தப்பிப்) பிழைத்த வழி இது ஆகும். ஆதலின், உலகத்திரே நீங்களும் அவ்வாறு சிவபெருமானை வழிபட்டு உய்யுங்கள் என்பது குறிப்பெச்சம். 3

(வி-ரை) தயாமூல தன்மம் என்னும் தத்துவம் - தயாமூல தன்மம் என்ற சொற்றொடர் தயா ஆகிய மூலதன்மம் எனவிரியும். தயா—அருள்; வடமொழி. அது தயவு என்று தமிழில் வழங்கப்படும். மூலம்—காரணம்; தன்மம்-அறம்; மூலதன்மம் - காரண அறம். திரோதமலம் வயப்பட்ட உலகநெறியில் அருளின் காரியமாய் அருளின் வழி நடைபெறும் அறமானது வீட்டு நெறியில் அருளே அறமா யிருத்தலின், அடிகள் அருளாகிய காரண அறம் என்று பொருள்படும் தயாமூல தன்மம் என்றுர். உலகநெறியில் அறமும் மறமும் உண்டு. வீட்டு நெறியில் மறம் என்பதே இல்லை. வீட்டு

நெறியில் அருளே அறமாயிருத்தலின் ஔவையார் பொரு ளின்பங்களுடன் "அறமும் விட்டதே பேரின்ப வீடு" என்று கூறினர். தத்துவம் – உண்மை, (Reality). தாழ்ந்தோர்க்கு எல்லாம் - இது தாழ்ந்தோர் எல்லார்க்கும் என உரைநடை செய்து பொருளுரைக்கப்பட்டது. தாழ்தல் – வணங்குதல். உயிர்கள் சிவபெருமானை ஆண்டவன் ஆகவும், தங்களை அடிமைகளாகவும் கொண்டு தங்கள் அறிவு வேட்கை செயல்களைச் சிவபெருமானுடைய வியாபக அறிவு வேட்கை செயல்களுக்குள் அடங்கும்படி தன்முனைப்பின்றி நின்று வணங்குதல் குலம் கெடுத்து-குலம்-கூட்டம்; அது இங்கே ஆகுபெயராய்க், குடும்பம், குடி, சாதி, குலம், நாடு முதலிய மக்கட் கூட்ட இனங்கள் பற்றி எழுகின்ற செருக்கைக் குறிக்கின்றது. இது அவிச்சை (மயக்க அறிவு) யால் உண்டாகிறது. கோள் என்பது ஈறுகெட்டு முதனிலை நீண்ட தொழிற்பெயர்,கோள்-கொள்ளப்படுவது; அது இங்கே ஆகுபெயராய்க் கொள்ளப் பட்ட தீமைக் குணத்தைக் குறிக்கிறது. தீமைக்குணம் என் பது குடும்ப முதலிய இனங்களுக்குப் புறம்பே யுள்ள மக்க ளிடத்தில் அருளுக்கு மாறான வேற்றுமையும் பகைமையும் கொள்ளுதல். ஒருவனுக்கு அவனைப்பற்றிய செருக்கைப் பார்க்கிலும் அவனுடைய குடும்ப முதலிய இனம் பற்றிய செருக்கு அவ்வினத்தார்களாற் போற்றப்பட்டு வலி உடையதா யிருத்தலின், அதனை அடிகள் இங்கே கூறினர். இக்காலத்து நமது நாட்டில் சாதி பற்றியும் மேற்கு நாடுகளில் வகுப்புப்பற்றியும் நாடு பற்றியும் எழுகின்ற குலச்செருக்கா லுண்டாகும் கலக்கங்களும் துன்பங்களும் தெளிவு. கெடுத்து-நீங்கும்படி செய்து. குலங் கெடுத்து என்பதில் கெடுத்து என்பதற்குப்பின் உம் தொக்கு நிற்பதை விரித்துப்

பொருள் கூறப்பட்டது. அவ்வாறே மலங்கெடுத்து, சலங்கெடுத்து என்பவற்றிற்கும் கொள்க. குலவரை— சிறந்த மலை. மலைகளிற் சிறந்தது இமயமலை, ஆதலின் அதனை அடிகள் குலவரை என்று கூறினார். குலவரை என்பது இங்கே அன்மொழித்தொகையாய் இமயமலை யரசனைக் குறிக்கிறது. குலவரையன் என்ற பாடமும் உண்டு. அப்பொழுது அதற்குச் செம்பொருள் கொள்ளலாம். மடப்பாவை - மடப்பமுள்ள பாவைபோன்றவள் பார்வதி. 'குலவரையின் மடப்பாவை இடப்பாலான்' என்பதனால் இறைவன் பேரருளுடையவன் என்பது குறிப்பிடப்பட்டது'. மலம் கெடுத்து - மலம் - அழுக்கு. அது இங்கே அவாவைக் குறிக்கிறது. திருவள்ளுவ நாயனார், "தூய்மை யென்ப தவாவின்மை" என்றார். (364-வது குறள்) மாதீர்த்தம் ஆட்டிக்கொண்ட மறையவன் - மாதீர்த்தம் என்பது இங்கே அருளைக் குறிக்கிறது. எவ்வாறு நீரானது உடலினது அழுக்கைக் கழுவித் தூய்மை செய்கிறதோ, அவ்வாறே அருளானது உயிரினது அழுக்காகிய மலத்தை நீக்குதலின் அது நீருக்கு உவமிக்கப் பட்டது. சிவன் கோயில் திருவிழாவின் முடிவில் தீர்த்தம் கொடுத்தலானது அருளலாகிய தொழிலைக் குறித்தல் காண்க. ஆட்டிக்கொள்ளுதல் - அருளில் மூழ்குவித்தல். "அருணோக்கிற் றீர்த்தநீ ராட்டிக் கொண்டாய்" என்று அடிகள் தனித்திருத்தாண்டகம் 8-வது பாட்டிற் கூறியருளினார். மறை என்ற சொல் வேதத்தையும் ஆகமத்தையும் உணர்த்துதலின் "மறையவன்" என்பதற்கு வேதாகமப் பொருளாயுள்ளவன் என்று உரை கூறப்பட்டது. வேதாகமங்களைக் கூறினவன் என்றும் பொருள் கூறலாம். "பிறைதவழ் செஞ்சடையன்" என்பதனால் இறைவனது பேரருள் குறிப்பிடப் பட்டது. சலம் கெடுத்து - சலம் - வெகுளி; கோபம். நம்பி-

ஆண்மக்களிற் சிறந்தவன். நினைக்கப்பெற்று - நினைக்கப்பெற்றதனால் என்று பொருள்பட்டுக் காரணப் பொருட்டாய் வந்தது. 'நினைத்தல்' என்பதற்கு இனங்களான நாவினாலே துதித்தலும் உடலினாலே தொழுதலும் கொள்ளப் பட்டன. உய்ந்த ஆறு (இது ஆகும்)—உய்தல் - பிறவித்துன் பத்தினின்றும் தப்பிப்பிழைத்தல். ஆறு-வழி. அவாய்நிலை யால் இது, ஆகும் என்ற சொற்கள் வருவித்துப் பொருள் உரைக்கப்பட்டது. ஏ - ஈற்றசை. இப்பாட்டில் 'குலம் கெடுத்து' என்பதனால் செருக்கு ஆகிய மயக்க நீக்கமும், (அவிச்சை) மலம் கெடுத்து என்பதனால் அவா நீக்கமும், சலம் கெடுத்து என்பதனால் வெகுளி நீக்கமும் கூறப்பட்டன. பிரகிருதிமாயாபுவன போகநுகர்ச்சிக்கு ஏதுக்களாயுள்ள அவிச்சை, ஆங்காரம், அவா, ஆசை, வெகுளி என்னும் பஞ்சக் கிலேசங்களும் இங்கே கூறப்பட்ட மயக்கம், அவா, (காமம்) வெகுளி என்ற மூன்றில் அடங்கும். (சிவஞானபாடியம் 158-ம் பக்கம் பார்க்க). இம்மூன்று குற்றங்களும் நீங்கினா லொழிய உயிருக்கு உலக போகப்பற்று நீங்கிச் சிவபோகப் பெருவாழ்வு உண்டாகாதாகலின், அடிகள் இவற்றினது நீக் கத்தைக் கூறினார். "காமம் வெகுளி மயக்க மிவைகடிந்— தேமம் பிடித்திருந் தேனுக் கெறிமணி - யோமென் றுமோ னையினுள்ளே யுறைவதோர் - தாம மதனைத் தலைப்பட்ட வாறே" என்று திருமூலரும், "காமம் வெகுளி மயக்கமிவை மூன்றன் - நாமங் கெடக்கெடு நோய்" என்று திருவள்ளு வரும் கூறியருளினமை காண்க. தாழ்ந்தோருக்கெல்லாம் குலங் கெடுத்தும், வல்லானாகியும், இடப்பாலனாகியும், மலங் கெடுத்தும், மறையவனாகியும், சடையினனாகியும், சலங்கெடுத் தும், நலங்கொடுக்கும் நள்ளாற்றான் நம்பியை அடியேன் நான் நினைக்கப்பெற் றுய்ந்தவாறே என முடிபு செய்து

கொள்க. இப்பாட்டில் வருகிற தன், ஐ இவற்றை அசைநிலை களாகக்கொள்க. சிவபெருமான்உமாதேவியை இடப்பால் வைத் திருத்தலும் சடையினை உடைத்தாதலும் ஆன்மாக்களுக்கு அருள் செய்தற்குக் கொண்ட கடந்த உருவங்கள். திரு நாவுக்கரசு அடிகள் இப்பாட்டில் சிவபெருமான் தன்னை அருளே தாரகமாகக் கொண்டு வழிபடுகிறவர்களுக்குக் காமம் வெகுளி மயக்கம் என்னும் மூன்று குற்றங்களையும் நீக்கிப் பேரின்ப வாழ்வை அளிப்பன் என்றும், அவ்வாறு தாம் அவனை வழிபட்டதால் பிறவித் துன்பம் நீங்கிப் பேரின்ப வாழ்வு பெற்றார் என்றும் கூறுகின்றார். இவ்வாறு அடிகள் தாம் அடைந்த அநுபவத்தைத் "தன்னைச் சரணென்று தாள டைந்தேன்" என்ற முதற் குறிப்பு உடைய தேவாரப்பாட் டினும் உலகத்தாருக்கு அறிவுறுத்தி யருளினார்.

நா-சு. திருப்பூந்துருத்தி - திருத்தாண்டகம்.

சஎ நில்லாத நீர்சடைமேல் நிற்பித் தானை
நினையா வென்னெஞ்சை நினைவித் தானை
கல்லா தனவெல்லாங் கற்பித் தானைக்
காணா தனவெல்லாங் காட்டி னானைச்
சொல்லா தனவெல்லாஞ் சொல்லி யென்னைத்
தொடர்ந்திங் கடியேனை யாளாக் கொண்டு
பொல்லாவென் னோய்தீர்த்த புனிதன் றன்னைப்
புண்ணியனைப் பூந்துருத்திக் கண்டேன்
[நானே.

(ப-ரை) நில்லாத நீர்சடைமேல் நிற்பித்தானை - (பகீரத னது தவவலியால் விண்ணுலகிலிருந்து மண்ணுலகிற்கு வேக மாய்) வந்துகொண்டிருந்த கங்கை நீர்ப்பெருக்கை ஒரு துளி

யாக அடக்கித் தனது சடையின்மேல் நிற்கும்படி செய்த ஆற்றுடையவனும்; நினையா என்னெஞ்சை நினைவித்தானை-(கட்டுக் காலத்தில் அறியாமையால்) தன்னை நினையாதிருந்த எனது நெஞ்சில் (கட்டு விடுதலைக் காலத்தில் தனது அருளொளி விளங்கும்படி செய்து) தன்னை இடையறாது நினைக்கும்படி செய்தவனும்; கல்லாதன எல்லாம் கற்பித்தானை - அவ்வாறு எனது நெஞ்சை நினைக்கும்படி செய்தமையால் நான் முன் கல்லாதிருந்த அருளினது பெருமையை இப்பொழுது கற்பித்தவனும்; காணாதனஎல்லாம் காட்டினானை - (அவ்வாறு கற்பித்தமையால் கருவி அறிவினால் நான்) முன் அறியக் கூடாத உண்மைகளை எல்லாம் இப்பொழுது அருளறிவால் அறியும்படி செய்தவனும்; சொல்லாதனஎல்லாம் சொல்லி-அவ்வாறு அறியச் செய்தமையால் முன் கட்டுக் காலத்தில் நான் அறியமாட்டாதிருந்து நீ சொல்லாதிருந்தனவெல்லாம் இப்பொழுது எனக்குச் சொல்லி; அடியேன் என்னை இங்குத் தொடர்ந்து-என்றும் மீளா அடிமையாயுள்ளேனாகிய என்னை (ஆண்டானாகிய தான்) இவ்வுலகில் தொடர்ந்து வந்து தன்னை நான் தொடரும்படி செய்து; ஆளாக் கொண்டு என் பொல்லா நோய் தீர்த்த புனிதன் தன்னை - அடிமையாக ஆண்டு அருள் செய்து இதுவரை தன்னை அறியவொட்டாது என்னைப் பற்றிக்கொண்டு எல்லாத் துன்பங்களுக்கும் காரணமாயிருந்த ஆணவ மலத்தை என்னைவிட்டு நீங்கும்படி செய்த தூய்மையானவனும்; புண்ணியனை - அறவடிவினனுமாகிய சிவபெருமானை; நான் பூந்துருத்திக் கண்டேன்-நான் திருப்பூந்துருத்தி என்ற தலத்திலே கண்டு வணங்கினேன். 4

(**வி—ரை**) நினையா என் நெஞ்சை நினைவித்தானை-நெஞ்சு, உள்ளம், சித்தம், சிந்தை, இதயம் என்பன ஒரு பொருட்

சொற்கள். நெஞ்சானது கட்டுக்காலத்தில் ஐம்புலனைச் சார்ந்து கீழ்நோக்கி உலகத்தைப் பற்றுதற்கும், கட்டு விடுதலைக் காலத்தில் ஐம்புலனைச் சாராது மேல்நோக்கிச் சிவத்தைப் பற்றுதற்கும் நடுவான இடம் ஆதலின், 'நினையா என்நெஞ்சம் நினைவித்தானை' என்றார். "சிந்தையிற் சிவம்" (திருநாவுக்கரசர் தேவாரம்), "சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி" (திருவாசகம்),"சித்தந் திரிந்துசிவமயமாகியே" (திருமந்திரம்) என்ற சொற்றொடர்கள் அக்கருத்தினைக் குறிக்கின்றன. நினையா-என்பதில் ஈற்றில் தகர உயிர்மெய் தொக்கிநிற்கிறது. நினைவித்தல், கற்பித்தல், காட்டுதல், சொல்லித் தொடர் வித்தல் என்ற செயல்கள் ஒன்றன்பின் ஒன்றாய் முறையே ஏதுவும் பயனுமாய் வருகின்றன. உலகில் ஒருவன் கருவி யறிவைக் கொண்டு ஓர் உண்மையை அறிந்து அவ்வுண்மை யைச் செயலில் நிகழ்த்துதற்கு ஓர் ஆசாரியன் அவனுக்கு அதைப்பற்றி நினைப்பூட்டுதலும், கற்பித்தலும், அறி வித்தலும், சொல்வித்தலும், செய்வித்தலும் நிகழ்த்துதலை நாம் காண்டல்போல், சிவபெருமான் கட்டுக் காலத்தில் தனது அருளை அறியாதிருந்த உயிர்க்கு இருவினை யொப்பு மலபரிபாகப் பருவம் வந்தபொழுது, தனது அருளை, இது வரை மறந்திருந்த உயிர்க்கு அறிவித்தல், கற்பித்தல், சொல் லித் தொடர்வித்தல் ஆகிய தொழில்களை அவ்வுயிரினிடத்தில் நிகழச் செய்கின்றான் என்பது கருத்து. தொடர்ந்து என்ற சொல் தொடர்வித்து என்ற பிறவினைப்பொருளில் வந்தது. புனிதன் தன்னை - புனிதன் - மலரகிதன். இயல்பாகவே பாசங்களினின்று நீங்கினவன். தன் - அசை. புண்ணியனை - உயிர்களுக்கு நலம்தரும் வினையையே செய்கின்றவன்; அற வன். கண்டேன் - காணுதல் என்பது இங்கே அருளால் அறிதலைக் குறிக்கிறது. ஏ - ஈற்றசை.

நா.—சு. தனித்திருத்தாண்டகம்.

சக. ஆட்டுவித்தா லாரொருவ ராடா தாரே
யடக்குவித்தா லாரொருவ ரடங்கா தாரே
ஒட்டுவித்தா லாரொருவ ரோடா தாரே
யுருகுவித்தா லாரொருவ ருருகா தாரே
பாட்டுவித்தா லாரொருவர் பாடா தாரே
பணிவித்தா லாரொருவர் பணியா தாரே
காட்டுவித்தா லாரொருவர் காணா தாரே
காண்பாரார் கண்ணுதலாய்க் காட்டாக் காலே.

(ப-ரை) (கண்ணுதலாய்க்) காட்டுவித்தால் - சிவபெருமான் பருவம் வரப்பெற்ற அடியார்களுக்கு அகக்கண்ணைக் கொடுத்து அவர்கள் அந்த அகக்கண்ணால் தனது அருளையும் தன்னையும் அறியும்படி செய்தலாகிய காட்டும் உதவியையும் (அவர்களைத் தன்னிடத்திற் பற்றும்படி செலுத்திச்சென்று தன்னிலும் கலந்து நிற்றலாகிய காணும் உதவியையும்) செய்தால்; ஆர் ஒருவர் காணாதார் - அவனை யார்தாம் அறியாதவர் (எல்லாரும் அறிவார் என்றபடி); கண்ணுதலாய்க் காட்டாக்கால் காண்பார் ஆர் - அவன் அவ்வாறு தனது நெற்றிக்கண் மூலமாய்ப் பருவம் வந்த அடியார்களுடைய அகக்கண்ணைத் திறக்கும்படி செய்து காட்டுமுதவியும் காணுமுதவியும் செய்யாவிட்டால் யார்தாம் அவனை அறிவார் (ஒருவரும் அறியமாட்டார் என்றபடி) சிவபெருமான் அவ்வாறு பருவம் வந்த அடியார்களுக்குக் காட்டுமுதவியும் காணுமுதவியும் செய்தமையினால் அவர்கள் அவனை அருளறிவால் நேரே அறியும் வலி உடையராயினர் என்னும் உடன்பாட்டினாலும் அவன் அவ்வாறு காட்டுமுதவியும் காணுமுதவியும் செய்யாவிட்டால் ஒருவருமே அவனை அருளறிவால் நேரே அறியும் வலியுடைய

ராகார் என்னும் எதிர்மறையினாலும் சிவபெருமான் உதவி யின்றிப் பருவம் வந்த அடியார்களும் அவனை அருளறி வால் அறிந்து உய்யமாட்டார்கள். (ஆதலின்); அடக்குவித் தால் ஆர் ஒருவர் அடங்காதார் — சிவபெருமான் அவ்வாறு தான் ஆண்டவன், அவர்கள் தனக்கு என்றும் மீளா அடிமை கள் என்னும் அத்துவித உண்மையை அடியார்களுடைய அருளறிவுக்குக் காட்டாகி வேறாக நின்று அறிவித்தலாகிய காட்டுமுதவியைச் செய்தால் யார் தங்களுடைய அறிவு வேட் கை செயல்களை முறையே அவனுடைய அறிவு வேட்கை செயல்களுக்குள் அடங்கும்படி செய்து அடங்காதவர்; உரு குவித்தால் ஆர் ஒருவர் உருகாதார் - சிவபெருமான் உயிருக் குக் கட்டுநிலை, கட்டுவிடுதலை இந்நிலைகளிரண்டினும் எப்பொ ழுதும் அத்துவிதமாய் நின்று செய்துவரும் பேருதவியை அவன் அறிவித்த அருளறிவில் அறிந்த அடியார்கள் அவ்வுத வியை நினைந்து நினைந்து அகங்குழைந்து அவன் மீதூர்ந்த அன்பினால் உருகும்படி செய்தால் யார் உருகாதவர்; பணிவித் தால் ஆர் ஒருவர் பணியாதார் - சிவபெருமான் அவ்வாறு அடியார்களுடைய அறிவுக்குக் காட்டாகி நின்று காட்டுமுதவி யைச் செய்வதுமன்றி அவர்களை விடயப் பொருளாகிய தன் னைப் பற்றும்படி எடுத்துத் தன் வசமாக்கிப் பேரின்பமடை யும்படி காணுமுதவியையும் செய்தால் யார் அவன் அருளையே தாரகமாகக் கருதி அவ்வருளில் ஒடுங்கி வணங்காதவர்; ஆட்டுவித்தால் ஆர் ஒருவர் ஆடாதார் - மேலே கூறியவாறு அடங்கின அடியார்களை அந்த அகநிகழ்ச்சி காரணமாகச் சிவ பெருமான் புறத்திலும் ஆடும்படி செய்தால் யார் ஆடாதவர்; பாட்டுவித்தால் ஆர் ஒருவர் பாடாதார் - மேலே கூறியவாறு உருகின அடியார்களை அந்த அகநிகழ்ச்சி காரணமாகச் சிவ பெருமான் புறத்திலும் பாடும்படி செய்தால் யார் பாடாதவர்;

ஓட்டுவித்தால் ஆர் ஒருவர் ஓடாதார் - மேலே கூறியவாறு வணங்கின அடியார்களை அந்த அகநிகழ்ச்சி காரணமாகச் சிவ பெருமான் புறத்திலும் ஓடும்படி செய்தால் யார் தான் ஓடாதவர். 5

(வி—ரை) இப்பாட்டில் சிவபெருமான் பருவம் வரப் பெற்ற அடியார்களுக்குச் செய்து வரும் காட்டுமுதவி கூறப்பட்டது. இனம்பற்றி அதனோடு சேர்த்துக் கொள்ளப் படுகின்ற காணுமுதவியும் உரையிற் கூறப்பட்டது. காட்டு முதவியும் காணுமுதவியும் முன்னைய தேவார உரைகளில் விளக்கப்பட்டன. காட்டு முதவி காணுமுதவிகளின் பயனாக அடியார்களிடம் அறிவு வேட்கை செயல்களின் நிகழ்ச்சிகளாக முறையே அகத்தில் நிகழ்கிற அடங்குதல், உருகுதல், பணிதல்களும், புறத்தில் நிகழ்கிற ஆடுதல், பாடுதல், ஓடுதல்களும் கூறப்பட்டன. செய்யுளாதலின் முறை பிறழ்ந்து வைக்கப் பட்ட இந்த அகநிகழ்ச்சி புறநிகழ்ச்சிகள் முறைமையின் வைத்துப் பொருள் கூறப்பட்டன. அடங்குதல், உருகுதல், பணிதல் (வணங்குதல்) ஆகிய மூன்று அகநிகழ்ச்சிகள் முறையே ஒன்றாக் கொன்று ஏதுவும் பயனுமாயுள்ளன. "அயரா வன்பி னரன்கழல் செலுமே" (சிவஞான போதம் கக-ம் சூத்திரம்) என்ற முறையில் அடியார்கள் தங்களுக்குச் சிவபெருமான் அருளறிவில் அறிவித்ததை அறிந்த அறிவால் அடங்கி, திருந்திய வேட்கையாகிய அன்பினால் அவனிடத்தில் அகங்குழைந்து உருகி, செயலினால் அவனிடம் சென்று இரண்டறக்கலந்து ஒடுங்கிப் பேரின்பமுறும் தன்மை இந்த அகநிகழ்ச்சிகளாற் கூறப்பட்டன. இம்மூன்று நிகழ்ச்சிகளும் அறிவு வேட்கை செயல்களின் நிகழ்ச்சிகளாக முறையே ஒன்றாக்கொன்று மிக்க சூக்குமமாகவுள்ளன. அடங்கு

தலைவிட உருகுதலும், உருகுதலைவிடப் பணிதலாகிய ஒடுங்கி இன்புறுதலும் சூக்குமமாக வுள்ளன. மலம் நீங்கப் பெற்ற அடியார்களுக்கு எடுத்த உடலுள்ள அளவும் புறநிகழ்ச்சிகளும் நிகழும் ஆதலின், ஆடுதல், பாடுதல், ஓடுதல் ஆகிய புறநிகழ்ச்சிகளும் கூறப்பட்டன. ஆடுதல் அறிவின் நிகழ்ச்சியாகவும், பாடுதல் அன்பின் (வேட்கை) நிகழ்ச்சியாகவும், ஓடுதல் செயலின் நிகழ்ச்சியாகவும் முறையே ஒன்றாக்கொன்று ஏதுவும் பயனுமாயுள்ளன. இவைகள் முறையே ஒன்றுக்கொன்று மிக்க தூலமாயுள்ளன. மாணிக்கவாசக அடிகள் "ஆடுகின்றிலை கூத்துடை யான்கழற் கன்பிலை யென் புருகிப்-பாடுகின்றிலை பதைப்பதும் செய்கிலை பணிகிலை" என்றும், தாயுமான அடிகள் " ஆடுவதும் பாடுவது மானந்தமாக நின்னைத், தேடுவதும் நின்னடியார் செய்கை பராபரமே " என்றும் இந்தப் புறநிகழ்ச்சிகளைக் கூறியருளினர். அகநிகழ்ச்சி நிகழ்வதாயினும் புறநிகழ்ச்சி நிகழ்வதாயினும் உள்ளும் புறமும் ஒரு தன்மைக் காட்சியராயுள்ள அடியார்கள் பசு பாசப் பொருள்களைப் பாராமல் பதி ஒன்றையே பார்த்திருந்து இன்புற்றிருப்பர். (கண்ணுதலாய்க்) காட்டுவித்தால் - காட்டாக்காலே என்ற சொல்லுக்கு முன்னேயுள்ள கண்ணுதலாய் என்ற அடைமொழி இதற்கும் சேர்த்துப் பொருள் கூறப்பட்டது. கண்ணுதலாய்க் காட்டுதல் என்பது பருவம் வந்த உயிர்க்குச் சிவபெருமான் அதன் அகக்கண்(ஞானக்கண்)திறக்கும்படி செய்து அந்த அகக்கண்ணால் அது தன்னைச் (சிவபெருமானை) அறியும்படி செய்தல். "தூங்கவரன் ஞானக் கண் கொடுத்தருளினாலே சோதிக்குட் சோதியாய்த் தோன்றிடுவன் காணே " என்று சிவஞான சித்தியார் கக-ம் சூ-ம் அ-ம் செய்யுளிற் கூறப்பட்டிருத்தல் காண்க.

கண்ணுதலாய்க் காட்டாக்காலே – காட்டாக்கால் – எதிர் மறை வினையெச்சம்; காட்டு - பகுதி, ஆ - எதிர்மறை இடைநிலை; கால்-வினையெச்ச விகுதி;ஏ-அசை. ஆர் ஒருவர்-ஆர் உயர்திணை முப்பாற்கும் பொதுவான 'யார்' என்ற வினாப் பெயரின் விகாரம்; ஒருவர்-ஆண்பாலுக்கும் பெண்பாலுக்கும் பொதுவான உயர்திணைப் பெயர். ஆர் ஒருவர் - என்ற இரண்டு சொற்களும் ஒரு சொன்னீர்மைப்பட்டு "ஒருவ ரென்ப துயரிருபாற்றாய்ப், பன்மை வினைகொளும் பாங்கிற் றென்ப" என்ற நன்னூல் சூத்திரவிதியால் காணுதார் என் றும்; எதிர்மறை உயர்திணைப் பலர்பாற்படர்க்கை வினையா லணையும் பெயர்ச் சொல்லைப் பயனிலையாகக்கொண்டு முடிந் தது. இவ்வாறே "ஆர் ஒருவர்" என்று பின்வருகிற பதங்களுக் கும் கொள்க. காணுதார் என்ற வினை எல்லாரும் காண்பார் என்ற பொருள்பட நின்றது. இவ்வாறே ஆர் ஒருவர் அடங் காதார் முதலியவைகளுக்கும் கொள்க. காணுதார் முதலிய வற்றுள்ள 'ஏ' முற்றும் அசை நிலைகள்.

நா - ச. திருவதிகை வீரட்டானம். திருநேரிசை.

சஎ எல்லியும் பகலு மெல்லாந்
துஞ்சுவோர்க் கோதுவர் வந்து
புல்லிய மனத்துக் கோயில்
புக்கனர் காம னென்னும்
வில்லியைங் கணையி னானை
வெந்துக நோக்கி யிட்டார்
அல்லியம் பழன வேலி
யதிகைவீ ரட்ட னாரே.

(ப-ரை.) காமன் என்னும் — காமன் என்று சொல்லப்படும் பெயரை உடைய; வில்லி - கரும்பு வில்லையுடையவனாகிய; ஐங்கணையினானை - தாமரை, மா, அசோகு, முல்லை, நீலம் என்ற ஐந்து பூக்களையும் அவ்வில்லில் வைத்து எய்கின்ற அம்புகளாக உடைய மன்மதனை; வெந்து உக நோக்கி இட்டார் - அவன் உடல் எரிந்து அழியும்படி தமது (நெற்றிக் கண்ணினாலே) தீ எழப் பார்த்தவரும்; அல்லியம் பழனவேலி-ஆம்பல் மலர்கள் பூக்கும் அழகிய வயல்களை வேலியாக உடைய; அதிகை வீரட்டனார்-திருஅதிகை வீரட்டானம் என்ற தலத்தில் திருக்கோயில் கொண்டருளி யிருப்பவரும் ஆகிய சிவபெருமான்; எல்லியும் பகலும் துஞ்சுவோர் ஒருவர்க்கு- (திரோதமலம் வயப்பட்ட கட்டுக்காலத்தில்) இரவும் பகலுமாகிய எல்லாக் காலங்களிலும் தமது அருளை மறந்து தூங்குகின்ற ஒருவரது; புல்லிய மனத்துக் கோயில் வந்து புக்கனர்-புன்மையான மனமாகிய கோயிலின்கண் விளங்கித் தாம் எழுந்தருளியிருக்கும் திருக்கோயிலாக அருளொளியுடன் எழுந்தருளினார். 6

(வி-ரை) வெந்து உக நோக்கி இட்டார்-என்பதனால் தம்மைச் சேரும் அடியாரிடத்துத் தாம் மன்மதன்செயலைச்செல்லவொட்டார் என்பது குறிப்பிடப்பட்டது. வெந்து உக-தீயில் வெந்து பொடியாய்ச்சிந்த; நோக்கி இட்டார்-நோக்கினார்; இடு-துணைவினை. துஞ்சுவோர்க்கு ஒருவர் துஞ்சுவோர் ஒருவருக்கு என மாற்றி உரைநடை செய்க. ஒருவருக்கு-கு-உருபுமயங்கி ஆறும் வேற்றுமைப் பொருளில் வந்தது. துஞ்சுதல்-திரோதமலம்வயப்பட்ட கட்டுக்காலத்தில் சிவபெருமானது அருளைமுற்றிலும் மறந்திருத்தல்; ஒரு காலத்திலாவது நினைக்கமாட்டார்

என்பார் எவ்விடம்பகலுமெல்லாம் துஞ்சுவோர் ஒரு வர் என்றார். எல்லாம்-முழுவதும். மனம்+அத்து-மனத்து; அத்து - சாரியை. கோயில் புக்கனர் - புறத்தே திருக் கோயில் கொண்டருளுதல் போல உள்ளத்தில் ஒளியாக விளங் கினர்; தாம் உயிருக்கு எக்காலத்திலும் உதவி செய்யும் பேர ருளைப் பருவம் வந்த உயிருக்குத் தெரியும்படி செய்தார் என் பார், கோயில் வந்து புக்கனர் என்றார். தமது திருவருளை முற்றி லும் மறந்து உலக நுகர்வுகளை நுகர்ந்துகொண்டிருக்கின்ற திரோதமலம் வயப்பட்ட உயிருக்குச் சிவபெருமான் பருவம் சேரப்பெற்ற காலத்தில் அத்திருவருள் அதற்கு விளங்கும் படி அதனது உள்ளத்தில் ஒளியாக விளங்குகின்றார் என்ற உண்மை இப்பாட்டிற் கூறப்பட்டது.

நா - ரு. மறக்கிற்பனே என்னும் திருக்குறுந்தோகை.

சஅ துஞ்சும் போதுஞ் சுடர்விடு சோதியை
நெஞ்சுள் நின்று நினைப்பிக்கும் நீதியை
நஞ்சு கண்டத் தடக்கிய நம்பனை
வஞ்ச னேனினி நான்மறக் கிற்பனே.

(ப-ரை) துஞ்சப்போதும் - திரோதமல நீங்கித் திரு வருளை நினைந்துகொண்டிருக்கும் காலத்தி லன்றி, அத் திரோதமலம் வயப்பட்டு உயிர் திருவருளை மறந்து தூங்குங் காலத்திலும்; (நெஞ்சுள் நின்று) சுடர்விடு சோதியை - (அத னுடைய உள்ளத்தில் நிலையாக நின்று) தமது அருளொளியை எப்பொழுதும் வீசிக்கொண்டிருக்கும் பேரொளிப் பொரு ளாயிருக்கிறவனும்; நெஞ்சுள் நின்று நினைப்பிக்கும் நீதியை-

அதனுடைய உள்ளத்தில் நிலையாக நின்று நன்று இது நிது இது என்று நினைக்கும்படி செய்யும் நடுநிலைப் பொருளா யிருப்பவனும்; நஞ்சு கண்டத்து அடக்கிய நம்பனை - (தேவர் களும் அசுரர்களும் பாற்கடலைக் கடைந்த காலத்து அதனின் றெழுந்த) நஞ்சை (அவர்கள் உய்யும்படி) தமது கண்டத்தில் அடக்கிவைத்த அன்பனுயிருக்கிறவனும் ஆகிய சிவபெரு மானை; வஞ்சனேன் நான்-வஞ்சகனுகிய நான்; இனி-(திரோத மலம் வயப்பட்ட காலத்தில் அவனை நான் மறந்திருந்தது போல்) சிவபெருமான் என்முன் நேராய் வந்து தனது அருளை அறிவித்து நான் அதனை அறிந்த பின்; மறக்கிற்பனே- மறக்க முடியுமோ? (முடியாதென்றபடி.) 7

(வி - ரை) துஞ்சும்போதும் - துஞ்சுதல் என்பது திரோதமலம் வயப்பட்டுத் திருவருளை முற்றிலும் மறந்திருத்தல். உம் இறந்தது தழீஇய எச்ச உம்மை; அது திரோதமலம் நீங்கின காலத்தில் அவன் அதனுடைய உள் ளத்தில் ஒளி விளக்கம் செய்து கொண்டிருக்கிறது மல்லாமல் என்ற பொருளைக் குறிக்கின்றது. நெஞ்சுள் நின்ற சுடர் விடு சோதி-நெஞ்சுள் நின்று என்றசொற்றொடரைச் சுடர்விடு சோதியுடனும், நினைப்பிக்கும் நீதியுடனும் கூட்டுக. எப் பொழுதும் உயிரினுடைய நெஞ்சில் அருளொளி விளங்கி னும் அது பிறவிக்குருடன் பகலவன் ஒளியை அறியா திருத்தல் போலக் கட்டுநிலையில் அவ்வொளியை அறியமாட் டாது என்பார், "துஞ்சும்போதும் சுடர்விடு சோதியை" என்றார். நினைப்பிக்கும் நீதி-சிவபெருமான் நீதி உருவனுத லின் எல்லா உயிர்களுடைய உள்ளத்திலும் நின்று நன்று

தீது அறிவிக்கும் உள்ளச் சான்று (Conscience) ஆயிருக்கின்றான் என்பது கருத்து. "நீதிபலவும்-தன்னுருவாமெனமிகுத்த தவநீதியொடு தானமர்விடம்" என்று திருஞானசம்பந்த அடிகள் திருவைகாத் தேவாரப்பதிகம் 4-வது பாட்டிற் கூறியருளினார். திருநாவுக்கரசு அடிகள் "நானேது மறியாதே என்னுள் வந்து நல்லனவுந் தீயனவுங் காட்டா நின்றாய்" என்று திருவானைக்காத் திருத்தாண்டகம் 2-வது பாட்டிற் கூறியருளியதும் காண்க. நஞ்சு கண்டத்து அடக்கிய வஞ்சனேன்-வஞ்சம் பொய். திருநாவுக்கரசு அடிகள் தாம் சிவபெருமானால் ஆட்கொள்ளப்பெற்ற காலத்திற்கு முன் பொய்ச்சமயமாகிய சமண சமயத்திலிருந்தமையை நினைந்து தம்மை 'வஞ்சனேன்' என்று கூறினார். இனி மறக்கிற்பனே - கில் - ஆற்றல் உணர்த்தும் ஒரு இடைநிலை; ஏ-வினா- எதிர்மறைப்பொருள் தந்தது. சிவபெருமானால் ஆட்கொள்ளப் பெற்று அவனை நான் நினைப்பும் மறப்பும் அற்ற நிலையில் எப்பொழுதும் நினைத்துக்கொண்டிருக்கும் பொழுது நான் எவ்வாறு மறக்கமுடியும்? என்று அடிகள் கூறினார். "தன்னை அறிவித்துத் தான்றனைச் செய்தானைப் பின்னை மறத்தல் பிழை" என்ற சிவஞான போதம் கஉ-ம் சூத்திர வெண்பாக் கூறுதல் காண்க. இப்பாட்டில் 'சுடர்விடுஞ் சோதி' என்பதனால் சிவபெருமானுடைய சத்துத் தன்மையும் 'நினைப்பிக்கும் நீதி' என்பதனால் அவனுடைய சித்துத் தன்மையும் நஞ்சு கண்டத் தடக்கிய நம்பன் என்பதனால் அவனுடைய ஆனந்தத் தன்மையும் குறிப்பிடப்பட்டன. சச்சிதானந்தம் ஆகிய சிவபெருமான், தனது சத்துத் தன்மையினால் உயிருக்கு ஒளி விளங்கவும், தனது சித்துத் தன்மையினால் உயிருக்கு அறிவு விளங்கவும், தனது ஆநந்தத் தன்மையினால் உயிருக்கு ஆநந்தம் விளங்கவும் செய்கின்றான் என்ற உண்மை கூறப்பட்டது.

திருச்சிற்றம்பலம்.

## ௬. அறியு நெறி

நா - ௬. திருவாரூர்—திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

சக. உயிரா வணமிருந் துற்று நோக்கி
யுள்ளக் கிழியி னுருவெழுதி
உயிரா வணஞ்செய்திட் டுன்கைத் தந்தா
லுணரப் படுவாரோ டொட்டி வாழ்தி
அயிரா வணமேறு தானே றேறி
யமரர்நா டாளாதே யாரு ராண்ட
அயிரா வணமேயென் னம்மா னேநின்
னருட்கண்ணால் நோக்காதா ரல்லா தாரே

(ப—ரை) :—அயிராவண மேறாது—கைலாயத்திலுள்ள யானைமேலேறாது; ஆனேறுஏறி—எருத்தின்மேலேறி; அமரர் நாடுஆளாது—விண்ணுலகத்தை ஆளுதல் செய்யாது; ஆரூர் ஆண்ட—திருவாரூரை யாளுதல்செய்த; ஐராவணமே-பிருதிவி மூர்த்தியே (நில உருவினனே); என்அம்மானே- எனது தந்தையே; உயிராவணம் இருந்து (உம்)—மூச்சை வெளியே விடாமல் உள்ளே நிறுத்தலாகிய பிராணயாமத்தைச் (கும்பகத்தை) செய்துகொண்டிருந்தும் (அதனால் உள்ளத்தைப் புறவிடயங்களிலே செல்லாமற்றடுத்தும்); உள்ளக் கிழியின் உருவு எழுதி (உம்)—(அங்ஙனம் தடுக்கப்பட்டு அடங்கி நிற்கிற) உள்ளமாகிய துணியில்(நின்னருளாகிய திருவடியினது உருவத்தை யெழுதியும்; உற்று உம்—(அங்ஙனம் எழுதப்பட்ட திருவுருவத்தையே) பற்றிக்கொண்டிருந்தும்; நோக்

(உம்)— (அங்ஙனம் உள்ளத்தில் பற்றப்பட்ட திருவடி யுரு வத்தினையே "காணுக்கண் கேளாச்செவி" என்னும்படி) சிந் தித்துக்கொண்டிருந்தும்; உயிர் ஆ வணம் செய்திட்டு (உம்)- (அங்ஙனம் உள்ளமானது சிந்தித்துக்கொண்டிருந்து உயிரோடு ஒன்றுபட்டுப் பாச ஞானத்தைக் கடத்தலால்) உயிராகுந் தன் மையை யடைந்தும்; உன்கைத் தந்தால்—(அங்ஙனம் பாச ஞானத்தைக் கடந்து அவ்வுயிருடன் உடல் பொருள்களையும்) உன் னருள்வசம் ஒப்புவித்து, அதனால் பசு ஞானத்தைக் கடந்து நின்றால்; உணரப்படுவாரோடு ஒட்டி (உம்) —(அங்ங னம் பசு ஞானத்தைக் கடந்து) பதிஞானத்தை உன்னையு ணர்ந்து, அதனால் பேரின்பப் பயனை யடைபவர்களோடு அத் துவிதமாய்க் கலந்து நின்றும்; வாழ்தி—அவர்கள் உன்னு டைய இறவாத பேரின்ப நுகரும் பெருவாழ்வில் வாழும்படி நீ செய்வாய்; நின் அருட் கண்ணால் நோக்காதார்—(அங்ஙனம்) உன்னருட் கண்ணாகிய பதிஞானத்தினாலே உன்னையுணர்ந்து பேரின்ப வாழ்வு அடையப் பெறுதவர்கள்; அல்லாதார்— (உலகின்கண் மக்களாய்ப் பிறந்த பயனை) அடையாதவர்களா வார்கள். 1

(வி—ரை) அயிராவணம் (ஐராவணம்) என்பது கைலாய மலையிலுள்ள இரண்டாயிரம் கொம்புகளையுடைய ஒரு யானை. 'அயிராவணமேறாது ஆனேறேறி அமரர் நாடாளாதே ஆரு ராண்ட' என்பது "வான்பழித் திம்மண் புகுந்து மனிதரை யாட்கொண்ட வள்ளல்" என்ற மாணிக்கவாசக சுவாமிகள் கூறிய வண்ணம், விண்ணுலகத்தை விட்டு இம் மண்ணுலகத் துக்கு வந்து உயிர்களை யாட்கொள்ளும் சிவபெருமானுடைய அருட்டிறம் கூறுகின்றது. அயிராவணம்—ஐராவணம், இரா

என்னும் வடமொழிச் சொல் பிருதிவி என்று பொருள்படும். இராவணம் என்பது பிருதிவியின் மயம், இ என்ற எழுத்து ஆதி விருத்தி சந்தியாய் 'ஐ' காரமாயிற்று. ஐராவணம் என்பது பிருதிவி 'மயமான சிவபெருமானுடைய உருவத்தைக் குறிக்கின்றது. பிருதிவி சிவபெருமானுடைய எட்டு உருவங்களிலொன்று. உயிராவணம் - உயிர்த்தல் என்பது மூச்சுவிடுதல். உயிராவண்ணம் - மூச்சு விடாதபடியிருத்தல், இது பிராணாயாமம் என்று கூறப்படும் யோகத்துக்குரிய எட்டு உறுப்புக்களில் ஒன்று. உள்ளத்தை அடக்குதற்கு மூச்சடக்கம் (பிராணாயாமம்) துணையாயிருக்கின்றது. "மன்மன மெங்குண்டு வாயுவுமங்குண்டு" திருமந்திரம்-௬௨௦.

உள்ளக்கிழி—உள்ளமாகியகிழி; இருபெயரொட்டுப்பண்புத்தொகை. கிழி என்பது கிழிக்கப்பட்டதுணி. உரு எழுதி — தியானத்துக்காக சிவபெருமானுடைய அடிகளை உள்ளத்திலே எழுதுதலை அடிகள் "இம்மையுன்றாளென்றனெஞ்சத் தெழுதி வை" என்று திருச்சத்திமுற்றம் திருவிருத்தம் (செ 6)லும் "உழைத்துந்துள்ளியுமுள்ளத்துள்ளே யுருவிழைத்தும்" என்று திருப்பேரெயில் திருக்குறுந்தொகை (செ 8,)லும் குறிப்பிட்டிருத்தல் காண்க. மாணிக்கவாசக அடிகளும் "படமாக வென்னுள்ளே தன்னிணைப் போதவையளித்து" என்று திருப்பூவல்லி 14-வது பாட்டிற் கூறியருளினார். திருமூலர் திருமந்திரத்தில் "ஞானக் கூத்தன், படந்தான் செய்துள்ளுட் படிந்திருந்தானே" என்று கூறினார். திருவடியை யடைதல் வீட்டின்பமாதலின் உள்ளக்கிழியில் திருவடியின் உருவெழுதி, அதனைப்பற்றிச் சிந்தித்துக் கொண்டிருத்தல் அவ்வீட்டின்பமடைதற்குரிய

தவமாகின்றது. உற்றும்- உறுதல் திருவடியைப் பற்றுதல். இது பிரத்தியாகாரம். நோக்கியும் - என்பது உள்ளத்தாற் பார்த்தல், அதாவது சிந்தித்தல் இது தாரணை. உயிர் ஆவணஞ்செய்திட்டும் - உயிராகும் வண்ணம் என்பது ஆவணம் எனக்குறைந்து நின்றது. வண்ணம்—தன்மை. உயிராகும் வண்ணமாவது உயிர்பாசக் கூட்டத்தினின்றும் நீங்கித் தூவெளியை யடைதல். இது ஆன்மதெரிசனம். அதாவது உயிர் தனது அறிவு, செயல்கள் சிவனுடைய அறிவு செயல்களால் சீவித்து நிற்பது என்று அறிதல். இந்த ஆன்ம தெரிசனம் தத்துவ சுத்தியோடு உடனிகழ்வது. அருளாகிய சிவரூபமுமாம். உன்கைத்தந்தால்-அதாவது உயிர் தன்னொடும் உடல் பொருள்களைச் சிவனிடம் ஒப்புவித்து அவனது அருளில் அடங்கி, தன்முனைப்பிழந்து நிற்றல். இது ஆன்ம சுத்தியாகும். இந்த ஆன்ம சுத்தியுடன் சிவதெரிசனமும் உடனிகழ்வது. இது தியானம். உணரப்படுவாரோடு ஒட்டியும் - என்பது உயிர் சிவனருளில் அடங்கித் தன்வயமழிந்த பொழுது, தான் ஒரு முதலாக நின்று உணராதகால் உணரப்படுவாரோடு எனச்செயப்பாட்டுவினையாற் கூறினார்; இனி அவர்களோடு ஒட்டுதலாவது அவர்களோடு அத்துவிதமாய்க் கலந்து நிற்றல். இது ஞானசமாதியும் சிவயோகமுமாம். வாழ்தி - வாழ்தல்; வாழ்தலைச்செய்வாய் எனப்பிறவினைப் பொருளில் வைத்துப் பொருள் உரைக்கப்பட்டது. இது உணரப்படுவார் நுகரும் பேரின்பப் பெருவாழ்வாகும். 'உம்' என்பது இருந்து முதலிய இடங்களிற் றொக்கு நின்றது. இப்பாட்டில், உற்றும் என்பதனால் நின்மல சாக்கிரமும், நோக்கியும் என்பதனால் நின்மல சொப்பனமும், உயிராவணஞ்செய்திட்டும் என்பதனால் நின்மல சுழுத்தியும், உன்கைத்தந்தாலென்பதனால் நின்மல

துரியமும், உணரப்படுவாரோடு ஒட்டியும் வாழ்தியென்பத னல் நின்மலதுரியாதீதமும் முறையே கூறப்பட்டன. உலகி லுள்ள சில நெறிகள்போல் சிவநெறியானது அறிவு நூலில் வெளிப்படுத்தப்பட்ட உண்மைகளை நம்பி ஒழுகுகிற வெறுங் கொள்கை நெறி (Theoretical Religion) அன்று. சைவர் ஒருவர் அருள் நூல்களைக் கற்று ஐயந்திரிபு அறும்படி தெரிந்தார்வாயிற் கேட்டும் சிந்தித்தும், பின் பக்குவம் வந்த காலை இறைவனால் அதிட்டிக்கப்பெற்ற குரவனுடைய உப தேச உண்மைமொழியைக் கேட்டும், கேட்ட உண்மையைத் தனது உள்ளத்தில் பற்றும்படி சிந்தித்தும், சிந்தித்த உண் மையைத் தன்னுள்ளே தானாகத் தெளிந்தும், தெளிந்த உண் மையை நிட்டை கூடி இறைவனுடன் இரண்டற ஒன்றிப் பேரின்பம் நுகரச்செய்யும் நடைநெறி. (Practical Religion) இந்நடைச் சிவநெறி (Practical Saivaism) சரியை, கிரியை, யோகம், ஞானம் என முறையே ஒன்றுக்கொன்று மேற்பட்ட நாலு நிலைகளை உடையது. ஒவ்வொரு நிலையிலும் நாலு நிலை கள் உள. இந்த அருமைத் தேவாரப் பாட்டில் 'ஒட்டி' என் பதுவரை திருநாவுக்கரசு அடிகள் சிவஞானபோதம்-க0-ஆம் சூத்திரம் கூறுகின்ற துரிய நிலைக்கண்ணதாகிய ஞானத்தில் யோகம் என்பதை அறியும் நெறியாகக் கூறுகின்றார்.

### நா-கூ. கோயில்-பெரியதிருத்தாண்டகம்.

கூ0 அருந்துணையை யடியார்தம் மல்லல் தீர்க்கு
மருமருந்தை யகன்ஞாலத் தகத்துட் டோன்றி

வருந்துணையுஞ் சுற்றமும் பற்றும் விட்டு
வான்புலன்க ளகத்தடக்கி மடவா ரோடும்

பொருந்தணைமேல் வரும்பயனைப் போக மாற்றிப்
போதுநீக்கித் தனைநினைய வல்லோர்க் கென்றும்

பெருந்துணையைப் பெரும்பற்றப் புலியூ ரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே.

(ப-ரை):—அருந்துணையை— (அடியாரல்லாதார்க்குத்) துணையல்லாதவனு யிருப்பவனும்; அடியார் தம் அல்லல் தீர்க்கும் அருமருந்தை-அடியார்களுடைய துன்பங்களாகிய பிறவி நோயை நீக்குதற்குரிய அரிய மருந்து போன்றிருப்பவனும், அகல் ஞாலத்து அகத்துள் — பரந்த நில உலகத்தினிடத்து; தோன்றி வரும் துணையும் சுற்றமும் பற்றும் விட்டு—உண்டாகித் தொடர்ந்து வருகின்ற மனைவி மக்கள் உடன்பிறந்தார் முதலிய உறவினர்கள் பற்றும் ஏனைய உறவினர்கள் பற்றும் உலகப்பொருட்பற்றும் நீங்கி; வான் புலன்கள் அகத்து அடக்கி – வலியுள்ள ஐம்பொறிகளையும் வெளியே விடயங்களிற் செல்ல வொட்டாது தடுத்து; மடவாரோடும் பொருந்து அணைமேல் வரும் பயனைப் போக மாற்றி — பெண்களோடும் சேர்கின்ற படுக்கைமே லிருந்து நுகரும் சிற்றின்ப நுகர்ச்சியை (தமது உள்ளத்தை) விட்டுப் போகும்படி ஒழித்து; பொது நீக்கி — (சிவபெருமானை அவன்) உலகில் விளங்கும் பொது இயலில் வைத்து வழிபடுதலை நீக்கி; தனை நினைய வல்லோர்க்கு—அவனது உண்மை நிலையில் வைத்து நினைத்துச் சிறப்பாக வழிபடும் ஆற்றலுடையவர்களுக்கு; பெருந்துணையை — ஒப்பற்றதோர் பெரிய துணையாயிருப்பவனும்; பெரும்பற்றப்புலியூரானை — திருப்பெரும்பற்றப்புலியூரில் எழுந்தருளி யிருப்பவனும் ஆகிய சிவபெருமானைப் பற்றி; பேசாத நாளெல்லாம்—எந்த நாட்களில் நாம் (அடியார்கள்) பேசவில்லையோ அந்த நாட்களெல்லாம்; பிறவாநாளே — (தோன்றின நாட்களாயிருந்தாலும்) தோன்றுத வீணே பயனின்றிக் கழிந்த நாட்களே யாகும். 2

(வி—ரை). அருந்துணை — அருமையாகிய துணை. அருமை இங்கே இன்மைப்பொருளை உணர்த்துகின்றது. சிவபெருமான் அவனை நினையாத மக்களுடைய உள்ளத்தில் வேறறக்கலந்திருந்து துணையாயிருந்தாலும் அவர்கள் அதனையறியாது அவனைத் துணையாகக் கொள்ளாதிருத்தல் பற்றி அவர்களுக்கு அவன் அருந்துணையாய் (அதாவது துணையில்லாதவனாய்) இருக்கின்றான். அடியார்க்கு அல்லல் தீர்க்கும் அருமருந்தை என்று பின்னே கூறப்பட்டதனால் அடியாரல்லாதார்க்கு அருந்துணை என்று பொருளுரைக்கப்பட்டது. அடியார் அல்லல் தீர்க்கும் அருமருந்தை—உயிர்ப் பற்றுப் பொருட்பற்றுக்களை விட்டுச் சிவபெருமான் திருவடியிலேயே அன்புவைத்து ஒழுகுகிறவரே அடியாராவார். "அடியார் பவரே யடியவ ராமால்" எனத் திருமூலர் திருமந்திரத்திற் கூறியருளினர். (ஆர்தல்—நுகர்தல்) (2740). அல்லல் என்பது இங்கே பிறவித் துன்பம். அடியார் பிறவித்துன்பத்தைச் சிவபிரான் திரோதமல மூலமாயன்றி நேரே தனது அருளினால் நீக்குதலால் சிவபிரான் மருந்து எனக்கூறப்பட்டான். அடியாரல்லார்க்கு அத்தகைய அருளாகிய மருந்து கிடைக்கப் பெறாததனாலும் சிவபிரான் அருளன்றி வேறொன்றும் பிறவித் துன்பத்தை நீக்காது ஆதலானும் அருமருந்து எனப்பட்டது. கிடைத்தற்கரியபொருள் அருமந்த(அருமருந்தன்ன)பொருள் என்று உலக வழக்கில் கூறப்படுகின்றது. அகன் ஞாலத்தகத்துள் தோன்றிவரும் துணையும் சுற்றமும் பற்றும்விட்டு— துணை, சுற்றம் என்பன உயிர்ப் பற்றையும், பற்று என்பது உலகப் பொருட்பற்றையும் குறிக்கின்றன. ஒருவன் உயிர்ப் பற்றுப் பொருட் பற்றுக்களை விட்டாலன்றி அவனுக்கு ஆணவமலம் நீங்கி அருள் நேராய் கிடைக்கப்பெறாது ஆக

வின், அவ்வாறு இருவகைப் பற்றுக்களும் கூறப்பட்டன. மனைவி, மக்கள், உடன்பிறந்தார்கள், ஒரே மனையில் கூட இருப்பவர்கள் ஆதலின் அவர்கள் துணைகள் என்றும், வீட்டிலன்றி வெளியே சுற்றிக்கொண்டிருக்கும் உறவினர்கள் ஆதலின் சுற்றம் என்றும் கூறப்பட்டனர். மடவாரோடும் பொருந்தணைமேல் வரும் பயனைப்போகமாற்றி — "கண்டுகேட்டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனு மொண்டொடி கண்ணேயுள" என்று திருவள்ளுவநாயனார் கூறியபடி, பெண்ணினைச் சேர்ந்து உண்டாம் சிற்றின்ப நுகர்ச்சியே பொதுவாகப் பொருட்பற்றையும், சிறப்பாக உயிர்ப்பற்றையு மிருத்தலாலும் மக்களால் நீக்குதற்கு வலியது ஆதலாலும் மனையும் சுற்றமும் பற்றும் விட்டு என்பதன் பின்னும் வான்புலன்க ளகத்தடக்கி என்பதனுக்குப் பின்னும் அது கூறப்பட்டது. இங்கே கூறப்பட்ட சிற்றின்பம் நெறிகொள் சிற்றின்பம். பிறர் மனைவியரை அல்லது வேசையரைச் சேரும் இன்பம் அன்று. திருஞான சம்பந்த சுவாமிகள் இக்கருத்தை "நெறிகொள் சிற்றின்பந்—துப்பனென்னு தருளே துணையாக - ஒப்பரொப்பர்" என்று திருச்சோற்றுத்துறைத் தேவாரத்திற் கூறி யருளினார். பொது நீக்கி— பொது என்பது சிவபெருமான் உலகில் விளங்கும் பொது இயல். (God as manifested in the world. This manifested form is limited and is not His true State.) பெருந்துணை — சிவபிரான் தனக்கு மிக்காரும் ஒப்பாருமில்லாதவனாய் எல்லாரினும் பெரியனாய்த் தன்னை அடைந்த அடியார்களுக்குப் பேரின்பம் கொடுத்தலின் பெருந்துணை எனக்கூறப்பட்டான். மனைவி மக்கள் முதலிய உறவினர்களும் சுற்றத்தார்களும் உலக இன்ப நுகர்தற்கு உதவியாயுள்ள சிறு துணைகள். சிவபெருமான் பேரின்பம் உதவுகின்ற பெருந்துணையாவார். பிறவா நாள்—பிறந்தும் ஒரு

வனுக்குப் பயன்படாத நாளாதலின் பிறவா நாள் எனப்பட்டது. நாள் - சாதி யொருமை. சுந்தரமூர்த்தி சுவாமிகள் "இட்டனும் மடியேத்துவா ரிகழ்ந்திட்டநாள் மறந்திட்ட நாள், கெட்டநாள்......" என்று கூறியதை நோக்குக. இந்தப் பாட்டுச் சிவபிரான் எல்லாஉயிர்களோடும் வேறறக்கலந்து அவர்களுக்குத் துணையாயிருந்தாலும் அறநெறியில் ஒழுகாதவர்கள் அவன் துணையைப் பயன் படுத்திக்கொள்ளாமல் துன்பத்தையும், அறநெறியில் ஒழுகி அவனை ஏத்துகிறவர்கள் அவன் துணையைப் பயன் படுத்தி உலக இன்பமாகிய சிற்றின்பத்தையும் புண்ணிய பாவமிரண்டுங் கடந்த வீட்டு நெறியில் ஒழுகிப் பேரின்பத்தையும் அடைகின்றார்கள் என்ற உண்மையைக் கூறுகின்றது. திருஞான சம்பந்த சுவாமிகளும் திருவெண்ணியூர்த் தேவாரப்பதிகத்தில்,

" மூத்தானை மூவுல குக்கொரு மூர்த்தியாய்க்
காத்தானைக் கனிந்த வரைக்கலந் தாளாக
ஆர்த்தானை யழகமர் வெண்ணியம் மான்றன்னை
ஏத்தாதா ரென்செய்வார் ஏழையப் பேய்களே "

எனக் கூறியிருத்தல் காண்க.

பொது நீக்கித் தனை நினையவல்லாரே சிவபெருமானது அருளை அவனை அறியுநெறியாக உணர்ந்து துணையாகக் கொள்வர், என்பது இப்பாட்டில் கூறப்பட்டது.

நா—ச. திருப்பயற்றூர்—திருநேரிசை.

ருக. புல்ன்களைப் போக நீக்கிப்
புந்தியை யொருங்க வைத்து
இனங்களைப் போக நின்று
விரண்டையும் நீக்கி யொன்றய்

மலங்களை மாற்ற வல்லார்
மனத்தினுட் போக மாகிச்
சினங்களைக் களைவர் போலுந்
திருப்பயற் றூர னூரே.

(ப—ரை) *திருப்பயற் றூரனூர்-திருப்பயற்றூரில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளி யிருக்கின்ற சிவபெருமான்; புலன்களைப் போக நீக்கி—மனம் ஐம்பொறிகள் வழியாகச் சென்று தான்கொள்ளும் நாற்றம், சுவை, ஒளி, ஊறு, ஓசையாகிய விடய போகங்களை நீக்கி; புந்தியை ஒருங்கவைத்து (அம்மனத்தால் தரப்படும் அவ்விடய போகங்களை நுகர்தற்கு இடமாகிய புத்தியை (மனம், ஐம் பொறிகள் விடயங்களோடு கீழ்நோக்கிச் செல்லுதலால் விடயஞானமும், அதுபற்றி விடய போகமும் உண்டாகாதபடி, புருட தத்துவத்துக்கு மேலே ஆன்மாவில்) ஒடுங்கச்செய்து; இனங்களைப் போகநின்று—(மனமானது விடயங்களைப் பற்றுதற்குத் துணையாகவுள்ள) தன் இனங்களாகிய ஐம்பொறிகள், ஐம்பூதங்கள், சூக்குமதன் மாத்திரை ஆகிய இவை தன்னைவிட்டு நீங்கும்படி (மேலே சிவத்தை நோக்குதலில்) வழுவாமல் நிலைபெற்று நின்று; இரண்டையும் நீக்கி ஒன்றாய்—(அங்ஙனம் கீழே விடயத்தை நோக்கிச் செல்லுதலை நீக்குதலால்) மனத்தை இரண்டு பட்ட தன்மையினின்று நீக்கி (சிவத்தை நோக்கும்) ஒரே தன்மை யுடையதாகச் செய்து; மலங்களை மாற்ற வல்லார்— (அங்ஙனம் மனம் சிவத்தைப் பற்றுதலால் அதன்கண் அருள்ஒளி நிரம்பப்பெற்றுச் சிவத்தன்மை யடைதலால்) ஆணவம், கன்மம்—மாயை மலங்களைத் தங்களினின்றும் முற்றிலும் நீங்கச் செய்யும் ஆற்றலுடைய அடியார்களுடைய; மனத்தினுட் போக மாகி—தூயமனத்தில் சிவயோக இன்பமாயிருந்து; சினங்களைக் களைவர் – பஞ்சக்கிலேசமாகிய காமவெகுளி, மயக்கங்களை முற்றிலும் நீக்குவர்.* 3.

**வி—ரை.** புலன்களைப் போகம் நீக்கி—உருபுமயக்கம்-புலன்களினது போகம்; நாற்றம், சுவை, ஒளி, ஊறு, ஓசைகளாலாகிய விடயபோகம். இந்த விடய போகத்தை நீக்கினாலல்லது கீழே கூறப்படுகிற "மனத்தினுள் சிவயோக போகம்" உண்டாகாதாதலால், " புலன்களது போகம் நீக்கி " என்றார். புந்தியை ஒருங்கவைத்து—விடயபோகம் நுகர்தற்கு இடமாயிருக்கிற புத்தியானது தூயமனத்தோடு சேர்ந்து ஆன்மாவில் ஒடுங்கினாலொழிய அம்மனத்தினுள் சிவயோக போகம் உண்டாகாதாதலின், புந்தியை ஒருங்கவைத்து என்றார். இனங்களைப் போகின்று—புத்தி விடய போக்கியமாயிருப்பது. அது மனத்திலிருந்து கொள்ளுகிற விடய ஞானம் பற்றியாதலாலும் சிவயோகபோகம்நுகர்தற்குத்தகுதியாகும்படி, மனம், தன் இனங்களிலிருந்து நீங்கி, சிவத்தைப் பற்றவேண்டுவதாதலாலும்இனம்என்பதற்கு மனத்தைச் சேர்ந்த இனங்கள்என்று உரை செய்யப்பட்டது. இரண்டையும் நீக்கி ஒன்றாய்-மனமானது மேலே சிவத்தைப்பற்றுவதற்கும், கீழேவிடயத்தைப் பற்றுவதற்கும் கருவியாயிருத்தலால் இரண்டு பட்ட தன்மையுடையதாக இருக்கிறது. மனம் தன் இனங்களோடு கீழே விடயத்தைப் பற்றுதலை விடுத்து மேல் சிவத்தைப்பற்றி சிவத்தன்மை அடையும்போது, இனங்களெல்லாம் மனத்தினிடத்தில் ஒடுங்குதலால் ஒன்றுபட்ட தன்மையது ஆதலின் 'இரண்டையும் நீக்கி ஒன்றாய்' என்றார். அப்பொழுது இனங்கள் யாவும் அருள் ஒளியினாலே சிவகரணங்களாகிச் சிவகரணமான மனத்தோடு ஒன்றுபடுகின்றன. கீழ் நோக்கிச்செல்லும் மனத்தை "கடிமனம்" என்றும், மேல் நோக்கிச் செல்லும் மனத்தை " மனமணி" என்றும் அடிகள் பிறிதோர் தேவாரப் பதிகம் தனித்திருநேரிசை 4வதுபாட்டில் கூறியிருத்தல் காண்க. திருமூலரும் திருமந்திரம் (1638)-வது

"மனத்திடை நின்ற மதிவா ளுருவி
இனத்திடை நீக்கி யிரண்டற வீர்த்துப்
புனத்திரை யஞ்சும் போகாமல் மறித்தால்
தவத்திடை யாமொளி தன்னொளி யாமே"

என்ற பாட்டில் இக்கருத்தைக் கூறி யருளினார்.

அவர் சிவத்தைப் பற்றி நிற்கும் மனத்தை "மன்மனம்" என்றும், அந்த "மன்மனத்துள்ளே" விடயத்தைப்பற்றி நிற்கும் மனம் ஒடுங்கி ஒன்றுபடுகின்றது என்னும் கருத்தை "மன்மனத் துள்ளே மகிழ்ந்திருப் பார்க்கு, மன்மனத் துள்ளே மனோலய மாமே" என்று திருமந்திரம் 620-பாட்டில் கூறுகின்றார். மலங்களை மாற்றவல்லார் - அருள் ஒளி நிறைந்து சிவகரணமான தூய மனத்தில் இருள்மலஞ் சேராதாதலின் "மலங்களை மாற்றவல்லார்" என்றார். மனத்தினுட் போகமாகி - ஆன்மா அருளில் அடங்கித் தெள்ளறிவு அடைந்து அதன் கருவியாகிய மனமும் அதனோடு சேர்ந்து மெய்யுணர்வு அடைதலால், அம்மெய்யுணர்வு காரணமாக, யோகநிலையிலுள்ள இன்பப் பிரமை உண்டாகிறது. இந்த இன்பப் பிரமையை அடிகள் இங்கே போகம் என்று கூறினார். சினங்களைக்களைவர்-சினம் என்பது இங்கே வெகுளியையும் அதற்கு ஏதுக்களாயுள்ள மயக்கத்தையும், காமத்தையும் குறிக்கின்றதாதலின் சினங்களென்று பன்மையில் கூறினார். "சினம் மலி அறுபகை" என்று திருஞானசம்பந்த அடிகள், திருச்சிவபுரம் தேவாரப்பதிகம் பாட்டு ௫-ல் கூறியிருத்தல் நோக்குக. "மனத்தினுட் போகமாகிச் சினங்களைக் களைவர்" என்றதனாலே மனத்தினுள் சிவயோக போகமாதல், விடயபோகத்தில், உயிரைச் செலுத்துகின்ற காமம், வெகுளி, மயக்கங்களை நீக்குதற்குக் காரணமாயுள்ளது என்று கூறப்பட்

டது. "அருள் ஒளி முன் மலஇருள் நில்லாதாதலின்" ஈண்டுக் கூறப்பட்டமனம், பும்சத்துவமலம் முற்றிலும் நீங்கி, சுத்தமாயையில் உள்ளது. பும்சத்துவ மலமுடைய பிரகிருதி மாயையில் விளங்கும் அந்தக்கரணங்களிற்போல பற்றுகிற மனமும், கொண்டெழுப்பும் அகங்காரமும், சிந்திக்கும் சிந்தையும், தெளிந்து துணியும் புத்தியும் ஆகிய வேறுபாடுகள் சுத்தமாயை அந்தக்கரணங்களில் இல்லை. தெளிவுணர்வு அடைந்து சிவயோக நிலையிலுள்ள உயிர் சிவனையே மெய்ப்பொருளாகத் தெளிந்து பற்றி நிற்குமாதலின், இந்த வேறுபாடுகள் சிறிதும் இருத்தல் முடியாது. அதனாலே, மனம் புத்தி, சிந்தை என்பன ஒருபொருட் சொற்களாகின்றன. அடிகள் இந்தப் பாட்டில் உயிர் அருளால் சிவனை அறியும் நெறி அறிந்து தவத்தினால் யான் எனது என்னும் செருக்கு நீங்கப்பெற்றுச் சிவயோகபோக இன்பம் அடைதலைக் கூறுகின்றார். இந்தச் சிவயோகபோக நிலை சிவஞானபோதம் ௧௦-ஆம் சூத்திரத்தில் கூறப்பட்டிருக்கிறது.

நா.-ரு திருவேகம்பம்-திருக்குறுந்தோகை.

ருஉ போறிப்பு லன்களைப் போக்கறுத் துள்ளத்தை
நேறிப்ப டுத்துநி னைந்தவர் சிந்தையுள்
அறிப்பு றுமமு தாயவ னேகம்பங்
குறிப்பி னூற்சென்று கூடித் தொழுதுமே.

(ப-ரை) உள்ளத்தைப் பொறி புலன்களைப் போக்கு அறுத்து - உள்ளத்தை ஐந்து பொறிகளின் வழியாய் விடயங்களிடத்துச் செல்லுதலை அறவே ஒழித்து; நெறிப் படுத்து - சிவபெருமானிடத்துச் செல்லும் வழியிற் பொருந்

தும்படி செய்து; நினைந்தவர் சிந்தையுள் - அவனையே எப்பொழுதும் நினைந்துகொண் டிருக்கிறவரது தூய உள்ளத்தில்; அறிப்பு உறும் அமுதாயவன் - (பேரின்ப) உணர்வை அடைவிக்கும் அமுது போன்று பேரின்பப் பொருளாயிருக்கிறவனாகிய; ஏகம்பம் - திருக்கச்சியில் (காஞ்சிபுரத்தில்) கோயில் கொண்டெழுந்தருளி யிருக்கிற ஏகம்பநாதனை; குறிப்பிணுற் கூடிச் சென்று - அவனுடைய திருவடிகளைச் சேர்தல் என்னும், மனத்தாலுணரப்படும் ஒரே கருத்துடன் (அடியார்களாகிய நாமெல்லாரும்) சேர்ந்து; தொழுதும் - வணங்குவோம், (வம்மின்.) 4

(வி-ரை) பொறி புலன்களை — பொறி - இந்திரியங்கள்; புலன்களை - விடயங்களிடத்து, வேற்றுமை உருபு மயக்கம். போக்கு அறுத்து - உலக நெறியை முற்றிலும் விட்டு; போக்கு முதனிலைத் தொழிற் பெயர்; செல்லுதல். படுதல் - பொருந்தல், படுத்தல் - பிறவினை, பொருந்தும்படி செய்தல். நெறிப்படுத்து - வீட்டு நெறியிற் செலுத்தி; நெறிப்படுத்து என்ற இரண்டு சொற்கள் ஒரு சொல்நீர்மைப்பட்டு, செய்து என்னும் வாய்பாட்டு வினையெச்சமாய் நினை என்கிற வினையோடு முடிந்தது. சிந்தை, உள்ளம், என்பன ஒரு பொருட் சொற்கள். அறிப்பு உறும் அமுது ஆயவன் - அறிப்பு - உணர்வு; அறிப்பு - பு - தொழிற் பெயர் விகுதி; உறும் - அடைவிக்கும், பிறவினைப் பொருளில் வந்தது; அமுது ஆயவன் - பிறப்பு இறப்புக்களை நீக்கும் இன்பப் பொருளாயுள்ளவன். "மத்தகஞ் சேர்தனி நோக்கினன் வாக்கிறந் தூறமுதே-யொத்தகஞ் சேர்ந்தென்னை யுய்யநின்றோன்" என்று திருக்கோவையார் 106-வது பாட்டுக் கூறுதல் காண்க. முன்னைய 51-வதுபாட்டில் 'மனத்தினுட்போகமாகி' என்பதும்.

இப்பாட்டில் 'அறிப்புறும் அமுதாயவன்' என்பதும் ஒரே பொருளன. குறிப்பு என்பது " மனத்தாற் குறித்துணரப் படுவது." தொல்காப்பியம் சொல்லதிகாரம் 297-வது சூத்திரம் சேனாவரையர் உரை. தொழுதும் - தும் - எதிர்காலம் காட்டும் விகுதி. வம்மின்-என்பது குறிப்பெச்சம் "வம்மின் அடியீர் நாண்மலரிட்டுத் தொழுதுய்ய" என்று திருஞான சம்பந்த அடிகள் திருவீழிமிழலைத் தேவாரம் 3-வது பாட்டிற் கூறுதல் காண்க. நாம்-தோன்றா எழுவாய், தொழுதும்-பயனிலை. உலக நெறியில் விடய போக நுகர்ச்சியை முற்றிலும் விட்டு வீட்டு நெறியில் சிவபோக நுகர்ச்சியை நாடிச் சிவபெருமானை அருளுணர்வினால் தொழும் அடியார்களது தூயவுள்ளத்தில் சிவபெருமான் பேரின்ப உணர்வுப்பொருளாயிருப்பன் என்ற உண்மை இப்பாட்டிற் கூறப்பட்டது. இதுவே சிவபெருமானை அறியு நெறியாகும்.

### நா-ச. திருநல்லூர். திருவிருத்தம்.

ரு௫ செஞ்சுடர்ச் சோதி பவளத் திரடிகழ் முத்தனைய
நஞ்சணி கண்டனல் லூருறை நம்பனை [நானொருநாள்
துஞ்சிடைக் கண்டு கனவின் றலைத்தொழு தேற்க [வன்றன்
நெஞ்சிடை நின்றக லான்பல காலமு நின்றனனே

(ப-ரை) செஞ்சுடர்ச் சோதி பவளத்திரள்-சிவப்பு நிறமான தீயின்கண்ணுள்ள ஒளிபோல விளங்கும் பவளத் தொகுதியையும்; திகழ் முத்து(திரள்)-ஒளி விளங்குகின்ற முத்துக்களின் தொகுதியையும்; அனைய-போன்று விளங்கும்

நஞ்சு அணி கண்டன்-கடலினின்றெழுந்த ஆலகால நஞ்சைத் தரித்த கழுத்தை உடையவனும்; நல்லூர் உறை நம்பனை-திருநல்லூரில் திருக்கோயில்கொண் டெழுந்தருளி யிருப்பவனுமாகிய சிவபெருமானை; ஒருநாள் - முன் ஒரு நாளில்; நான் துஞ்சிடைக்கனவின்தலைக்கண்டு தொழுதேன்கு - நான் உறங்கும்பொழுது கனவினிடத்துக் கண்டு கைகளிரண்டையும் கூப்பி வணங்கினவனாகிய அடியேனிடத்தில்; அவன்—(அவ்வாறு நான் வணங்கின நாள் தொட்டு) சிவபெருமான்; நெஞ்சிடை நின்று அகலான் - எனது நெஞ்சை விட்டு நீங்காதவனாய்; பலகாலமும் - எப்பொழுதும்; நின்றனன் - நிலைபெற்று நிற்கின்றான். தோழீ இஃது என்ன வியப்பு என்பது குறிப்பெச்சம்.

(வி-ரை) இந்தப்பாட்டு ஒரு தலைவி தன் தலைவனைப்பற்றித் தோழிக்குக் கூறிய கூற்றாக அகப்பொருட்டுறையில் வைத்துப் பாடப்பட்டது. மயக்க அறிவு நீங்கித் தெள்ளிய அருள் அறிவு விளங்கப்பெற்ற அடியார்களுடைய தூய நெஞ்சில் சிவபெருமான் எப்பொழுதும் பேரொளியாய் விளங்குகின்றான் என்பது இப்பாட்டின் கருத்து. செஞ்சுடர்ச் சோதிப் பவளத்திரள் - சுடர் என்பது இங்கே ஆகுபெயராய்ச் சுடரையுடைய தீயைக் குறிக்கிறது; சோதி-ஒளி, பவளத்திரள்-பல பவளங்கள் சேர்ந்த தொகுதி. பவளம் தீயைப் போல ஒளி விளங்கும் சிவந்த நிறமாயிருத்தலின் செஞ்சுடர்ச் சோதிப் பவளத்திரள் என்றார். திகழ்முத்து - திரள் என்ற சொல்லை முத்துக்கும் கூட்டுக. முத்துத்திரள் போல வெண்மை நிறம் சிவத்தினது தன்னியலுக்கும் பவளம்போலத் தூய சிவந்த நிறம் பொது இயலுக்கும் உவமைகளாகக் கூறியவாறும். வெண்ணிறமான பளிங்கானது, தான் எந்த எந்த

நிறப்பொருளைச் சாரினும் அந்த அந்த நிறப் பொருளாய்க் காட்டுதலன்றி அப்பொருள்களினது நிறம் யாதின்பாலும் தோயாதிருத்தல்போல சிவம் எந்த உயிர்ப் பொருளைச் சாரினும் தான் அதனைப் பற்றாது அதனைக் கடந்து மிக்காய் விளங்குதலை வெண்மை நிறம் குறிக்கிறது. பவளநிறம் போன்ற தூய சிவப்பு நிறம் தூய அன்பைக் குறிக்கிறது. சிவம் எல்லா உயிர்களுடனும் வேறறக் கலந்து அவ்வுயிர்களேயாய் அவ்வுயிர்களெல்லாம் தன்னைப்போலப்பேரின்பம் அடைதல் வேண்டும் என்னும் பேரன்பை உடையவனா யிருத்தலைத் தூய சிவப்பு நிறம் குறிக்கிறது. இன்-சாரியை. கனவின்தலை - தலை ஏழாம் வேற்றுமை யுருபு. பல்காலம் - 'பல்லாண்டு' என்பது எக்காலத்தையும் குறித்தல் போல, பலகாலம் என்பதும் எக்காலத்திலும் என்று பொருள் படும். நின்றனன் - இயல்புபற்றி அல்லது தெளிவுபற்றி நிகழ் காலத்தாற் கூறற்பாலது இறந்த காலத்தாற் கூறப் பட்டது. இருள்மல நிலைக்குக்கீழ் 32-வது பாட்டு "உள்ளத்தே நிற்றியேனும் கள்ளத்தே நிற்றி" என்று கூறுதலானும், அருள் நிலைக்குக் கீழ் 35, 37பாட்டுக்கள் (வந்து)"புறம்பயம்நம் மூரென்று போயினரே" என்று கூறுதலானும், 38-வது பாட்டு "வெள்ளரோமென்று நின்றார்"என்று கூறுதலானும், அருளுரு நிலைக்குக்கீழ் 47-வது பாட்டு "புல்லிய மனத்துக் கோயில் புக்கனர்" என்று கூறுதலானும், அறிவும் நெறிக்குக்கீழ் இந்த 53-வது பாட்டு "நெஞ்சிடை நின்றகலான் பல்காலமும் நின்றனனே" என்று கூறுதலானும் விளங்குகிற வேற்றுமைக் கருத்துக்களின் அழகை நோக்குக. இவ் வேற்றுமைக் கருத்துக்கள் பல்வேறு நிலைகளிலுள்ள உயிரின் பக்குவங்களுக்கு ஏற்ப இறைவனது அருட்செயலைக் குறிக்கின்றன. திருநாவுக்கரசு அடிகள், ஒன்றாக்கொன்று அடியார்

உள்ளத்தில் தொடர்ந்து ஏறி நிகழும் அருட்செயல்களைக் குறித்துப் பலபதிகங்களில் பலபாட்டுக்களில் பாடியதை உமாபதி சிவாசாரியார் எடுத்துத் திரட்டி இங்கு நம்மனோர் அறிய வைத்திருப்பது குறிப்பிடத்தக்கது. "நெஞ்சிடை நின்றகலான்" என்றதனாலே அருள்நெறி நின்று அறியு நெறியாகிய சிவயோக நிலையைக் குறிக்கிறது.

நா - ச. தனித்திருவிருத்தம்.

௫ச உன்மத் தகமலர் சூடி யுலகந் தொழச்சுடலைப்
பன்மத் தகங்கொண்டு பல்கடை தோறும் [பலிதிரிவான்
என்மத் தகத்தே யிரவும் பகலும் பிரிவரியான்
தன்மத் தகத்தோ ரிளம்பிறை சூடிய சங்கரனே.

**(ப — ரை)** *தன்மத்தகத்து ஓர் இளம்பிறை சூடிய சங்கரன் - தனது சென்னி மேலே இளம்பிறைச் சந்திரனைத் தரித்திருக்கின்ற சிவபெருமான்; உன்மத்தகம் மலர் சூடி - (கரு) ஊமத்தம் பூக்களைச் சென்னியின்மேல் அணிந்து கொண்டு; உலகம் தொழ - உலகத்திலுள்ளார் வணங்கி நிற்க; சுடலைப் பல்மத்தகம்கொண்டு - சுடுகாட்டிலுள்ள பற்களோடு கூடிய தலையோட்டைக் (கையில்) வைத்துக்கொண்டு; பலி பல்கடை தோறும் திரிவான்-பிச்சை எடுக்கப் பல மனைவாயில் தோறும் சென்று திரிகின்றான்; என் மத்தகத்தே பகலும் இரவும் பிரிவு அரியான் - (அவன்) என் மனத்தினிடத்துப் பகலும் இரவுமாகிய எக்காலத்திலும் பிரியாமலிருக்கின்றான்.* 6

**(வி — ரை)** *சங்கரன் வடமொழிச் சொல். சம்-இன்பம், கரன்-செய்கின்றவன்; உயிருக்கு இன்பத்தைச் செய்கிறவன்;*

பல + மத்தகம் — பன்மத்தகம், மத்தகம் என்பது தலை. அது இங்கே தலையோட்டைக் குறிக்கிறது. சிவபெருமான் பிரமனது தலையோட்டில் பலி எடுக்கின்றான் என்பது புராண வரலாறு. பலி திரிவான் - பலிக்குத் திரிவான்; பலி எடுக்கத் திரிவான். மனத்தகத்தே என்பது, எதுகைநோக்கி மத்த கத்தே என நின்றது. அரியான் - அருமை என்ற பண்புப் பெயர் அடியாகப் பிறந்த குறிப்பு வினை முற்று. பிரிவு அரி யான் - இங்கே அருமை இன்மை என்னும் பொருள்பட நின்றது, எக்காலத்திலும் பிரியமாட்டான்.

நா — ச. தனித்திருநேரிசை.

௫௫ புள்ளுவ ரைவர் கள்வர்
புனத்திடைப் புகுந்து நின்று
துள்ளுவர் சூறை கொள்வர்
தூநெறி விளைய லொட்டார்
முள்ளுடை யவர்கடம்மை
முக்கணான் பாத நீழல்
உள்ளிடை மறைந்து நின்றங்
குணர்வினு லெய்ய லாமே.

(ப — ரை) புள்ளுவர் ஐவர் கள்வர் - ஐம்பொறி வேடர்களாகிய ஐந்து திருடர்கள்; புனத்திடைப் புகுந்து நின்று - உலகமாகிய பாலைவனத்தில் சென்று நின்று; துள்ளுவர் சூறை கொள்வர் - வீட்டு நெறியிலொழுகும் மாந்தராகிய வழிப்போக்கரிடம் குதித்து அவர்களுடைய மெய் யறிவு ஆகிய பொருளை ஆறலைத்துக் கொள்ளை செய்வாராகி; தூநெறி விளையல் ஒட்டார் - அவர்கள் சிவபெருமானை அடையச் செய்யும் தூயநெறியில் ஒழுகி மெய்யறிவு முதிர்தற்கு விட

மாட்டார்; முள்ளுடையவர்கள் தம்மை - தீயசெயல்களை உடைய அந்த ஐம்பொறி வேடர்களை; முக்கணான் பாதநீழல் உள்ளிடை மறைந்து - மூன்றுகண்களை உடைய சிவபெருமானுடைய இரண்டு திருவடிகளின் நிழல் வியாபகத்துக்குள் தன்முனைப்பில்லாமல் அடங்கி அவர்கள் அறியாமல்மறைந்து; அங்கு நின்று உணர்வினால் - அவ்விடத்தில் நின்று (திருவடி நீழலிலடங்கி நிற்றலினாலுண்டாகிய)மெய்யுணர்வினைத் துணைக்கொண்டு; எய்யலாம்-(வில்லின் கண் அம்பை) எய்து (வெல்லலாம்). ஆதலின் அடியார்களே சிவபெருமானுடைய திருவடி நீழலைச் சார்ந்து ஐம்பொறிப்பகையை வெல்லுமின் என்பது குறிப்பெச்சம். 7

(வி – ரை) துள்ளுவர், சூறை கொள்வர் - இந்த இரண்டு வினைமுற்றுக்களும் வினையெச்சப் பொருள் தந்து நின்றன. துள்ளுவர் என்பது ஐம்பொறிகள் உயிருக்குள் அடங்காது நிற்றலையும், சூறை கொள்வர் என்பது அவைகள் உயிரை உலக விடய நெறியில் ஈர்த்துச் செல்லுதலையும் குறிக்கின்றன. தூநெறி விளையல் ஒட்டார் - தூநெறி - மயக்க அறிவினின்று நீங்கிய தூயநெறி. அது சிவமே மெய்ப்பொருள் எனத் துணிந்து அப்பொருளை அடையச்செல்லும் பேரின்ப வீட்டுநெறி. சிற்றின்பத்தைத் தரும் மல அழுக்கு விரவிய உலக நெறியினின்று வேறு பிரித்தற்கு அதனைத் தூநெறி என்றார். தூநெறி விளையல் என்பது-வீட்டு நெறியிலொழுகி மெய் அறிவு மேலும் மேலும் முதிர்தல். முள்உடை அவர்கள் - முள் என்பது இங்கே பிறரைத் துன்புறுத்தும் தீவினையைக் குறிக்கிறது. உடைய என்பது உடை எனக் குறைந்து நின்றது. முக்கணான் பாத நீழல் உள்ளிடை மறைந்து -முக்கண்ணான் என்பது முக்கணான் எனக்குறைந்தது.உள்ளிடை-

உள்ளிடம், அதாவது திருவடி நீழல் வியாபகத்துக்குப் புறமல்லாதது. பாத நீழல் உள்ளிடை மறைந்து நின்று-மறைந்து நிற்றலாவது மாந்தர் சிவபெருமானுடைய அறிவு வேட்கை செயல்களினது வியாபகத்துக்குள் முறையே தங்கள் அறிவு வேட்கை செயல்களை வியாப்பியமாய் அடங்கச் செய்து தன் முனைப்பின்றி நிற்றல். இவ்வாறு அவர்கள் அடங்கி நிற்கும் பொழுது அவர்களுக்குப் பாச உலகம் தோன்றாது ஆதலின், மறைந்து என்றார். உணர்வு - மேலே கூறியவாறு அறிவு வேட்கை செயல்கள் அடங்கி நிற்றலானுண்டாகும் மெய்யுணர்வு. எய்யலாம் - எய்யல்-வில்லினால் அம்பு எய்யல்; வில் இங்கு மனம், அம்பு என்பது உணர்வு, புள்ளுவர் என்பதற்கு ஏற்ப எய்யலாம் என்றார். அது இங்கே வெல்லுதல் என்னும் பொருள்பட நின்றது. உவமப் பொருளும் உவமிக்கப்படும் பொருள்களும் முற்றிலும் வெளிப்பட உரைக்கப்படாததால் இப்பாட்டு ஏகதேச உருவகம். சிவபெருமானுடைய திருவடி நீழலாகிய அருள் வியாபகத்துள் அடங்கி நின்றால் அல்லாமல் வீட்டு நெறியிலொழுகும் மாந்தர்கள் உலகப் பற்றுக்களை ஒழித்து, மெய்யுணர்வை அடைதல் முடியாது என்பது இப்பாட்டில் அடங்கியுள்ள கருத்து. செயப்படு பொருள்களாகிய ஐம்பொறிகளை உயிருள்ள வினைமுதல்போல உயர்திணையில் வைத்து அடிகள் கூறியதால்,ஐம்பொறிகள் உயிருக்குளடங்கி, அதன் வயப்பட்டு ஒழுகாது, அதனைத் தம் வயப்படுத்தித் தாங்கள் விரும்பும் விடயபோகத்தில் ஈர்க்குச் செல்லும் திறன் குறிப்பிடப்பட்டது.

### ௪—க. திருக்கழுமலம். திருத்தாளச்சதி-பண்-வியாழக்குறிஞ்சி.

௫௬. பத்திப்பேர் வித்திட்டே பரந்த வைம்பு லன்கள்வாய்ப்
பாலே போகா மேகாவாப் பகையறும்
வகைநினையா

முத்திக்கே விக்கத்தே முடிக்கு முக்கு ணங்கள்வாய்
மூடா வூடா நாலந்தக் கரணமு மொருநெறியாய்ச்
சித்திக்கே யுய்த்திட்டுத் திகழ்ந்த மெய்ப்ப ரம்பொருள்
சேர்வார் தாமே தானகச் செயுமவ னுறையுமிடங்
கத்திட்டோர் சட்டங்கங் கலந்திலங்கு நற்பொருள்
காலே யோவா தார்மேவுங் கழுமல வளநகரே.

(ப-ரை.) பகை அறும்வகை நினையா - காமம் முதலிய ஆறு பகைகளும் அறவே நீங்கும் வண்ணம் நினைந்து; பரந்த ஐம்புலன்கள்வாய்ப் பாலே போகாமே - உலக போகவிடயங் களிற் பரந்து செல்கின்ற ஐந்து பொறிகளிடத்துச் சிறிதும் செல்லாமல்; முத்திக்கு இக்கத்தே முடிக்கும் முக்குணங் கள் வாய்-வீடுபேற்றிற்குத் தடையினையே விளைக்கும் சாத் துவிகம், இராசதம், தாமதம் என்னும் முக்குணங்களிடத்து; மூடா (தும்) ஊடா(தும்)-மறைவுபடாமலும், பிணங்காமலும்; காவா - தங்களைக் காத்தும்; நால் அந்தக்கரணமும் ஒரு நெறியாய் - நான்கு அந்தக்கரணங்களையும் ஒடுக்கிச் சித்தம் (சிந்தை) என்ற ஒரு வழிப்படுத்திச் சிந்தைசெய்து; சித்திக்கே உய்த்திட்டு (உம்) - மெய்யறிவு பெறுதற்கே செலுத்தியும்; பேர் பத்தி வித்திட்டு (உம்) - பேரன்பு ஆகிய விதையை விதைத்தும்; திகழ்ந்த மெய்ப் பரம்பொருள் சேர்வார் - அவ் வாறு செய்ததன் பயனாகத் தங்கள் உள்ளத்திலே அருளொ ளியாய் விளங்குகிற உண்மையாயும் மேலானதாயு முள்ள பொருளை இடைவிடாது நினைத்துக்கொண்டிருக்கிற அடியார் களை; தானகச் செயும்அவன் உறையும் இடம்-தன்னோடு இரண்டறக் கலக்கும்படிசெய்கிற சதாசிவமூர்த்தி (இலிங்க வடிவில்) திருக்கோயில் கொண்டெழுந்தருளி இருக்கும் இட மானது; கத்திட்டோர்-அருள் நூல்களைக் கற்றுக் கேட்டுச்

சிந்தித்துத் தெளிந்த பெரியார்; சட்டங்கம் - தங்களுடைய செம்மை அறிவுடன்; கலந்து இலங்கு நல்பொருள்கால் --அத்துவிதமாய்ச் சேர்ந்து விளங்கும் நற்பொருளிடத்து; ஓவாதார் மேவும் - (இடையறாது சிந்தை செய்தலை) ஒழியாதவராகி உறைகின்ற; வளம் கழுமல நகர் - செழிப்பான திருக்கழுமல நகர் ஆகும். ஆகையாலே, அடியார்களே திருக்கழுமலத்தில் வீற்றிருக்கின்ற சதாசிவப் பெருமானைத் தொழுது உய்மின் என்பது குறிப்பெச்சம். 8

(வி-ரை). பகை அறும் வகை நினையா - இங்கே கூறப்பட்ட ஆறு பகைகளும் பிரகிருதி மாயைப் போகத்தின் உன்முகத்திற்கு ஏதுவாகிய அவிச்சை, ஆங்காரம், அவா, ஆசை, கோபம் என்னும் பஞ்சக் கிலேசங்களுள் அடங்கும். மோகம்-அவிச்சை; மதம் - ஆங்காரம்; காமம் - அவா; உலோபம் --ஆசை; குரோதமும் மாற்சரியமும் கோபத்திலடங்கும். பின்னே கூறப்படுகிற ஐம்புலனடக்க முதலியன வெல்லாம் பஞ்சக் கிலேசங்களை ஒழித்தற்கு ஆதலின் 'பகையறும் வகை நினையா' என்றார். பரந்த ஐம்புலன்கள்வாய்ப்பாலே போகாமே (உம்)-புலன்கள் என்ற சொல்லுக்கு, மேலே 51-வது பாட்டின் கீழ்க் கூறிய குறிப்புரையைக் கொள்க. வாய் - ஏழாம் வேற்றுமை உருபு. பால் - பகுதி, ஒரு சிறிதும்; ஏ. அசை. போகாமே - போகாது, மே என்பது எதிர்மறை பிடத்து வந்த வினையெச்ச விகுதி. தொக்கி நின்ற 'உம்' விரித்துக் கூறப்பட்டது. முத்திக்கு இக்கத்தே முடிக்கும்- இக்கு+அத்து+ஏ —இக்கத்தே, இக்கு- தடை, ஏ - தேற்றப் பொருளில் வந்தது. முத்திக்கே என்பதிலுள்ள ஏற்று ஏகாரம் அசை. முக்குணங்கள் வாய்-வாய்-ஏழாம் வேற்றுமை

உருபு. மூடா, ஊடா என்பனவற்றில்' து – என்னும் எதிர்மறை வினையெச்ச விகுதிகள் தொக்குநின்றன. எண் 'உம்'களும் தொக்குநின்றன. முக்குணங்கள் வாய் மூடாதும் முக்குணங்கள் வாய் ஊடாதும் என, விரிக்க. முக்குணங்கள் வாய் மூடல் என்பது, ஆன்மா முக்குணங்களிடத்து மறைந்து அவைகளின் மயமாய் விளங்கல். பிரகிருதி மாயா தத்துவங்கள் ஆன்மாவை உலகவிடய போகம் நுகரும் தன்மையிற் செலுத்தும் குண மயமாயிருத்தலின், முக்குணங்கள் வாய் மூடா என்றார். முக்குணங்கள் வாய் ஊடல் என்பது முக்குணங்களுடன் பிணங்கி எதிர்த்தல், (Opposition). மூடலும் ஊடலும் ஆகிய இந்த இரண்டு நிலைகளும் இன்றி முக்குணங்களும் தங்கள் சேட்டைகள் முற்றிலும் ஒழிந்து ஆன்மாவின்கண் அடங்கி நிற்றல் வேண்டும் என்பார், முக்குணங்கள் வாய் 'மூடா', 'ஊடா' என்றார். காவா - செய்யா என்ற வாய் பாட்டு உடன்பாட்டு வினையெச்சம். எண் உம்மை தொக்கி நின்றது. நால் அந்தக் கரணமும் ஒருநெறியாட்- நான்கு அந்தக்கரணங்களும் உலக போக நுகர்வின்கண் நான்கு நெறிகளிற் சென்று விடயித்தல்போ லல்லாமல் மெய்ப்பொருளைச் சிந்தித்தற் றொழிலைச் செய்யும் சித்தம் (சிந்தை) என்ற ஒரு நெறிப்பட்டு, "அளப்பருங் கரணங்கள் நான்கும் சிந்தையேயாக" என்று சேக்கிழார் அடிகள் பெரிய புராணத்தில் கூறியருளினமை காண்க. அவ்வாறு நான்கு அந்தக்கரணங்களும் சுத்தமாயையில் ஒருநெறிப்பட்டு, ஆன்மாவுக்குள் அடங்கி ஆன்மா, சிவத்தைச் சிந்திக்கவில்லையாயின் அதன் சிந்தையில் அருள்ஒளி விளங்கித் தெளிந்த அறிவுஉண்டாகாதாதலின், ஒருநெறியாய் என்றார். சித்திக்கே உய்த்திட்டு(உம்)- சித்தி என்பது இங்கே மெய்யறிவைக்குறிக்கிறது.எ,தேற்றப்

பொருளில் வந்தது. உய்த்திட்டு என்பதற்குப் பின் எண்'உம்' தொக்கு நின்றது. பத்திப்பேர் வித்திட்டும்-பத்திப்பேர் என்பதனைப் பேர்பத்தி என மாற்றுக. பேர்-பெரிய ; பேர்பத்தி - பேரன்பு, உலக நெறியில் காணப்படும் ஏகதேசப்பட்ட அன்பினின்றும் பிரித்தற்குப் 'பேர்பத்தி' என்றார். உயிரில் பொருள் உயிர்ப்பொருள் ஒன்றினையும் பற்றாது சிவம் ஒன்றனையே பற்றி நிற்கும் அன்பு பேரன்பு ஆகும் (absolute impersonal love). உலக விடயங்களைப்பற்றி நிகழும் ஞானரூபமாகிய புத்தி தத்துவத்தின் அராக நீங்கிய பொழுது முத்திக்கால எல்லை அளவும் நீங்காது நிற்கும் வாதனை ரூபமாய்ப் பொதுமையில் நிகழும் அராக தத்துவம் உலக விடயங்களிற் செல்லாது சிவத்தினைப்பற்றும் சிவஅராகமாய் வெளிப்பட்டு, இச்சா ரூபமாயுள்ள ஆன்மாவின் இச்சாசத்தியை முத்திக்கு ஏதுவாகிய சாதனங்களிற் செலுத்துதலால் பத்திப்பேர் வித்திட்டு என்றார். இவ்வுண்மை சிவஞான பாடியத்திலும் (156, பக்கம்) பௌட்கர ஆகமத்திலும் கூறப்பட்டுளது. திகழ்ந்த மெய்ப்பரம்பொருள் சேர்வார்தாமே - திகழ்ந்த - தெளிவு பற்றி இறந்த காலத்தாற் கூறப்பட்டது, மெய்ப்பரம்பொருள் -என்பதை மெய்ப்பொருள், பரம்பொருள் என விரிக்க. நிலையில்லாத உலகப் பொருளினின்று பிரித்தற்கு மெய்ப்பொருள் என்றும், உயிர்ப்பொருளினின்று பிரித்தற்குப் பரம்பொருள் என்றுங் கூறினர். சேர்தல் என்ற சொல்லுக்கு இடைவிடாது நினைத்தல் என்று பரிமேலழகர் திருக்குறள் முதல் அதிகாரத்தில் கூறியிருத்தல் காண்க. தாமே-தாம், ஏ அசை நிலைகள். தானைச் செய்தவன் உறையும் இடம் - தானைச் செய்தவன்- இருவேறு பொருள்களாயிருக்கிற தானும் (சிவமும்) அடியார் களும் வேற்றுமையின்றி ஒன்றெனும்படி அத்துவிதமாய்ச் சேரும்படிசெய்கிறவன். சிறப்பு இயலில்மெய்ப்பரம் பொருளா

யுள்ளவனே, பொது இயலில் திருக்கழுமலத்தில் சதாசிவ வடிவிலும் விளங்குகின்றான் என்பார், "மெய்ப்பரம்பொருள் சேர்வார் தாமே தானாகச் செய்தவன்" என்று கூறினார். கத்திட்டோர் என்பது கத்திட்டோர் என்று எதுகை நோக்கி வந்தது. இடு-பகுதிப்பொருள்விகுதி. 'பத்திப்பேர்' முதல் மூன்றாவது அடியில்உள்ள சேர்வார் வரை அடியார்களைப்பற்றிக் கூறப்பட்டகருத்துக்கள் 4-வது அடியில் கத்திட்டோர் என்ற சொல்லாற் கூறப்பட்டன. சட்டங்கம்-சட்டம்+கம்—சட்டங்கம். சட்டம்-செம்மை, கம்-அறிவு, சட்டங்கம்-செம்மை அறிவு. சிவத்தினையே நேர்மையாய் நினைப்பு மறப்பு அற நினைக்கும் அறிவு. கலந்திலங்கும் நற்பொருள் காலே-நற்பொருள் - நலமாகிய இன்பத்தினையே உயிர்களுக்கு எப்பொழுதும் செய்கின்ற பொருள், கால்-ஏழாம் வேற்றுமை யுருபு, ஏ - அசை. மூன்றாவது அடியில் திகழ்ந்த மெய்ப் பரம்பொருள் என்பது நான்காவது அடியில் 'இலங்கும் நற்பொருள்' என்றும், மூன்றாவது அடியில் 'தானாகச் செயும்' என்பது நான்காவது அடியில் 'கலந்து' என்றும் கூறப்பட்டன. ஓவாதார்-ஓவுதல்-ஒழிதல்-(சித்தித்தலை) ஒழியாதாராகி, அதாவது இடையறாது சிந்தித்துக்கொண் டிருக்கிறவர்களாகி. மூன்றாவது அடியில் சேர்வார் என்பது நான்காவது அடியில் ஓவாதார் என்றும் கூறப்பட்டது. இந்த அழகிய சந்தத் தேவாரப் பாட்டில் முதல் மூன்று அடிகளும், அடியார்களுடைய அக இலக்கணம் கூறி அத்தகைய அடியார்களுக்கு அருள் செய்யும் திருக்கழுமல நாதருடைய பெருமையும் கூறுகின்றன. நான்காவது அடி திருக்கழுமலத்தில் வாழ்கின்ற அடியார்களுடைய பெருமையைக் கூறுகின்றது. "மெய்ப்பரம்பொருள் சேர்வார் தாமே - தானாகச் செயுமவன்" என்றதனால், இச் செய்யுள்

'அறியு நெறி' கூறப்பட்டது. ஓர் ஊருக்குச் சிறப்பானது அதன்கண் வாழும் அடியார்களினுலும், அவ்வடியார்கள் சார்ந்து அருள் விளங்கச் செய்யும் திருக்கோயிலினுலும் உண்டாகிறது என்ற உண்மையும் இப்பாட்டிற் குறிப்பிடப்பட்டது. "ஐம்புலன்கள்வாய்ப்போகாமலும் முக்குணங்கள்வாய் மூடாமலும் ஊடாமலும் காவா" என்பதனுல் அடியார்கள் புத்தி தத்துவத்தின்வழி உலக விடயத்தைப் பற்ருது நின்று, விடயத்தின்கண் ணுள்ளதாகிய புறப்பற்றை ஒழித்தல் வேண்டும் என்பதும், "நாலந்தக் கரணமு மொருநெறியாய்ச் சித்திக்கே யுய்த்திட்டு" என்பதனுல், அவர்கள் அகங்காரத்தின் வழியும் மனத்தின் வழியும் தங்களைப் பற்ருது புருட தத்துவத்தின்கண் ணுள்ளதாகிய அப்பற்றை ஒழித்தல் வேண்டும் என்பதும், 'பத்திப் பேர் வித்திட்டு' என்பதனுல் முன் அசுத்த மாயையிலுள்ள அராக தத்துவத்தின்கண் பொதுமையாக நிகழ்ந்த தங்கள் இச்சையை அவர்கள் சிவனிடத்திலே திருப்பிச் சிவ அராகமாக மாற்றி, அவனது அருட்பேரொளியைத் தங்கள் தூய உள்ளத்தில் உணரும் இன்ப உணர்வு உடையவர்களாதல் வேண்டும் என்பதும் கூறப்பட்டன. பும்சத்துவ மலத்தோடுகூடிய ஆன்மா, உலக போகம் நுகரும் தன்மை (போத்திருத்துவம்) முற்றிலும் நீங்குதற்கு அவ்வுலகபோக நுகர்ச்சியிற் செலுத்துவனவாகிய மண் முதல் அசுத்தமாயா கலா தத்துவம்வரை உள்ள தத்துவங்களிற் ருேய்தலினின்றும் நீங்கித் தூய்மை அடைதல் வேண்டும் என்பதும் இப்பாட்டிற் கூறப்பட்டது.

## ச-க. திருவீழிமிழலை. பண்-மேகராகக்குறிஞ்சி.

ருள அகனமர்ந்த வன்பினரா யறுபகைசேற்
றைம்புலனு மடக்கி ஞானப்

புகலுடையோர் தம்முள்ளப் புண்டரிகத்
துள்ளிருக்கும் புராணர் கோயில்
தகவுடைநீர் மணித்தலத்துச் சங்குளவர்க்
கந்திகழச் சலசத் தீயுண்
மிகவுடைய புன்குமலர்ப் பொரியட்ட
மணஞ்செய்யு மிழலை யாமே.

(ப-ரை) ஐம்புலனும் அடக்கி - தமது ஐம்பொறிகளை யும் புறத்தே உலக விடயங்களிற் செல்ல வொட்டாது தம்மி டத்து (ஆன்மாவிடத்து) அடங்கி நிற்கச் செய்து; அறுபகை செற்று - காமம் முதலிய அறு பகைகளையும் வென்று; அகன் அமர்ந்த அன்பினர் ஆய் - புறம் சிறிதும் நோக்காது உயிரினிடத்து விளங்கும் நிறைந்த அன்பினை உடையவராய்; ஞானப்புகல் உடையோர்-அருளையே களைகணாகக் கொண்டு அதனுள் அடங்கித் தன்முனைப்பிழந்து ஒழுகுகிறவர்களு டைய; உள்ளம் புண்டரிகத்து உள்ளிருக்கும் புராணர் கோ யில் - இருதய தாமரையில் விளங்கி எப்பொழுதும் வீற்றி ருக்கும் பழமையாகிய சிவபெருமான் திருக்கோயில் (இருக் கிற இடமானது); சங்கு வர்க்கம் உள - சங்கு என்ற வகைக் குச் சேர்ந்துள்ளனவாகிய உயிர்ப் பிராணிகள்; தகவு உடை நீர் மணித்தலத்து - ஆழமும் பெரிதுமான நீரையுடைய அழ கிய தாமரைத் தடாகத்தில்; திகழ் அச்சலசத் தீ உள் - விளங் குகின்ற அந்தச் செந்தாமரைப் பூவாகிய ஓமகுண்டத் தீயின் கண்; மிக உடைய புன்கு மலர்ப் பொரிஅட்டி அம் மணம் செய்யும் மிழலையாம் - மிகுதியாக உடைய புன்னைவெண் மலர்களாகிய பொறிகளைப் பெய்து, தங்களுக்குள் அழகிய மணம் செய்கின்ற திருவீழிமிழலையாகும்.

(வி-ரை) அறு பகை செற்று - அறுபகை என்பதற்கு மேலே 56-வது பாட்டின் கீழ் எழுதப்பட்ட விளக்க உரையைப் பார்க்க. அகன் அமர்ந்த அன்பினராய் - அகன் அமர்ந்த அன்பு என்பதற்கு மேலே 56-வது பாட்டின்கீழ் எழுதப்பட்ட விளக்க உரையைப் பார்க்க. அகன், அகம் என்பதன் போலி. அகனமர்ந்த அன்பினராயுள்ளவர் அருளையே புகலிடமாகக் கொண்டு, அதனுள் தன்முனைப்பின்றி, அடங்கி நிற்கும் பொழுது அவர்களுக்கு அவ்வருளினிடத்து ஞேயப் பொருளாகிய சிவம் விளங்கித் தோன்றுதலால்,(சிவப்பிரகாசம். அ-சூ. ௩. ஞ.செ) "ஞானப்புகலுடையோர் தம்முள்ளப் புண்டரீகத்துள்ளிருக்கும் புராணர்" என்றார். அங்ஙனம் சிவம் அவர்களுள்ளத்தில் விளங்கித் தோன்றும் பொழுது, அவர்களுக்குப் பதிஞானமாகிய மெய்யறிவு விளங்குகின்றது. ஞானம்-அருள். புராணர் - முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம்பொருளா யுள்ளவர். கோயில்-இங்கே கோயிலிலிருக்கும் இடத்தை அல்லது ஊரைக் குறிக்கிறது - சங்கு உள வர்க்கம்-சங்கு வர்க்கம் உள என மாறுக, உள-பன்மைக் குறிப்பு வினையா லணையும் பெயர், உள்ளனவாகிய பிராணிகள். தகவு-தகுதி, ஆழத்தினாலும் அகலத்தினாலும் உண்டாகின்ற தகுதி. சலசம்-வடமொழிச் சொல். ஜலம்-நீர், சம்-தோற்றம், நீரிற்றோன்றிய தாமரை. இப்பாட்டின் முன் இரண்டு அடிகளில் சிவபெருமான் அடியார்களுடைய தூய உள்ளத்தில் உறைந்திருப்பவனென்பது கூறப்பட்டது. பின்இரண்டடிகளில் இயற்கை வருணனை கூறப்பட்டது. 'ஞானப் புகலுடையோர்......புராணர்' இதனால் 'அறிவு நெறி' கூறப்பட்டது.

நா.—௬. திருமழபாடி. திருத்தாண்டகம்.

௫அ. சுழித்துணையாம் பிறவிவழித் துக்க நீக்குஞ்
சுருள்சடையெம் பெருமானே தூய தெண்ணீ
ரிழிப்பரிய பசுபாசப் பிறப்பை நீக்கு
மென்றுணையே யென்னுடைய பெம்மான் [றம்மான்
பழிப்பரிய திருமாலு மயனுங் காணாப்
பரிதியே சுருதிமுடிக் கணியாய் வாய்த்த
வழித்துணையா மழபாடி வயிரத் தூணே
யென்றென்றே நானரற்றி நைகின் றேனே.

(ப—ரை.) *பழிப்பு அரிய திருமாலும் அயனும் காணாப் பரிதியே* - தேவர்களாலும் மக்களாலும் பழித்தற்கு முடியாத (அதாவது) (புகழ்தற்கு உரியவர்களாகிய) திருமாலும் அயனும் (முறையே அடியும் முடியும் தேடியும்) அவர்களால் அறியமுடியாத அருளாகிய தீப் பிழம்பாய் நின்ற ஞான சூரியனே; (அவ்வாறு தவவலியாலன்றி உடல் வலியால் நின்னைக் காண முயன்ற திருமால் அயன் இவர்களுக்கு நீ அறிதற்கரியவனா யிருந்தாலும், நின்னிடம் உண்மை அன்புடைய அடியார்களுக்கு நீ எளியவன் ஆதலின்); *நான் சுழிப்பிறவிவழித் துக்கம் நீக்கும்* - நான் (நின்னை ஆழநீர்ச்) சுழியைப் போலுள்ள உலக வாழ்க்கைப் பிறவிவழியில் நிகழும் துன்பங்களை ஒழிக்கின்ற; *துணையாம் தூயதெண்ணீர் சுருள்சடை எம்பெருமானே* - எனது துணையாய் மலம் நீங்கித் தெளிந்த சுத்த மாயையொளியாய் எனது (உள்ளத்தில் விளங்கும்) சுருண்ட சடையையுடைய எனது பெருமானே (1) (என்றும்); *இழிப்பு அரிய*-இகழ்ச்சிக்குரிய தல்லாத; *பசுபாசப் பிறப்பை நீக்கும் என்னுடைய பெம்மான் தம்மான் என் துணையே*-

உயிர்ப் பற்று உலகப் பொருட்பற்றுக்களாலுண்டாகிற உலக வாழ்வுப் பிறப்பினையும் (இறப்பினையும்) ஒழிக்கும் எனக்குக் கடவுளும் தலைவனுமாய் எனது உள்ளத்தில் உயிரருளொளி யாய் விளங்கும் என் துணையே (2) (என்றாம்); சுருதி முடிக்கு அணியாய் வாய்த்த வழித் துணையாம் மழபாடி வயிரத் தூணே - வேதாகமங்களினது சிரசுக்கு அழகாயும் அரிதிற் கிடைக்கப்பெற்ற எனது பேரின்ப வாழ்க்கை வழித்துணை யாகியும் எனது உள்ளத்தில் உணரப்படுகின்ற திருமழ பாடியின்கண் எழுந்தருளி யிருக்கும் வயிரத் தூண் போன்று அருட்பேரொளியாய் விளங்கும் சிவபெருமானே (3) (என் றாம்); என்று என்று- எனது நாவினாற் சொல்லிச் சொல்லி; அரற்றி நைகின்றேன் - (அன்பினால் அகங்குழைந்து உருகி) அழுது தன்வயமழிந்து நின் வயப்பட்டு நின்னோடு கூடிப் பேரின்பம் உணர்கின்றேன்.

(வி—ரை) முதலாவது அடியைச் சுழிப்பிறவி வழித் தூக்கம் நீக்கும் தூயதெண்ணீர் சுருள்சடை எம்பெருமானே என்று உரைநடை செய்க. சுழிப்பிறவி - ஆழநீர்ச் சுழியா னது தன்னைச் சேர்ந்த பொருளை நீருக்குள்ளே இழுத்து நீர் நிலைக்கு மேலே வரவொட்டாமற் செய்தல்போல, உலகவாழ்க் கைப் பிறவியானது மக்களை உலக விடயபோகத்தில் அமிழ்த்தி, அதினின்றும் தப்பிச் சிவன்திருவடியை அடைய வொட்டாமற் செய்தலினால், அடிகள் பிறவியைச் சுழியாக உருவகம் செய்தார். தூக்கம் - உலக வாழ்க்கையில் இன்ப மிருப்பினும் அவ்வின்பம் கணந்தோறும் மாறுவதாய்ப் பேரின் பத்தை நோக்கத் துன்பமாயிருத்தலினால் பிறவி வழித்தூக்கம் என்றார். துணையாம் - என்பதில் ஆகும் என்பது ஆம் என நின்றது. தூயதெண்ணீர் - தெள் + நீர் — தெண்ணீர்.

நீர் என்பது இங்கே ஒளியைக் குறிக்கிறது. நவமணிகளின் ஒளிநீர் என்று பேச்சுவழக்கிலும் கூறப்படுகின்றது. தூய தும் தெளிந்ததுமான சுத்தமாயையின்கண் விளங்கும் அருள் ஒளி ; அசுத்தமாயை பிரகிருதிமாயைகளில் மலத்துடன் விர விய ஒளியினின்றும் பிரித்தற்குத் தூயதெண்ணீர் என்றார். இந்த அருள்ஒளி அடியாரது தூய உள்ளத்தில் விளங்குவதா யுள்ளது. இழிப்பரிய பசுபாசப் பிறப்பை நீக்கும் - இழிப் பரிய - என்பதிலுள்ள அருமை பழிப்பரிய என்பதிற்போல இன்மை என்ற பொருள்பட நின்றது ; இகழ்ச்சிக்குரியது அல்லாத, அதாவது புகழ்ச்சிக்குரியது. ஏகான்ம வாதிகள் முதலிய ஒருசாரார் உலகவாழ்வு இழிக்கத்தக்கது என்று கூறு தல்போலல்லாது, மலம் நீங்கிப் பேரின்பப் பயனை அடைதற் காகவே உலக வாழ்வு இறைவனால் அமைக்கப்பட்டுள்ளது என்று சைவசமயம் கூறுதலால் அடிகள் இழிப்பரிய பிறவி என்றார். உலக வாழ்க்கையிலுள்ள பிறப்பு, உயிர்ப்பற்றினை யும் பொருட்பற்றினையும் பற்றி வருதலால் பசுபாசப் பிறப்பு என்றார். என்னுடைய பெம்மான் தம்மான் - பெருமான் பெம்மான் என மருவியது. பெரியவன் - கடவுள். தம்மான், தலைவன், தம்பிரான் என்பதுபோல. சுருதி முடிக்கு அணி- சுருதி என்பது கேட்கப்படுவது ; வேதாகமங்களைக் குறிக் கிறது. அபர ஞானத்தை உணர்த்துகிற வேதாகமங்கள் பர ஞானத்துக்கும்(மெய்யுணர்வுக்கும்)வழியா யிருத்தலின் சுருதி முடிக்கு அணி என்றார். முடி-சிரசு, தலை. அணி- அழகு. மழபாடி வயிரத்தூண் - வயிரத் தூண் என்பது வயிரத்தூண் ஒளி யைக் குறிக்கிறது. வயிரத்தூண் மிக்க ஒளியுடையதாய் அதன் அணிமையிலுள்ள பிற பொருள்களின் ஒளிகளைத்

தனக்குள் அடங்கச்செய்து தான் அவ்வொளிகளுக்கு ஏடங் காது ஒளிருதல் போல, சிவபெருமான் தனது அருட்பே ரொளி அறிவால் எவ்வெவ் வுயிரினது அறிவையும் தனக்குள் அடங்கும்படி செய்து, அவை யாதொன்றிலும் பற்றுதவனும் சுயம்பிரகாச முடையனும் விளங்குகின்றான் என்பது கூறப் பட்டது. அரற்றி நைகின்றேன் - அரற்றுதல் - அழுதல்; அகங் குழைந்து உருகி அழுதல். நைதல் - இங்கே தேய்தல் அல்லது குறைதலைக் குறிக்கிறது; அதாவது சீவத்தன்மை குறைந்து சிவத்தன்மை மிகுதல். சீவத்தன்மை குறைந்து சிவத்தன்மை மிகுதலால், ஆன்மாத் தன்வய மழிந்து சிவன் வய மாகி அவனுடன் வேறற ஒன்றிக் கலந்து பேரின்ப முறுதல் உண்டாகிறது. இந்தத் தன்னனுபவத்தை அடிகள் இங்கே கூறுகின்றார். 'சென்றுசென் றணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்றாந் திருப்பெருந் துறையுறை சிவனே" என்று மாணிக்கவாசக அடிகள் கூறியருளினமை காண்க. திருநாவுக் கரசு அடிகள் இந்தத் தேவாரப்பாட்டின் பதவுரையிலே 1, 2, 3 என எண்ணிட்டுக் குறிக்கப்பட்ட மூன்று சொற்றொடர் களையும் அடிக்கடி கூறி, அகங்குழைந்து உருகி, அழுது, தன் வய மழிந்து, சிவன் வயப்பட்டுப் பேரின்பம் உணர்ந்ததாகத் தமது அநுபவத்தைக் கூறுகின்றார். அந்தச் சொற்றொடர் ஒவ்வொன்றிலும் சிவபெருமான் தமது அருமைத் துணை யாய்த் தமது உள்ளத்தில் அருளொளியாய் விளங்கினதாகவும் அவர் கூறுகின்றார். முதலாவது ஒளியானது சுத்த மாயையில் விளங்கும் தூய அருள் ஒளியையும், இரண்டாவது ஒளியா னது ஆன்மாவின்கண் விளங்கும் அருள் ஒளியையும், மூன் றாவது ஒளியானது தனி அருள் ஒளியையும் குறிக்கின்றன.

முதலாவது அருள் ஒளியால் பொருட்பற்று (புறப்பற்று)நீக்கமும் தத்துவ சுத்தியும் தத்துவ தரிசனமும், இரண்டாவது அருள் ஒளியால் பொருட் பற்றுடன் உயிர்ப் பற்று (அகப் பற்று) நீக்கமும் ஆன்ம சுத்தியும் ஆன்ம தரிசனமும், மூன்றாவது அருள் ஒளியால் பொருட்பற்று உயிர்ப்பற்றுக்கள் நீங்கின காரணத்தால் தன்வய மழிந்து சிவன்வய மடைதலும் சிவதரிசனமும் சிவ யோகமும் உண்டாகின்றன. இதனால் 'அறியுநெறி' கூறப்பட்டது. முதலாவது அருள்ஒளி இரண்டாவது அருள் ஒளியிலும், இரண்டாவது அருள் ஒளி மூன்றாவது அருள் ஒளியிலும் ஒன்றினொன்று அடங்குந் தன்மை உடையன. முதலாவது அருள்ஒளி மாயைமல நீக்கத்துக்கும், இரண்டாவது அருள்ஒளி வினைமல நீக்கத்துக்கும், மூன்றாவது அருள்ஒளி ஆணவமல நீக்கத்துக்குங் காரணமாயுள்ளன. இந்த ஒளிகள் ஞானத்து யோகமாகிய சிவயோக நிலையில் விளங்கும் ஒளிகள். இந்த மூன்று ஒளிகளும் அகண்ட பேரொளியில் அடங்குவன. இந்த மூன்று ஒளிகளையும் திருமூலர் 2808-வது திருமந்திரத்தில், "அறிவுக் கறிவாம் அகண்ட வொளியும், பிறியா வலத்தினிற் பேரொளி மூன்றும், அறியா தடங்கிடி லத்த னடிக்குட், பிரியா திருக்கிற் பெருங்கால மாமே" என்று கூறியருளினர். மாணிக்கவாசக அடிகள், "சோதியா யெஞ்ஞான்றுந் துன்பந் தொடர் வறுத்து" என்று முதலாவது ஒளியையும், "சோதியாய் மருளகற்றி" என்று இரண்டாவது ஒளியையும், "சோதியாயின்பம் பெருக்கி" என்று மூன்றாவது ஒளியையும் திருவாசகம் திருவெண்பா 11-வது பாட்டிற் குறிப்பிட்டருளியது காண்க.

ச — க. திருமுதுகுன்றம். பண்-மேகராகக் குறிஞ்சி.

ருகூ. மேனியிற்சீ வரத்தாரும் விரிதருதட்
டுடையாரும் விரவ லாகா
ஊனிகளா யுள்ளார்சோற் கோள்ளாது
முள்ளுணர்ந்தங் குய்மின் றொண்டீர்
ஞானிகளா யுள்ளார்க ணான்மறையை
முழுதுணர்ந்தைம் புலன்கள் செற்று
மோனிகளாய் முனிச்செல்வர் தனித்திருந்து
தவம்புரியு முதுகுன் றமே.

(ப—ரை) *முதுகுன்றம்—சிவபெருமான் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கின்ற "திருமுதுகுன்றம்" என்னும் தலமானது நான்மறையை முழுது உணர்ந்து—நான்கு வேதங்களையும் முற்றிலுங் கற்றுக்கேட்டுத் தெளிந்துணர்ந்து; ஐம்புலன்கள் செற்று— (அப்படி உணர்ந்ததன் பயனாக) மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறிகளையும் (உலக விடயங்களிற் செல்ல வொட்டாது) வென்று; ஞானிகளாயுள்ளார்கள்—(சிவபெருமானையே, தெளிவுணர்வால் தங்கள் உள்ளத்தில் இடையறாது உணர்ந்து கொண்டிருக்கும்) ஞானிகளாயுள்ளவர்களும்; மோனிகளாய்—உலகவிடய வாதனையினின்றும் முற்றிலும் நீங்கினவர்களாய்; தனித்து இருந்து தவம்புரியும் முனிச்செல்வர்—தனியாக இருந்து கொண்டு நிட்டைசெய்யும் முனிவர்களாகிய அருட் செல்வர்களும் (வணங்கும் சிறப்புடையது) (ஆதலால்); தொண்டீர்—(சிவபுண்ணியத் தொண்டு செய்யும் அடியார்களே! (நீங்களும்); மேனியிற் சீவரத்தாரும்— தங்கள் உடம்பிலே துவராடையைத் தரித்திருக்கிற புத்தர்களும்; விரிதருதட்டு உடையாரும் – அகலமான பனை*

யோகத் தடுக்கினை ஆசனமாக உடையவர்களாகிய சமணர் களும்; விரவலாகா ஊனிகளாய் உள்ளாரும்-சேரத்தகாதவர்க ளாயுள்ள, உடம்பே தாம் என்னும் உணர்வுடைய உலோகாய தர்களும்; சொற்கொள்ளாது- கூறுகிற சொற்களை உங்கள் உள்ளத்தில் உண்மைகளாகக் கொள்ளாமல்; அங்குச்(சென்று) – அவ்விடமாகிய திருமுதுகுன்றத்துக்குச் சென்று; உள்ளு ணர்ந்து–(திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கின்ற சிவபெரு மானை வணங்கி, அவனை) உங்கள் உள்ளத்தினுள்ளே வேறற ஒன்றி உணர்ந்து; உய்மின்-பிறவித் துன்பத்தினின்றும் தப் பிப் பிழையுங்கள். 11

(வி—ரை) " முதுகுன்றம் " இது இக்காலத்தில் "விருத்தாசலம்" என்று வழங்கப்படுகின்றது. நான்மறையை முழுதுணர்ந்து–உணர்ந்து என்றமையினாலே நான்மறைப் பொருளாகிய சிவத்தைப்பற்றிக் கற்றுக்கேட்டுத் தெளிந்து உணர்ந்து என்று கூறப்பட்டது. ஞானிகளாயுள்ளவர்கள்– ஞானத்தில் யோக நிலையுற்று அருளில் அடங்கித் தன்முனைப்ப நீங்கிய ஞானிகளைக் குறிக்கிறது. இங்ஙனம் குறிக்கப்பட்டி ருத்தலினாலே, அறியுநெறியின் கீழ் இப்பாட்டுவைக்கப்பட் டிருக்கிறது. " மோனிகளாய்த் தனித்திருந்து தவம்புரியும் முனிச்செல்வர்" - மோனி - மனமவுனத்தை யுடையவர்கள்; அதாவது மனத்தில் சிறிதும் உலகவிடயவாதனை இல்லாதவர் கள். உயிர் விடயங்களாலும் விடய வாதனைகளாலும் சிறி தும் தாக்கப்படுதலின்றி அமைதி (சாந்தம்) பெற்று, அந்த அமைதி காரணமாக மெய்யுணர்வு பெறும் நிலையைக் குறிக் கின்றது. முனிச்செல்வர் - முனியாகிய செல்வர்,- முனிக ளாகிய செல்வர், முனிதல்-வெறுத்தல், உலக விடயங்களை வெறுத்துச் சிவத்தையே செல்வமாக உடைய பெரியவர்.

தனித்திருந்து - மவுனத்துக்குத் தனிமை துணையாயுள்ளது; இறைவனோடு கலந்து இன்பம் உணரும் மோனஞானிகள் தனிமையினையே விரும்புவார்கள். "வணங்கும் சிறப்புடையது" என்ற சொற்றொடர் அவாய் நிலையால் தொக்கது. தொண்டீர் — விளிப்பெயர், தொண்டர் என்பதிலுள்ள ஈற்றயல் அகரம் ஈகாரமாயிற்று. மேனியிற் சீவரத்தார்— மேனி என்பது வடிவம், அது இங்கே ஆகு பெயராய் உடலைக்குறிக்கிறது. சீவரத்தார்—சீவரம் + அத்து + ஆர். அத்து—சாரியை. ஆர்—உயர்திணைப்பலர்பால் படர்க்கை விகுதி, சீவரம்- வடமொழிச் சொல்-சிவப்பு. அது இங்கே புத்தத் துறவிகள் தரிக்கிற சிவப்பு ஆடையைக் குறிக்கிறது. சீவரத்தார் — சிவப்பு ஆடையைத் தரிக்கிற புத்தத்துறவிகள். விரிதரு தட்டு உடையார் - விரிதரு- விரிந்த - அகலமான, தட்டு - ஆசனத் தடுக்கு; சமணர்கள் கையில் வைத்துக்கொண்டிருக்கிற பனை யோலைத் தடுக்கு, சமணர்களைக் குறிக்கிறது. விரவலாகா ஊனிகளாய் உள்ளாரும் - விரவலாகாத என்பதில் பெயரெச்ச விகுதியும் மெய்யும் கெட்டன, எதிர்மறைப் பெயரெச்சம். ஊனிகளாய் உள்ளார் - ஊன் - தசை, இங்கே ஆகு பெயராய் உடம்பைக் குறிக்கின்றது. ஊன்-'இ' வினைமுதற்பொருளை உணர்த்தும் விகுதி கெட்டது. உடலையே தாமாக எண்ணும் கொள்கை உடைய உலோகாயதர்கள் (Materialists). கொள்ளாதும் என்ற ஈற்றிலுள்ள "உம்" என்பதை ஊனிகளாயுள்ளார் என்பதன் பின் சேர்க்க. அங்கு என்றதற்குப் பின் சென்று, வணங்கி என்பன சொல்லெச்சங்கள்.

### நா.—௪. தனித்திரு நேரிசை.

௯0 கள்ளனேன் கள்ளத்தொண்டாய்க்
காலத்தைக் கழித்துப் போக்கித்

தெள்ளியே னாகி நின்று
    தேடினே னாடிக் கண்டேன்
உள்குவா ருள்கிற் றெல்லா
    முடனிருந் தறிதி யென்று
வெள்கினேன் வெள்கி நானும்
    விலாவிறச் சிரித்திட் டேனே.

(ப-ரை) கள்ளனேன் - வஞ்சனாகிய நான்; கள்ளத் தொண்டாய் - (சமணசமயத்தி லிருந்த காலத்தில்) முன்னே, சிவபெருமானுக்கு ஆட்பட்டுத் தொண்டு செய்யாமல் பொய் யான சமணசமய ஆசிரியனாயிருந்து தொண்டு செய்தவனாய்; காலத்தைக் கழித்துப் போக்கி - கிடைத்தற்கரிய மானிடப் பிறவி வாழ்க்கைக்) காலத்தை நல்வழியிற் பயன் படுத்தாது வீணாகப் போக்கிவிட்டு; தெள்ளியேன் ஆகி நின்று - (சிவ நெறியை நான் அடைந்து சிவபெருமானால் ஆட்கொள்ளப் பெற்ற பொழுது) எனது உள்ளத்தில் விளங்கும் அருளொளியை அறியும் தெள்ளறிவுடையவனாய் நிலைபெற்று நின்று; நாடித் தேடினேன் - உலகவாழ்க்கைப் பற்றுக்களை முற்றி லும் விட்டுச் சிவபெருமானையே நினைக்கும் கருத்து உடைய வனாய் அவனைத் தேடினேன்; கண்டேன் - தேடின தேட் டத்தின் பயனாக அவனை எனது உள்ளத்திலே மெய்யுணர் வினால் உணர்ந்தேன்; உள்குவார் உள்கிற்று எல்லாம் - நினைக் கிற மாந்தர்கள் தங்களுடைய உள்ளத்தில் நினைக்கின்ற கருத் துக்களை எல்லாம்; உடன் இருந்து அறிதி என்று - அவர் களுக்கு வேறாகநின்று அறிவிப்பதுமன்றி அவர்களுடனிருந் தும் நீ அறிந்து வருகிறாய் என்று (நான் எனது தெள்ளிய அறிவினால் அறிந்த பொழுது); வெள்கினேன் - நீ எனது உள்ளத்தி லிருப்பதை அறியாதிருந்த காலத்தில் நான் மறை

வாக நினைந்த வஞ்சக் கருத்துக்களை நோக்க எவ்வாறு எனது அறியாமை இருந்தது என நினைந்து வெட்கம் அடைந்தேன், நானும் வெள்கி விலா இறச் சிரித்திட்டேன் - நான் அவ்வாறு வெட்கம் அடைந்து எனது விலா எலும்புகள் முறிந்து விடுமோ என்று தோன்றும் வண்ணம் பெருஞ்சிரிப்புச் சிரித்தேன். ஆதலின், தொண்டர்களே நீங்கள் சிவபெருமானுக்கு உண்மையான தொண்டு செய்து உய்மின் என்பது குறிப்பெச்சம். 12

(வி—ரை) கள்ளனேன் - தன்மை ஒருமைக் குறிப்பு வினையாலணையும் பெயர். கள்ளத் தொண்டு - வஞ்சகமான பணி; செய்தற்கு உரியதல்லாத வழியிற் செய்யப்படும் பணி. உடல் அந்தக்கரணங்களை உயிருடன் சேர்த்து வைத்தும், அக்கருவிகளின் வழியும் அருளின் வழியும் காட்டு முதவியும் காணு முதவியும் இடையறாது உயிர்க்குச் செய்துவருகிற சிவபெருமானுக்கு உரியவாகிய மனம் வாக்குக் காயங்களாற் செய்யத் தகுந்த தொண்டை உயிர் அவ்வுண்மையை அறியாது வேறு வழியிற் செய்யுந் தொண்டை அடிகள் கள்ளத் தொண்டு என்றார். அடிகள் தாம் சமண சமயத்தில் இருந்த காலத்தில் செய்த தொண்டை நினைந்து கூறுகிறார். தெள்ளியேன்- தன்மை ஒருமைக் குறிப்பு வினையாலணையும் பெயர். தேடினேன் நாடிக் கண்டேன்-நாடுதல் தேடுதலின் முன் நிகழ்கின்றது ஆதலின், தேடினேன் நாடி என்பது நாடித் தேடினேன் என மாற்றி வைத்துப் பொருள் கூறப்பட்டது. "நாடினார் கமலம் மலரயனோடு இரணியனாகங் கீண்டவன் — நாடிக் காணமாட்டாத் தழலாய நம்பானைத்......தேடிக் கண்டுகொண்டேன்" என்று அடிகள் திருவாரூர்த் தேவாரம் 10-வது பாட்டிற் கூறியருளினமை காண்க. நாடுதல் - உள்ளத்தில் நினைக்கருதி

நினைத்தல். தேடுதல் - ஆன்மாத் தன்கண் விளங்கும் ஆன்ம அறிவிற் சிவனைத் தேடுதல். காண்டல் - ஆன்மாத் தற்போதங் கெட்டு அருளோடு வேறற நின்று அவ்வருளால் சிவனைக் காணுதல். நாடுதல் ஆன்மதரிசனத்திலும், தேடுதல் ஆன்ம சுத்தியிலும், காண்டல் சிவதரிசனத்திலும், சிவயோகத்திலும் நிகழும். நாடுதல், தேடுதல், காணுதல் மூன்றும் உள்ளத்தில் அருள் ஒளி விளங்கித் தெள்ளறிவு உண்டாயபின் நிகழ்தலால் 'தெள்ளியேனாகி நாடித்தேடினேன் கண்டேன்' என்றார். நாடுதல் ஞானத்துச் சரியை நிலையையும் தேடுதல் ஞானத்துக் கிரியை நிலையையும் காண்டல் ஞானத்து யோகநிலையையும் குறிக்கின்றன. நாடித் தேடிக் காணுதல் சிவனை அருளால் 'அறியும்நெறி' என்பது கூறப்பட்டது. உள்கிற்று எல்லாம்- உள்கிற்று— அஃறிணை ஒன்றன்பால் படர்க்கைத் தெரிநிலை வினையாலணையும் பெயராய் நின்றது. உள்கிற்று எல்லாம் ஒருமைப் பன்மை மயக்கம், பால் வழு அமைதி. உடனிருந்து அறிதி - இது சிவன் ஆன்மாவுக்குச் செய்து வருகிற காணும் உதவி ; காரைக்காலம்மையார் இதனை " அறிவாய் அறிகின்றான் தானே " என்று கூறி அருளினார். உள்ளத்தில் ஆன்ம அறிவோடு சென்றியைந்து அவ்வுள்ளத்தை விட்டு நீங்காதிருக்கிற சிவன், ஆன்மாத் தனது உள்ளத்திற் கருதுகிற பொருள்களை அறியாமலிருக்க முடியாது என்ற உண்மையைத் தாம் தெள்ளிய அறிவை அடைந்ததற்குமுன் அறியாதிருந்ததற்கு வெட்கம் அடைந்ததாக அடிகள் கூறுகின்றார். நானும் - உம் - அசை. சிரித்திட்டேன் - இடு என்பது பகுதிப்பொருள் விகுதி. சிரித்தேன் - முறுவலித்தல், அளவிற் சிரித்தல், பெருகச் சிரித்தல் என்னும் மூவகைச் சிரிப்புக்களில் இது பெருகச் சிரித்தல், அறியாமைகாரணமாக வந்த வெட்கத்தின் மெய்ப்பாடு.

சு.—எ. திருவேகம்பம். திருமேற்றளி. பண்-நட்டராகம்.

௩௧. நிலையாய் நின்னடியே நினைந்தே னினைதலுமே
தலைவா நின்னினையப் பணித்தாய் சலமொழிந்தேன்
சிலையார் மாளிகைசூழ் திருமேற் றளியுறையும்
மலையே யுன்னையல்லால் மகிழ்ந்தேத்த மாட்டேனே.

(ப-ரை) தலைவா - எனது ஆண்டவனே; நின் அடியே - நினது திருவடிகளையே; நிலையாய் நினைந்தேன் - (எனது உள்ளம் மண் முதல் கலை இறுதியாகவுள்ள பிரகிருதி மாயை அசுத்த மாயா தத்துவங்களிலும் புவனங்களிலும் அடையத் தக்க விடயபோகப் பற்றுதலொழிந்து துவந்துவத்தன்மை (இரட்டைத் தன்மை) கெட்டுத் தூய்மை அடைந்து நினது அருளொளியுடன் கூடி நிற்கும் நிலையில்) நினைப்பும் மறப்புமின்றி நான் நின்னையே எப்பொழுதும் ஒரு தன்மையாய் நினைந்துகொண்டிருந்தேன்; நினைதலும் - அவ்வாறு நான் நின்னையே எப்பொழுதும் நினைந்துகொண்டிருக்கிற நிலையை அடைந்தபொழுது; நின் நினையப்பணித்தாய் - (நான் நினைக்கின்றேன் என்ற தற்போதமும் எனக்கு இன்மையால், நீ எனது அறிவு வேட்கை செயல்களை எல்லாம் நினது வியாபக அறிவு வேட்கை செயல்களுக்குள் அடங்கச்செய்து) என்னை உனது ஆளாக ஏற்று, நின்னை நினைக்கும்படி ஆணைசெய்தருளினாய்; சலம் ஒழிந்தேன் - அதனால் நான் இருவினைத் துவந்துவங்களால் (இரட்டைத் தன்மைகளால்) சிறிதும் தாக்கப் பட்டு விகாரம் அடையாது ஒரு தன்மைத்தாகிய அமைதி பெற்று எனது உள்ளத்தில் நின்னையே உணரும் தெளிவுணர்வைப் பெற்றேன்; சிலையார் மாளிகை சூழ் திருமேற்றளி உறையும் மலையே-(ஆதலால்) கற்களினால் கட்டப்பட்ட வீடு

கள் சூழ்ந்திருக்கிற (கச்சித்) திருமேற்றளி என்ற தலத்தில் திருக்கோயில்கொண் டெழுந்தருளி யிருக்கும் அருள்மலையே; உன்னை அல்லால் மகிழ்ந்து ஏத்தமாட்டேன் - உன்னை யன்றி வேறொரு தெய்வத்தை நான் உள்ளம் உவந்து துதிக்கமாட்டேன். அடியார்களே! நீங்களும் (திருக்கச்சித்) திருமேற்றளி உறைகின்ற சிவபெருமானுடைய திருவடிகளையே நினைந்து உய்மின் என்பது குறிப்பெச்சம். 13

(வி – ரை) தலைவா - தலைவா என்று அடிகள் சிவபெருமானை விளித்தது ஆண்டவனாகிய உன்னைப் பணிதல் என் கடன் அடிமையாகிய என்னைக்காத்தல் உன் கடன் என்பது குறிப்பிடப்பட்டது - தலைவன் என்ற சொல் ஆண்டான் அடிமைத் தொடர்பைக் காட்டுகிறது. நின் அடியே-ஏ-தேற்றம். நிலையாய் நினைந்தேன் - ஆன்மாத்துவந்துவங்களி (இரட்டைத்தன்மை) னின்று (Pairs of opposites) நீங்கியும், பொருட்பற்று உயிர்ப் பற்றுக்கள் நீங்கியும், தன்முனைப்புக் கெட்டும், மல இருள் நீங்கியபொழுது, சிவபெருமானே தனக்கு உண்மையில் நிலையான பற்றுவான் என உணர்ந்து, அவனைப் பற்றும்பொழுது நினைப்பும் மறப்பு மற்ற சிவயோக நிலை உண்டாகிறது. அந்த நிலையை நினைந்து சுந்தரமூர்த்தி அடிகள் 'நின்னடியேநிலையாய் நினைந்தேன்' என்றார். அடி என்பது திருவருளைக் குறிக்கிறது. "சட்டோ நினைக்க மனத்தமுதாஞ்சங்கரனைக் - கெட்டேன் மறப்பேனோ கேடுபடாத் திருவடியை" என்று மாணிக்கவாசக அடிகள் கூறியருளினமை காண்க. திருநாவுக்கரசு அடிகள் மேலே 41-வது பாட்டில் "வஞ்சனே னினி நான் மறக்கிற்பனே" என்று கூறி யருளினர். நிலையாய் என்ற சொல்லில் மேலே 51-வது பாட்டில்

"புலன்களைப் போக நீக்கிப் புந்தியை யொருங்க வைத்து • இனங்களைப் போகநீக்கி யிரண்டையு நீக்கி யொன்றாய்-மலங் களை மாற்ற வல்லார்" என்ற இரண்டடை வரிகளிலுள்ள கருத்துக்களும் அடங்கி யிருக்கின்றன. பொறிகளைப் புலன் களிற் போகாது நீக்கியும் புந்தியையும் அதன் இனங்களையும் ஒடுக்கியும் ஆன்மா விடயபோகத்தில் அறவே செல்லாதி ருந்தாலொழிய, அதற்குச் சிவனை நிலையாக நினைக்கும் நினைப்பு உண்டாகாது. நின்நினையப்பணித்தாய் - பணித்தல் அருட் செயல். இந்தச் சொற்றொடராற் குறிக்கப்பட்ட பொருள் மேலே 49-வது பாட்டில் "உணரப்படுவார்" என்ற சொல் லாற் குறிக்கப்பட்டிருத்தல் காண்க. சலம் ஒழிந்தேன்-மேலே 51-வது பாட்டில் "மனத்திடைப் போகமாகிச் - சினங்களை மாற்ற வல்லார்" என்ற தொடர்களாற் குறிக்கப்பட்ட பொரு ளும், 49-வது பாட்டில். 'உணரப்படுவாரோடொட்டி வாழ்தி' என்ற சொற்றொடராற் குறிக்கப்பட்ட பொருளும் இப்பாட் டில் "சலமொழிந்தேன்" என்று கூறியவாற்றாற் குறிக்கப்பட்டி ருத்தல் காண்க. 51-வது பாட்டின் கீழ்க் கூறப்பட்ட குறிப்பு உரைகளை இதற்கும் கொள்க. சலம்-விகாரம், சலமொழிதல்- விருப்பு வெறுப்புக்களினால் உண்டாகும் விகாரம் நீங்குதல். அங்ஙனம் விகாரம் நீங்குதல் பற்றி அமைதியும், அது பற்றித் தெளிவுணர்வும் உண்டாதலால் சலம் ஒழிந்தேன் என்பதற்குப் பதவுரையில் பொருள் கூறப்பட்டது. "தலைவா நின்னினையப் பணித்தாய்" என்றதினால் 'அறியு நெறி' கூறப்பட்டது.

## ச-க. திருவாலங்காடு. பண்-தக்கராகம்.

கஉ துஞ்ச வருவாருந் தொழுவிப்பாரும் வழுவிப்போய்
நெஞ்சம் புகுந்தென்னை நினைவிப்பாரு முனைநட்பாய்

வஞ்சப் படுத்தொருத்தி வாணாள்கொள்ளும்
[வகைகேட்
டஞ்சும் பழையனூ ராலங்காட்டெம் மடிகளே.

(ப - ரை) துஞ்சவருவாரும் - (எனது ஐம்பொறிகளும் அந்தக் கரணங்களும் தங்கள் இனங்களுடன் உலக போக விடயங்களிற் செல்லும் பற்று) முற்றிலும் கெடுதலால் எனது உள்ளத்தில் பேரொளியாய் விளங்கித் தோன்றுகிற வரும்; தொழுவிப்பாரும் - (அவ்வாறு பேரொளியாய் விளங் குகிற காரணத்தால் எனது அறிவு வேட்கை செயல்களைத் தமது அறிவு வேட்கை செயல்களின் வியாபகத்துள் அடங்கச் செய்து)தற்போதமின்றித் தம்மை வணங்கும்படி என்னைச் செய்கிறவரும்; நெஞ்சம் புகுந்து என்னை நினைவிப்பாரும்- அவ்வாறு நான் தற்போதம் கெட்டுத் தமது அருள் வியாப கத்தில் அடங்கி நிற்க, எனது உள்ளத்தில் விளங்கி மேலிட்டு நின்று தம்மையே நிலையாக நினைக்கும்படி செய்கிறவரும்; முனை - முன் ஒருநாள்; ஒருத்தி - நீலி என்னும் ஒருமாயப் பெண்; நட்புஆய வஞ்சப்படுத்து-(தன்னோடு கூடவந்த வணி கன் தனது கணவன் என்றும், அவனைத் தன்னுடன் கலந் திருக்கும்படி செய்தால், தான் அவனுக்கு ஊறு ஒன்றுஞ் செய்வதில்லை என்றும் எழுபது வேளாளரிடம் உறுதிமொழி கூறி, அதனை நம்பும்படி) நட்பினால் ஆகிய வஞ்சகத்தைச் செய்து; வழுவிப் போய் வாழ்நாள் கொள்ளும் வகைகேட்டு-(அவ்வெழுபது வேளாளரும் அவளுக்காக அவ் வணிகனை உடன்படச் செய்ய, அவன் உடன் பட்டு அவளோடு அன்றிரவு கலந்திருந்த பொழுது) பின் தான் செய்த உறுதி மொழியினின்றும் தவறி (அன்றிரவில்) அவனது உயிரைக் கொன்ற செய்தியைக் கேட்டு; அஞ்சும் பழையனூர் ஆலங்

காட்டு எம் அடிகள் - (அவர்கள் தாங்கள் செய்த வாய்மை பொய்த்து விட்டதே என்றுணர்ந்து) அஞ்சி, அதனைக்காக் கத் தீக்குழியில் விழுந்து இறந்த பெருந்தகைமைச் சிறப்பு வாய்ந்த பழையனூரைச் சேர்ந்த திருவாலங்காட்டில் திருக் கோயில் கொண்டிருக்கும் சிவபெருமானுவார். 14

(வி-ரை) திருஞானசம்பந்த அடிகள் காரைக்கலம் மையார் தலையாலே நடந்து சென்று வணங்கின திருவாலங்காட்டைக் காலினால் மிதிக்க அஞ்சி, அவ்வூருக்கு அணிமையிலுள்ள ஒரூரில் இரவு தங்கியிருந்த பொழுது சிவபெருமான் அவரது கனவிலே தோன்றி, "ஆலவனத்தமர்ந் தருளும் அப்பராகிய நம்மைப் பாடுதற்கு அயர்த்தனையோ" என்று கூற, விழித்தெழுந்து பாடிய தேவாரப் பதிகத்தின் முதலாவது பாட்டு இது. இந்நிகழ்ச்சிக்கு ஏற்ப, "துஞ்ச வரு வார்" என்பதற்கு நான் உறங்கும்பொழுது என்கனவிலே தோ ன்றுகிறவரும் என்றும், "தொழுவிப்பாரும்" என்பதற்குக் கன விலே கூறிய ஆணையால் திருவாலங்காட்டுக் கோயிலுக்குப் போய்த் தொழும்படி செய்தவரும் என்றும், "நெஞ்சம் புகுந் தென்னை நினைவிப்பாரும்" என்பதற்கு அவ்வாறு நான் தொழு ததனால் எனது உள்ளத்தில் அருளொளியாய் விளங்கித் தம்மை எப்பொழுதும் என்னை நினைக்கும்படி செய்கிறவ ரும் என்றும் பொருள் கொள்ளுதல் வேண்டும். இவ்வாறு பொருள் கொள்ளுதல் புற வழிபாடுபற்றிப் பொருத்தமா யிருப்பினும் பதவுரையிற் கூறப்பட்ட பொருள் அக வழிபாடு பற்றிப் பொருத்த முடைத்து. சிவபெருமானால் ஞானப்பால் கொடுத்து ஆட்கொள்ளப்பெற்று நான்கு வகை அருள் ஞானங்களையும் அடைந்த அடிகள், சிவபெருமான் திருவடிகளை ஒரு கணமேனும் மறந்திருந்த

தாகக் கூறுதல் சிறிதும் பொருந்தாது; மற்றென்னையோ எனின், அடிகள் திருவாலங்காட்டுக் கோயிலுக்குப் போய்த் தொழுது பாடத் தமது உள்ளத்தில் முன் கூறியதொரு காரணம் பற்றிக் குறிக்கொள்ளாதிருந்ததற்காகவே சிவபெருமான் அவர் கனவிலே தோன்றி அறிவித்தார் என்று கொள்ளுதலே பொருத்த முடைத்து. பதவுரையிற் கூறப்பட்ட பொருள்கொள்ளாக்கால் இப்பாட்டு அறியு நெறியின் கீழ் வைக்கப்படுதற்கு இடமில்லை. அடிகள் பக்குவமுள்ள ஆன்மாக்கள் அடையும் அநுபவ நிலையைத் தம்மேலேற்றிக் கூறியருளினார் என்று நாம் கொள்ளல் வேண்டும். அறியு நெறியின் கீழே பலபாட்டுக்களிற் போலஇப்பாட்டிலும் (1) ஆன்மாத்தனது பொறிபுலன் கரணமெல்லாம் ஒடுங்கித் தற்போதங் கெட்டு நிற்கிற நிலையும் (2) தற்போதம் கெட்ட ஆன்மாவைச் சிவபெருமான் தமது திருவடி வியாபகத்துள் அடக்கும் நிலையும் (3) சிவபெருமான் அந்த ஆன்மாவுடன் வேறறக் கலந்து சிவபோக இன்பம் உணரச் செய்யும் நிலையும்கூறப்பட்டுள்ளன. மேலே 53-வது பாட்டில் "நம்பனை நாளொரு நாள் - துஞ்சிடைக் கண்டு கனவின் றலைத்தொழு தேற்கவன் றூன் - நெஞ்சிடை நின்றக லான்பல காலமு நின்றனனே" என்று குறிப்பிட்ட மூன்று நிலைகளும் இப்பாட்டிலும் கூறப்பட்டுள்ளன. சொற்களுங் கூட ஏறக்குறைய ஒத்திருக்கின்றன. இதே மூன்று நிலைகளும் ஞானத்து யோகம் கூறுகிற சிவஞானபோதம் 10-வது சூத்திர வெண்பாவில் "நானென வொன்-றில்லென்றுதானே யெனுமவரைத் தன்னடிவைத்தில்லென்று தானுமின்றே" என்று மெய்கண்டார் கூறியிருத்தல் காண்க. துஞ்ச வருவார் - காரணகாரியப் பொருளில் வந்தது, மழை பெய்யக் குளம் நிறைந்தது என்றாற்போல. துஞ்ச-துஞ்சு

தலால், இறந்த காலம். துஞ்சுதல் (1) கெடுதல் (2) உறங்கல். வருவார் - அருளொளியாய் உள்ளத்தில் விளங்குகிறவர், தோன்றுகிறவர். முன்னைய பொருள் அகவழிபாட்டுக்கும் பின்னைய பொருள் புறவழிபாட்டுக்கும் கொள்க. தொழுவிப்பார் - திருவடி வியாபகத்தில் அடங்கச் செய்தல், தொழுவித்தலாகும் தற்போதம் கெட்ட ஆன்மாவுக்குத் தனதுசெயலொன்றுமின்மையால் தொழுவிப்பார் என்று பிறவினையாற் கூறினார். நெஞ்சம் புகுந்து என்னை நினைவிப்பார் - புகுதல் - நிலையாய் விளங்கி நிற்றல். சிவபெருமானது திருவடி வியாபகத்துள் அடங்கி நிற்கப்பெற்ற ஆன்மாவுக்குத் தனக்கென அறிவு வேட்கை செயல்களின்மையால் என்னை நினைவிப்பார் என்றார். "முனை ஒருத்தி நட்பாய வஞ்சப் படுத்து வழுவிப்போய் வாணாள் கொள்ளும் வகைகேட் டஞ்சும் பழையனூர்" என்று உரைநடை செய்க. முனை - முன்னை என்ற சொல் முனை எனக்குறைந்தது. வஞ்சப்படுத்து - வஞ்சம் + படுத்து, வஞ்சனைக்குள் அகப்படுத்து; அதாவது வஞ்சித்து. வாணாள் கொள்ளும் வகை - வாழ் + நாள் வாணாள்; உயிர் உடலோடு கூடிநின்று வாழும் நாள், வாணாள் கொள்ளுதல் - உடலினின்றும் உயிரைப்பிரித்தல். வகை - வகுக்கப்படுவது; வகுத்துக் கூறப்படுவது. அது இங்கே, வாணாள் கொண்டாள் என்ற செய்தியைக் குறிக்கிறது. அஞ்சும் பழையனூர் - ஊரிலிருந்தவர்கள் அஞ்சுதலை ஊர் மேலேற்றிக்கூறினார்; இடவாகுபெயர். எழுபது வேளாளரும் வாய்மையைக் காத்த புகழ் என்றும் நிலவும் இயல்பு பற்றி, இறந்த காலத்தாற் கூறாது எதிர் காலத்தாற் கூறினார். வருவார், தொழுவிப்பார், நினைவிப்பார் மூன்றும் பயனிலைகள், அடிகள் எழுவாய்.

திருச்சிற்றம்பலம்.

## எ. உயிர் விளக்கம்.

### நா. சு. திருவாரூர்-திருத்தாண்டகம்.

*திருச்சிற்றம்பலம்.*

சுரு முன்னம் மவனுடைய நாமங் கேட்டாள்
மூர்த்தி யவனிருக்கும் வண்ணங் கேட்டாள்
பின்னை யவனுடைய வாரூர் கேட்டாள்
பெயர்த்தும் மவனுக்கே பிச்சி யானாள்
அன்னையையு மத்தனையு மன்றே நீத்தா
ளகன்ற ளகலிடத்தா ராசா ரத்தைத்
தன்னை மறந்தாள் தன்னாமங் கேட்டாள்
தலைப்பட்டாள் நங்கை தலைவன் றாளே.

(ப-ரை) *நங்கை - பெண்ணிற் சிறந்தவள் ஆகிய தலைவி; முன்னம் - (களவு நிலையில் ஊழ் வயத்தால் தலைவி தலைவனை ஒரு பொழிலகத்தே கண்ணுற்ற) பொழுது; மூர்த்தி அவனுடைய நாமம் கேட்டாள் -(கண் கவரும் வனப்பு வாய்ந்த) தன் தலைவனுடைய உருவத்தைப் பார்த்து, அவனுடைய புகழைத் தோழி சொல்லக் கேட்டு அறிந்தாள்; அவன் இருக்கும் வண்ணம் கேட்டாள் - (பின்னர்) அவனிடத்திலுள்ள குணங் கள் இன்ன எனத் தோழி சொல்லக் கேட்டு அறிந்தாள்; பின்னை அவனுடைய ஆரூர் கேட்டாள் — அதன்பின் அவன் வாழும் ஊர் திருவாரூர் எனத் தோழி சொல்லக்கேட்டு அறிந் தாள் (இங்ஙனம் அறிந்ததனாலே தலைவி தலைவனிடத்தில் மயல் கொண்டாள்); பெயர்த்தும்-(முன் களவொழுக்க காலத்தில் அவனிடத்தில் மயல் கொண்டதுபோல) கற்பொழுக்கம் பூண்ட பின்னும்; அவனுக்கே பிச்சி ஆனாள்-அவனிடத்திலே மயர்கம்கொண்டு அபரா அன்பை உடையவளானாள்; அன்றே-*

அப்பொழுதே; அன்னையையும் அத்தனையும் நீத்தாள் - (முன்னே தனக்குத் துணையாகச் சார்பு வைத்திருந்த) தாயையும், தந்தையையும், (பிற உறவினர்களையும்) துறந்தனள்; அகலிடத்தார் ஆசாரத்தை அகன்றாள் - பரப்பான உலகத்திலுள்ளவர்களுடைய இற்செறிதல், நாணுடைமை முதலிய கட்டுப்பாட்டு ஒழுக்கங்களை எல்லாம் நீங்கினாள்; தன்னை மறந்தாள் - (முன் தன் பெற்றோர்களிடமிருந்தபொழுது) தான் இன்னாள் எனக் கொண்டிருந்த நினைப்பும் இல்லாதவளானாள்; தன் நாமம் கெட்டாள் - அந் நினைப்பினால் உண்டாயிருந்த செயல் புகழ் முதலியவற்றையும் மறந்தனள்; தலைவன்தாள் தலைப்பட்டாள் - தன்னுடைய தலைவனையே சார்பாகக் கொண்டு அவனுடைய அருளாகிய காவலின் கீழ் வந்து பொருந்தினாள். 1

**(வி-ரை)** இந்த அருமையான தேவாரப்பாட்டு இருவினையொப்பும், மலபரிபாகமும், சத்திநிபாதமும் அடைந்த ஓருயிர் சிவபெருமானது உண்மை இயலை (சொரூப இலக்கணத்தை) மெய்யுணர்வினால் உணர்ந்து அறிந்து உயிர்ப்பற்றாப் பொருட்பற்றுக்களை முற்றிலும் விட்டுத் தன்முனைப்புச் சிறிதுமின்றி, தன் வேட்கை அறிவு செயல் முற்றிலும் கெட்டு, சிவபெருமானுடைய திருவருளில் இரண்டறக்கலந்து பேரின்பம் அடைந்தது, என்ற உண்மையைத் தலைவி தலைவன் என்னும் அகப் பொருட்டுறை உருவகத்தில் வைத்துக் கூறுகின்றது. மேலே கூறியபதவுரை உருவக உவமைக்குப் பொருந்தக் கூறப்பட்டது. விளக்க உரையில் அவ்வுரை உருவகப் பொருளுக்கும் (உவமேயப் பொருளுக்கும்) பொருந்தும்படியாயும் கூறப்படும். இவ்வாறு உருவகம் செய்து கூறுதல் அகப்பொருள் என்று கூறப்படும்.

அகப்பொருள் என்பது ஒருவன் உள்ளத்தினுள்ளே நிகழ்ந்து அவனால் உணர்ந்து அறியப்படும் இன்பமாகிய பொருள். அகம், ஆகுபெயராய் அகத்தில் நிகழும் இன்பம் எனப் பொருள்படும். இன்பம் இருவகை:- ஒன்று உலகப்பொருளில் பற்று வைத்து உலக நுகர்வை நுகரும் சிற்றின்பம் (உலக போகம்), மற்றொன்று சிவப்பொருளிற் பற்று வைத்து அச் சிவத்தை நுகரும் பேரின்பம் (சிவபோகம்). சிற்றின்பமாயி னும் பேரின்பமாயினும் இன்பமானது ஒருவரால் தன்னுள்ளே உணர்ந்து அறியப்படும் தன்மையுடையது; பிறர் அதனைச் சொல்லக்கேட்டு அறியப்படுந்தன்மை உடைய தன்று. வெல்லத்தை முன் சுவைத்து அறிந்த ஒருவனே 'வெல்லம் இனிப்பாயிருக்கிறது' என்று பிறனொருவன் தன்னுணர்வினால் அறிந்ததைச் சொல்லக்கேட்டு அறிதல் முடியும். அதுபோலப் பேரின்பத்தை நுகர்ந்து உணர்ந்து அறிந்த பெரியோர்கள், அதனை உணர்ந்து அறியாத உலக மக்களுக்கு அவர்கள் பேரின்பம் இன்னது என ஒருவாறு துவக்கத்தில் அறியும்படி அவர்களுக்குப் பழக்கமாயுள்ள நெறிப்பட்ட சிற்றின்ப நிலையில் உயிரைத் தலைவியாகவும் சிவபெருமானைத் தலைவனாகவும் உருவகம் செய்து கூறுதலே அகப்பொருட்டுறையில் வைத்துக் கூறுதலாகும். மாணிக்கவாசக அடிகள் திருக்கோவையார் என்ற நூலை அகப்பொருட்டுறையில் வைத்துப் பாடியருளினர். சமயாசாரியர்கள் நால்வரும் தேவார திருவாசகங்களில் பல பாட்டுக்கள் அகப்பொருள் குறித்துப் பாடியிருக்கிறார்கள். திருநாவுக்கரசு அடிகள் பாடிய பல அகப் பொருட் பாட்டுக்களில் இப்பாட்டும் ஒன்று. இவ்வாறு அகப் பொருளிற் பாடும் நூல்வழக்குத் தமிழருக்கே உரியது. அகப்பொருளைக் கூறும் பொருளிலக்கணம் தமிழ் மொழி

யிலன்றி, ஆரியம் முதலிய வேறு எம் மொழியிலும் கிடை யாது. சிவபெருமான் தலைவனாகவும் உயிர் தலைவியாகவும் வைத்து உருவகம் செய்ததற்குக் காரணங்கள் உளவோவெ னிற் கூறுதும். சிற்றின்பத் துறையில் பாயுஞ் சத்தியு டைய தலைவன் (positive element) தாங்குஞ் சத்தியுடைய தலைவிக்கு (negative element) இன்பங் கொடுத்தல் போல் பேரின்பத் துறையில் வரம்பில் இன்பமுடைய சிவபெரு மான், ஒன்றைச் சார்தலும் சார்ந்தவண்ணமாதலும் இயல்பா கவுடைய உயிருக்குப் பேரின்பம் கொடுக்கின்றவனா யிருக் கிறான். தலைவி தலைவனுடன் அன்பினால் கூருடல் ஒருயிரெ னச் சார்ந்து கலத்தலினால் சிற்றின்பமடைதல் போல, உயிர் அயரா அன்பினால் சிவபெருமானைச் சார்ந்து அவனுடன் இரண்டற (அத்துவிதமாக)க் கலத்தலினாலே பேரின்பம் அடைகிறது. சைவசித்தாந்த உண்மைக்கூறாகச் சத்தி சிவத் தில் ஒடுங்குதல் போலச் சத்தியின் கூறாகிய பெண் சிவத்தின் கூறாகிய ஆணில் ஒடுங்குதல் வேண்டும் ; ஒடுக்க நிலையில் சத் தியுஞ் சிவமுஞ் சேர்ந்து ஒரு பொருளாதல் போலப் பெண் ணும் ஆணும் சேர்ந்து ஒரு பொருளாகின்றன. சாரப்பட்ட பொருள் சிவத்தின் கூறாகிய ஆண் ; சாரும்பொருள் சத்தி யின் கூறாகிய பெண் ஆகும். உலக வழக்கில் பெரும்பான் மையும் பெண் ஒருத்தியே "அறிவுமிக்க நன்னாணமு நிறை மையு மாசையு மிங்குள்ள—உறவும் பெற்ற நற்றாயொடு தந் தையு முடன்பிறந்தவரோடும்—பிரியவிட்டு" ஆண் ஒருவனை அடைந்து "உனை அடைந்தனன் என்று கொள்" என்று கூறி, அவனுடைய இல்லத்தில் இல்லாளாக அமைந்து இன்புறு

கின்றான். (1) தன்னை மறந்தாள், (2) தன் நாமங்கெட்டாள், (3) தலைவன்தாள் தலைப்பட்டாள் இவை முறையே ஒன்றனுக்கொன்று ஏதுவும் பயனுமாய் அமைந்திருக்கின்றன. உயிர், தன்னை மறத்தலும் தன் நாமங் கெடுதலும் முறையே சிவஞானபோதம் க0-வது சூத்திரத்திற்கூறப்பட்ட "ஏகனுதலையும்," "இறைபணி நிற்றலையும்," தலைவன் தாள் தலைப்படல் மேற்படி கக-வது சூத்திரத்திற் கூறப்பட்ட "அரன்கழல் செல்லுதலையும்" குறிக்கின்றன. இப்பாட்டில் முன் கூறப்பட்ட (1) அவன் நாமம்கேட்டல், (2) அவனிருக்கும் வண்ணம் கேட்டல், (3) அவனுடைய ஆரூர் கேட்டல் இவை முறையே ஒன்றனுக்கொன்று ஏதுவும் பயனுமாய் அமைந்திருத்தலையும்,பின்கூறப்பட்ட(1)தன்னைமறந்தாள் (2) தன் நாமம் கெட்டாள், (3)தலைவன்தாள்தலைப்பட்டாள் இவை முறையே ஒன்றனுக்கொன்று அவ்வாறே ஏதுவும் பயனுமாய் அமைந்திருத்தலையும், முன் கூறப்பட்ட நாமம், வண்ணம், ஆரூர் மூன்றும் ஆண்டவனாகிய சிவபெருமானுக்கு உரியனவாயும், பின் கூறப்பட்ட தன்னை மறத்தல் தன் நாமம் கெடுதல் தலைவன் தாள் தலைப்படுதல் ஆகிய மூன்று பயன்களும் அடிமையாகிய உயிர் அடைதற்கு உரியனவாயும், உயிர் முன் கூறப்பட்ட சத்துச் சித்து ஆநந்தத்தன்மைகளை உடைய சிவபெருமானைச் சேர்ந்து பின் கூறப்பட்ட மூன்று பயன்களையும் இதுகாறும் அடைய வொட்டாமல் **இடையிலே** இடையீடாக நின்று, தடுத்துக் கொண்டிருந்த பொல்லாத ஆணவமலத்தாலுண்டாகிய உயிர்ப்பற்றுப் பொருட் பற்றுக்களை இந்தஇரண்டு திரயங்களுக்கும் **இடையிலே** வைக்கப்பட்டிருத்தலையும் சிவநேயச் செல்வர்கள் உற்று, நோக்கி, உள்ளி, உள்ளம் கரைந்து, உருகிப் பெருகி உவட்டா இன்பம்தெவிட்

டாமல் அடைவார்களாக. ஆ! இப்பாட்டின் அருமைதான் என்னே என்னே!! உயிரானது மல நீக்கம்பெற்று அருள் விளக்க முறல், உயிர் விளக்கம் என்பது இப்பாட்டிற் கூறப்பட்டது.

### ௬.—௭. திருவாரூர்-பண்-பழம்பஞ்சுரம்.

௯௪ வன்னாக நாண்வரைவில் லங்கிகணை யரிபகழி
தன்னாக முறவாங்கிப் புரமெரித்த தன்மையனை
முன்னாக நினையாத மூர்க்கனே னாக்கைசுமந்
தென்னாகப் பிரிந்திருக்கே னென்னாரூ ரிறைவனையே.

(ப-ரை) வல்நாகம் நாண் - வலிய பாம்பாகிய ஆதிசேடனை (வில்லிலே கட்டும்) கயிறாகவும்; அரிபகழி - திருமாலை அம்பாகவும்; ஐ கண் அங்கி - அழகிய கண் ஆகிய நெற்றிக் கண்ணைத் தீயாகவும் கொண்டு; வரை வில் - மகாமேருமலையாகிய வில்லை; தன் ஆகம் உற வாங்கி-தனது உடலிலே பொருந்தும்படி வளைத்து; புரம் எரித்த தன்மையனை - (தேவர்களைக் காக்கும் பொருட்டு அவர்களுக்குத் தீங்கு இழைத்துக் கொண்டு வந்த) திரிபுர அசுரர்களை எரித்த ஆற்றல் உடையவனும்; என் ஆரூர் இறைவனை - எனக்குப் பல இன்பங்கள் தந்தருளிய திருவாரூர்ப் புற்றிடங் கொண்டானாகிய

* குறிப்பு :—இதனை ஓதும் சிவநேயர்கள் இப்பாட்டின் உரையைச் சிற்றின்பத்துக்கும் பேரின்பத்துக்கும் ஏற்றவாறு அமைத்து அறிந்து உணர்ந்து இன்புறுக. அவற்றை இங்கே விரிப்பின் உரை மட்டின்றி விரியும். சிற்றின்ப உலகவாழ்வின் பயன் பேரின்பம் அடைதல் என்ற சைவசித்தாந்த உண்மையை இப்பாட்டு வலியுறுத்துகின்றது.

சிவபெருமானை; ஆக்கை சுமந்து - இந்த உடற்சுமையைத் தாங்கிக்கொண்டு; முன்னாக நினையாது இருந்த மூர்க்கனேன்- (திருவாரூரை விட்டு திருவொற்றியூருக்கு வந்து சங்கிலியை மணந்து அங்கே வாழ்ந்துகொண்டிருந்து) சிலகாலமாக நினைந்து வழிபாடு செய்யாதிருந்த அற்பனாகிய நான்; என் ஆகப் பிரிந்திருக்கேன் - என்ன கதி அடைய இன்னமும் எவ்வளவு காலம் பிரிந்து திருவொற்றியூரில் இருப்பேன்? 2

(வி-ரை) சுந்தரமூர்த்தி அடிகள் தாம் சங்கிலிநாச்சியாரை மணந்து திருவொற்றியூரிலிருந்து 'காலங்கள் பல' சென்றபின் திருவாரூர்ப் புற்றிடங்கொண்ட பெருமானை நினைந்து அங்குச் சென்று அவரைக்கண்டு புறவழிபாடு செய்தல் வேண்டும் என்ற கருத்துத் தமது உள்ளத்தில் எழுந்தபொழுது அங்கிருந்தபடியே பாடிய திருப்பதிகத்தின் ஆறுவது பாட்டு இது. கணை அங்கி-ஐ கண் அங்கி என மாற்றிப்பொருளுரைக்க. வில் அம்புகளிருப்பினும் சிவபெருமானது நெற்றிக்கண்ணிலிருந்து எழுந்த தீயானது திரிபுரத்தை எரித்ததனால் 'அங்கிகணை' என்றார். புரம் எரித்ததன்மையை-சிவபெருமான் புரம் எரித்த வரலாறு அடியார்களுடைய ஆணவம் கன்மம் மாயை ஆகிய மும்மலங்களையும் கெடுத்தமையைக் குறிக்கிறது. "அப்பணி செஞ்சடை யாதிபுராதனன், முப்புரஞ்செற்றன னென்பார்கள் மூடர்கள், முப்புரமாவது மும்மலகாரியம், அப்புர மெரித்தமை யாரறி வாரே" என்று திருமூலர் 343-வது திருமந்திரப் பாட்டிற் கூறியிருத்தல் காண்க. முன்னாக நினையாத மூர்க்கனேன் - முன்னாக என்பதனால் சுந்தரமூர்த்தி அடிகள் தாம் திருவொற்றியூரில் சங்கிலியாரை மணந்து அவரோடு வாழ்ந்து சென்ற காலத்தைக் குறிப்பிடுகின்றார். சேக்கிழார் அடிகள் பெரிய புராணத்தில் "காலங்கள் பல முறைமையினா லகல"

என்று கூறுகின்றார். ஆக்கை சுமந்து-என்பதனால், இந்த உடலோடு கூடிய நான், திருவாரூர்ப் புற்றிடங்கொண்ட பெருமானால் பல இன்ப நலங்களை அடைந்திருக்கின்றமையால், அவரை நினைந்து வழிபடாது திருவொற்றியூரி லிருத்தல் சிறிதும் தகாது என்பது குறிப்பிடப்பட்டது. என் ஆகப் பிரிந்திருக்கேன்- இதனால் அடிகள் தமது பிரிவாற்றாமையைக் கூறுகின்றார். பிரிந்திருந்தால் நான் என்ன கதி அடைவேனோ என்று அவர் தமது பிரிவாற்றாமையைக் கூறுகின்றார். பிரிந்திரு + க் + கு + என் - பிரிந்திருக்கேன்-தன்மை ஒருமை எதிர் காலவினை முற்று. இறைவனை விட்டுப் பிரியாது அவனோடு அத்துவிதமாய்க் கலந்திருத்தல் உயிர் விளக்கம் ஆதலின், 'என்னாகப் பிரிந்திருக்கேன்' என்ற வாசகமமைந்த இப்பாட்டு இந்த அதிகாரத்தில் வைக்கப்பட்டது.

நா.-௪. திருவாரூர். பழமொழி. பண்-காந்தாரம்.

௬௫ துன்னாகத் தேனாகித் துர்ச்சனவர்
சொற்கேட்டுத் துவர்வாய்க்கொண்டு
என்னாகத் திரிதந்தீங் கிருகையேற்
றிடவுண்ட வேழையேனான்
பொன்னாகத் தடியேனைப் புகப்பெய்து
பொருட்படுத்த வாரூரரை
என்னாகத் திருத்தாதே யேதன்போர்க்
காதனா யகப்பட்டேனே.

(ப-ரை). துன் ஆகத்தேன் ஆகி - (மலஇருள்) செறிந்திருக்கின்ற உடலை உடையவனாகி; துர்ச்சனவர் சொற்கேட்டு- தீயவர் ஆகிய சமணர்கள் எனக்குச் சொன்ன சொற்

களைக்கேட்டு (அவைகளின்படி ஒழுகி); துவர் வாய்க்கொண்டு-சிவப்பு நிறம் பொருந்திய வாயுடனே ; என்னுகத் திரிதந்து - என் இட்டப்படி திரிதந்து - என் இட்டப்படி திரிந்து ; ஈங்கு - இவ்வுலகில்; இருகை ஏற்றிட உண்ட ஏழையேன் நான் - இரண்டு கைகளையும் ஏந்திப்பிச்சைச் சோறுவாங்கி உண்ட அறிவில்லாதவனுகிய நான் ; அடியேனைப் பொன் ஆகத்துப் புகப்பெய்து - (கேவலத்தில் ஆணவமலத்திறுற் கட்டுண்டு அறியாது கிடந்த) அடிமையாகிய என்னை (அறியாமையினின்றும் நீங்கிப் பேரின்பமடையுமாறு சகலத்தில்) பெறுதற்கரிய மானிடஉடலிற் பொருந்தி வாழும்படி செய்து; பொருட்படுத்த ஆரூரரை - அதனுல் ஒரு பொருட்டாக மதித்திருக்கும் திருவாரூரில் எழுந்தருளி யிருக்கின்ற புற்றிடங்கொண்ட பெருமானை ; என் ஆகத்து இருத்தாது - எனது மனத்தில் வைத்து நினையாமல் ; எதன் போர்க்கு - பஞ்சக்கிலேசங்களுடன் கூடிய பும்சத்துவ மலமாகிய குற்றமுடைய புருடன் என்னுடன் (ஆன்மாவுடன்) செய்கின்ற போராட்டத்துக்கு ; ஆதனுய் அகப்பட்டேன் - (அதனை எதிர்த்து வெல்லும் வலியில்லாத) அறிவிலியாய் அகப்பட்டுத் திகைத்தேன். 3

(வி-ரை.) துன்னாகத்தேன் ஆகி-துன்-நெருங்கிய,செறிந்திருக்கின்ற பிரகிருதி மாயை அசுத்தமாயைகளுக்குச் சேர்ந்த தத்துவங்களாலாகிய உடல் மலஇருள் செறிந்திருக்கின்ற உடல் ஆகலின் ' துன்னுகம் ' என்றுர். சுத்த மாயா தத்துவங்கள் அவைகளுடன் கலந்திருந்தாலும் சுத்த மாயா தத்துவங்கள் விளங்காது அடங்கியிருப்ப, அவை மேலிட்டு நிற்றலால், உடலில் மல இருள் செறிந்து நிற்கிறது. மல இருள் செறிந்திருக்கின்ற உடலாவது சுத்த மாயா தத்துவ ஒளி விளங்காத உடல். துவர்வாய்க் கொண்டு - துவர்-சிவப்பு; துவர்வாய்-

பாக்குத் தின்றதனால் உண்டாகிய சிவப்பு வாய். சமணர்கள் பாக்குத் தின்பதைத் திருஞானசம்பந்த அடிகள், திருமருகல்-திருச்செங்காட்டங்குடித் தேவாரப்பதிகம் 10-வது பாட்டில் “ இலைமருதே யழகாக நாளுமிடுதுவர்க்காயோடு சுக்குத் தின்னும், நிலையமண் ” என்று கூறியருளினார். பொன் ஆகத்து - பொன் - உலோகங்களில் விலையுயர்ந்த உலோகம். அது இங்கே ‘பெறுதற்கரிய ’ என்ற பொருள்பட நின்றது. மானிட உடற்பிறவி பெறுதற்கரியது ஆகலின் ‘பொன் ஆகம்’ என்றார். என் ஆகத்து இருத்தாது - ஆகம் என்பது இங்கே மனம் என்ற பொருள்பட நின்றது, இருத்தாது – வைத்துத் தியானம் செய்யாது. சிவபெருமானை மனத்திலே தியானம் (சிவோகம் பாவனை செய்தல் மலத்தைக் கெடுத்து அருள்ஒளி விளங்கச் செய்யும் ஆதலின் ‘என் ஆகத்திருத்தாது’ என்றார். இருத்தாதே என்பதிலுள்ள ஏ - அசை. ஏதன்போர்க்கு ஆதனாய் அகப்பட்டேன் - ஏதம் - குற்றம், ஏதன் - குற்றத்தை உடையவன். அது இங்கே பஞ்சக் கிலேசம் என்னும் பும் சத்வ மலமாகிய குற்றத்தை உடைய புருடனைக் குறிக்கிறது. பஞ்சக்கிலேசம்பற்றி முன் பாட்டுக்களில் விளக்கம் செய்யப் பட்டது. சகல வர்க்க ஆன்மாக்கள் பும்சத்துவ மலத்தின் சேர்க்கையால் உலக விடயபோகத்தில் உன்முகமாய் நின்று அதனை நுகர்கின்றார்கள். போர்-யுத்தம் ; அது இங்கே பும் சத்துவமலம் ஆன்மாவை எதிர்த்துப் போராடுதலை (Struggle) க்குறிக்கிறது. பும்சத்துவமலம் ஆன்மாவை எதிர்த்து உலக விடயபோகத்தில் ஈர்த்துச் செல்லுதலால் ‘ ஏதன்போர்க்கு அகப்பட்டேன் ’ என்றார். ஆதன் - அறிவில்லாதவன் -அருள் ஒளி விளங்கப் பெறாதவன். ஒளி முன் இருள் நில்லாதது போல, அருள்முன் மலம் எதிர்த்து நின்று போராடாது ஆக

வின், அடிகள் தாம் சமண சமயத்திலிருந்த காலத்தில் சிவ பெருமானை வழிபட்டு அருள்விளக்கம் பெறாதிருந்த காரணத்தால் மலத்தினது போராட்டத்துக்கு ஆதனாய் உட்பட்டு அதனை எதிர்த்து வெல்ல முடியாமலிருந்ததாகக் கூறுகின்றார். மாந்தருக்கு உலக வாழ்க்கைப் போராட்டம் (Life Struggle) பும்சத்துவ மலத்தாலுண்டாகிறது. அதனை எதிர்த்துச் செல்லுதற்கு வழி அருளைப்பற்றி நிற்றலாகும். இதனால் ஒழுக்கம் நிலைத்து உறுதிபெற்று நிற்றலுக்கு அருளே துணை என்பது பெறப்படுகின்றது. 'என்னைத் திருத்தாதே யேதன் போர்க்காதனாயகப்பட்டேன்' என்றதனாலே, உயிரானது பும்சத்துவ மல இருளினின்று நீங்கி, அருளொளி விளங்கப் பெறுதலுக்கு, ஆகத் திருத்தலாகிய சிவோகம் பாவனை வேண்டப்படும் என்பது எதிர்மறையிற் குறிப்பிடப்பட்டது. அதனால் இச்செய்யுள் உயிர் விளக்கத்தின் கீழ் வைக்கப்பட்டது.

சு.—எ. திருவோற்றியூர். பண்-குறிஞ்சி.

சுசு என்ன தெழிலும் நிறையுங் கவர்வான்
புன்னை மலரும் புறவிற் றிகழும்
தன்னை முன்னம் நினைக்கத் தருவான்
உன்னப் படுவா னொற்றி யூரே.

(ப—ரை) முன்னம் தன்னை நினைக்க - முன்னே தன்னை நான் நிலையாய் நினைத்துக்கொண்டிருக்க ; உன்னப்படுவான் - தன்னையே எப்பொழுதும் நினைப்பும் மறப்பும் அற்ற நிலையில் என்னை நினைக்கச் செய்கிறவனும்; என்னது எழிலும் - என்னுடைய அழகையும் ; நிறையும் கவர்வான் - மன அடக்கத்தையும் தன்வசமாகச் செய்கிறவனும் ; புறவில் திகழும் -

குறிஞ்சி நிலத்தில் விளங்கும்; புன்னை மலர்தருவான் -புன்னை மலரினது பூவை எனக்குத் தருகிறவனும் ஆகிய சிவபெருமான் (வீற்றிருக்குமிடம்); ஒற்றியூர் - திருவொற்றியூர் என்னும் தலம் ஆகும். ஆதலின், அடியார்களே திருவொற்றியூரிலிருக்கிற சிவபெருமானை வணங்கி உய்மின் என்பது குறிப்பெச்சம். 4

(வி—ரை) இப்பாட்டு அகப்பொருட்டுறையில் தலைவி தலைவனைப்பற்றிக் கூறும் கூற்றாகக் கூறப்பட்டது. முன்னம் தன்னை நினைக்க - நினைத்தல் என்பது நான் என்ற தன் முனைப்புக் கெட்டுச் சிவபெருமானை நிலையாய் நினைத்துக் கொண்டிருத்தல். சுந்தரமூர்த்தி அடிகள் மேலே 61-வது பாட்டில் "நிலையாய் நின்னடியே நினைந்தேன்" என்று சொன்ன கருத்தை இங்கு "முன்னம் தன்னை நினைக்க" என்று கூறியருளினார். 61-வது பாட்டின்கீழ் அதற்குக் கூறிய விளக்க உரையை இதற்கும் கொள்க. உன்னப் படுவான் - உன்னுதல் - நினைத்தல், சிந்தித்தல். சுந்தரமூர்த்தி அடிகள் மேலே 61-வது பாட்டில் 'நின் நினையப் பணித்தாய்' என்று சொன்ன கருத்தை இங்கே 'உன்னப்படுவான்' என்று செயப்பாட்டு வினையிற் கூறியருளினார். அதற்குக் கூறிய விளக்க உரையை இதற்கும் கொள்க. 49-வது பாட்டில் உணரப்படுவான் என்பதும் இங்கே உன்னப்படுவான் என்பதும் ஒரு பொருளன. "உன்னைத் தொண்டனேன் நினையுமா நினையே" என்று கூறும் திருவிசைப்பா வாசகம் நோக்குக. என்னது எழில் - எழு + இல்-எழில் - எழுச்சி, தோற்றப் பொலிவு, அழகு. எழில், உடம்பு நலத்தைக் குறிக்கிறது. நிறையும் கவர்வான் - நிறு + ஐ—நிறை - ஐ தொழிற்பெயர் விகுதி. நிறுத்துதல்-மனத்தைத் தன்வயம் நிறுத்தல், மன அடக்கம்,

கவர்தல் - தன்வயப்படுத்துதல், சிவபோதம் கெட்டுச் சிவபோதம் செய்வித்தல். நிறை — உயிர்நலத்தைக் குறிக்கிறது. புன்னை மலரும் புறவிற்றிகழும் - மூன்றாவது அடியிலுள்ள தருவான் என்ற சொல்லைச் சேர்த்துப் புறவிற்றிகழும் புன்னைமலர் தருவான் என்று உரைநடை செய்க. மலரும் என்பதில் உம் அசை. புறவு - குறிஞ்சி நிலம். புன்னை மலர் குறிஞ்சி நிலத்தின் கருப்பொருள். குறிஞ்சி நிலத்திலுள்ள புன்னை மலரைத் தருவான் என்பதனால், தந்து என்னைச் சேர்ந்து இன்பம் செய்பவன் என்ற கருத்து அகப்பொருட்டுறையில் வைத்துக் கூறப்பட்டது. புன்னை மலர் நெய்தல் நிலத்தின் கருப்பொருள் என்று பொருளிலக்கணத்தில் பொதுவாகக் கூறப்பட்டாலும் புணர்தலைக் குறிக்கும் குறிஞ்சி நிலத்துக்கும் அதனைக் கருப்பொருளாகக் கொள்ளலாம். இரங்குதலைக் குறிக்கும் நெய்தல் நிலப் புன்னை மலர் இங்கே பொருந்தாது. திருக்குற்றாலம் முதலிய நீர்வளமுடைய குறிஞ்சி நிலங்களிற் புன்னைமரங்கள் மிகுதியாய் உண்டாயிருக்கின்றன. நாகம் என்ற சொல் மலையையும் மலையிலுள்ள புன்னை மரத்தையும் குறித்தலால் புன்னை மரம் குறிஞ்சி நிலத்தின் கருப்பொருளுமாகும். "நாகம்விண் குரங்கு புன்னை நற்றூசு மலை பாம்பு யானை" என்பது சூடாமணி நிகண்டு, "எந்நிலமருங்கிற் பூவும் புள்ளும், அந்நிலம் பொழுதொடு வாராவாயினும், வந்த நிலத்தின் பயத்தவாகும்" என்று தொல்காப்பியம் அகத்திணையியல் 19-வது சூத்திரம் கூறுதல் காண்க. ஒற்றியூர் - இந்த இடப்பெயருக்கு முன் அவாய்நிலையால் தொக்கி நிற்கும் "வீற்றிருக்குமிடம்" என்பது விரித்துப் பொருள் உரைக்கப்பட்டது. (1) உன்னப்படுவான், (2)கவர்வான், (3)தருவான், தெரிநிலை வினையாலணையும்

பெயர்கள். தோன்று எழுவாய் இடம், பயனிலை ஒற்றி யூர். இப்பாட்டில் (1) உயிர் சிவனை நினைத்தல். (2) உயிர் சிவனால் நினைக்கப்படுதல். (3) உயிரைச் சிவன் தன் வயப்படுத்தல். (4) சிவன் உயிருக்கு இன்பம் தருதல் ஆகிய நான்கு நிலைகள் கூறப்பட்டன. இவை முறையே ஒன்றின்பின் ஒன்றாய் நிகழ்வன.

ச. உ. திருப்பிரமபுரம். பண்-சீகாமரம்.

கஎ எம்பிரா னெக்கமுத மாவானுந் தன்னடைந்தார்
தம்பிரா னாவானுந் தழலேந்து கையானுங்
கம்பமா கரியுரித்த காபாலி கறைக்கண்டன்
வம்புலாம் பொழிற்பிரம புரத்துறையும்
[வானவனே.]

(ப-ரை) தன் அடைந்தார் தம்பிரான் ஆவானும் - (யார் அகப்பற்றுப்புறப்பற்றுக்களை விடுத்து, அடிமைகளாகிய தங்களுக்கு உண்மைப்பற்று யுள்ளவன் சிவபெருமானே என்று) தன்னைப் புகலாக எவர் அடைந்தாரோ அவர்களுக்கு ஆண்டவன் ஆகின்றவனும்; எம்பிரான் எனக்கு அமுதம் ஆவானும்- அந்த முறைமையில் அடியார்களாகிய எங்களுடைய தலைவன் அவனை ஆண்டவனுய்க் கொண்ட எனக்குப் பேரின்பம் தரும்பொருளாயிருக்கிறவனும்; தழல் ஏந்து கையானும்- தீயைத் தனது கையில் வைத்துக்கொண்டிருக்கிறவனும்; கம்பம் மாகரி உரித்தகாபாலி (உம்) - மனிதரைத் தோற்றத்தால் நடுங்கச் செய்கின்ற பெரிய ஆனையினது தோலை உரித்து அதனைப் போர்வையாகத் தனது உடலின்மேற் போர்த்திருக்கின்ற காபாலியும்; கறைக்கண்டன் ( உம் ) — (ஆலகால

விடத்தை உண்டதனால் உண்டாகிய) கறுப்பு நிறத்தைக் கழுத்திலே உடையவனும்; வம்பு உலாம் பொழில் பிரமபுரத்து உறையும் வானவன் – மணம் பொருந்தியுள்ள சோலைகளாற் சூழப்பட்ட சீகாழியிலே திருக்கோயில் கொண்டெழுந்தருளி யிருக்கின்ற மேலான பொருளாகிய சிவபெருமானாவான். 5

(வி–ரை) தன்னடைந்தார் தம்பிரான் ஆவானும் - எல்லா ஆன்மாக்களுக்கும் பொதுவாகக் கூறப்பட்ட ஆண்டான் அடிமைத் தொடர்பு உண்மை கூறப்பட்டது. எம்பிரான் எனக்கு அமுதம் ஆவானும் - அப்பொது உண்மையைத் திருஞானசம்பந்த அடிகள் தமக்குப் பொருத்திக் கூறுகின்றார். எம்பிரான் - அடியார்களாகிய எங்களுடைய தலைவன், எல்லா அடியார்களுக்கும் சிவபெருமான் தலைவனா யிருப்பது பற்றி எம்பிரான் என்று பன்மையிலும், தாம் அருந்தும் பேரின்பம் தனிமையா யிருத்தல் பற்றி எனக்கு அமுதமாவான் என்று ஒருமையிலும் அடிகள் கூறினார். அமுதம் ஆவான் - அமுதம், உண்கிறதற்கு மிக இனிமையாயும், உண்டவரை இறப்பினின்று நீக்கும் பொருளாயுமிருத்தலின் அது இன்பப் பொருளாயிருக்கிற சிவபெருமானுக்கு உருவகப்படுத்தப்பட்டது. தழலேந்து கையானும் - சிவபெருமானது அழித்தற்றொழிலைக் குறிக்கிற தழல், இங்கே சிவபெருமான் அடியார்களது மாயா மலத்தை அழித்தலைக் குறிக்கிறது. கம்பமாகரியுரித்த காபாலி - சிவபெருமான் யானை வடிவாய் நின்று அடியார்களை வருத்தின கயாசுரனைக் கொன்று அவன் தோலையுரித்துத் தரித்தனரென்பது புராணவரலாறு. அது இங்கே சிவபெருமான் அடியார்களது ஆணவமலத்தைக் கெடுத்தலைக் குறிக்கிறது. காபாலி - என் உம்மை தொக்கி

நிற்கிறது. காபாலி - பிரமனது தலையைக் கையிலே வைத்திருக்கிறவன். கறைக்கண்டன் - அது அடியார்களது வினை மலத்தைக் கெடுத்து அவர்களுக்கு அருள் செய்தலைக் குறிக்கிறது. எண் உம்மை தொக்கி நிற்கிறது. வானவன் - மேலானவன், பரம்பொருள்; ஞானகாசமாயுள்ளவன் என்றும் பொருள் கொள்ளலாம். தம்பிரான் ஆவான், அமுதமாவான், கையான், காபாலி, கறைக் கண்டன் ஐந்தும் எழுவாய்கள், வானவன் - பயனிலை. இந்தப் பாட்டு, சிவபெருமானுக்கும் ஆன்மாவுக்குமுள்ள ஆண்டான் அடிமைத் தொடர்பு அத்துவித உண்மையைக் கூறுகிறது. இந்த உண்மையைச் சிறப்பாக அறிந்து ஒழுகுகின்ற அடியார்களுக்கு ஆண்டவனாகிய சிவபெருமான் பேரின்பம் தந்து அருள் செய்கின்றான் என்பது இதிற் கூறப்பட்டது. இதனால் உயிர் விளக்கம் கூறப்பட்டது.

## நா-ரு. மறக்கிற்பனே என்னும் திருக்குறுந்தொகை.

கூஅ ஈச னீசனேன் றென்று மரற்றுவன்
ஈசன் றனேன்ம னத்திற் பிரிவிலன்
ஈசன் றன்னையு மேன்மனத் துக்கொண்டு
ஈசன் றன்னையு மியான்மறக் கிற்பனே.

(ப-ரை) ஈசன் ஈசன் என்று - (என்னை ஆளும்) ஆண்டவனே ஆண்டவனே என்று சொல்லி; என்றும் அரற்றுவன் - நான் (அகம் குழைந்துருகி) எப்பொழுதும் வாய்விட்டு அலறி அழைப்பேன்; ஈசன் என் மனத்துப் பிரிவிலன் — (அவ்வாறு நான் அழைத்தலினால்) சிவபெருமான் என் மனத்தைவிட்டுப் பிரியாமல் எப்பொழுதும் அதனிடத்து அருளொளியாக விளங்கிக்கொண்டிருக்கிறான்; ஈசன் தனையும் என் மனத்தும்

கொண்டு ஆதலினால், சிவபெருமானை என் மனத்தில் வைத்துக்கொண்டு எப்பொழுதும் நிலையாக நினைத்துக்கொண்டிருத்தலால்; ஈசன் தன்னையும் யான் மறக்கிற்பனே - அப்பேர்ப்பட்ட சிவபெருமானையும் நான் மறக்க முடியுமோ? முடியாது என்றபடி. 6

(வி-ரை) ஈசன் ஈசன் - ஈசன் என்பது வடமொழிச் சொல், ஈசன் ஈசன்- அடுக்குத் தொடர். என்றும் அரற்றுவன்- அரற்றுதல்- வாய் விட்டலறுதல்; மனத்தினுள்ளே குழைந்து உருகுதலால் வாய்விட்டலறுதல், "எம்பெருமான் பெருமானென் - றையாவென்றன் வாயாலரற்றி யழல்சேர்மெழு கொப்ப" என்று திருவாசகம் ஆசைப்பத்து, 8-வது பாட்டிற் கூறியிருத்தல் காண்க. ஈசன்தான் என் மனத்துப் பிரிவிலன் - இது அகங்குழைந்துருகி அரற்றுதலினாலுண்டாகிய பயன். தான், தன், உம் அசை நிலைகள். ஈசன்றன்னையும் யான் மறக்கிற்பனே - உம் உயர்வு சிறப்பு உம்மை; தன், ஏ - அசைகள். மறக்கிற்பன் என்பதற்கு மேலே 48-வது பாட்டின் கீழ்க் கூறிய விளக்கவுரை கொள்க. உயிரினுடைய மனத்திற் சிவபெருமான் என்றும் பிரியாதிருத்தல் உயிர் விளக்கம் என்பது இப்பாட்டிற் கூறப்பட்டது.

நா-ச. திருச்செம்பொன்பள்ளி — திருநேரிசை.

கூகூ. ஊனினு ளுயிரை வாட்டி யுணர்வினார்க் கெளியராகி
வானினுள் வான வர்க்கு மறியலா காத வஞ்சர்
நானேனிற் றனே யென்னு ஞானத்தார் பத்தர் [நெஞ்சுள்
தேனுமின் னமுது மானார் திருச்செம்பொன் பள்ளி [யாரே.

(ப-ரை) திருச்செம்பொன் பள்ளியார் - திருச்செம்பொன்பள்ளி என்ற தலத்தில் திருக்கோயில்கொண் டெழுந்தருளியிருக்கின்ற சிவபெருமான் ; வானினுள் வானவர்க்கும்- தேவலோகத்தில் திருமால் அயன் முதலிய தேவர்களுக்கும்; அறியலாகாத வஞ்சர்-அறிதற்கு மிக அரியவரா யிருப்பினும்; ஊனினுள் உயிரை வாட்டி- உடம்பினில் நிலவுகின்ற உயிரைச் சிவபோதம் எழாதபடி அடங்கச் செய்து ; நான் என் இல் தான் என்னும் - நான் என்னும் உயிர்ப்பற்றும், எனது என்னும் பொருட்பற்று மில்லை, சிவனே என்று உணர்கின்ற; உணர்வினார் ஞானத்தார் பத்தருக்கு - உணர்வினை உடையவர்களாகிய நினைப்பும் மறப்புமற்ற அயரா அறிவினையும் உயிர்ப்பற்றும் பொருட்பற்றும் அற்ற பேரன்பினையுமுடைய அடியார்களுக்கு ; எளியராகி - அவர்கள் தாமே என்னும்படி பேரருளினால் அவர்களோடு அத்துவிதமாய்க் கலந்திருக்கும் எளிமையை உடையவராகி ; நெஞ்சுள் - அவர்களது நெஞ்சில்; தேனும் இன் அமுதும் ஆனார் - தேன்போன்றும் இனிய அமுதுபோன்றும் இன்பம் உணரச் செய்கின்ற பேரின்பப் பொருளா யிருக்கிறார். ஆதலின், அடியார்களே ! திருச்செம்பொன் பள்ளியில் திருக்கோயில்கொண் டெழுந்தருளி யிருக்கின்ற சிவபெருமானை வழிபட்டுப் பேரின்பம் அடைமின் என்பது குறிப்பெச்சம். 7

(வி-ரை) வானினுள் வானவர்க்கும் - உம் சிறப்பு உம்மை. அறியலாகாத வஞ்சர் - வஞ்சர் என்பது அரியவர் என்னும் பொருள்பட வந்தது. அடியார்களுக்கு எளியரா யிருத்தலும் ஏனையோர்களுக்கு அரியரா யிருத்தலும்பற்றிச் சிவபெருமான் வஞ்சர் என்று கூறப்பட்டார். இது இகழ்தல்

போன்று புகழ்தல் ஆகும். ஊனினுள் உயிரை வாட்டி - ஊன் ஆகுபெயராய் உடலைக் குறிக்கிறது. வாட்டுதல் - வாடச் செய்தல், மெலியச்செய்தல்; அதாவது சீவபோதத்தை அடங்கச்செய்தல். கோணலாயிருக்கிற இளமூங்கிற் கொம்பைத் தீயில் வாட்டி நேராக்கப்படுதல்போல, உலகை நோக்கித்திருகு சிந்தையை உடைத்தாயிருக்கிற உயிரை மெய்ஞ்ஞானத் தினாலே நேர்மையாக்கி இறைவனை நோக்கிச் செம்மையுடையதா யிருக்கும்படி செய்தல் என்ற கருத்து, வாட்டி என்ற சொல்லில் அடங்கியுள்ளது. "யான்செய்தேன் பிறர் செய்தாரென்னதியானென்னு மிக்கோணை ஞானவெரியால் வெதுப்பி நிமிர்த்து" என்ற (சித்தியார் கூ-கரு. 2-ம் செ.) கருத்தை நோக்குக. நான் என் இல் தானே ஆகி - நான் - நான் என்ற (Iness) சொல் உயிர்ப்பற்றையும் (அகங்காரம்), என் என்ற சொல் பொருட்பற்றையும் (மமகாரம்) குறிக்கின்றன. என், எனது ஒரு பொருளன. இல்லை என்னும் வியங்கோள்வினை முற்றுச்சொல் ஈண்டு 'இல்' எனக்குறைந்து நின்றது. என்னும்- என்று சொல்லும்; இங்கே என்று உணரும் என்ற பொருளில் வந்தது. தானே - ஏ- பிரிநிலை, தான் என்ற சொல் சிவனைக் குறிக்கிறது. சிவபெருமான் அடியார் மேல் வைத்த பேரருளினால் அவர்கள் வேறு தான் வேறு என்று தோன்றாது தானே எனும்படி அவர்களைத் தனது திருவடி வியாபகத்துள் அடக்கிச் சீவபோதம் நீங்கிச் சிவபோத முடையவர்களாகச் செய்தல். "நானெனவொன்-றில்லென்று தானே யெனும வரைத் தன்னடிவைத்-தில்லென்று தானுமிறை" என்று கூறப்பட்ட ஞான நிலை இங்கே கூறப்பட்டது. உணர்வினார் ஞானத்தார் பத்தர் - ஞானத்தார் பத்தர் என்றதனால் முறையே அடியார்களுடைய அயரா அறிவு நிலையும் பேரன்பு நிலையும்

கூறப்பட்டன. பதவுரையில் உரைநடை செய்ததுபோல் உரைநடை செய்க. உணர்வினோர்க்கு - என்பதிலுள்ள 'கு' உருபைப் பத்தர் என்ற பதத்திற் சேர்த்துரைக்க. எளியர் ஆகி - மேலே வஞ்சர் என்று கூறியதற்கு மறுதலைக்குணம் உடையவர்; எளியவர், எளிமை இன்னது என்பது மேலே கூறப்பட்டது. தேனும் இன் அமுதும் ஆனார் - தேனும் அமுதும் ஏகதேச உவமப்பொருள்களன்றி பேரின்பத்துக்குச் சிறிதும் ஈடாகாதவை. உலக அநுபவத்தில் வைத்துப் பேரின்பம் எத்தன்மையது என்று கூறப்படவேண்டுதலின், தேனும் இன்னமுதும் என்று அடிகள் உவமித்துக் கூறினார். மாணிக்கவாசகப் பெருமானும், "தேனை யின்னமுதமு மாய்த் தித்திக்கும் சிவபெருமான்" என்று கூறியருளினர். 'தேனும் இன்னமுது மானார்' என்பதனால் அடியார்களுக்குத் துரிய நிலைக்கண்ணதாகிய அருள் நிலையில் மல நீக்கத்தாலாகிய ஒளி விளக்கத்தாலும், அருள் விளக்கத்தாலும் உண்டாவதாகிய இன்பத் தோற்றம் கூறப்பட்டது. இன்புறுநிலையின்கீழ்க்கூறப் படுவதாகிய துரியாதீத நிலைக்கண் சிவத்துவ விளக்கத்தா லுண்டாகும் பேரின்பத்துக்குத் தோற்றுவாய் செய்யப்பட்ட தாயிற்று. உயிர், யான் எனது என்னுஞ் செருக்கற்றுச் சிவமாதல் உயிர் விளக்கம் என்பது இப்பாட்டிற் கூறப்பட்டது.

நா-நி திருவாய்மூர்—திருக்குறுந்தொகை.

௭௦. யாதே செய்து மியாமலோ நீயெனில்
ஆதே யேயு மளவில் பெருமையன்
மாதே வாகிய வாய்மூர் மருவினார்
போதே யென்று புகுந்ததும் பொய்கொலோ.

(ப-ரை) யாது செய்தும் - (அடியார்கள் உலகில்) எந்தச் செயலைச் செய்தாலும்; யாம் அலோம் நீ எனில் - அச்செயலை நீயே செய்வித்து நாங்கள் செய்தோமே அன்றி நாங்களாகச் செய்யவில்லை நீயே செய்தாய் என்று சிவபோதமின்றி அவர்கள் (மனத்திலெண்ணி) வாயினாலே சொன்னால்; ஆதே வயும் அளவில் பெருமையன் - அந்தச் செயலைப் பொருந்தி அதனைத் தனது செயலாகக் கொள்ளும் அளவிட்டுக் கூற முடியாத பெருந்தன்மையை உடைய மறைக்காட்டிறைவன்; மாதேவு ஆகிய வாய்மூர் மருவினார் - தேவர்களுக்கெல்லாம் தேவனாகிய சிவபெருமான் திருவாய்மூருக்குவந்து எழுந்தருளினார்; போது என்று புகுந்ததும் பொய்கொலோ — (அவர் நாம் வாய்மூரிலிருப்போம் தொடர,) வா என்று சிவபெருமான் திருமறைக்காட்டில் என் துயிலின்கண் கூறிப்போந்ததும் பொய்யோ? 8

(வி-ரை) இப்பாட்டு, திருநாவுக்கரசு அடிகள் திருஞான சம்பந்த அடிகளுடன் திருமறைக்காட்டிலிருந்த காலத்தில் அத்தலத் திருக்கோயிற்கதவு தாம் பாடிய பதிகத்தில் (௧௦-வது பாட்டு) முடிந்து, ௧௧-வது பாட்டில் திறந்த அருமையையும், திருஞானசம்பந்த அடிகள் பாடிய முதற் பாட்டிலேயே திருக் கதவு அடைத்த எளிமையையும் நினைந்து "நம்பர் திருவுள்ளம், அறியாதயர்ந்தேன்" எனக் கவன்று தாமிருந்த திருமடத்தில் துயில் கொள்ளும்பொழுது சிவபெருமான் அவர் துயிலின் கண் தோன்றி (யாம்) "வாய்மூரிலிருப்போம் தொடர்வா" என்று கூறியருள, அத்திருவாக்கின் கட்டளைப்படி திருநாவுக் கரசு அடிகள் திருவாய்மூருக்குச் சென்றார். சிவபெருமானை வந்தவர் முன்செல்ல, அவரை நெடுந்தூரம் பின் தொடர்ந்து போய்க்காணாதிருந்தமையை இப்பாட்டினது நான்காவது அடி

குறிப்பிடுகிறது. இந்நிகழ்ச்சிக்குப் பொருந்த நான்காவது அடிக்கு உரை கூறப்பட்டது. யாதே செய்தும் - ஏ - அசை, செய்தும் - எதிர்கால வினையெச்சம், செய்தாலும் என்பது செய்தும் என நின்றது. யாம் அலோம் நீ எனில் - யாம் செய்தோம் அல்லோம் நீயே செய்தாய் என்னில் என விரியும்; அல்லோம், அலோம் எனவும், என்னில் - எனில் எனவும் குறைந்து வந்தன; என்னில் - என்று சொன்னால். "புன் செயலினோடும் புலன்செயல்போ னின்செயலை, மன்செயல தாக மதி" என்று திருவருட் பயனிற் கூறப்பட்டபடி அடியார்கள் தங்கள் செயலை இறைவனது கிரியா சத்தி நடத்தும் செயலாகக் கருதுதல் கூறப்பட்டது. "யான் செய்தேன் பிறர் செய்தார் என்னு மிக்கோளை" என்ற சிவஞான சித்தியார் 8-வது சூத்திரப் பாட்டின் கருத்து மிதுவே. "என் செயலாவதி யாதொன்றுமில்லை யினித்தெய்வமே, யுன் செயலேயென்று" உணரப்பெறும் ஞானியினுடைய நிலை இது; சிவஞான சித்தியார் 10ஞ் சூத்திரம் 4-வது செய்யுளில் "உண்ணின்றுஞ் செய்வித்துஞ் செய்கின்றாய்" என்று கூறியது நோக்குக. ஆதே ஏயும் அளவில் பெருமையன் - அது என்பது எதுகை நோக்கி ஆது என நீண்டது, நீட்டல் விகாரம், 'ஏ' பிரிநிலைப் பொருளில் வந்தது; ஏய்தல் - பொருந்தல், தன் செயலாகக் கொள்ளுதல், அடியார்கள் சிவபோத மின்றிச் செய்யும் செயலைச் சிவபெருமான் தனது செயலாகக் கொண்டு பேரருளினால் அவர்களுக்குத் தன்னையுமளித்து முன்னிற்பன் ஆதலின் அடிகள் "அளவில் பெருமையன்" என்று கூறியருளினர். "பெருமையன்" என்பதற்குப்பெரிய புராண வரலாற்றின்படி பொருளுரைக்கப்பட்டது. "நஞ்செய லற்றிந்த நாமற்ற பின்னுதன் - தன்செய லானேயென்

றுந்தீபற - தன்னையே தந்தானென் றுந்தீபற" என்று திருவுந்தியாரிற் கூறப்பட்டிருத்தல் காண்க. போதே என்று புகுந்ததும் பொய் கொலோ - போதே என்பதில் ஏ அசை; போது - வா - சொல் - அசை; ஓ - வினாப் பொருளைத் தந்து நின்றது. உயிரானது தன் செயலற்றிருத்தல் உயிர் விளக்கம் என்பது இப்பாட்டிற் கூறப்பட்டது.

ச-க. திருப்பேணு பெருந்துறை. பண்-தக்கராகம்.

எக. நிலனொடு வானு நீரொடு தீயும்
வாயுவு மாகியோ ரைந்து
புலனொடு வென்று பொய்மைகள் தீர்ந்த
புண்ணியர் வெண்பொடிப் பூசி
நலனொடு தீங்குந் தானல தின்றி
நன்கெழு சிந்தைய ராகி
மலனொடு மாசு மில்லவர் வாழு
மல்கு பெருந்துறை யாரே.

(ப-ரை) நிலனொடுவானும் நீரொடுதீயும் வாயுவும் ஆகி - நிலம், வான், நீர், தீ, காற்று ஆகிய ஐம்பெரும் பூதங்கள் (கதிரோன், திங்கள், உயிர்) ஆகிய எட்டுப் பொருள்களின் வடிவுடையவராகி; ஓர் ஐந்து புலனொடு வென்று - மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐந்து ஞானேந்திரியங்களையும் (தன்மாத்திரைகள், கன்மேந்திரியங்கள், அந்தக் கரணங்களுடன்) உலக விடயப் பொருள்களிற் செல்லாதபடி அவைகளை அடக்கி வென்று; பொய்மைகள் தீர்ந்த புண்ணியர் - துவந்துவத் தன்மையைப் பொருந்தியிருக்கிற உலகிலுள்ள எல்லாப் பொய்மைகளையும் நீங்கின அறவாளராவார்.

வெண்பொடிப்பூசி-வெண்மையான திருநீற்றைத்தரித்து; தான் அலது நலனொடு தீங்கும் இன்றி-சிவபெருமானுடைய அருட்டன்மையல்லாமல் உலகிலுள்ள நன்மை தீமைகளாகிய துவந்துவங்களில்லாதவராகி; நன்கு எழு சிந்தையர் ஆகி-நன்மையையே உயிர்களுக்குச் செய்யும் உள்ளத்தினை உடையவராகி; மலனொடுமாசும் இல்லவர் - ஆணவம், வினை, மாயை என்ற மும்மலங்களும் அவைகளால் வரும் குற்றங்களும் நீங்கின அடியார்கள்; வாழும் - வசிக்கின்ற; மல்கு பெருந்துறையார் - (அருள்) நிறைந்துள்ள திருப்பேணு பெருந்துறை என்னும் தலத்தில் திருக்கோயில் கொண்டெழுந்தருளியிருக்கிற சிவபெருமானே. ஆதலின், அடியார்களே! அவரை அடைந்து வழிபடுங்கள் என்பது குறிப்பெச்சம். 9

(வி - ரை) நிலனொடுவானும் நீரொடுதீயும் வாயுவும் ஆகி - இனம்பற்றிக் கதிரோன், திங்கள், உயிர் ஆகிய இவைகளும் சேர்த்து உரையிற் கூறப்பட்டன. சிவபெருமானுடைய அட்டமூர்த்தி வடிவங் கூறப்பட்டது. ஒடு-இங்கே எண்ணுப் பொருளில் வந்தது; ஓர் ஐந்து புலனொடுவென்று - ஒடு என்பதனால் தன்மாத்திரைகள், கன்மேந்திரியங்கள், அந்தக்கரணங்களும் குறிப்பிடப்பட்டன. சிவபெருமான் உயிரினது இந்திரியங்கள் அந்தக்கரணங்கள் முதலியவற்றோடு பொது இயலிற் சேர்ந்திருந்தாலும், அவைகளை விட்டு நீங்கின தன் வயமுள்ளவர் என்பது கூறப்பட்டது. பொய்ம்மைகள் தீர்ந்த புண்ணியர் - சிவபெருமான் மாயா தத்துவங்களாலாகிய உலகில் நிறைந்திருந்தாலும் மாயாதத்துவங்களுக்கு உரிய துவந்துவத்தன்மையினின்று நீங்கியவர் என்பது கூறப்பட்டது. துவந்துவத்தன்மை ரோத மலத்தால் உயிர்களுக்கு

உண்டாகும். அசத்துத்தன்மை ஆண் பெண், நன்மை தீமை, வெம்மை தண்மை, இரவு பகல், இருள் ஒளி முதலியன வாகிய துவந்துவங்கள் (இருகூற்றுத் தன்மைகள்), உலகில் உள்ள பொய்மைகள் (unrealities) ஆகும். புண்ணியர் - அருள்மயமாகிய அறவடிவினை யுடையவர். "என்புள்ளுருக்கி யிருவினையை யீடழித்துத் - துன்பங் களைந்து துவந் துவங் கள் தூய்மை செய்து" என்று மாணிக்கவாசக அடிகள் திரு வாசகத்திற் கூறியிருத்தல் காண்க. வெண்பொடிப்பூசி - வெண்ணிறநீறு அடியார்களுடைய புறத்தூய்மையுடன் அகத்தூய்மையையுங் குறிக்கிறது. தான் அலது நலனொடு தீங்கும் இன்றி - தான் என்பது இங்கே சிவபெருமானை, அதாவது அவரினின்றும் வேறாகாத சிவபெருமானது அருட் டன்மையைக் குறிக்கிறது; தத் என்ற வடமொழிச்சொல் பிரமப் பொருளைக் குறிக்க, வேதங்களில் வழங்கப்பட்டு வந்திருத்தல்போல, தான் என்ற சொல் தமிழ்மறையாகிய தேவார திருவாசகங்களில் சிவப்பொருளைக் குறிக்க வழங்கப் படுகின்றது. "தானெனைமுன்படைத்தான்" என்ற சுந்தர மூர்த்தி அடிகளுடைய திருநொடித்தான்மலைத்தேவாரத்தில் சிவபெருமானைக் குறிக்க வழங்கப்பட்டிருத்தல் காண்க. நலமும் தீங்கும் உலகிலுள்ள துவந்துவத்தன்மையைக் குறிக் கிறது. பொய்மைகள் தீர்ந்தபுண்ணியர் என்ற இரண்டாவது அடியில் சிவபெருமானுக்குக் கூறப்பட்டது, 'நலனொடு தீங்கும் தானல தின்றி' என்பது மூன்றாவது அடியில் - அடியார் களுக்குக் கூறப்பட்டது. நன்கு எழு சிந்தையர் - அடியார்கள் உலகத் துவந்துவங்களினின்று நீங்கி அருட்டன்மை நிறைந் திருக்கிறவர்கள் ஆதலின் அவர்களுடைய தூய சிந்தையில் நலம் ஒன்றே எழும். "தானெனக்குந் தன்னடியவர்" என்று திருநாவுக்கரசு அடிகள் திருவெண்காட்டுத் தேவாரப் பதிகம்

3-வது பாட்டிற் கூறியருளியது காண்க. இங்கேயும் தான் என்பது சிவபெருமானைக் குறிக்கிறது. புண்ணியர்-எழுவாய், பெருந்துறையார் - பயனிலை. இந்தப் பாட்டில் 'நிலனொடு' என்பது முதல் 'புண்ணியர்' முடிய சிவபெருமானுடைய பெருமையும், "வெண்பொடிப் பூசி" என்பது முதல் இல்லவர் முடிய அடியார்களுடைய பெருமையும் கூறப்பட்டன. 'மாந்தர் நன்கெழு சிந்தையராகி, மலனொடு மாசும் இல்லதாதல்' உயிர் விளக்கம் என்பது இப்பாட்டிற் கூறப்பட்டது.

நா — சு. திருவானைக்கா - திருத்தாண்டகம்.

எஉ. ஒப்பாயிவ் வுலகத்தோ டொட்டி வாழ்வா
னொன்றலாத் தவத்தாரோ டுடனே நின்று
துப்பாருங் குறையடிசி றுற்றி நற்றுன்
றிறமறந்து திரிவேனைக் காத்து நீவந்
தெப்பாலு நுண்ணுணர்வே யாக்கி யென்னை
யாண்டவனே யெழிலானைக் காவா வானோர்
அப்பாவுன் பொற்பாத மடையப் பெற்ற
லல்லகண்டங் கொண்டடியே னென்
[செய் கேனே.

(பதவுரை) எழில் ஆனைக்காவா - அழகு பொருந்திய திருவானைக்காவல் திருக்கோயில் கொண்டிருக்கிறவனே; வானோர் அப்பா - தேவர்களுடைய தலைவனே; இவ்வுலகத்தோடு ஒப்பாய் - இந்த உலகத்திலுள்ள மக்களுக்குச் சமானமாய்; ஒட்டி வாழ்வான் - அவர்களோடு இணங்கி வாழும்பொருட்டு; ஒன்று அலாத் தவத்தாரோடு உடனே நின்று - நல்ல தவத்தோடு ஒன்றாகவைத் தெண்ணத்தகாத தவம் செய்கின்ற சமணர்களோடு கூட நின்று; துப்பு ஆரும் குறை அடிசில்

துற்றி-நெய் பொருந்திய பிச்சைச் சோற்றினை யுண்டு; நன்று உன் திறம் மறந்து திரிவேனை - உயிர்களுக்கு, எப்பொழுதும் நன்மையையே செய்கின்ற உனது அருள் வலியை மறந்து உழல்கின்றவனாகிய என்னை; நீ வந்து - நான் உன்னை வேண்டாதிருக்க நீயே என்னிடம் வந்து; எப்பாலும் நுண் உணர்வே ஆக்கி - எந்த இடம் பார்த்தாலும் நான் உன்னையே உணரும்படியான மெய்யுணர்வு உடையவனாகச் செய்து; என்னை ஆண்டு காத்தவனே - என்னை உன் அடிமையாக ஆட்கொண்டருளிக் காத்தவனே; உன் பொற்பாதம் அடையப் பெற்றால் - ஆண்டவனாகிய உனது அழகிய இரண்டு திருவடிகளையும் நான் சேரப்பெற்றால்; அல்லகண்டம் கொண்டு - துன்பத்துக்கு இடமாயிருக்கிற உடலினால்; என் செய்கேன்- என்ன பயனை அடைவேன். (ஒரு பயனுமில்லை என்றபடி). 10

(வி-ரை) இவ்வுலகத்தோடு ஒப்பாய் ஒட்டி வாழ்வான்- திருநாவுக்கரசு அடிகள் தாம் சமண சமயத்தை மேற்கொண்டிருந்த காலத்தில் சமணத் துறவிகளைப்போல அவர்களோடு சேர்ந்து ஒழுகினதைக் கூறுகின்றார். ஒன்றலாத் தவத்தார் - தவம் என்று கூறிப் பாயுடுத்துத் தலைபறித்து நின்றுண்ணும் சமணர்கள் அவச்செயல்களைச் செய்கின்றவர்கள் ஆதலின், அவர்களை அடிகள் 'ஒன்றலாத் தவத்தார்' என்றார். ஒன்றலாத் தவம் என்பதற்கு இறைவனோடு சேர்க்கலைச் 'செய்யாத் தவம்' என்று கூறினும் பொருந்தும். குறை அடிசில் பிச்சைச் சோறு ஆதலின், குறை அடிசில் என்றார். குறை - தவறு. நற்றான் - நன்று என்பது நற்றென வலித்தல் பெற்றது. திறம்-அருட்டிறம். எப்பாலும் நுண்ணுணர்வே ஆக்கி-எப்பாலும் - எந்த இடத்திலும், அதாவது எல்லாவிடங்களிலும்; நுண்ணுணர் வாக்கு

தல் என்பது இறைவன் யானெனதென்னுஞ் செருக்கற்று உயிரை எங்கும் நிறைந்துள்ள தனது திருவடி வியாபகத்துள் அடங்கச் செய்து வியாபக அறிவாகிய மெய்யறிவையுடைய வனாகச் செய்தல். சிவபெருமான் உயிரை ஆண்டருளுதற்கு முன் அவ்வுயிருக்கு அகக்கண்ணைக் கொடுத்துத் தனது எங்கும் நிறைந்த வியாபக அறிவை அறியச்செய்தலில் 'எப் பரிலும் நன்னுணர்வே யாக்கி என்னை ஆண்டவனே' என்றார். என்னை ஆண்டு காத்தவனே - என்னைக் காத்து ஆண்டவனே என்பதை என்னை ஆண்டு காத்தவனே என விகுதிபிரித்துக் கூட்டுக. உன் பொற்பாதம் அடையப்பெற்றால் அல்லகண்டங் கொண்டு அடியேன் என் செய்கேன் - இதற்கு, மேலே 31-வது பாட்டின்கீழ் எழுதப்பட்ட விளக்க உரையைக் கொள்க. உயிரானது மெய்யுணர்வை யடைதல் உயிர்விளக்கம் என்பது இந்தப் பாட்டிற் கூறப்பட்டது.

### கூஎ. திருவாரூர். பண்—தக்கேசி

காரகத்னாற மழை யாய்ப்போழி வானைக்
கலைக்கே லாம்போரு ளாயுடன் கூடிப்

பார்க்க ன்றவுயிர்க் குப்பரிந் தானைப்
பகலுங் கங்குலு மாகிநின் றானை

ஓர்க்கி ன்றசெவி யைச்சுவை தன்னை
யுணரு நாவினைக் காண்கின்ற கண்ணை

ஆரகக ளாறகட லைமலை தன்னை
யாரூ ரானை மறக்கலு மாமே.

(ப-ரை, ஆர்க்கின்ற கடலை - ஒலிக்கின்ற கடலாயிருக் கிறவனும்; மலைதன்னை - மலையாயிருக்கிறவனும்; கார்க் குன்றம் மழை ஆய்ப் பொழிவானை - கார்காலத்தில் மலை

மேல் மேகம் மழை பொழிதல் போல் உயிர்களிடத்துத் தனது அருளைப் பொழிந்து விளங்கச் செய்கிறவனும்; கலைக்குளெலாம் பொருளாய் - தான் அருளிய வேதாகமங்கள் முதலிய பல கலைகளிலும் கூறப்பட்ட பொருளாயிருந்து; உடன்கூடிப் பார்க்கின்ற உயிர்க்குப் பரிந்தானை -(அப்பொருளைக் கற்றறிந்துணர்ந்து, தன்னோடு வேறாயும், ஒன்றாயும்,) உடனாயும் அத்துவிதமாய்க் கலந்திருந்துகொண்டு தன்னையே புணர்கின்ற உயிர்களிடத்தில் அன்பு செய்து பேரருள் செய்கின்றவனும்; பகலும் கங்குலும் ஆகி நின்றானை-பகலும் இரவுமாகிய காலமாகி நிற்கிறவனும்; ஓர்கின்ற செவியை-(தன்னடியார் கூறுகிற உண்மைகளைச்) செவிகளாற் கூர்ந்து கேட்கின்ற கேள்வியறிவாயிருக்கின்றவனும்; சுவை தன்னை - அந்தக் கேள்விச் சுவையாயிருக்கிறவனும்; உணரும் நாவினை - அந்தக் கேள்விச் சுவையை அறிந்து, தன் புகழை எப்பொழுதும் சொல்லிக் கொண்டிருக்கின்ற நாவாயிருக்கிறவனும்; காண்கின்ற கண்ணை - தன்னை புணர்கின்ற அருட்கண்ணாயிருப்பவனும்; ஆரூரானை - திருவாரூரில் திருக்கோயில் கொண்டெழுந்தருளியிருக்கிறவனும் ஆகிய புற்றிடங் கொண்ட பெருமானை; மறக்கலுமாமே - மறக்க முடியுமோ? (முடியாது என்றபடி.) 11

(வி-ரை.) மேகமானது கடல்நீரை, உவர்நீக்கி மொண்டு கொண்டுபோய், மலைமேல் மழையாய்ப் பொழிந்து, மக்கள் வேண்டும் பொருள் வளப்பத்துக்குக் காரணமாதல் போல, சிவபெருமான் மக்களுடைய உலகஇன்ப நலத்துக்கும் வீட்டின்ப நலத்துக்கும் காரணமான அருளைப்பொழிகின்றான் என்பார், "ஆர்க்கின்ற கடலை மலைதன்னை, கார்க்குன்ற மழையாய்ப் பொழிவானை" என்றார். உயிர்கள் மேல்வைத்த அவ்வருள் காரணமாகச் சிவபெருமான் தன்னையுயிரறிந்து

உடம்பும்படி வேதாகமங்களை அருளியபடியால், "கலைக்கெலாம் பொருளாய்" என்றார். அவ்வேதாகமங்களிற் கூறப்பட்ட கருத்தறிந்து, தன்பொதுஇயல்புணர்ந்து, அதன்வழியாய்த் தன் சிறப்பியல்பை யறிந்து, தன்னைஅத்துவிதமாயடைகிற வர்கட்குப் பேரின்ப மளிக்கின்றான் என்பார், "உடன்கூடிப் பார்க்கின்ற வுயிர்க்குப் பரிந்தானை" என்றார். பகலும் கங்குலு மாகி நின்றானை - இறைவன் காலதத்துவத்திற் கலந்து அதனை இயக்குதல் கூறப்பட்டது. செவி சுவை நா கண் என்பவை களுக்கும் அவ்வாறே கொள்க; ஓர்க்கின்ற செவியை-ஓர்தல்-கூர்ந்து கேட்டல்; செவி என்பது இங்கே ஆகு பெயராய்க் கேள்வி அறிவைக் குறிக்கிறது; செவிச் செல்வம் என்பது திருக்குறளில் கேள்விச் செல்வம் என்று பொருள் படுதல் காண்க. மறக்கலுமாமே - ஏ - வினாவாய் எதிர்மறைப் பொருள் தந்து நின்றது, மறக்கமுடியாது என்பது பொருள். "தன்னை யறிவித்துத் தாந்தானாச் செய்தானைப் - பின்னை மறத்தல் பிழை" ஆகும் என்பது கருத்து. மறக்கலுமாமே என்பதனால் இறைவன் சிவபோத மிறந்து நின்ற ஆன்மாவைத் தனது திருவடி வியாபகத்துள் அடக்கித் தன்னை மறவா வண்ணம் அதனைத் தானாகச் செய்தல் கூறப்பட்டது. இதனால் 'உயிர்விளக்கம்' கூறப்பட்டது.

௬.—௭.. திருவஞ்சைக்களம். பண். இந்தளம்.

௭௪. ஆக்கு மழிவு மமைவுநீ யென்பனான்
சொல்லுவார்சொற்பொரு ளவையுநீ யென்பனான்

நாக்குஞ் செவியுங் கண்ணுநீ யென்பனான்
நல்னே யினிநா னுனைநன் குணர்ந்தேன்

நோக்கு நிதியம் பலவெத் தனையுங்
கலத்திற் புகப்பெய்து கொண்டேற நுந்தி

ஆர்க்குங் கடலங் கரைமேல் மகோதை
யணியார் பொழிலஞ் சைக்களத் தப்பனே.

(ப-ரை) நோக்கும் பல எத்தனை நிதியம்உம்- (வணிகர்கள் பல இடங்களிற்) காண்கின்ற மிக்க பல பண்டங்களையும்; கலத்திற்புகப்பெய்து கொண்டு - கப்பல்களிற் பொருந்தும் படி கொணர்ந்து போட்டு; ஆர்க்கும் அம் கடல் கரை ஏற நுந்தி - அக்கப்பல்களை (அலைகள் மோதலால்) ஆரவாரஞ் செய்யும் அழகிய கடற்கரைக்குக் கொண்டுபோய்ப் (பண்டங்களை இறக்குதலால் மிக்க பொருள் வளமுடைய); மேல் மகோதை-கடற்கரை மேலுள்ள மகோதைநகருக்கு அருகிலிருக்கும்; அணியார் பொழில் அஞ்சைக்களத்து அப்பனே - அழகு பொருந்திய சோலைகள் சூழ்ந்த திருவஞ்சைக் களத்தில் திருக் கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் எனது தந்தையாகிய சிவபெருமானே; நான் ஆக்கும் அழிவும் அமைவும் நீ என்பன் - நான் படைக்கும் கடவுளும் (காக்கும் கடவுளும்) அழிக்கும் கடவுளும் நீயே என்றும், பரிபூரணப் பொருள் நீயே என்றும் சொல்லித் துதிப்பேன்; நான் சொல்லுவார் சொற்பொருளவை நீ என்பன் - நான் உன் புகழைச் சொல்லுகிறவர்களுடைய சொற்களிலடங்கிய பொருள்களாயிருக்கிறாய் நீ என்று சொல்லித் துதிப்பேன்; நான் நாக்கும் செவியும் கண்ணும் நீ என்பன் - நான் உன்னை உயிர்கள் சுவை அறிகிற நாக்காயும் கேட்கிற செவிகளாயும் பார்க்கிற கண்களாயுமிருக்கிறாய் நீ என்று சொல்லித் துதிப்பேன்; நலனே - எல்லா உயிர்களுக்கும் நன்மையையே கருதிச் செய்கிறவனே; இனி நான் உனை நன்கு உணர்ந்தேன் - உன்னால் ஆட்கொள்ளப் பெற்றபின் நான் உன்னை எல்லா உயிர்களுக்கும் பேரின்பம் அளிக்கிற பொருளாயிருக்கிறவன் நீ என்று எனது உள்ளத்

## அ. இன்புறு நிலை

நா — சு. திருக்கீழ்வேளூர் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

எரு. அளைவாயி லரவசைத்த வழகன் றன்னை
யாதரிக்கு மடியவர்கட் கன்பே யென்றும்

விளைவானை மெய்ஞ்ஞானப் பொருளா னானை
வித்தகனை யெத்தனையும் பத்தர் பத்திக்

குளைவானை யல்லாதார்க் குளையா தானை
யுலப்பிலியை யுள்புக்கென் மனத்து மாசு

கிளைவானைக் கீழ்வேளூ ராளுங் கோவைக்
கேடிலியை நாடுமவர் கேடி லாரே.

(ப—ரை) *அளைவாயில் அரவு அசைத்த அழகன் தன்னை- புற்றினிடத்து உளதாகிய பாம்பைத் (தனது உடல்மேல் வைத்து) அசைக்கின்ற அழகனும்; ஆதரிக்கும் அடியவர் கட்கு - தன்னை அன்பினால் வழிபடும் அடியார்களுடைய; என்றும் அன்பே விளைவானை - (உள்ளத்தில்) எப்பொழுதும் அன்பாகத் தோன்றி அவ்வன்பாக மேலும் மேலும் முதிர்ந்து விளங்குகின்றவனும்; மெய் ஞானப் பொருள் ஆனானை-அடியார் களுடைய மெய்யறிவில் விளங்கும் உண்மைப்பொருளா யிருப்பவனும்; வித்தகனை - அறிவுவடிவா யிருக்கிறவனும்; பத்தர் பத்திக்கு எத்தனையும் உளைவானை - அடியார்களுடைய அன்புக்கு எவ்வளவாயினும் ஈடுபட்டு (அவர்களுக்கு வேண்டு வன செய்கிறவனும்); அல்லாதார்க்கு உளையாதானை - அடி யாரல்லாதவர்களுக்கு அவ்வாறு ஈடுபடாமலிருக்கிறவனும்; உலப்பு இலியை-அழிவின்றி நித்தியமா யிருக்கிறவனும்; என்*

மனத்து உள்புக்கு மாசு களைவானை - எனது உள்ளத்தினுள்ளே புகுந்து ஆய்ந்து அதிலுள்ள குற்றங்களை நீக்குகிறவனும்; கேடிலியை-கேடிலியப்பர் என்னும் திருநாமமுடையவனும்; கீழ்வேளூர் ஆளும் கோவை - திருக்கீழ்வேளூர்த் தலத்தில் திருக்கோயில்கொண் டெழுந்தருளி அங்கேயுள்ள உயிர்களை ஆண்டருள் செய்கின்ற தலைவனும் ஆகிய சிவபெருமானை; நாடுமவர் கேடு இலார் - தங்கள் மெய்யறிவினால் நாடித் தேடிக் கண்டவர்கள் அவனோடு அத்துவிதமாய்க் கலந்து பிறப்பிறப்பு இல்லாதவர்களாய் நிலையான பேரின்பம் நுகர்ந்துகொண்டிருப்பர். 1

(வி – ரை) வாயில் - வாய் இல் என்ற இரண்டும் ஏழாம் வேற்றுமை உருபுகள். அது ஒரு சொல்லாகக் கொள்ளப் பட்டால் துவாரம் என்று பொருள்படும். அழகன் தன்னை-தன்-அசை. அடியவர்கட்கு-கு. உருபுமயங்கி ஆறும்வேற்றுமையில் வந்திருக்கிறது. அன்பே விளைவானை-விளைதல் என்பது பயிர் விளைந்து முதிருதல்போல மேலும் மேலும் முதிர்ந்து முறுகுதல், அன்பாகவே விளைவானை, ஏ-தேற்றப் பொருளில் வந்தது, சிவமே அன்பாதலின் அடிகள் அன்பே விளைவானை என்றார். மெய்ஞ்ஞானப் பொருளானானை-சிவமானது பசு ஞானம் பாச ஞானங்களால் அறியப்படாத பொருளாய், பதிஞானம் ஆகிய மெய்யறிவினாலே மாத்திரம் அறியப்படுகின்ற பொருளாயிருத்தலின் மெய்ஞ்ஞானப் பொருளானானை என்றார். ஆன்.அசை-பத்தர் பத்திக்கு எத்தனையும் உளைவானை-உளைதல்-ஈடுபடுதல் (Responding). ஈடுபடுதலுக்கு அளவில்லையாதலின் எத்தனையும் உளைவானை என்றார். "நின்மெய்யடியார் மனக்கருத்தை முடித்திடுங் குன்றமே" என்று சேந்தனார் திருவாவடுதுறைத் திருவிசைப்பாவிற் கூறியருளினமை காண்க.

மனத்து உள்புக்கு மாசு கிளைவானை - கிளைதல் - என்பது கிளறி வெளிப்படுத்துதல்; மனக்குற்றங்கள் முற்றிலும் நீங்காத அடியார்கள் சிவனது திருவடிகளைச் சேர முடியாது ஆதலின் அவன் அவர்களுடைய மனக்குற்றங்களை நினைந்து நீக்கி ஆட்கொள்ளுவான் என்பார் மனத்து மாசு கிளைவானை என்றார். நாடுமவர் கேடிலார் - நாடுதல் இனம்பற்றி மேலே 60-வது பாட்டிற் கூறப்பட்ட தேடுதலும் காணுதலும் கூறப்பட்டன. நாடுதலுக்கு அப்பாட்டின்கீழ் எழுதப்பட்ட விளக்க உரை கொள்க. இறைவனது திருவடிகளை அடைந்த அடியார்கள் "கேடுந் திருவுங் கெட்ட திருவினார்" என்று சேக்கிழார் பெரிய புராணத்திற் கூறியிருத்தல் காண்க. பிறப்பு இறப்புக்கள் ஆகிய கேடில்லாமல் நித்தியமாயுள்ள சிவபெருமானை அடைந்த அடியார்கள் பிறப்பு இறப்பு இல்லாமல் நித்தியமாயுள்ள பேரின்பம் நுகர்ந்து வாழ்வர் என்பது இத்தேவாரத்திற் கூறப்பட்டது. இதனாலே இன்புறு நிலையின்கீழ் இப்பாட்டு வைக்கப்பட்டது.

நா - சு. திருச்செங்காட்டங்குடி. திருத்தாண்டகம்.

எசு. உருகுமனத் தடியவர்கட் கூறுந் தேனை
யும்பர்மணி முடிக்கணியை யுண்மை நின்ற

பெருகுநிலைக் குறியாள ரறிவு தன்னைப்
பேணியவந் தணர்க்குமறைப் பொருளைப் [பின்னும்

முருகுவிரி நறுமலர்மே லயற்கு மாற்கு
முழுமுதலை மெய்த்தவத்தோர் துணையை வாய்த்த

திருகுகுழ லுமைநங்கை பங்கன் றன்னைச்
செங்காட்டங் குடியதனிற் கண்டேன் நானே.

(ப—ரை) உருகு மனத்து அடியவர்கட்கு ஊறும் தேனை— தங்களுடன் சிவபெருமான் அத்துவிதமாய்க் கலந்து நின்று சிவவிடயப் பொருளை அறிவித்துக் காட்டு முதவியையும், சிவ விடயப் பொருளுடன் நின்று அறிந்து காணுமுதவியையும் இடைவிடாது செய்தலை) நினைந்து உருகுகின்ற உள்ளத்தையு டைய அடியார்களுக்கு அவர்கள் நினைக்க நினைக்க மேலும் மேலும் (ஊற்று நீர் போன்று) ஊறுகிற தேன் போன்று தித்திக்கும் இன்பப் பொருளாயிருக்கிறவனும்; உம்பர்மணி முடிக்கு அணியை - தேவர்களுடைய நவமணி களாலாகிய முடிக்கு அலங்காரமாயிருக்கிறவனும்; உண்மை நின்ற-உண்மையைப் பின்பற்றுதலில் சிறிதும் தளராது நிலைத்து நிற்கிற; பெருகு நிலைக் குறியாளர் அறிவு தன்னை— மேலும் மேலும் வளர்ந்து வரும் மன நிலையைக் குறியாகக் கொண்டொழுகுகின்ற அடியார்களுடைய உள்ளத்தில் அறிவாக விளங்குகிறவனும்; பேணிய அந்தணர்க்கு மறைப்பொருளை - வேதாகமங்களை உண்மை அன்புடன் ஓதி அறிகின்ற அந்தணர்களுக்கு அம்மறைகளின்கண் விளங்கித் தோன்றுகிற பொருளாயிருக்கிறவனும்; பின்னும் - அதுவன்றி; முருகு விரி நறுமலர்மேல் அயற்கும் மாற்கும் - மணத்துடன் கூடி விரிந்திருக்கிற தாமரை மலர்மேலுள்ள பிரமதேவனுக்கும் திருமாலுக்கும்; முழு முதலை - முழு முதற் கடவுளாயிருக்கிறவனும்; மெய்த்தவத்தோர் துணையை - உண்மைத்தவம் செய்கின்ற அடியார்களுக்குத் துணையாயிருக்கிறவனும்; வாய்த்த - தனது இடப்பாலுள்ள; திருகு குழல் உமை நங்கை பங்கன் தன்னை-'திருகுகுழலுமை' என்னும் திருநாமமுடைய உமாதேவியாரைத் தனது உடலில் அரைப்பங்காக வைத்திருக்கிறவனும் ஆகிய சிவபெருமானை; செங்காட்டங்குடியதனில் - திருச்செங்காட்டங்குடி என்னும் தலத்தில்

திருக்கோயில் கொண்டெழுந்தருளியிருத்தலை); நான் கண்டேன் - நான் (அகக்கண்ணாலும்) கண்டு பேரின்பமுற்றேன். 2

(வி-ரை) ஊறும் தேனை - "தேனாய் இன்னமுதமுமாய்த் தித்திக்கும் சிவபெருமான்" என்று மாணிக்கவாசக அடிகள் திருவாசகம் திருவேசறவு 10-வது பாட்டிற் கூறியிருத்தல் காண்க. இதனால் சிவஞானபோதம் - கக-ஞ் சூத்திரக்கருத்துக் கூறப்பட்டது. உம்பர் மணி முடிக்கு அணியை - சிவபெருமான் திருவடிகளில் தேவர்கள் தங்கள் தலைமேல் அணிந்திருக்கிற நவமணி முடிகளை வைத்து வணங்குதலால் உம்பர் மணி முடிக்கு அணியை என்றார். உண்மை நின்ற பெருகு நிலைக்குறியாளர் - "உற்கைதரும் பொற்கை யுடையவர்போ லுண்மைப்பின் - நிற்க வருளார் நிலை" என்று திருவருட்பயன் உயிர் விளக்கம் 8-வது பாட்டிற் கூறப்பட்டபடி தூலதரம், தூலம், சூக்குமம், சூக்குமதரம், அதி சூக்குமம் என்ற பலவகைத் தத்துவப்படிகளோடு அமைந்திருக்கிற உலகிலும், சிறிய உலகு ஆகிய உடலிலும் அந்த அந்தத் தத்துவப்படி அறியும் அறிவு நிலையிலும் விளங்குகின்ற உண்மையை அந்த அந்தத் தத்துவப்படியிற் குறியாகக் கொண்டு அருள் நிலையில் மேற்சென்று ஒழுகுகிறவனே தத்துவப்படிகளி லேறியேறிச் சென்று முடிவில் தத்துவங் கடந்த பொருளையும் அறிவான் என்பார் "உண்மை நின்ற பெருகுநிலைக் குறியாள ரறிவுதன்னை" என்றார். யாதாம் ஒரு தத்துவப்படியிற் காணப்படுகிற உண்மையையே முடிந்த உண்மையாகக் கடைப்பிடித்து ஒழுகுகிற குறுகிய மனநிலையாளன் அந்தத் தத்துவப்படியை விட்டு மேற்செல்லுகின்ற விரிவான மன நிலையை அடையமாட்டான் என்பது கருத்து. பெருகும்

நிலை என்பது மேலும் மேலும் அறிவு வளர்ந்து செல்லும் மனநிலை, குறியாளர் என்பது குறியின்படி ஒழுகிப் பயன் பெறுகிறவர்கள்; நின்ற - இயல்பு பற்றி 'நிற்கின்ற' என்பது 'நின்ற' என இறந்தகாலத்தாற் கூறப்பட்டது. " அறிவுடை யார்நெஞ் சகலிட மாவ, தறிவுடை யார்நெஞ் சருந்தவ மாவ, தறிவுடை யார்நெஞ்சொ டாதிப் பிரானும், அறிவுடை யார் நெஞ்சத் தங்குநின் றானே" என்று திருமூலர் (2364) செய்யுளில் இக்கருத்தைக் கூறுகின்றார். முழுமுதலை - சிவபெருமானுக்கு மேல் அவனை ஆளும் ஒரு தலைவன் இல்லை என்பார், முழுமுதல் என்றார். உலகிற்கு முழுமுதற் கடவுள் சிவபெருமான் ஒருவனே என்பது கருத்து. மெய்த்தவத்தோர் துணை- உண்மையாகச் சிவபெருமானைக் காணுதற்குத் தவம் செய்கிற அடியார்களுக்கு அவர்கள் தன்னை அறிதற்கு வேறாய் நின்று அறிவித்தும், தன்னைப் பற்றும்படி அவர்களோ டொன்றாய் நின்று அறிந்தும் துணைபுரிந்தும் வருகின்றார் என்பார் 'மெய்த்தவத்தோர் துணையை, என்றார். உமைமங்கை பங்கன்தன்னை - மேலே கூறியவாறு அடியார்களுக்கு அருள் செய்தற்குச் சிவ பெருமான் தனது அருட்சத்தியோடு கூடியிருக்கின்றார் என்று குறிப்பிப்பார் உமைநங்கை பங்கன் என்றார். தன் - அசை. நான் கண்டேன் - காணுதல் என்பது இங்கே அகக்கண்ணொடும் சேர்ந்து காணுதல். உள்ளும் புறமும் ஒரு தன்மைக் காட்சியர்கள் நம்போன்று புறக்கண்ணால் மாத்திரம் காணமாட்டார்கள்; அவ்வாறு காணுங்கால் அவர்களுக்குப் பாட்டிற் கூறப்பட்ட சிவபெருமானுடைய அளப்பரும் பெருங்குணங்கள் விளங்கித் தோன்றும். நம்போல்வாரும் திருக்கோயிலினுள்ள சிவலிங்கப் பெருமானை வணங்கும்பொழுது சிவலிங்க வடிவி லடங்கியுள்ள உண்மைகளை நினைந்து உள்ளுருகிக்

கசிந்து வழிபடுவார்களானால் அவர்களுக்கு அகக்கண் தோன்றுதற்கு இடமுண்டாகும். திருக்கோயில் வழிபாட்டை இகழ்கிறவர்கள், சொல் உருவாலும் பொருள் உருவாலும் அமைந்துள்ள உலகில், ஒருவரையொருவர் உடல் உருவிற் கண்டு சொல்லுருவிற் பேசி இன்புறுதலை அடைகிற மக்கள், இறைவனை எவ்வாறு உருவிலன்றி வழிபட முடியும் என்பதை அறியார்கள். இப்பாட்டில் 'உண்மை நின்ற பெருகுநிலைக் குறியாளரறிவு தன்னை' என்பதனால் அயராத பேரறிவும், 'உருகுமனத் தடியார்கட் கூறும் தேனை' என்பதனால் பொருட் பற்று உயிர்ப்பற்றுக்கள் நீங்கிய பேரன்பும், 'மெய்த்தவத் தோர் துணையை' என்பதனால் இறைவனிடத்து இன்புறுஞ் செயலும் கூறப்பட்டன. அடியார்களே நான்கண்டு இன்புற்றது போல நீங்களும் திருச்செங்காட்டங்குடிப் பெருமானை வணங்கி இன்புறுமின் என்பது குறிப்பெச்சம்.

நா – ச. திருவதிகை வீரட்டானம் – திருநேரிசை.

ஏஎ உறுகயி றூசல் போல வொன்றுவிட் டொன்று பற்றி
மறுகயி றூசல் போல வந்துவந் துலவு நெஞ்சம்
பெறுகயி றூசல் போலப் பிறைபுல்கு சடையாய் [பாதத்
தறுகயி றூச லானே னதிகைவீ ரட்ட னூரே.

(ப-ரை) அதிகைவீரட்டனூரே - திருஅதிகை வீரட்டானம் என்ற தலத்தில் திருக்கோயில் கொண் டெழுந்தருளியிருக்கிறவரே ; நெஞ்சம் - எனது மனமானது ; கயிறு உறு ஊசல்போல - கயிற்றிலே தொங்கவிட்டுக் கட்டப்பட்ட ஊஞ்சற் பலகை அங்குமிங்கும் அசைந்து ஆடுதல்போல ; ஒன்றுவிட்டு ஒன்று பற்றி (உம்)—ஓர் உலக விடயப்பொருளைப்

பற்றிப் பின், அதனைவிட்டு வேறொரு பொருளைப்பற்றியும்; மறு கயிறு ஊசல்போல - (பொருட்பற்று அவ்வாறிருக்க) மற்றொரு கயிற்று ஊஞ்சற் பலகைபோல; வந்து (உம்) வந்து (உம்) - மனைவி மக்கள் உறவினர் முதலிய ஒவ்வொரு உயிரிடத்திலும் பொருந்தி நின்று திரும்பத் திரும்பப் பற்றுவைத்தும்; உலவும் - (இப்பொருள்களிலும் உயிர்களிலும் பற்றுவைத்தலினால் அமைதி பெறுமல்)உழன்று சஞ்சலப்பட்டுக்கொண்டிருக்கும்; கயிறுபெறு ஊசல்போல - (அவ்வாறு உழன்று கொண்டிருந்த மனத்தை உடையநான்) கயிற்றுடன் சேர்ந்து தொங்குகிற ஊஞ்சற் பலகையைப்போல; பிறைபுல்கு சடையாய் - மூன்றும் பிறைத்திங்கள் சேர்ந்திருக்கிற சடையையுடைய சிவபெருமானே; பாதத்து அறுகயிறு ஊசல் ஆனேன் - நின் திருவடிகளைப் பற்றியதனால் கயிறு அறுந்த ஊஞ்சற் பலகை, தரையைச் சேர்தல்போலப் பொருட்பற்றும் உயிர்ப் பற்றும் அற்றுப்போய் உன்னையே தாரகமாகக் கொண்டு உன்னோடு அத்துவிதமாய்ச் சேர்ந்து பேரின்பமுடையவனானேன். 3

(வி-ரை) கயிறு உறு ஊசல்போல ஒன்றுவிட்டு ஒன்று பற்றி - ஒவ்வொரு விடயப்பொருளையும் மாறிமாறிப்பற்றி ஒன்றிலும் அமைதி பெறுமலுழன்று சஞ்சலப்பட்டுக்கொண்டிருக்கிற மனம் அசைந்துகொண்டே யிருக்கிற ஊஞ்சற் பலகைக்கு உவமிக்கப்பட்டது. ஊசல், ஆடுகிறவரைத் தாங்குகிற ஊஞ்சற் பலகையைக் குறிக்கிறது. பற்றி என்ற சொல்லுக்குப் பின் உம் தொக்கி நின்றது. ஒன்றைவிட்டு ஒன்று பற்றுதலாவது ஒவ்வொரு விடயப்பொருளையும் நுகர்ந்து அதில் அமைதி பெறுமல் அதனைவிட்டு வேறு

பொருளை விரும்பித் தேடி நுகர்ந்து அதிலும் அவ்வாறே அமைதிபெறுமலிருத்தல். உலகவிடய போகப் பொருள்களின் தன்மை இவ்வாறிருத்தலினாலேதான், மக்கள் தங்கள் உலக அநுபவத்தின் பயனாக அவைகளை உவர்த்துப் பேரின்பம் நாடுதலுக்கு இடமுண்டாகிறது. மறுகயிறு ஊசல்போல வந்து வந்து - மக்களைப் பற்றிக்கொண்டிருக்கிற பொருட்பற்று உயிர்ப்பற்று என்ற இருவகைப் பற்றுக்களில் பொருட்பற்று முன்னே கூறப்பட்டதனால் எஞ்சி நிற்கிற உயிர்ப் பற்றுக்கு உவமையாக மறுகயிறு ஊசல் என்று அடிகள் கூறியருளினர். வந்து வந்து என்பது அடுக்குத் தொடர். வந்து வந்து என்ற சொற்களுக்குப்பின் உம் தொக்கி நின்றன, வந்து-பொருந்தி; அல்லது சேர்ந்து என்ற பொருளில் வந்தது. வந்து வந்து என்பது இவர் நண்பர் இவர் பகைவர் என ஒவ்வொரு உயிரையும் சேர்ந்து அமைதி பெறுதிருத்தல். உலவும் - உலவுதல் என்பது அசைதல், ஒரு பொருளிலாவது ஓர் உயிரிலாவது அமைதி பெறுமல் உழன்று சுழலுதல். பிறைபுல்கு சடையாய் - என்பதனால் உயிர்கள் பொருட்பற்று உயிர்ப் பற்றுக்களை அறுத்துத் தனது திருவடிகளிற் பற்று வைக்கும்படி செய்யும் சிவபெருமானுடைய பேராற்றல் குறிப்பிடப்பட்டது. பாதத்து கயிறு அறு ஊசலானேன் -பாதத்து- திருவடிகளிற் பற்றுவைத்தலினால், ஊசலானேன் - ஊஞ்சற் பலகைபோல் ஆனேன் ; மலப்பற்றினால் ஆன்மாக்களுக்கு உண்டாகும் பொருட்பற்று உயிர்ப்பற்றுக்கள் செயற்கை, சிவபெருமானுடைய திருவடிகளைச் சேர்தல் இயற்கை. ஊஞ்சற்கயிறு அற்றுப் போனபொழுது ஊஞ்சற் பலகையானது தரையை இயல்பாய்ச் சேர்தல் போல, பொருட்பற்று உயிர்ப்பற்றுக்களாகிய செயற்கையானது அருளினாலே நீங்கின

பொழுது சிவபெருமானுடைய திருவடிகளைச் சேர்தல் இயல்பாக நிகழுகின்றது என்பது கருத்து. சிவஞானபோதம் அ-ம் சூத்திரம் ச-ம் அதிகரணத்தில் கூறப்பட்ட "இனி இவ்வான்மாத் தன்னை இந்திரியத்தின் வேறுவான் காணவே, தமது முதல் சீபாதத்தை அணையும்" என்ற மேற்கோளுக்கேதுவாக "ஊசற் கயிறற்றாற் றாய் தரையே யாந்துணையான்" என்பது கூறப்பட்டிருத்தல் காண்க. "சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச் - சார்தரா சார்தரு நோய்" என்ற திருக்குறட் கருத்தும் இதுவேயாகும். முதலிரண்டு அடிகளுக்கு நெஞ்சம் - எழுவாய், உலவும் - பயனிலை. பின் இரண்டு அடிகளுக்கு நான் என்பது தோன்றாஎழுவாய், ஊசல் ஆனேன் - பயனிலை. திருநாவுக்கரசு அடிகள் தாம் சமண சமயத்திலிருந்தபொழுது தங்கியிருந்த பாடலிபுரத்திலிருந்து வந்து, தமக்கையாராகிய திலகவதியாரால் திருவாளன் திருநீறணியப் பெற்றுச் சிவபெருமானால் சூலைநோய் தீர்ந்து ஆட்கொள்ளப் பெற்ற தலம் திருவதிகை வீரட்டானம் ஆதலின், அத்தலத் தேவாரப்பதிகத்தில் பெத்த நிலையிலும் முத்திநிலையிலுமிருந்த தமது இரண்டு அநுபவங்களையும் கூறுதல் மிக்க பொருத்தமுடையது. அடியார்களே! எனது அநுபவ மிவ்வா றிருத்தலின், நீங்கள் திருவதிகை வீரட்டானேசுவரரைவழிபட்டு உய்மின் என்பது குறிப்பெச்சம். பாதத்துஅறு கயிறு ஊசலானேன் என்றதினால் இச்செய்யுள் இன்புறுநிலையின் கீழ்வைக்கப்பட்டது.

### சு – எ. திருக்கானப்பேர். பண் – புறநீர்மை.

எஅ. மாவையு ரித்ததள்கோண் டங்கம ணிந்தவனை
வஞ்சர்ம னத்திறையும் நேஞ்சணு காதவனை
மூவரு ருத்தனதா மூலமு தற்கருவை
முசிடு மால்விடையின் பாகனை யாகமுறப்

பாவக மின்றிமெய்யே பற்றும வர்க்கமுதைப்
பானறு நெய்தயிரைந் தாடுப ரம்பரனைக்
காவலே னக்கிறையென் றெய்துவ தென்றுகொலோ
கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே.

(ப-ரை.) மாவை உரித்து அதள் கொண்டு அங்கம் அணிந்தவனை - யானையைத் தோலுரித்து அத்தோலைத்தனது உடலின்மேல் தரித்துக்கொண்டவனும்; வஞ்சர்மனத்து இறையும் அணுகாத நெஞ்சவனை-பொய்யுலக வாழ்க்கையிற் பற்று வைத்திருக்கிற மக்களுடைய மனத்தின்கண் சிறிதும்சேராத மனத்தையுடையவனும்; மூவர் உருத்தனது ஆம் மூலமுதற் கருவை - அயன்மால்உருத்திரன் என்னும் மும்மூர்த்திகளுடைய வடிவங்களுக்கும் காரணமாயிருக்கின்ற முழுமுதற் பொருளும்; மூசிடும்மால்விடையின் பாகனை - மூச்சுவிடுகின்ற பெரிய எருத்தின் மேலேறிச் செலுத்துகின்றவனும்; பாவகம் இன்றி மெய்யே ஆகமுறப் பற்றும் அவர்க்கு அமுதை - நடிப்பில்லாமல் உண்மையான அன்பினால் தமது மனத்திலே பொருந்தும்படி தன்னுடைய திருவடிகளைப்பற்றுகிற அடியார்களுக்கு அமுதுபோன்று இன்பப்பொருளாயிருக்கிறவனும்; பால்நறும் நெய் தயிர் ஐந்து ஆடு பரம்பரனை - பசுவினுடையபால், மணமுள்ளநெய், தயிர், சாணம், நீர் ஆகியபஞ்சகவ்வியங்கொண்டு முழுக்குச்செய்கின்ற மேலானபரம்பொருளாயிருக்கிறவனும்; கார்வயல்சூழ்கானப்பேருறை காளையை - மேகம் மழை பொழிகின்ற வயல்களாற் சூழப்பட்ட திருக்கானப்பேரூரிலே திருக்கோயில்கொண் டெழுந்தருளி இருக்கின்றவனுமாகிய சிவபெருமானை; எனக்குக்காவல்இறைஎன்று எய்துவதுஎன்றுகொல் - எனக்குப்பேரின்பம் அளித்துக்

காக்கும் இறைவன் என்று அவனுக்கு என்னிடத்திலுள்ள தொடர்பை உள்ளபடி நான் அறிந்து அவனுடைய திருவடிகளைச்சேர்ந்து பேரின்பமடைவது எக்காலம்? 4

(குறிப்பு.) வஞ்சர்மனத்து இறையும் அணுகாத நெஞ்சவன் - வஞ்சம் என்பது பொய், பொய்யுலக வாழ்க்கையிற் பற்றுவைத்து ஒழுகுகிற மக்களை வஞ்சகர் என்றார். மூவர் உருத்தனது ஆம் மூலமுதற்கருவை - "ஒருருவாயினை மானாங் காரத், தீரியல் பாயொருவின்முதல் பூதலம், படைத்தளித் தழிப்ப மும்மூர்த்திகளாயினை" என்று திருஞானசம்பந்த அடிகள் கூறியபடி படைப்பு, காப்பு, அழிப்புத்தொழில்கள் செய்யும் மும்மூர்த்திகளும் முழுமுதற் கடவுளாகிய சிவபெருமானிடமிருந்து தோன்றி அவனிடம் ஒடுங்குதலால் அடிகள் 'மூவருருத்தனதா மூலமுதற்கருவை' என்றார். பாவகம் இன்றி மெய்யே ஆகமுறப் பற்றுமவர்க்கமுதை - பாவகம்- தோற்றம், நடிப்பு (Hypocrisy.) ஆகம் - நெஞ்சு; மனம். அமுது - அமுதுபோன்று இன்பம்செய்கின்றவன். எனக்குக் காவல் இன்றென்று எய்துவது என்றுகொல் - காவல்என்பது இங்கே அநுக்கிரகத்தை (அருளை)க் குறிக்கிறது. கொல், ஐ - அசைநிலைகள் - கானப்பேர் உறைகாளையை - சுந்தரமூர்த்தி அடிகள் சேரமான் பெருமாள் நாயனாருடன் பாண்டிநாட்டிலுள்ள தலங்களை வணங்கிக்கொண்டு, திருச்சுழியலில் அமர்ந்திருந்த பொழுது, இரவு கனவில் அவரிடத்தில் சிவபெருமான் கையிற்பொற்செண்டும், திருமுடியிற் சூழியமுமுடைய காளை வடிவிற்றோன்றி, "யாமிருப்பது திருக்கானப்பேர்" என்று கூறி மறையவும், அடிகள் பாடிய பதிகத்தின் 7-வது பாட்டு இது. அவர் கனவிற் கண்ட காளைவடிவத்தை நினைந்து, 'திருக்கானப் பேருறைகாளையை' என்று பாடியருளினர். இத்தலம் இப்

பொழுது காளையார்கோயில் எனவழங்குகிறது. "பற்றுமனக் கழுதை" என்றதினாலும், "காவலெனக்கிறையென் றெய்து வதென்றுங்கொல்" என்றதினாலும் இப்பாட்டு இன்புறு நிலையின்கீழ்வைக்கப்பட்டது.

## ௪-௨. திருவலஞ்சுழி. பண்-நட்டராகம்.

எகூ அறிவி லாதவன் சமணர்கள் சாக்கியர்
தவம்புரிந் தவஞ்செய்வார்

நெறியலாதன கூறுவர் மற்றவை
தேறன்மின் மாறுநீர்

மறியு லாந்திரைக் காவிரி வலஞ்சுழி
மருவிய பெருமானைப்

பிறிவி லாதவர் பெறுகதி பேசிடி
லளவறுக் கோண்ணாதே.

(ப-ரை) அறிவுஇலாத வன்சமணர் சாக்கியர் - கடவுளைப் பற்றிய அறிவில்லாத கொடிய சமணரும் சாக்கியரும்; தவம் புரிந்து அவம்செய்வார் - தவம் செய்கிறதாகச் சொல்லிப் பய னில்லாத வீண்செயல்களைச் செய்கிறவர்களாகி; நெறிஅலாதன கூறுவர் - நல்ல நெறிக்கு உரியன அல்லாத தீய செயல்களைச் செய்யும்படி சொல்வார்; மற்று அவை தேறன்மின் - அவ் வாறு அவர்கள் கூறுகிற அந்தச் சொற்களை (அடியார்களே) நீங்கள் உண்மையெனத் தெளியாதேயுங்கள்; மாறு நீர்-வற்றாத நீரையும்; மறிஉலாம் திரைக் காவிரி - மடங்கி வருகின்ற அலைகளையும் உடைய காவிரி ஆற்றின்; வலஞ்சுழி மருவிய பெருமானை - அருகிலிருக்கின்ற திருவலஞ்சுழி என்ற தலத் தில் திருக்கோயில்கொண் டெழுந்தருளியிருக்கின்ற பெரு மானை; பிறிவுஇலாதவர்- தங்கள் மனத்தினில் நினைப்பும் மறப் பும் அற்ற நிலையில் எப்பொழுதும் நினைந்து அவனோடு அத்து

விதமாய்க் கலந்து கொண்டிருக்கிற அடியார்கள்; பெறுகதி பேசிடில் - அடைகின்ற பயன் இன்னது எனக்கூறப்புகின்; அளவு அறுக்க ஒண்ணாது - அதனை இவ்வளவுதான் என்று வரையறுத்துக் கூறமுடியாது. ஆதலின், நீங்கள் திருவலஞ் சுழியில் எழுந்தருளியிருக்கின்ற சிவபெருமானை எப்பொழுதும் உங்கள் மனத்தில் நினைந்து வழிபடுமின என்பது குறிப் பெச்சம். 5

(வி-ரை.) தவம்புரிந்து அவம் செய்வார் - சேக்கிழார் அடிகள் பெரிய புராணத்தில் "தவமென்று பாயிடுக்கித் தலை பறித்து நின்றுண்ணும் - அவமொன்றும் நெறி" என்று சமண சமய நெறியைக் கூறியிருத்தல் காண்க. சமணரும் சாக்கியரும் தோற்றத்தில் தவம் செய் வேடத்தை உடையவ ராயினும், உண்மையில் இறைவனிடத்திலும், உயிர்களிடத் திலும் அன்பில்லாதவர்கள் என்பது கூறப்பட்டது. செய் வார் என்ற வினைமுற்று வினையெச்சப் பொருளில் வந்தது. மற்று அவை தேறல்மின் - மற்று - அசை, தேறல்மின்-முன் னிலை ஏவற்பன்மை எதிர்மறை வினைமுற்று, மின்-விகுதி. பிரிவிலாதவர் - மேலே 53-வது பாட்டில் "நெஞ்சிடை நின்ற கலான் பலகாலமும் நின்றனனே" என்றும், 54-வது பாட் டில் "என்மனத் தகத்தே யிரவும் பகலும் பிரிவரியான்" எனவும இறைவனுக்குக் கூறப்பட்ட கருத்துக்கள் இங்கு அடியார்களுக்குக் கூறப்பட்டன. அளவு அறுக்க ஒண்ணாது- அடியார்கள் இறைவனுடன் பிரிவறியாது அத்துவிதமாய்க் கலந்து பெறும் சிவபெரும்போகம் புதிது புதிதாய் வளர்ந்து கொண்டு போகிறது ( Infinite Bliss ) என்பார் அளவறுக் கொண்ணாது என்றார். அகரம் தொகுத் தல் விகாரம். நீங்கள் - தோன்றா எழுவாய்; தேறன்

மின்-பயனிலை. கதி - எழுவாய், அளவறுக் கொண்ணுது- பயனிலை. ச-வது அடியிற் கூறிய பொருளால், இச்செய்யுள் இன்புறுநிலையின்கீழ் வைக்கப்பட்டது.

திருச்சிற்றம்பலம்.

## கூ. அஞ்செழுத்தருணிலை.

### நா - ரு. திருப்புகலூர்-திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

அ௦ விண்ணி ஞர்மதி சூடிய வேந்தனை
எண்ணி நாமங்க ளோதி யெழுத்தஞ்சுங்
கண்ணி ஞர்கழல் காண்பிட மேதெனிற்
புண்ணி யன்புக லூருமென் னெஞ்சுமே.

(ப—ரை) *விண்ணினார்மதி சூடிய வேந்தனை - வானத்தில் நிலவுகின்ற திங்களைத்தரித்த மன்னனாய சிவபெருமானை; நாமங்கள் எழுத்து அஞ்சும் எண்ணி ஓதி - அவன் நாமமாகிய அஞ்செழுத்தையும் அதன் கருத்தையும் மனத்தில் சிந்தித்து ஓதி; கழல் கண்ணினாற் காண்பு இடம் - அவனது திருவடிகளைப் புறக்கண்களாலும் அகக்கண்களாலும் காணுதற்கு உரிய இடம்; ஏது என்னில் - யாது என்று வினவின்; புண்ணியன் புகலூரும் என் நெஞ்சும்-அது முறையே அறவாளனாகிய சிவபெருமான் (திருக்கோயில் கொண்டெழுந்தருளி யிருக்கிற) திருப்புகலூர் என்ற தலமும், எனது உள்ளமும் (ஆகும்). ஆதலின், அடியார்களே சிவபெருமானை அஞ்செழுத்து ஓதிப் புறத்திலும் அகத்திலும் கண்டு வழிமின் என்பது குறிப்பெச்சம்.* 1

(விளக்கவுரை) வேந்தன் - "ஆட்சி உலகை - உடையாய் போற்றி" என்று அடிகள் போற்றித் திருத்தாண்டகத் தேவாரத்திற் கூறியபடி சிவபெருமான் உலகிற்கு முழு முதற் கடவுளாய் அதனை ஆளுகிறவன் ஆதலின், வேந்தன் என்று கூறினர். நாமங்கள் எழுத்தஞ்சும் எண்ணி ஓதி - நாமங்கள் என்பதில் கள் அசை; அஞ்செழுத்தும் சிவபெருமான் திருநாமம் ஆதலின் நாமம் எழுத்தஞ்சும் என்றார். "எந்தையார் திருநாமம் நமச்சிவாய வென்றெழுவார்க்கிருவிசும்பி லிருக்கலாமே" என்று அடிகள் பலவகைத் திருத்தாண்டகம் 10-வது பாட்டிற் கூறியருளினமை காண்க. சிவபெருமானுடைய எண்ணில் திருநாமங்களும் அஞ்செழுத்திலடங்கும். நாமங்கள் எழுத்து அஞ்சும் எண்ணி ஓதி - எண்ணி ஓதுதலாவது ஓதுகிறவன் ஒவ்வொரு எழுத்தும் இன்ன இன்ன பொருளைக் குறிக்கிறது என்று கருதி, சிகாரமாகிய சிவமும் யகாரமாகிய உயிரும் ஆண்டான் அடிமைத் தொடர்பில் நிற்கும் முறைமையையும், உயிர் மகாரமாகிய மலத்தையும் நகாரமாகிய திரோதான சத்தியையுங் கடந்து நின்று வகாரமாகிய அருட்சத்தி வழியாய்ச் சிவத்தை அடையும் முறைமையையும் மனத்தின்கண் கசிந்துருகி நினைத்துச் சிவத்தில் அடங்கி உறைத்து நின்று கணித்தலாகும். "அஞ்செழுத்தாலுள்ள மரனுடைமை கண்டரனை, யஞ்செழுத்தா லர்ச்சித் திதயத்தி - லஞ்செழுத்தாற், குண்டலியிற் செய்தோமங் கோதண்டஞ் சானிக்கில், அண்டனாஞ் சேடனா மங்கு" என்று சிவஞானபோதம் 9-வது சூத்திர வெண்பாவிற் கூறப்பட்டிருத்தல் காண்க. இங்கே அஞ்செழுத்தோதல் ஆன்மா மலமாசகன்று இறைவனை ஞானக் கண்ணிற் சிந்தையில் நாடி அவனுடைய சிறப்பியலை அறிந்தபின், பழைய மலவாசனை நீங்கும்

பொருட்டு ஓதுதல். திருஞானசம்பந்த அடிகள் "துஞ்சலும் துஞ்சலிலாத போழ்தினும், நெஞ்சகம் நைந்துநினைமின் நாடொறும்" என்று பஞ்சாக்கரப் பதிகத்தில் கூறியருளினார். கண்ணினால் கழல் காண்பு இடம் - கண்ணினால் காண்பு என்பது அகக்கண்ணினாலும் புறக்கண்ணினாலும் ஒருதன்மைக் காட்சியாகக்காணுதல். அகக்கண்ணினாற் சிவபெருமானை 4-வது அடியிற் கூறப்படுகிற நெஞ்சில் விளங்குகிற சிவலிங்கத்தைக் காணுதல், புறக்கண்ணினால் திருப்புகலூர்க்கோயிலில் எழுந்தருளியிருக்கிற சிவலிங்கப் பெருமானைக் காணுதல். திருமூலர் "உள்ளஞ் சிவலிங்க மூனுடம் பாலயம்" என்றார். அகக்காட்சி உண்டாதற்குப் புறக்காட்சியும் அஞ்செழுத்தோதுதலும்சாதனங்கள். காண்பு தொழிற் பெயர். பு தொழிற் பெயர் விகுதி. ஏதுஎனில் - என்னில், என்பது எனில் எனக் குறைந்தது. இடம்-எழுவாய்; நெஞ்சு, புகலூர், பயனிலைகள்.

### ௩௪. திருப்பாதிரிப்புலியூர் - திருவிருத்தம்.

௯. கருவாய்க் கிடந்துன் கழலே நினையுங் [கருத்துடையேன்
உருவாய்த் தெரிந்துன்ற னாமம் பயின்றே [னுனதருளால்
திருவாயப் பொலியச் சிவாய நமவென்று [நீறணிந்தேன்
தருவாய் சிவகதி நீபா திரிப்புலி யூரரனே.

(ப-ரை) பாதிரிப்புலியூர் அரனே-திருப்பாதிரிப்புலியூரில் திருக்கோயில்கொண் டெழுந்தருளி யிருக்கின்ற சிவபெருமானே; கருவாய்க் கிடந்து உன் கழலே நினையும் கருத்து உடையேன் - (உலகிற் பிறத்தற்கு முன்னே எனது தாயா

ருடைய) கருப்பையிற் கிடந்து உன்னுடைய திருவடிகளையே சிந்தித்துக்கொண்டிருந்தவனாகிய நான்; உருவாய்த் தெரிந்து-மானுட வடிவிற் பிறந்து அறிகிற பருவம் வர; உனது அருளால் - அப்பொழுது உனது பேரருட்டிறத்தினால்; உன் நாமம் பயின்றேன் - உனது திருநாமமாகிய அஞ்செழுத்தை ஓதிப் பழகினேன்; (உனது திருவருளால்) - உனது பேரருட்டிறத்தால்; திருவாய்ப்பொலிய - மலத்துவம் நீங்கிச் சிவத்துவ விளக்கம் அடைகிறதற்காக; சிவாயநம என்று நீறு அணிந்தேன் - சிவாயநம என்ற சூக்கும அஞ்செழுத்தை நினைந்து ஓதித்திருநீறணிந்து உன்னுடைய திருவடிகளை வணங்கினேன்; நீ சிவகதி தருவாய் - இவ்வாறு நான் செய்த தினாலுண்டான பயனாக நீ எனக்கு வீடுபேற்றைத் தந்தருளினாய். 2

(வி-ரை) திருநாவுக்கரசு அடிகள் இந்தப்பாட்டில் தனது அநுபவத்தைப் பிறர் அறிந்து உய்யும்படி கூறுகின்றார். கருவாய்க் கிடந்து, உருவாய்த் தெரிந்து - மேலே 16-வது பாட்டில் அடிகள் "கருவாகிக் குழம்பிருந்து......உருவாகிப் புறப்பட்டு" என்று கூறியிருத்தல் காண்க. கருவாய்-வாய் - ஏழாம் வேற்றுமை உருபு. கிடந்து-கிடந்து என்பதனால் தன்முனைப் பின்றி இறைவன் வயப்பட்டிருந்து என்பது குறிப்பிடப் பட்டது. உருவாய்த் தெரிந்து - தெரிய என்பது தெரிந்து என நின்றது. தெரிந்து பயின்றேன் என்பது காரணப் பொருட்டாய் இறந்த காலப் பொருளில் வந்தது. உனதருளால் உன்றன் நாமம் பயின்றேன் - பயிலுதல் அடிக்கடி ஓதிப் பழகுதல். உன்றன்-தன் - என்பது அசைநிலை. அடிகள் திருநணிபள்ளித் தேவாரத்தில் 5-வது பாட்டில் "துஞ்சிருள் காலைமாலை தொடர்ச்சியை மறந்திராதே-அஞ்செழுத் தோதி நாளு மரனடிக் கன்பதாகும்" என்று

தாம் அஞ்செழுத்தோதிப் பயின்றதைக் கூறுகின்றார். உனது அருளால் என்ற சொற்றொடரைப் பயின்றேன் என்பதனோடும், திருவாய்ப்பொலிய என்பதனோடும் சேர்க்க, திருவருளின் துணையின்றிப் பயிலுதலும் திருவாய்ப் பொலிதலும் முடியா ஆதலின். திருவாய்ப் பொலியச் சிவாயநம என்று நீறு அணிந்தேன் - திருவாய்ப் பொலிய என்பது காரியப் பொருட்டாய் எதிர்காலப் பொருளில் வந்தது. நெல்விளைய மழை பெய்தது என்றாற்போல. சிவாயநம என்று நீறணிதலினால் திருவாய்ப் பொலிதல் நிகழ்ந்தது. என்று என்பது நினைத்து ஓதி என்னும் பொருள்பட வந்தது. நீறணிந்தேன் - மேலே பாதிரிப்புலியூர் அரனே என்றதனால் நீறணிந்தேன் என்பது நீறணிந்து வணங்கினேன் என்னும் பொருள்பட வந்தது. வணங்கி என்பது சொல்லெச்சம். 'சிவாயநம என்று' என்பதில் மனத்தின் செயலும், வாக்கின் செயலும், அணிந்தேன் என்பதில் காயத்தின் செயலும் அடங்கியுள்ளன; சூக்கும அஞ்செழுத்து நினைந்து ஓதலும், திருநீறணிந்து வணங்குதலும் சிவத்துவ விளக்கத்துக்குச் சாதனமாயுள்ளன என்பது கூறப்பட்டது. பசுவாகிய தூலவிலங்கினது கருநிறச் சாணத்தைத் தீயாற் சுட்டுத் தூயவெண்ணீறாக்குதல் சூக்குமமாகிய இருள்நிற மலத்தாற் பற்றப்பட்ட மக்களுயிர், மெய்ஞ்ஞானத்தால் மலத் தன்மை நீங்கி வெள்ளிய அருளொளி நிறைந்த சிவத்தன்மை அடைதல் மிக்க பொருத்தமான குறியீட்டாகும். குறியீடு (Symbolism) மயமாயுள்ள உலகில் மக்கள் எத்துறை வாழ்விலும் குறியீடுகளை வழங்கி வருதலைக் கண்டும், திருநீறு அணிதலாகிய குறியீட்டைப் பழிக்கிறவர்கள் உண்மையை ஆராய்ந்தறியுந் திறனில்லாதவர்கள். ஒரு சிறு தீப்பற்றியகரித் துண்டை வைத்து ஒருவன் ஊத ஊத, அக்கரிய துண்டு கரிய நிறமாறித் தீயுருவாய் முழுவதும் பரந்து விளங்குதல்போல,

ஒருவன் அஞ்செழுத்தை ஓத ஓத அஞ்செழுத்தில் விளங்குகிற அருட்சத்தியால் மலத்தன்மையினின்று நீங்கிச் சிவத்தன்மையை அடைகிறான். சிவகதி என்பது சிவத்தைச் சார்தல், அஃதாவது வீடுபேறு. ஆகவே, சிவகதி அடைதலுக்குத் திருவாய்ப் பொலிதலும், திருவாய்ப் பொலிதலுக்குச் சிவாயநம என்று நீறணிந்து வணங்குதலும் காரணமாயின.

நா - ச. திருப்பாதிரிப்புலியூர் – திருவிருத்தம்.

அஉ. வைச்ச பொருணமக் காமென்று சொல்லி [மனத்தடைத்துச்
சித்த மொருக்கிச் சிவாய நமவென் றிருக்கினல்லான்
மொய்த்த கதிர்மதி போல்வா ரவர்பா திரிப்புலியூர்
அத்த னருள்பெற லாமோ வறிவிலாப் பேதை [நெஞ்சே.

(ப—ரை.) அறிவுஇலாப்பேதைநெஞ்சே - சிறிதும் மெய்யறிவு விளங்கப்பெறாது உலகப்பற்றில் மயங்குகின்ற மனமே; வைச்சபொருள்நமக்கு ஆம்என்றுசொல்லி - நாம் இப்பொழுது அரிதின்முயன்று கிடைக்கப்பெறுகிற மெய்யறிவு ஆகிய நிலையான பொருளானது பின் சிவகதி அடைதற்குப்பயன்படும் என்றுநினைந்து; மனத்துஅடைத்து-மனத்திலே உறுதியாகக் கொண்டு; சித்தம்ஒருக்கி-மனத்தை உலகவிடயத்திற்போகாதவண்ணம் ஆன்மாவில்ஒடுங்கச்செய்து; சிவாயநமஎன்று- சிவாயநம என்றருக்கும அஞ்செழுத்தை, அதன் கருத்தைநினைந்து ஓதி ; இருக்கின்அல்லால்-சிந்தைசெய்து இருந்தால் அல்லாமல்; மொய்த்தகதிர்மதி போல்வார் அவர்-கதிர்கள் (கிரணங்கள்) நெருங்கியுள்ளவாகிய திங்களைப் போன்றிருக்கிறவராகிய;

பாதிரிப்புலியூர்அத்தன் - திருப்பாதிரிப்புலியூரில் எழுந்தருளி யிருக்கிற தந்தையாகிய சிவபெருமானுடைய ; அருள்பெற லாமோ - திருவருளைப்பெற்று நாம் முத்திஅடைந்து உய்ய முடியுமோ ? (அருள்பெறமுடியாது என்றபடி) 3

(வி-ரை.) வைச்சபொருள் நமக்காம் - ஒருவன் தான்பலகா லுஞ் சேகரித்துக் காப்புத்தனமாகப் பாதுகாத்து வைத்திருந்த பொருளானது பின் தனக்குப்பயன்படுவதுபோல, அஞ்செழுத் தைப்பல்காலும் ஓதிப்பயின்று வந்ததனால் தன்னிடத்து உண் டாகும் அருள்விளக்கமானது தான் முடிவிற் சிவப்பேறு அடைதற்குப் பயன்படும் என்பார், வைச்சபொருள் நமக்காம்' என்றார். இந்தப் பாட்டில் திருநாவுக்கரசு அடிகள், உலகிற் பற்றுவைத்து, உழன்று கொண்டிருக்கும் மனத்தையுடைய மக்களுக்கு அறிவுரை கூறவேண்டித் தமது மனத்தைப் பார்த் துக் கூறுவதாகக் கூறுகின்றார். அறிவிலாப் பேதைநெஞ்சே - அறிவு என்பது இங்கே மெய்யறிவு (சிவஞானம்). பேதை நெஞ்சு - சிவன் திருவடிகளை மறந்து உலகிற்பற்றுவைத்து மயங்குகிறநெஞ்சு; இப்பாட்டில் வழங்கப்படுகிற நெஞ்சு, மனம், சித்தம் மூன்றும் ஒருபொருட்சொற்கள். மனம் சிந்திக்கும் பொழுது அதற்குச்சித்தம் என்றுபெயர். நமக்கு ஆம் - அடிகள் மனத்தைப்பார்த்து அதனைத்தம்மோடு உளப்படுத்திக் கூறுத லால்நமக்கு என்றார். ஆன்மாவினது நலமும் அதற்குக்கருவியா யுள்ள மனத்தினது நலமும் ஒன்றுஎன்பது குறிப்பிடப்பட் டது. ஆம்என்பது நிலையில்லாத உலகப்பொருள்போல் அல் லாமல் நிலையுள்ளதாய்ப் பயன்படுவதாயுள்ளது என்ற பொருள் படநின்றது. என்றுசொல்லி - மனத்தினதுசெயல் நினைத்தல் ஆதலின் சொல்லி என்பதற்கு நினைத்து என்றுபொருள்கூறப் பட்டது. மனத்து அடைத்து - அடைத்தல் - வெளியே

போகவிடாதிருத்தல், அதாவது மறந்துபோகாமல் மனத்தி னுள்ளே உறுதியாகக்கொள்ளல். சிவாயநம என்று இருக் கினல்லால் - மனமானது ஆன்மாவுடன் ஒன்றாக ஆன்மாத் தற்போதமின்றி அருளில் ஒடுங்கினாலொழிய சிவனுடைய அருட்சத்தி ஆன்மாவினிடத்துப் பதியாது ஆதலின், 'சித்த மொருக்கிச் சிவாயநம என்றிருக்கினல்லால்' என்றார். தூல அஞ்செழுத்தன்றிச் சூக்கும அஞ்செழுத்தே ஆன்மாவைச் சிவனிடத்தி லொடுங்கச்செய்தலால் 'சிவாயநம என்று' என்றார்; இருக்கினல்லால்-சிந்தித்திருக்கினல்லால் என்னும் பொருள்பட நின்றது. ஔவைப்பிராட்டியாரும் "சிவாயநம என்று சிந்தித்திருப்பார்" என்றருளினார். சித்தம் ஒருக்கிச் சூக்கும அஞ்செழுத்தை அதன்கருத்து அறிந்து கசிந்து உருகி ஓதல், ஆன்மா அருளிலொடுங்கிச் சிவப்பேற்றை யடைதற்குக் காரணமாயுள்ளது. மொய்த்தகதிர்மதிபோல் வார் அவர்-மொய்த்தகதிர் - கிரணங்களோடு நெருக்கமாய்க் கூடியிருக்கிற திங்கள்; திங்கள், இரவில் உலகினுள்ள புறஇருளை ஓட்டுதல்போல, இறைவனுடைய அருள்ஒளியானது ஆன் மாக்களுடைய அகவிருளை ஓட்டுதலாலும், திங்களும் அவனு டைய ஒளியும் எவ்வாறு அபின்னமாயிருக்கிறதோ, அவ்வாறே இறைவனும் அவனது அருட்சத்தியுடன் அபின்னமாயுள்ள வனாயிருத்தலாலும், திங்கள் தண்ணிதாயிருந்து உயிர்களுக்கு இனிமை செய்தல்போல, இறைவன் உயிர்கள்மேல் அருளு டையவனாய் இன்பம் கொடுத்தலாலும் மொய்த்தகதிர்மதி போல்வார் என்றார். அவர் பகுதிப்பொருள் விகுதி. அத்தன் அருள்பெறலாமோ- ஓ - எதிர்மறைப்பொருளில் அருள்பெற முடியாது என்னும் பொருளைத்தந்துநின்றது. இப்பாட்டில் ஆன்மாவானவன், மனத்தை அருளில் ஒடுங்கச்செய்து சிவாய

நம என்று உருகிக் கசிந்து ஓதிச் சிந்தித்திருத்தல், மலவாசனையி னின்றும் நீங்கிச் சிவப்பேற்றைப் பெறுதற்குச் சாதனமா யுள்ளது என்பது கூறப்பட்டது.

நா - ரு. திருமாற்பேறு. திருக்குறுந்தொகை.

அஅ. ஏது மொன்று மறிவில ராயினும்
ஓதி யஞ்செழுத் தும்முணர் வார்கட்குப்
பேத மின்றி யவரவ ருள்ளத்தே
மாதுந் தாமும் மகிழ்வர்மாற் பேறரே.

(ப-ரை.) மாற்பேறர் - திருமாற்பேறு என்ற தலத்தில் திருக்கோயில்கொண்டெழுந்தருளி யிருக்கின்ற சிவபெருமான்; அஞ்செழுத்தும் ஓதி உணர்வார்கட்கு - அஞ்செழுத்தை ஓதித் தம்முடைய பொது இயலைமட்டும் அறிந்து அன்புடன் வழிபடுகிறவர்களுக்கு; ஒன்றும் அறிவு ஏதும் இலராயினும் - அவர்கள் தமது சிறப்பியலை அறிந்து தம்மோடு அத்துவிதமாய்க் கலந்து சேரும் மெய்யறிவு சிறிதுமில்லாதவர்களாயிருப்பினும்; அவர் அவர் உள்ளத்துப் பேதமின்றி - எவர் எவர் தமது பொது இயலை உரை அளவையாலும் கருதலளவையாலும் அறிந்து தம்மை அன்போடு வழிபடுகிறார்களோ, அவரவருடைய உள்ளத்திலும் யாதொரு வேற்றுமையில்லாமல்; மாதும் தாமும் மகிழ்வர் - உமாதேவியாரும் தாமுமாக அவர் அன்புக்கு உவந்து வீற்றிருந்தருளுவர். 4

(வி-ரை) மேலே 80-வது பாட்டில் சிவபெருமானுடைய சிறப்பியலை அறிந்து அவரோடு இரண்டறக் கலந்து ஞானத்தால் வழிபடும் தமது உள்ளத்திலும், திருப்புகலூர்த் திருக்கோயிலிலும் வீற்றிருக்கின்றார் என்று கூறிய திருநாவுக்கரசு

அடிகள், இப்பாட்டில் சிவபெருமான் தமது பொது இயலை அறிந்து உலக போகநெறியில் நின்று உண்மையாக வழிபடுகிறவர்களுடைய உள்ளத்திலும் உமாதேவியாரோடு உவந்து வீற்றிருந்தருளுகின்றார் என்று கூறுகின்றார். 81,82-வது பாட்டுக்களிலும் சிறப்பியலை உணரும் உயர்நிலையுள்ளவர்கள் பெறும்பயன் கூறப்பட்டிருக்கின்றது; தம்முடைய சிறப்பியலை அநுபவ ஞானத்தினால் அறிந்து தம்மோடு அத்துவிதமாய்க் கலந்து தம்மை மெய்ஞ்ஞானத்தால் வழிபடுகிறவர்களுடைய உள்ளத்தில் அவர்கள் அறிய "சிவபெருமான் வீற்றிருந்தருளுவர்; ஆனால் தமது பொது இயலை மாத்திரம் அறிந்து தம்மை வழிபடுகிறவர்களுடைய உள்ளத்தில் அவர்கள் அறியாது வீற்றிருந்து அவர்களது அறிவுநிலைக்குத் தக்கவாறு அருள் செய்கின்றார் என்பது கருத்து. இந்தக் கருத்தை அடிகள் திருஐயாற்றுத் தேவாரம் 4-வது பாட்டில், "இருள்தரு துன்பப் படல மறைப்பமெய்ஞ் ஞானமென்னும்-பொருள்தரு கண்ணிழந் துண்பொருள் நாடிப் புகலிழந்த - குருடரும் தம்மைப் பரவக் கொடுநர கக்குழி நின்-றருள்தரு கைகொடுத் தேற்றுமை யாற னடித்தலமே'' என்று கூறியருளினமை காண்க. "மந்தர மன்ன பாவங்கள் மேவிய - பந்த னையவர் தாமும் பகர்வரேல் - சிந்தும் வல்வினை செல்வமு மல்குமால் - நந்தி நாம நமச்சி வாயவே'' என்று திருஞான சம்பந்த அடிகள் கூறியவாற்றாலும் அறிக. சிறப்பு இயலை உணராதவர்கள் அஞ்செழுத்தோதினும் பயனுளதாகுமோ என்ற ஐயம் மக்களுக்கு நிகழா திருத்தற் பொருட்டு இந்தப் பாட்டு, கடைசியில் வைக்கப்பட்டதாக நாம் நினைக்கவேண்டியிருக்கிறது. அஞ்செழுத்தும் ஓதி உணர்வார் - அஞ்செழுத்தும் - உம் முற்றும்மை; ஒவ்வொரு எழுத்தினது பொருளும் தெரிந்து ஓதல் வேண்டுமென்ப

தாயிற்று. உணர்வார்கட்கும் என்பதில் உம் - இறந்தது தழீஇய எச்ச உம்மை; சிறப்பியலை உணர்வார்க்கும் அன்றி என்னும் பொருள்பட நின்றது. ஏதும் ஒன்றும் அறிவு இலராயினும் - ஏதும் — சிறிதும். ஒன்றும் அறிவு - இறைவனோடு அத்துவிதமாய்க் கலந்து உணரும் சிறப்பியல் அறிவு; பதிஞானம் - மெய்யுணர்வு. அவர் அவர் உள்ளத்தே பேதம் இன்றி - உள்ளத்தே என்பதில் ஏ — அசை. சிறப்பியலை அறிந்து ஓதுவாருடைய உள்ளத்திலும் இறைவன் மகிழ்ந்து வீற்றிருத்தல்போல, பொது இயலை அறிந்து ஓதுவாருடைய உள்ளத்திலும் அங்ஙனம் வீற்றிருப்பார் என்பார் பேதமின்றி என்றார். மகிழ்வர் என்றதனாலே கட்டுநிலையில் பொது இயல்பை அறிந்து அஞ்செழுத்தை ஓதுகிறவர்களுடைய உள்ளத்திலும், அவ்வாறு ஓதுதலின் பயனாக சிவபெருமான் தனது சிறப்பியல்பை உணரும் மெய்யறிவு விளங்கும்படி செய்வது என்பது குறிப்பினால் உணர்த்தப்பட்டது.

திருச்சிற்றம்பலம்.

---

## ௧௦. அணைந்தோர் தன்மை.

### நா - ௬. திருவாரூர் — திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

அச. நிலைபெறுமா றெண்ணுதியே னெஞ்சே நீவா
நித்தலுமெம் பிரானுடைய கோயில் புக்குப்
புலர்வதன்முன் னலகிட்டு மெழுக்கு மிட்டுப்
பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித்

தலையாரக் கும்பிட்டுக் கூத்து மாடிச்
சங்கரா சயபோற்றி போற்றி யென்றும்
அலைபுனல்சேர் செஞ்சடையெம் மாதீ யென்று
மாரூரா வென்றென்றே யலற நில்லே.

(ப—ரை) நெஞ்சே - உள்ளமே; நிலைபெறுமாறு - அயரா அன்பினாலே அரன் அடிகளை அடைந்த அத்துவித நிலையி னின்றும் வழுவாமல் நிலையாய் நிற்கும் வண்ணம்; எண்ணுதி யேல் - விரும்புவாயானால்; நீவா - நீ என்னுடன் வா, (அதா வது நீ என்னுடன் சேர்ந்து நின்று நான் சொல்லுகிறபடி கேள்); நித்தலும் - நாள்தோறும்; புலர்வதன்முன் - இராப் பொழுதுமுடிந்து விடியுங்காலத்துக்குமுன்; எம்பிரானுடைய கோயில்புக்கு - எமது தலைவனாகிய திருவாரூரிற் புற்றிடங் கொண்ட பெருமானுடைய திருக்கோயிலுக்குப் போய்; அலகு இட்டு உம் - அக்கோயிலைப்பெருக்கியும்; மெழுக்குஇட்டு உம் - மெழுகியும்; பூமாலை புனைந்து (உம்) - பூக்களால் மாலைகள் கட்டி அம்மாலைகளைப் புற்றிடங்கொண்ட பெருமானுக்குச் சாத்தியும்; தலையாரக் கும்பிட்டு (உம்) - தலையினாலே நன்கு வணங்கியும்; கூத்து ஆடியும் - உள்ளத்தினெழும் உவகையி னால் கூத்து ஆடியும்; சங்கரா சய போற்றிபோற்றி என்றும் - சங்கரனே, உனது திருவருள் உலகில் வெற்றி பெறுக, உனக்கு வணக்கம் வணக்கம் என்று சொல்லியும்; அலைபுனல் சேர்செஞ்சடை எம்ஆதீ என்றும் - அலைகளை வீசும் கங்கை யாறு சேர்ந்த சிவந்த சடையையுடைய எமது முதல்வனே என்று சொல்லியும்; புகழ்ந்து (உம்) - புகழ்ந்தும்; பாடி (உம்) - (தோத்திரங்கள்) பாடியும்; ஆரூரா என்று என்று அலறு (உம்) - திருவாரூரா என்று பலகாற் சொல்லி அன்பினால் மனம் கசிந்து உருகியும்; ஏத்தி - இவ்வாறு துதித்து; நில் - அத்துவித நிலையினின்றும் வழுவாமல் நிற்கக் கடவாய். 1

(வி — ரை) எம்பிரானுடைய கோயில்புக்கு அலகிட்டும், மெழுக்கிட்டும், பூமாலை புனைந்தும், தலையாரக் கும்பிட்டும், கூத்தாடியும், சங்கரா சயபோற்றிபோற்றி யென்றும், அலை புனல்சேர் செம்சடை யெம்மாதீ யென்றும், புகழ்ந்தும், பாடியும், ஆரூரா வென்றென்றே அலறியும், எத்திகில்லை என்று எண் உம்மைகளைப் பெய்யவேண்டிய இடங் களிற் பெய்தும், தொக்கிநிற்கிற இடங்களில் விரித்தும் சொல் முடிபு செய்க. இவ்வாறு செய்யாக்கால் பொருள் நன்கு விளங்காது. சிவஞானபோதம் 12-வது சூத்திரத்திற் கூறப் பட்டபடி அயரா அன்பின் அரன் கழலடைந்த சீவன் முத்தர் கள் தாங்கள் நிட்டையினின்று நீங்கிப் புறத்தே செல்லுங்கால் எடுத்த உடல் நீங்கும்வரை உடனூழாய்க் கழிய இருக்கிற பிராரத்த வினை தங்களை மெல்லிதாய்த் தாக்கி, அத்துவித நிலையினின்று வழுவாதிருக்கச் செய்தற்குத் தங்கள் அறிவு வேட்கை செயல்களைத் திருக்கோயிலின்கண் முறையே மனத் தினாலே நினைத்தலினும், வாயினாலே புகழ்தலினும், உடலி னாலே அலகிடுதல்-முதலிய பணிகள் செய்தலினும் நிகழ்த்தவேண் டுமென்று இப்பாட்டுக்கூறுகின்றது. நிலைபெறுமாறு எண்ணுதி யேல் - என்றதனால் அரன் பணிகள் செய்யப்படாவிட்டால் முன் அடையப்பெற்ற அத்துவிதநிலை நழுவும் என்பது கூறப்பட்டது. எண்ணுதி - முன்னிலை ஏவல் ஒருமை வினை முற்று. இ-விகுதி. தகரம்-எழுத்துப் பேறு. ஏல்-எனில் என்பதன் மரூஉ, ஏல் சேர்ந்ததனால் எண்ணுதி என்ற வினை முற்று வினையெச்சப் பொருள் தருகின்றது. நித்தலும் - பிரா ரத்தவினை, சோர்வுபற்றித் தாக்குமாதலின் நித்தலும் என்றார். சங்கரா சய போற்றிபோற்றி என்றும், அலைபுனல் சேர்செஞ் சடை எம் ஆதீ என்றும் புகழ்ந்தும் - சங்கரன் என்றதனால் நீ ஆன்மாக்களுக்குப் பேரின்பம் அளிக்கிறவன் என்பதும்,

செஞ்சடை எம் ஆதீ என்றதனால் பேரின்பம் அளிக்கிறதற்கு நீ ஆற்றலுடைய முதல்வன் என்பதும், ஆதீ என்றதனால் முதன்மைபற்றிப் பேரின்பமளித்தல் உனது கடன் என்பதும் குறிப்பிடப்பட்டன. சய - வடமொழிச் சொல், ஜய என்பதன் திரிபு. இறைவனுடைய அருள், மக்களுடைய தீவினையினால் தாமதப்படாதபடி உலகில் விளங்கி வெற்றி பெறுக என்பார் சய போற்றி என்றார்; மாணிக்கவாசகப்பெருமான் "சயசய போற்றி என்னுங் கைதான் நெகிழவிடேன்" என்றருளினர். புனல் - நீர், அது இங்கே ஆகுபெயராய்க் கங்கையைக் குறிக்கிறது. போற்றி - போற்று + இ - தொழிற் பெயர்; வெகுள் + இ வெகுளி என வருதல்போல். போற்றுதல் அதாவது வணக்கம். போற்றி போற்றி அடுக்குத் தொடர். ஆதீ-ஆதி என்ற சொல்லினது ஈற்று இகரம் நீண்டு விளிப்பெயராயிற்று. அடிகள்நெஞ்சை விளித்துக் கூறுதலால் அதனைத் தம்மோடு உளப்படுத்திப் பன்மையில் எம் ஆதீ என்றார். எம்பிரான் கோயில் என்றதும் அதுபற்றி. ஆரூரா என்று என்று அலறு - ஆரூரா என்ற சொல்லை மந்திரமாகப் பல்காற் சொல்லி அவ்வாறு சொல்லுதலினால் மனங்கசிந்து உருகி அழுது. அலறு - செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம். அலறி - அலறுதலும், மேலே 58-வது பாட்டில் வந்துள்ள அரற்றுதலும் ஒரு பொருளன. எத்திநில் - எத்துதல் என்பது, (1) அலகிட்டும் (2) மெழுக்கிட்டும் (3) பூமாலை புனைந்தும் (4) கும்பிட்டும் (5) கூத்தாடியும் (6) புகழ்ந்தும் (7) பாடியும் (8) அலறியும் பலவாறாகத் துதித்தல். அலகிடுதல், மெழுக்கிடுதல், பூமாலை புனைதல்,கும்பிடல்,கூத்தாடல்ஐந்தும் உடலினாற்செய்யப்படும் சரியைப்பணிகள்; புகழ்தலும் பாடுதலும் வாக்கினாற் செய்யப் படும்சரியைப்பணிகள்; அலறுதல் மனத்தினாற் செய்யப்படும்

சரியைப்பணி. ஞானிகள் சரியை முதல் நான்கு பாதப்பணி களுக்கு முரியர் ஆதலானும்,ஞானிகள் செய்கிறபணிகள் ஏனை யோர்கள் செய்கிறபணிகளைப் பார்க்கிலும் சிறந்து விளங்கித் திருக்கோயிலில் அருள் விளக்கம் பெருகுதற்குக் காரணமாயிருத்தலானும் இப்பாட்டில் ஞானிகளுக்குச் சரியைப்பணிகள் கூறப்பட்டன. நில் - முன்னிலை ஏவல் ஒருமை வினைமுற்று; ஆய் விகுதி புணர்ந்து கெட்டது- மேலே துவக்கத்தில் நிலைபெறுமாறு என்று சொன்னதற்கு ஏற்ப முடிவிலும் நில் என்றார். ஏத்தி நில் என்பது காரண காரியப்பொருளில் வந்தது. ஏத்தியதன் பயனாக அத்து வித நிலையில் வழுவாது நிற்கக்கடவாய் என்று நெஞ்சைப் பார்த்துக் கூறியவாறாயிற்று.

ச-ரு. திருப்பிரமபுரம். பண்-கொல்லி

அரு. அடைய லார்புரஞ் சீறி யந்தண
ரேத்த மாமட மாதொடும்
பெடையெ லாங்கடற் கானல் புல்கும்
பிரமபு ரத்துறை கோயிலான்
றொடைய லார்நறுங் கொன்றை யான்றொழி
லேப ரவிநின் றேத்தினால்
இடையி லார்சிவ லோக மெய்துதற்
கீது காரணங் காண்மினே.

(ப-ரை) அடையலார் புரம் சீறி - தம்மை அடையாத அசுரர்களுடைய திரிபுரத்தைத் தீயெழச் சினந்து எரித்தும்; அந்தணர் ஏத்த- உயிர்களிடம் செந்தண்மை பூண்டொழுகும் சிறந்த பண்புடையாளர்கள் வழிபடவும் ; பெடையெலாம் கடற்கானல் புல்கும் - பெண் அன்றில்களெல்லாம் (தமது

ஆண் அன்றில்களோடும் சேர்ந்துகொண்டிருக்கும்) கடற் கரைச் சோலைகளை உடைய; பிரமபுரத்து மா மடமாதொடும் உறை கோயிலான் - சீகாழியில் பெருமையும் மடப்பமும் பொருந்திய உமாதேவியாரோடும் வீற்றிருக்கும் திருக் கோயிலை உடையவனும்; நறுமை ஆர் கொன்றைத் தொடைய லான் - மணம் பொருந்திய கொன்றைமாலையை அணிந்த வனும் ஆகிய சிவபெருமான் (வீற்றிருக்கின்ற); தொழிலே நின்று பரவி ஏத்தினால் - (திருக் கோயிலில் சரியையாளர்) திருஅலகிடுதல், திருமெழுக்கிடுதல், பூமாலை கட்டிச்சாத்தல் முதலிய திருப்பணிகளை நிலையாகச் செய்து புகழ்ந்து துதித்தால்; சிவலோகம் எய்துதற்கு இடை இலார் - அவர்கள் (உருத்திரனது அருளைப்பெற்றுச்) சிவ லோகம் சேர்தலாகிய பதமுத்தியை அடைதற்கு யாதொரு தடையுமில்லாதவர்கள் (அதாவது அவர்கள் எளிதிற் சிவ லோகம் அடைவார்கள்); ஈது - (உருத்திர மூர்த்தியாகிய சிவ பெருமானுடைய திருக்கோயிற் பணிகளைச் செய்தல் ஆகிய) இப்பணி; (சிவலோகம் எய்துதற்கு) காரணம்-அடியார்களாகிய நீங்கள் சிவலோகம் அடைதற்குக் காரணம் என்று; காண்மின்- அறிந்து கொண்டு அவ்வாறு செய்யுங்கள். 2

(வி-ரை) அடையலார்-அடை + அல் + ஆர் அடையாத வர்கள்-பகைவர்கள், அல் - எதிர்மறை இடைநிலை-ஆர்-உயர் திணைப் பலர்பாற் படர்க்கை விகுதி. சீறி, ஏத்த - ஈரிடங்களி லும் உம் தொக்கி நிற்கிறது, சீறியும் ஏத்தவும் உறைகோயி லான் என வினைமுடிபு செய்க. பெடை எலாம் புல்கும் - பெடை - பெண்பறவை. இங்கே நெய்தல் நிலக் கருப்பொரு ளைக் குறிக்கிறது. புல்கும் என்ற சொல் அதற்குமுன்

ஆண் அன்றில் என்ற சொற்களை அவாவி நிற்றலால் அவை களை வருவித்துப் பொருள் உரைக்கப்பட்டது. கானல் - கடல் அருகிலிருக்கிற மரச்சோலை. தொழிலே நின்று பரவி ஏத்தினால் - தொழில் என்ற சொல் இங்கே திருக்கோயிலில் சரியையாளர் செய்கிற திருவலகிடுதல் முதலிய பணிகளைக் குறிக்கிறது. ஏ - பிரிநிலைப் பொருளில் வந்தது. ஏத்தினால் என்ற சொல்லுக்கு முன் சரியையாளர் என்ற சொல் தொக்கி நிற்பதை வருவித்துப் பொருளுரைக்கப்பட்டது. இது சொல் லெச்சம். நான்காவது அடியிற் கூறப்படுகிற சிவலோகம் எய்து தற்கு உரியவர் சரியையாளர். ஆதலின் தொக்கி நிற்கும் சொல் சரியையாளர் எனக் கூறப்பட்டது. நின்று பரவி - நிலையாக எப்பொழுதும் புகழ்ந்து. காண்மின் - மின் - முன்னிலை ஏவற்பன்மை விகுதி. காணுதலின் பயன் அவ்வாறு செய்தல் ஆதலின் காணுதல் என்பது அறிந்து, அறிந்தவாறே செய்யுங் கள் என்ற பொருள் தந்து நின்றது. சரியையாளர் - தோன்றா எழுவாய், இடையிலார் - பயனிலை. நீங்கள் - தோன்றா எழு வாய், காண்மின் - பயனிலை. இந்தத் தேவாரப்பாட்டிலே சரியையாளர்களாகிய அடியார்கள் திருப்பணிகள் செய்து வழிபட்டு அருள் விளங்கப் பெற்றிருக்கும் திருக்கோயிலைச் சீவன்முத்தர்கள் தாங்கள் அடையப்பெற்ற அத்துவித நிலையி னின்று வழுவாதிருத்தற்குத் தொழல்வேண்டும் என்பது குறிப்பாகக் கூறப்பட்டது.

## ௪ - ௧. திருச்சிவபுரம் – திருவிராகம். பண் – நட்டபாடை.

அ௬. நறைமலி தருமள றேடுமுகை
நகுமலர் புகைமிகு வளரொளி

நிறைபுனல் கொடுதனை நினைவொடு
நியதமும் வழிபடு மடியவர்

குறைவில பதமணை தரவருள்
குணமுடை யிறையுறை வனபதி

சிறைபுன லமர்சிவ புரமது
நினைபவர் செயமக டலைவரே.

(ப-ரை.) நறைமலிதரும் அளறு (உம்) - மணம் நிறைந்த சந்தனக்குழம்பும்; முகை நகுமலர் (உம்) - அரும்புகளாய் விளங்குகின்ற பூக்களும்; மிகுபுகை (உம்) - மணம்மிக்க தூபமும்; வளர்ஒளி (உம்)-நன்கு எரிகின்ற தீபமும்; நிறைபுனல் (உம்) கொடு-நிறைவாயுள்ள நீரும் ஆகிய இவைகளைத் துணைகளாகக் கையிற்கொண்டு (அருச்சித்தும் தூபதீபங்கள் காட்டியும்); தனை நியதமும் நினைவொடும் வழிபடும் அடியவர்-தன்னை எந்நாளும் தவறாது தான் ஆண்டான் நாங்கள் அடிமைகள் என்னும் முறைமையில் தங்களுக்குத் தான் சலிப்பின்றிச் செய்துவரும் பேருதவிகளை மனத்தினால் நினைந்தும் வாக்கினால் மந்திரங்கள் சொல்லி வாழ்த்தியும் வணங்குகின்ற கிரியையாளர்களாகிய அடியார்கள்; குறைவு இல பதம் அணை தர - தங்கள் அறிவுநிலைக்குத் தக்க அளவில் குறையாத சிவசாமிப்பிய பத முத்தியை அடையும்படி; அருள் குணம் உடை இறை - அருள் செய்கின்ற பேரிரக்கக் குணமுடைய மகேச மூர்த்தியாகிய சிவபெருமான்; உறைவன பதி-உறையுமிடமாகக் கொண்டு வீற்றிருக்கின்ற அழகிய தலம் ஆகிய; சிறைபுனல் அமர் சிவபுரமது - அணைகளாலே தடுக்கப்பட்ட நீரையுடைய திருச்சிவபுரம் என்ற தலத்திலுள்ள கோயிலை; நினைபவர் - நினைந்து உருகிவழிபாடு செய்கின்ற சிவன் முத்தர்களாகிய அடியார்கள்; செயமகள் தலைவர்- வெற்றி இலக்குமிக்

தலைவர் ஆவார், அதாவது தாங்கள் நினைக்கிறபடி தாங்கள் அடையப் பெற்ற அத்துவித நிலையில் உறைத்து நிற்பர். 3

(வி-ரை.) முகைநகுமலர் - "மொட்டறுமலர் பறித்து இறைஞ்சி" என்றார் மாணிக்கவாசகப் பெருமானாரும். மிகு புகை வளர்ஒளி - புகை என்றசொல் புகையை உடைய தூபத்தையும், ஒளியென்ற சொல் ஒளியையுடைய தீபத்தையும் ஆகுபெயர்களாய்க் குறிக்கின்றன. நியதம் - இன்றியமை யாமை; அதாவது எந்நாளுந்தவறாது. நினைவொடு வழிபடும் அடியவர் - வழிபாடு செய்தலின்பயன் வழிபடுகிற மக்கள் இறைவனை மேலும் மேலும் நெருங்கி அணைதல் ஆகலின், அப்பயன் ஆண்டான் அடிமைத்தொடர்பை நினையாமல் உண்டாகாது ஆதலின் நினைவொடும் வழிபடும் அடியவர் என்றார். மனம் வாக்குக்காயம் மூன்றினாலும் உருக்கமுடன் செய்யப்படுகிற வழிபாடே பயனைத்தரும். "மனமது நினைய வாக்கு வழுத்தமந் திரங்கள் சொல்ல - இனமலர் கையிற் கொண்டங் கிச்சித்த தெய்வம் போற்றி" என்றார் சிவஞான சித்தியார் நூலுடையாரும். குறைவுஇலபதம் அணைதர - பதம் என்ற சொல் இங்கே பதமுத்தியைக் குறிக்கிறது; அதாவது கிரியையாளர்கள் அடையப் பெறும் சிவசாமீப் பிய பதமுத்தி. வனபதி-வனம்-சோலை என்ற பொருளினும் வரும். சோலைகளாற்சூழப்பட்ட தலம் எனினும் பொருந்தும். சிவபுரமது - அது பகுதிப்பொருள் விகுதி. செயமகள்- வெற்றிஇலக்குமி; என்பது சிவத்தினது கிரியாசத்தி. நினைந்த கருமத்தை நினைந்தவாறே முடிக்க ஆற்றலுடையவர் ஆவர். சிவன் முத்தர்களுக்குக்கூறுமிடத்து அவர்கள் தாங்கள் நினைக் கிறபடி தாங்கள் அடையப்பெற்ற அத்துவித நிலையினின்று சிறிதும் வழுவாது உறைத்து நிற்பர் என்று பொருள்படும்.

இந்தப் பாட்டில் முன் இரண்டு அடிகளும் கிரியையாளர் களாகிய அடியார்கள் மகேசுர மூர்த்தியாகிய சிவபெரு மானுக்குச் செய்யும் வழிபாட்டின் சிறப்பைக் கூறுகின்றன. இறை என்ற சொல்வரை மூன்றாவது அடி அந்த அடியார் களுக்கு மகேசுரமூர்த்தி சாமிப்பிய பதமுத்தியை அளிப்பர் என்று கூறுகிறது. எஞ்சியபாகம் சிவபெருமான் எழுந்தருளி யிருக்கின்ற திருச்சிவபுரக் கோயிலை வழிபடுகிற சீவன் முத்தர் கள் தாங்கள் அடையப்பெற்ற அத்துவிதநிலையில் உறைந்து நிற்பர் என்றுகூறுகின்றது. நினைபவர் - எழுவாய், தலைவர் - பயனிலை.

ச-கூ. திருச்சிவபுரம். திருவிராகம. பண்-நட்டபாடை.

அஎ. சினமலி யறுபகை மிகுபொறி
சிதைதரு வகைவளி நிறுவிய
மனனுணர் வொடுமலர் மிசையெழு
தருபொரு ணியதமு முணர்பவர்
தனதெழி லுருவது கொடுவடை
தகுபர னுறைவது நகர்மதிள்
கனமரு வியசிவ புரநினை
பவர்கலை மகடர நிகழ்வரே.

(ப-ரை) சினம்மலி அறுபகை- மலகுணக்கூறாய் நிறைந் திருக்கிற காமம், குரோதம், மோகம், லோபம், மதம், மாற்சரி யம் என்னும் ஆறுபகைகளும்; மிகுபொறி சிதை தருவகை- மிகுந்து விளங்குகின்ற மெய்வாய் கண் மூக்குச் செவி என்ற ஐந்து ஞானேந்திரியங்கள், அந்தக்கரணங்கள், கர்மேந்திரியங் கள், பூதங்கள், தன்மாத்திரைகளுடன் புறவிடயப் பொருள் களிற் செல்லாது அடங்கும் வண்ணம்; வளிநிறுவிய மனன்

உணர்வொடு - மூச்சு அடக்கி (பிராணாயாமம்) உள்ளே கும்பகம் செய்து, அதனால் தம்வயப்படுத்திய உள்ளத்தில் எழுகின்ற உணர்வுடன்; மலர்மிசை எழுதரு பொருள் - உள்ளமாகிய தாமரை மலரில் விளங்கி எழுந்தருளி யிருக்கின்ற சதாசிவமூர்த்தியாகிய சிவபெருமானை; நியதமும் உணர்பவர் - எந்நாளிலும் தப்பாது நினைந்து உணர்கின்ற அடியார்கள்; அடைதரு தனது எழில் உருவது கொடுபரன் - அடையத்தருந் தனது அழகான உருவத்தைக் கொடுக்கின்ற சதாசிவமூர்த்தியாகிய சிவபெருமான்; உறைவது - வீற்றிருக்கின்ற தாகிய; கனம் மருவிய மதிள் - மேகங்கள் தங்குகின்ற மதில்களாற் சூழப்பெற்ற; நகர் சிவபுரம் - நகரமென்கிற திருச்சிவபுரத்திலுள்ள திருக்கோயிலை; நினைபவர் - மனத்தினாலே நினைந்து வாக்கினாலே துதித்து வழிபடுகிற சீவன் முத்தர்களாகிய அடியார்கள்; கலைமகள் தரநிகழ்வார் - வாணி (சரசுவதி) மெய்யறிவு கொடுக்கப்பெற்று அவ்வறிவோடு உலகில்திகழ்வார். அதாவது, தாங்கள் அடையப்பெற்ற அத்துவித நிலையில் உறைத்து நிற்பர். 4

(வி-ரை.) சினம்மலி அறுபகை மிகுபொறி சிதைதரு வகை - இதற்கு மேலே 56-வது பாட்டில் 'பகை அறும்வகை நினையா' என்பதற்கும், 51-வது பாட்டில் 'புலன்களைப் போக நீக்கிப் புந்தியை ஒடுங்கவைத்து' என்பதற்கும் எழுதிய விளக்க உரைகளைக் கொள்க. சிதைதருதல் - தரு-துணை வினை, சிதைதல் - கெடுதல், இங்கே அடங்குதல் என்ற பொருளில் வந்தது. சிதைதரும்வகை - அடங்கும் வண்ணம். ஆறுபகைகளில் குரோதம் மாற்சரியம் என்ற இரண்டு குணங்களில் சினம் மலிந்திருத்தல் வெளிப்படை. ஏனைய நான்கு பகைக் குணங்களிலும் பிறர் சம்பந்தப்படும்

பொழுது அவர்கள்மேல் ஒருவனுக்குச் சினம் உண்டாதலை அநுபவத்தில் அறியலாம். ஆறுபகைகளிலும் எதிர்ப்பு (Reaction) இருக்கின்றது. ஒருவன் புறத்தே செல்லுகின்ற சினத்தையும், தன்னுள்ளே எழுகின்ற எதிர்ப்பையும் இல்லாமற் செய்து அமைதி அடைந்தாலன்றி மெய்யறிவடைய மாட்டான் ஆதலின், 'சினமலியறுபகை மிகுபொறி சிதைதரு வகை' என்றார் -வளிநிறுவிய மனன் உணர்வொடு - மூச்சு அடக்கம் (பிராணாயாமம்) மனம் அடங்குதற்கு வழியாயிருத்தலின் வளிநிறுவிய மனனுணர்வொடு என்றார். "மன்மன மெங்குண்டு வாயுவுமங்குண்டு - மன்மனமெங்கில்லை வாயுவு மங்கில்லை" என்றார் திருமூலர் (திருமந்திரம்-620-வது பாட்டு.) வளிநிறுவிய-மூச்சை உள்ளே நிறுத்திக் கும்பகம் செய்த; 'வளிநிறுவிய - மனன் உணர்வொடு - சஞ்சலப்பட்டு அங்கு மிங்கும் பலவாறு யோடாது நிறுத்தப்பட்ட மனத்தில், காற்றால் அசைக்கப்படாத குளநீரில் அடியிலுள்ள பொருள் தெரிதல்போல, இறைவனது திருவருள் விளக்கம் உண்டாகும் ஆதலின் 'வளிநிறுவிய மனனுணர்வொடும்' என்றார். அத்தகைய மனம் சேராத வழிபாடு பயன்தராது என்பது கருத்து. மலர்மிசை எழுதரு பொருள்-மேலே கூறப்பட்டபடி பொறி முதலியன ஆன்மாவி லொடுங்கி நிற்ப, ஆன்மாச்சிவத்தில் ஒடுங்கி நிற்ப, அந்த ஆன்மாவில் வயப்பட்டு அடங்கிச் சிவ கரணமாய்த் திகழ்கின்ற மன்மனம் இங்கே தாமரைமலர் எனப்பட்டது. மேலே 57-வது பாட்டில் "ஐம்புலனுமடக்கி ஞானப், புகலுடையோர் தம்முள்ளப் புண்டரிகத்துள்ளிருக்கும் புராணர்" என்று மனமாகிய தாமரைமலர் இறைவனுடைய உறைவிடமாகக் கூறியிருத்தல் காண்க. திருவள்ளுவநாயனார் "மலர்மிசையேகினான்" என்றார். எழுதரு பொருள் - எப்பொழுது மிருக்கின்ற பொருள், மனத்தை

யடக்கி நிறுத்தலினால் அருளொளியாய் விளங்குகின்ற பொருள். நியதமும் உணர்பவர் - இடைவிடாது நாடோறும் இந்தப்பழக்கம் செய்து வருதலினாலேதான் அடங்கிய மனத்தின்கண் விடயம் தாக்காது மேலும் மேலும் அருள் உணர்வு உண்டாகும் என்பார், நியதமும் உணர்பவர் என்றார். இந்த உணர்வு வெளியே கூறப்படும் தன்மையாதலின்றி உள்ளே உணரப்படுவது ஆதலின், உணர்வார் என்றார். மேலே 86-வது பாட்டில் அகமும்புறமும் வழிபடும் கிரியையாளரை வழிபடும் அடியவர் என்றும், இப்பாட்டில் அகவழிபாடு செய்யும் யோகிகளை உணர்பவர் என்றும் கூறியிருத்தல் நோக்கத்தக்கது. தனது எழில் உருவது கொடுபரன் - இவ்வாறு உரைநடை செய்து-பொருள்கொள்க. உரு + அது-உருவது. அது பகுதிப் பொருள் விகுதி. உருவது கொடு என்றதனால் சிவசாரூப மாகிய பதமுத்தி குறிக்கப்பட்டது. பரன் - மேலானவன், அருளல் ஆகிய தொழிலைச் செய்யும் மேலான சதாசிவ மூர்த்தி யாதலின் 'பரன்' என்றார். உறைவதுநகர் - உறைவது - உறைதல், து-தொழிற் பெயர் விகுதி. உறைதல் செய்யும் அதாவது உறைகின்ற நகர். சிவபுரம் நினைபவர் - சிவபுரம் என்பது திருச்சிவ புரத்திலுள்ள கோயிலைக்குறிக்கிறது. கோயிலிலுள்ள மூர்த்திபோலக் கோயிலும் வழிபடுமிடமாம்; 'ஆலயந்தானு மரனெனத் தொழுமே' என்றாராகலின். கலைமகள் தர நிகழ்வர் - தர என்ற சொல்லுக்கு முன் அவாய்நிலையால் தொக்குநிற்கிற மெய் யறிவு என்ற சொற்றொடர் வருவித்துப் பொருளுரைக்கப்பட்டது. நிகழ்வர் - இறைவனை அறியும் நல்லறிவோடு கூடி விளங்குவர். கலைமகள் ஆன்மாக்களுக்கு மெய்யறிவை விளங்கச் செய்யும் சிவத்தினது ஞானசத்தி யாதலின், 'கலைமகள் தர' என்றார். இந்தப் பாட்டின் முதல்

இரண்டு அடிகளும் யோகிகள் செய்கிற வழிபாடு கூறுகின்றன. மூன்றாவது அடி பரன் என்ற சொல்வரை, அத்தகைய வழிபாடு செய்யும் யோகிகளுக்குச் சாரூப பத முத்தியைக் கொடுக்கிற பரன் என்று சதாசிவ மூர்த்தியினுடைய சிறப்புக் கூறுகின்றது. எஞ்சிய பாகம் அத்தகைய சதாசிவமூர்த்தி திருக்கோயில்கொண் டெழுந்தருளி யிருக்கிற சிவபுரம் என்ற தலத்தை நினைந்து வழிபடுகிற சீவன் முத்தர்களாகிய அடியார்கள் அவனை அறியவும் மெய்யறிவு நிலைக்கப்பெற்றுத் தாங்கள் அடையப்பெற்ற அத்துவித நிலையில் உறைத்து நிற்பார் என்று அந்த வழிபாட்டின் பயன் கூறுகின்றது. நினைபவர் - எழுவாய், நிகழ்வர் - பயனிலை.

ச - க. திருச்சிவபுரம். திருவிராகம். பண் – நட்டபாடை.

அஅ. சுருதிகள் பல்நல முதல்கலை
துகளறு வகைபயில் வொடுமிகு

உருவிய லுலகவை புகழ்தர
வழியொழு குமெயுறு பொறியொழி

யருதவ முயல்பவர் தனதடி
யடைவகை நினையர னுறைபதி

திருவளர் சிவபுர நினைபவர்
திகழ்குல னிலனிடை நிகழுமே.

(பொ.) சுருதிகள் முதல்பல நலகலை- வேதாகமங்கள் முதலிய பல அருட் கலைகளை; துகளறுவகைமிகு பயில்வொடு - ஐயம் திரிபுகளாகிய குற்றங்களில்லாமல் ஓதிக் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து தேர்ச்சி மிக்க அறிவுப் பழக்கத்தால்; உரு இயல் உலகு அவைபுகழ்தர - ஆண் பெண்

அலி என்னும் உருவங்கள் பொருந்திய உலகிலுள்ள அறிஞர் கூட்டம் புகழும்படியாக ; மெய் உறு பொறிஒழி (உம்)- உடலின்கண்ணுள்ள ஞானேந்திரியங்கள், கன்மேந்திரியங்கள், அந்தக்கரணங்கள் முதலானவைகளை உலகவிடயங்களிலே செல்லாதவண்ணம் நீக்கியும்; வழிபொழுகு (உம்)- இறைவனையே நோக்கி அவனது அருளின்வழி யல்லது ஒன்றினையும் செய்யாது ஒழுகியும்; அருதவம் முயல்பவர் - செய்தற்கு அரிய பெருந் தவமாகிய ஞானநிட்டையைச் செய்கிற ஞானிகள் ; தனது அடி அடைவகை நினை அரன் - தனது திருவடிகளை அணைந்து சாயுச்சியமாகிய பேரின்பம் பெறும்படி தமது திருவுள்ளத்தில் நினைக்கின்ற சிவபெருமான் ; உறைபதி - உறையுமிடமாகக் கொண்டு வீற்றிருக்கிற தலமாகிய ; திருவளர் சிவபுரம் நினைபவர் திகழ்புலன் - அருள் பெருகுகின்ற திருச்சிவபுரத்திலுள்ள திருக்கோயிலை மனத்தினலே நினைந்தும், வாயினலே துதித்தும், உடலினலே வணங்கியும் வழிபடுகிற அருள் விளங்கப்பெற்ற சீவன் முத்தர்களாகிய அடியார்கள் கூட்டம் ; நிலனிடை நிகழும் - நிலவுலகில் தாங்கள் அடையப்பெற்ற அத்துவித நிலையில் உறைத்து நின்று சிறப்போடு விளங்கி வாழ்வார்கள். 5

(வி-ரை,) இந்தப் பாட்டில் முதல் மூன்று அடிகளும் ஞானிகள் இறைவனை வழிபாடு செய்கிறவாறும், அவ்வழிபாட்டினுற் பெறப்படுவதாகிய சாயுச்சிய முத்தியும் கூறுகின்றன ; நான்காவது அடி திருச்சிவபுரத் திருக்கோயிலை வழிபடுகிற சீவன் முத்தர்களாகிய அடியார்களுடைய சிறப்புக் கூறுகின்றது. சுருதிகள் முதல் பல கலகலை - சுருதிகள் என்ற சொல் கேட்கப்படுகிற அறிவு நூல்களாகிய வேதாகமங்

கலைகளையும் அவற்றின் வழித்தாயுள்ள அருள் நூல்களையுங் குறிக்கின்றன. அருள் இலங்குகலை என்பார் நலகலை என்றார். நலக்கலை - பேரின்ப நலனைத்தரும் கலை. தூகள் அறுவகை மிகுபயில்வொடு - தூகள் - குற்றம்; ஐயம் திரிபுகளாகிய குற்றம்; பயில்வு என்பது நூல்களை ஓதியும், ஓதின பொருளை உணர்ந்தார்பாற் கேட்டும், கேட்ட பொருளைச் சிந்தித்தும், சிந்தித்த பொருளை நிட்டைகூடித் தெளிந்தும் பலகாற் பழகு தல்; பலகாற் பழகித் தேர்ச்சி மிகுதலால் மிகுபயில்வொடு என்றார். வேதம், பலதர அறிவு நிலை மாந்தருக்கு ஏற்றவாறு பலபடக் கூறும் பொருள்களினாலும், ஆகமங்கள் சரியை முதலிய நான்கு பாதங்களின் வேற்றுமைபற்றிக் கூறும் வழிபாட்டு வேற்றுமைகளினாலும் மலையாது வேதாகமங்களின் ஒருமைப்பொருள் உணர்வார் என்பார் தூகளறுவகை மிகு பயில்வொடு என்றார். மிகுஉரு இயல் உலகு அவை புகழ்தர- உரு என்பது ஆண் பெண் அலி உருவங்களைக் குறிக்கின்றது. "ஒருவனோ டொருத்தி யொன்றென் றுரைத்திடும் உலகம்" என்று சிவஞானசித்தியார் முதலாவது சூத்திரம் முதலாவது பாட்டுக் கூறுதல் காண்க. அவை - கூட்டம். அறிஞர் கூட்டம்; உலகு அவை - உலகிலுள்ள கற்றறிந்தார் கூட்டம்; புகழ்தர—புகழ; கற்றறிந்தார் அல்லாதார்களுடைய புகழ்ச்சி யும் இகழ்ச்சியும் நற்பயன்தரா ஆதலின் உலகவை புகழ்தர என்றார். 'உலகமென்பதுயர்ந்தோர் மாட்டே' என்பது பண் டைத்தமிழ் மக்களின் வழக்கு. வழி ஒழுகு (உம்)-ஒழுகு என் னும் முதனிலைவினை ஒழுகி என்னும் வினையெச்சப் பொருளில் வந்தது. மெய்உறு பொறி ஒழி (உம்) - மெய் உறுபொறி என்றதனால் ஞானேந்திரியங்கள் மாத்திரமன்றிக் கன்மேந்திரி யங்கள், தன்மாத்திரைகள், ஐம்பூதங்கள், அந்தக்கரணங்கள்,

உள்ளந்தக்கரணங்கள் எல்லாம் கொள்ளப்படும். அவை கள் ஆன்மாவை உலகபோக விடயங்களிற் செலுத்தி அவிச்சையைப் பயப்பித்து இறைவனது திருவடிக்கே மறக்கச் செய்யும் ஆதலின் பொறி ஒழி என்றார் - ஒழித்தல்- பொறிகளை நீக்குதல், அல்லாமல் கெடுத்தல் அன்று; கருவி கரணங்களை விடயங்களிடம் செல்லாது தடுத்துச் சிவகரணங் களாகும்படி செய்தல். ஒழி என்ற முதனிலைவினை ஒழித்து என்னும் வினையெச்சப் பொருளில் வந்தது. அருதவம் முயல் பவர் - இந்தத் தவம் ஞானத்தில் ஞானிகள் செய்யும் தவம் ஆதலின் அருதவம் என்றார். எதுகைநோக்கி 'அருந்தவம்' என்பது 'அருதவம்' எனக்குறைந்தது. அருமை என்ற அடைமொழி ஏனையோர்க்கு அது கூடாமையைக் குறிக்கிறது. தனது அடி அடைவகை நினை அரன் - 'நினை' என்றது இங்கே இறைவன், கரணத்தானன்றிச் சங்கற்பத்தான் மாத்தி ரம் செய்கின்ற அருளல் ஆகிய தொழிலைக் குறிக்கிறது. வளர் திருசிவபுரம் திகழ்குலன் - சிவபுரம் என்றது திருச்சிவபுரம் என்ற தலத்திலுள்ள திருக்கோயிலைக் குறிக்கிறது திருக் கோயில் இறைவனது அருள் விளங்கும் இடம் ஆதலின் (Centre of Spiritual forces). திருக்கோயிலில் செய்யப் படுகிற வழிபாட்டினால் அருள் மேலும் மேலும் பெருகும் என்பார் திருவளர் என்றார். குலன் என்பது குலம் என்பதன் போலிச்சொல், கூட்டம். திகழ் குலன் - அருள் ஒளி விளக் கத்தோடு கூடிய அடியார் கூட்டம், ஆதலின் திகழ்குலன் என்றார். நிலனிடை நிகழும் - நிகழ்தல் - அருள் ஒளி விளங்கு தல் - அடியார் கூட்டத்தால் இறைவனது அருள் விளக்கம் உலகில் நிலவி நற்பயன் செய்யும் என்பார் நிலனிடை நிகழும் என்றார். "தேசினலெத்திசையும் விளக்கினார்" என்று அடி

யார் கூட்டத்தைச் சேக்கிழார் அடிகள் பெரியபுராணத்திற் சிறப்பித்துக் கூறியருளினர். இந்தப் பாட்டில் துகளறுவகை என்பதை மிகுபயில்வொடு என்பதுடன் இயைத்தும், உலகவை புகழ்தர வழியொழுகியும், மெய்யுறு பொறியொழித்தும், அருதவ முயல்பவர் என இயைத்தும், அடைவகை நினை அரன் என இயைத்தும் முடிவுசெய்து பொருள் கொள்க. ஒழுகு, ஒழி என்ற முதனிலை வினைகள் ஒழுகியும் ஒழித்தும் என வினையெச்சப் பொருள்பட வந்தன, 'வரிப்புனை பந்து' என்பது வரிந்து புனைந்த பந்து என்ற பொருளில் வருதல் போல்.

## நா - ரு. தனித்திருக்குறுந்தொகை.

அக. தெள்ளத் தேறித் தெளிந்துதித்திப்பதோர்
உள்ளத் தேற லமுத வொளிவெளி
கள்ளத் தேன்கடி யேன்கவ லைக்கடல்
வெள்ளத் தேனுக்கெவ் வாறு விளைந்ததே.

(ப-ரை) தெள்ள - ஞானாசிரியன்பால் மலபரிபாக மடைந்த ஒருவர் கேட்டறிந்த அருளறிவில் ஒரோவழி அந்தக்கரணங்களோடு கூடுதலினாலுண்டாவதாகிய கருவியறிவுக் கலப்பை முதற்கண்பிரித்து நீக்கியதனாலும்; தேறி - கேட்ட ஞானப்பொருளை அவர் சிந்தித்தபொழுது அடைந்த அருள் அறிவிலும் ஒரோவழி அந்தக்கரணங்களோடு கூடின கருவியறிவுக் கலப்பு சிறிது இருந்ததனை நீக்கியதனாலும்; தெளிந்து - அவ்வாறு கேட்டலறிவினாலும், சிந்தித்தலறிவினாலும், கருவியறிவுக் கலப்பை முற்றிலும் நீக்கிக் கிடைக்கப் பெற்ற தூயவருளறிவாகிய தெளிவறிவினாலும் (இறை

னுடன் அத்துவிதமாய்க் கலந்து அவனது வியாபகவறிவில் தாம் அடங்கியிருத்தலையும், தமது வியாபகவறிவில் உலகம் அடங்கியிருத்தலையும் தெளிவாய் உணர்ந்து); உள்ளம் தித்திப்பது ஓர்தேறல் அமுதம்- சிவகரணமாய் விளங்கிய அவரது தூயவுள்ளத்தில் தேனும் அமுதமும்போலத் தித்திக்கப் பெறும் ஒப்பற்ற பேரின்ப உணர்வுக்கு ஏதுவாகிய; வெளி ஒளி - சிதாகாசத்தில் விளங்குகின்ற பேரறிவு விளக்கமானது; கள்ளத்தேன் - (பொய்ச்சமயநெறியாகிய சமண சமயத்திலிருந்த காலத்தில்) வஞ்சக மனமுடையவனும்; கடியேன் - இறைவனைப்பற்றி ஐயமுடையவனும்;கவலைக்கடல் வெள்ளத் தேனுக்கு- கடல் வெள்ளம்போல் மனக்கவலை உடையவனும் விளங்கின எனக்கு; எவ்வாறு விளைந்தது - (அவனால் ஆண்டருளப் பெற்றபின்) எப்படி உண்டாயிற்று! (இறைவனது திருவருளால் உண்டாயிற்று என்றபடி) 6

(வி-ரை) இந்தத் தேவாரப்பாட்டில் திருநாவுக்கரசு அடிகள் உலக முய்யும்பொருட்டுத் தமது சுவாநுபூதி நிலையிலுணர்ந்த பேரின்ப வுணர்வைப்பற்றிக் கூறுகின்றார். இத்தகைய நிறை மறைமொழிகளால் அடிகளுடைய சுவாநுபூதிப் பேரின்ப வாழ்வு இன்னது என ஒரு சிறிது நம் போன்றவர்களா லறியப்படுகிறது. மேலே கூறப்பட்ட, 'அருளுருநிலை' 'அறியும் நெறி' 'உயிர் விளக்கம்' தேவாரப் பாட்டுக்களில் வீட்டு நெறியிலுள்ள மூன்று அறிவு நிலைகள் கூறப்பட்டன. அணைந்தோர் தன்மைக்குச் சேர்ந்த இந்தப் பாட்டில் நான்கு நிலைகள் கூறப்படுகின்றன. 'தெள்ள' என்பதனால் ஞானத்தில் சரியையாகிய கேட்டல் அறிவு நிலையும், 'தேறி' என்பதனால் ஞானத்தில் கிரியையாகிய சிந்தித்தலறிவு நிலையும், 'தெளிந்து'

என்பதனால் ஞானத்தில் யோகம் ஆகிய தெளிவறிவுநிலையும், 'தித்திப்பதோர் உள்ளத்தேறலமுத' மென்பதனால் பேரின்ப முணரப்பெறும் ஞானத்தில் ஞானமாகிய நிட்டையறிவுநிலையும் கூறப்படுகின்றன. ஞானாசிரியன் பாற் கேட்டலறிவினால் சிவஞானபோதம் 8வது சூத்திரத்திற் கூறப்பட்ட சிவரூப விளக்கமும், அதனோடு உடனிகழும் ஆன்ம தரிசனமும், சிந்தித்த லறிவினால் 9-வது சூத்திரத்திற் கூறப்பட்ட சிவதரிசனமும், அதனோடு உடனிகழும் ஆன்மசுத்தியும், தெளிதலறிவினால் 10-வது சூத்திரத்திற் கூறப்பட்ட சிவயோகமும், நிட்டை அறிவினால் 11வது சூத்திரத்திற் கூறப்பட்ட சிவபோகமும் உண்டாகின்றன. இந்த நான்கு அறிவு நிலைகளும் முறையே ஒன்றன் பின் ஒன்று எதுவும் பயனுமாயுள்ளன. ஒவ்வொரு நிலையிலும் அருட்சத்தி பதிதல் மிகுந்து மிகுந்து நான்காவது நிலையில் நிறைவடைகின்றது. இந்த நான்காவது நிலையில் ஆன்மாவினுடைய உள்ளம் சிவகரணமாய் மாறிச் சிவம் எனப் படுகின்றது: "சிந்தைய தென்னச் சிவமென வேறில்லை" என்றார் திருமூலர் (2853-வது திருமந்திரம்). இந்த நிலையில் ஆன்மாவானவன் இறைவனுடைய வியாபகவறிவுடன் இரண்டறக் கலந்து அவனுடைய எண்குணங்களும் பதியப்பெற்று யாதொரு குறைவு மில்லாதவனாயும் பேரின்பப் பெருவாழ்வுடையவனாயுமுள்ள சீவன் முத்தனாய்த் திகழ்வன். சீவன் முத்தனுக்கு எடுத்தஉடல் நீங்குங்காலம்வரை உடலூழாய்க் கழிய இருக்கிற பிராரத்த வினைமாத்திரம் உண்டு. உடல் நீங்கவும் அவன் நித்தியமான பரமுத்தி அடைவன். தெள்ள - முறத்தில் வைத்துத் தூலப்பொருள்களைத்தெள்ளிவேண்டாத

பொருள்களிலிருந்து வேண்டிய பொருள்களைப் பிரித்து நீக்குதல்போல், உள்ளத்தில்வைத்து அதில்விளங்கும்கருவியறிவை அருளறிவிலிருந்து பிரித்து நீக்குதல் (Sifting). அதாவது ஆன்மாக் கருவி கரணங்களோடு சேர்ந்து அறிதலை முயன்று நீக்கி அருளறிவுடன் சேர்ந்திருத்தல். உலகநெறியில் முற்றிலும் கருவி கரணங்கள் வழியில் அறிந்து வந்த ஆன்மா, வீட்டுநெறியில் அவைகளைவிட்டு அருளைச்சேர்ந்து அறியும் பொழுது பழைய வாசனையினால் கேட்டலறிவில் வந்து சேர்கிற கருவி கரணங்களை நீக்கல்வேண்டும் என்பது கூறப்பட்டது. தேறி - தேற என்பது தேறி எனத்திரிந்து நின்றது. சிந்தித்தலினால் - இன்னும் ஆன்மாக்கருவி கரணங்களுடன் சேர்ந்து அறிதலை நீக்குதலால் (Re-Sifting). தெளிந்து - தெளிய என்பது தெளிந்து எனத் திரிந்து நின்றது. தெளிவறிவில் ஆன்மாச்சிறிதும் கருவி கரணங்களுடன் சேர்ந்தறிதலின்றி யிருத்தலினாலே உள்ளம் பசுகரணம் நீங்கிச் சிவகரணமாய் விடுகின்றது. "அறியாமை யறிவகற்றி யறிவினுள்ளே யறிவுதனை யருளினா லறியாதே யறிந்து - குறியாதே குறித்தந்தக் கரணங்க ளோடுங் கூடாதே வாடாதே குழைந்திருப்பை யாயின்" என்று தெளிவறிவைப் பற்றிச் சிவஞான சித்தியார் கூறுதல் காண்க. தித்திப்பதோர் உள்ளம் தேறல் அமுதம் வெளி ஒளி - தெள்ள, தேற, தெளிய என்ற மூன்று சொற்களும் காரணப் பொருளில் வந்தன. தெள்ளுதலினாலும் தேறுதலினாலும், தெளிதலினாலும், தித்திப்பது ஓர் உள்ளத்தேறலமுதம் எனப் பொருள் செய்க. தித்திப்பது - தொழிற்பெயர். உள்ளத் தேறல் அமுதம் - பசுகரணம் நீங்கிச் சிவமாய்த் திகழ்கின்ற உள்ளத்தில் உணரப்படும் பேரின்பம். தேறல் அமுதம் - தேறலும் அமுதமும் என உம்மைத்

தொகை. உள்ளம் + தேறல் உள்ளத்தேறல்; இதில் மகரஈறு கெடுதலாலும் நிலைமொழியினீற்றில் தகரமெய் தோன்றுதலாலும் உள்ளத் தேறல் என ஆயின. பேரின்பத்தை உலகவநுபவத்தில் மக்களுக்குத் தெரிவிக்கும் பொருட்டுத் தேறலும் அமுதமும் என உருவகஞ் செய்தார். தேறலும் அமுதமும்போ லுள்ள பேரின்பம். பேரின்பமானது இறைவனுடைய திருவடிகளை யடைந்தன்றிப் பெறப்படாததால் 'ஓர் உள்ளத் தேறல் அமுதம்' என்றார். வெளி-முப்பத்தாறு தத்துவங்களையும் கடந்து நிற்கிற ஞானாகாசம். இது பரவெளி, பெருவெளி, தூவெளி, சிற்பரவியோமம், திருச்சிற்றம்பலம், சிதாகாசம், சிதம்பரம் என்ற பெயர்களாலும் கூறப்படுகின்றது. அந்த வெளியில் விளங்குகிற பராசத்தி ஒளியை வெளி ஒளி என்றார். இந்த ஒளியே பேரறிவாய் விளங்குவது; இந்த ஒளியே தத்துவங்களில் ஏகதேசப்பட்டு உலக அறிவாய் விளங்குவது. எங்கும் வியாபகமா யிருக்கிற இந்தப் பேரொளியானது ஆன்மாவுக்கு மலத் தொடக்கினால் முன் விளங்காதிருந்தது; படலம் நீங்கிய கண்ணுக்குக் கதிரவனொளி விளங்குதல் போல, மலம்நீங்கின ஆன்மாவுக்கு அப்பேரொளி வியாபகமாய் விளங்குகின்றது. வெளி ஒளி - வெளியின்கண் விளங்கும் ஒளி எனஏழாம் வேற்றுமைத் தொகை. ஒளிக்கு இருப்பிடம் வெளியாதலின் ஒளிவெளி என்பது வெளியொளியாக மாற்றப்பட்டது. இந்த வெளியொளியே மலநீக்கத்துக்கும், அருள் விளக்கத்துக்கும், ஆனந்த வெள்ளத்துக்கும் ஏதுவாயிருத்தலின், 'தித்திப்பதோர் உள்ளத் தேறலமுத வெளியொளி' என்றார். தேறலமுதமும் வெளிஒளியும் என உம்மைத் தொகையாகாது என்பது விளைந்ததே என்ற ஒருமை வினைமுற்றால் விளங்கும்.

"அண்டங்க ளேழுங் கடந்தகன் றப்பாலும், உண்டென்ற பேரொளிக் குள்ளா முளவொளி, பண்டுறு நின்ற பராசத்தி யென்னவே, கொண்டவ னன்றிநின் றானெங்கள்கோவே" என்று திருமூலர் பேரொளியாகிய பெரு வெளியையும், அதனில் உள்ளொளியாய் விளங்குகின்ற பராசத்தியையும் கூறியருளினமை காண்க. கள்ளத்தேன் கடியேன் கவலைக் கடல் உள்ளத்தேன் - கள்ளத்தேன், கடியேன், உள்ளத்தேன் மூன்றும் குறிப்புவினையா லணையும் பெயர்கள்- ஏன்- தன்மை ஒருமை விகுதி. கள்ளம் என்பது பொய், வஞ்சனை; வஞ்சக மனமென்பது சமண சமயத்துக்குரிய பொய்நெறி வாழ்க்கை யில் பற்றிநின்ற மனம். இறைவனை நோக்காது உலகை நோக்கி ஒழுகும் வாழ்விலுள்ள வஞ்சனை. கடி என்பது இங்கே ஐயம் என்ற பொருளில் வந்தது. உலக வாழ்வில் இறைவனை ஒருவன் உண்டோ இல்லையோ என்று உள்ளத்தில் ஐயங் கொள்ளுதல். இப்பேர்ப்பட்ட வஞ்சகமும் ஐயமுமுள்ள ஒரு வனது உள்ளத்தில் கவலைகள் நிரம்பி யிருக்கு மாதலின் 'கவலைக்கடல் உள்ளத்தேன்' என்றார். இத்தகைய கவலைகள் நிரம்பிய உள்ளத்தில் சிவம் விளங்கிப் பேரின்பவுணர்வு உண் டாகாது ஆதலின், உள்ளத் தேறலமுதம் ஆகிய வெளி ஒளி எவ்வாறு விளைந்தது என்றார். அடிகள் இறைவனால் ஆட் கொள்ளப்பெற்ற பின் குற்றங்கள் முழுதும் நீங்கப்பெற்ற அவரது தூய உள்ளத்தில், பேரறிவு விளக்கமும் அதனோடு உடனிகழ்கின்ற பேரின்ப வுணர்வும் உண்டாயின என்பது இந்தப் பாட்டினால் நாம் அறியக்கிடக்கும் உண்மையாகும். இம்மை வாழ்விலேயே சிவபெருமானுடைய திருவடி களை அடையப்பெற்றுச் சீவன்முத்த நிலையிலிருந்த அடிகள், தாம்முன்னிருந்த நிலையையும் நினைத்து இப்பாட்டிற்

கூறுகின்றார் ஆதலின், இது சிவன் முத்தரிலக்கணமாக "அணைந் தோர் தன்மை"யின் கீழ் வைக்கப்பட்டது.

நா. - க. திருவாரூர் — திருத்தாண்டகம்.

௧. உன்னுருவிற் சுவையொளியூ றோசை நாற்றத்
துறுப்பினது குறிப்பாகு மைவீர் நுங்கள்
மன்னுருவத் தியற்கைகளால் வைப்பீர்க் கையோ
வையகமே போதாதே யானேல் வானோர்
பொன்னுருவைத் தென்னூர் மன்னு குன்றைப்
புவிக்கெழிலாஞ் சிவக்கொழுந்தைப்
[புகுந்தென் சிந்தை
தன்னுருவைத் தந்தவனை யெந்தை தன்னைத்
தலைப்படுவேன் றுலைப்படுப்பான் றருக்கேன்
[மின்னே.

(பஉரை) *நாற்றம் சுவை ஒளி ஊறு ஓசை உறுப்பு இன் அது குறிப்புஆகும்—நாற்றஞ்சுவை யொளியூறோசை யென் கின்ற உறுப்புக்களாகிய விடயதன்மாத்திரைகளினுடைய குறிப்பின்வழி யொழுகுகின்ற ; உன் உரு ஐவீர் - மனத்தால் நினைக்கப்படும் சூக்குமவுருவமுடைய நாற்றமுதலாகிய ஐந்து சூக்கும தன் மாத்திரைகளே ; நுங்கள் மன் உரு வத்து இயற்கைகளால் வைப்பீர்க்கு-இந்த உலகத்தில் திரோத மலம் வயப்பட்ட உயிர்களை எல்லாம் உங்களுடைய நிலையில் லாத உருவங்களினது இயற்கைவழி ஒழுகும்படி செய்வீராகிய உங்களுக்கு ; வையகமே போதாதே ஐயோ - அவ்வாறு நீங்கள் ஆட்சி செய்தற்கு இந்தப் பெரிய உலகமும் இடம் போதாதிருக்கிறது.ஐயோ!;யானேல்-(நீங்கள் அவ்வாறுஎன்னை யும் ஆட்சி செய்தற்கு)யான் உடன்படுவேனோ என்றால் யான்;*

வானோர்பொன் உருவை-தேவர்கள் வணங்குகிற பொன் போலும் சிவந்த மேனியை உடையவனும்; தென் ஆரூர் மன்னு குன்றை — தென்னாட்டின்கண் திருவாரூரில் நிலையாகத் திருக்கோயில்கொண் டெழுந்தருளி யிருக்கின்ற மலைபோன்ற அளப்பரிய துளக்கில் பெருந்தன்மையையுடையவனும் ; புவிக்கு எழில்ஆம் சிவக்கொழுந்து ஐ-நிலவுலகத்தின்கண் அழகாவுள்ள இன்பநலமாய் விளங்குகின்றவனும்; என் சிந்தை புகுந்து தன் உருவைத் தந்தவனை-எனது உள்ளத்தில் இரண்டறக் கலந்து நின்று தனது அருளுருவத்தின் குணங்களைப் பதியச் செய்தவனும்; எந்தை தன்னை — எனது தந்தையுமாயிருக்கிற சிவபெருமானை ; தலைப்படுவேன் — அவனுடைய திருவடிகளில் அத்துவிதமாய்க் கலந்திருக்கின்றேன்; துலைப்படுப்பான்—என்னை அத்திருவடிகளை விட்டுப் பிரியும்படி நீக்கிச் சேய்மைப் படுத்தும் பொருட்டு ; தருக்கேல்மின் — (முயல்வதாக நினைத்து) செருக்கு அடையாதேயுங்கள். (உங்கள் வலி என்னிடம் சிறிதும் செல்லாது; என்னை விட்டு அகலப் போங்கள் என்றபடி.) 7

(வி—ரை) இந்த நான்காவது பாட்டு அடங்கிய தேவாரப் பதிகம் திருநாவுக்கரசு அடிகளால் அவர் திருப்புகலூரிலிருந்து உழவாரப் பணிவிடை செய்து வந்த காலத்தில் சிவபெருமான் அவரது உலகத் தொடக்கற்ற மேலான நன்னிலைமையை உலகத்தாருக்குத் தெரிவிக்கும் பொருட்டுப் பற்களோடும் பருக்கைக்கற்களோடும் பொன்னும் நவமணியும் பொலிந்திலங்கவும், விண் அரம்பையர்கள் அவர் முன்னே நின்று அழகிய கோலத்துடன் ஆடவும் பாடவும் அருள்

செய்தபொழுது திருவாரூர்ப் புற்றிடங்கொண்ட பெருமானை நோக்கிப் பாடப்பெற்றது. அப்பொழுது மெய்த்தன்மை யுணர்வுடைய அடிகள் தமது சித்த நன்னிலைமை சிறிதும் வேறுபடாது, சிவபெருமான் திருவடிக்கீழ் நினைவகலாமல் உலக மாயப் பவத்தொடக்காம் இருவினைகளையும், அவைகளுக்குத் துணை செய்யும் ஐம்பூதங்கள் அஞ்சு தன்மாத்திரைகள் முதலானவைகளையும் முன்னிலையாக்கித் "திருவாரூர் அம்மானுக் காளாயினேன் உம்மாற் றுடக்குண்ணேன்" என்று பாடியருளினார். இப்பாட்டு அஞ்சு சூக்கும தன்மாத்திரைகளையும் முன்னிலையாக்கிப் பாடப்பட்ட பாட்டு. சூக்கும தன்மாத்திரைகளைந்தும் ஊனக்கண்களாற் காணப்படாதவைகளாதலின் 'உன்னுருவின்' என்றார். உன் உரு—வினைத்தொகை. "சுவையொளி..............ஐவீர்" என்பதற்கு விடயதன்மாத்திரையென்கின்ற நாற்றஞ்சுவை யொளியூறு ஓசையாகிய அவயவங்கள் குறித்தவழி, அவயவிகளாகிய சூக்குமதன்மாத்திரைகள் என்னும் நாற்றஞ்சுவை யொளியூறோசைகள் ஒழுகுதலால் "சுவையொளியூறோசை நாற்றத்து உறப்பினது குறிப்பாகும் ஐவீர்" என்றார். விடயதன்மாத்திரைக்கும், சூக்கும தன்மாத்திரைக்கும் பெயர்கள் ஒன்றே; அது பற்றிமயங்கற்க. நாற்றத்து உறப்பு-நாற்றமாகிய உறப்பு எனக்கொள்க. சூக்குமதன்மாத்திரைகள் ஊனக்கண்களாற் பார்க்க முடியாதவை யாதலின்'உன்னுரு' என்றார். உன் உருவின்-இன், அத்து, சாரியைகள். உறப்பினது-இன்- சாரியை. இத்தேவாரப் பதிகத்தின் இரண்டாவது பாட்டில் அடிகள் "ஐம்பெரும் பூதங்காள்" என்று தூலபூதங்களை விளித்துச் சொல்லி,இந்தப்பாட்டில் அவைகளுக்குக் காரணமா யிருக்கிற சூக்கும பூதங்களாகிய தன்மாத்திரைகளை விளித்துக் கூறுகின்றார். நாற்றம் சுவை ஒளி ஊறு ஓசை என்று இங்கே கூறப்பட்டன, புறவிடயங்களைக் குறிக்கின்றன; அப்பெயர்களைஉடைய தன்மாத்திரைகளை என்ற. உடலிலுள்ள சூக்குமபூதங்கள்

தங்கள் காரியமாகிய நாலு பூதங்களுடன் ஞானேந்திரியங்கள் வாயிலாகப் புறவிடயங்களை ஆன்மாக் சென்று பற்றுதற்குத் துணையா யிருந்து உதவுதல் செய்யுதலின் அக்கூத்தும பூதங் களைக் குறிப்பாக ஐவீர் என்றார். திரோதமலம் வயப்பட்ட ஆன்மாக்கள் பூதங்களைச் சடப்பொருள்கள் என்றெண்ணு மல், அவைகளுடன் அதுவதுவாய் ஒற்றித்து நின்று பரிணமித்து அவைகளின் வயப்பட்டு ஒழுகுதலால், உயிரில்லாத அக்கூம பூதங்களை ஐவீர் வைப்பீர் என உயர்திணையில் வைத்துக் கூறினார். இது இழிவு சிறப்பு. உலக போகங் களெல்லாம் நாற்றம் சுவை ஒளி ஊறு ஓசை என்னும் அக்கு தன்மாத்திரைகளாலும், அவற்றுக்குத் துணைகளா யுள்ள ஐம்பூதங்கள் ஞானேந்திரியங்கள் முதலியவைகளாலும் அமைந்திருத்தல் "சுவையொளியூ றோசை நாற்றமென் றைந்தின் வகைதெரிவான் கட்டே யுலகு" என்ற திருக் குறளிற் கூறப்பட்டிருத்தல் காண்க. 'வையகம் நுங்கள்மன் உருவத் தியற்கைகளால் வைப்பீர்'—மன் உருவம் என்றது இங்கே வஞ்சப்புகழ்ச்சி (Irony). உலக விடயங்களாகிய போகங்களை மாந்தர் நிலையானவைகளாக எண்ணி ஒழுகுதலின் அழிதற்றன்மையை யுடைய உருவத்தை மன் உருவம் என் றார். மாந்தர் உலகவிடய போகங்களையே தாங்கள் இயல்பாக நுகரக்கூடிய இன்பங்களாக நினைத்து அவைகளில் அழுந்து தலின் மன் உருவத்தியற்கைளால் வைப்பீர் என்றார். வைய கம் என்ற சொல்லை வைப்பீர் என்ற சொல்லுடனும், போ தாதே என்ற சொல்லுடனும் கூட்டிப் பொருள் உரைக்க. அவ்வாறு மாந்தரைப் போகத்தில் அமிழ்த்துதல் அவர்கள் பக்குவம் அடைவதற்கு வேண்டப்படுதலின் அதனைத் தன் மாத்திரைகளின் இயற்கை என்றார். வைப்பீர்களாகிய உங் களுக்கு என்று பொருள் கொள்ளப்பட்டது. வையகமே போதாதே ஐயோ—முன்னைய ஏ—அசை; பின்னைய ஏ — தேற் றம். இந்த வையகத்துக்குப் புறம்பாயுள்ள இடங்களிருந்தால்

அவைகளையும் நீங்கள் ஆட்சி செய்து உங்கள் வயப்படுத்த வல்லீர் என்பார் வையகமே போதாதே என்றார். உயிர்களை உங்கள் ஆட்சியால் என்ன பாடு படுத்துகிறீர் என்று உயிர்கள் மேலுள்ள தமது இரக்கம் குறிப்பிப்பார் 'ஐயோ' என்றார். யானேல் - ஏல் என்பது எனில் என்னும் பொருள்பட நின்றது. யான் ஏல் என்பது யான் உடன்படுவனோ எனில் என விரியும். உடன்படுவனோ சொல் எச்சம். அதாவது உங்கள் ஆட்சிக்கு யான் உடன்படுவனோ என்னில் உடன் பட மாட்டேன், ஏனென்றால் கேண்மின். வானோர் பொன் உருவை – வானோர் என்ற சொல்லுக்குப்பின் வணங்குகின்ற என்ற சொல்லை வருவித்து உரைக்க. இது சொல்லெச்சம். புவிக்கு எழிலாம் சிவக்கொழுந்து – உலகிற் காணப்படுகிற அழகு உருவங்களெல்லாம் இறைவன் அருள் விளக்கம் ஆதலின் புவிக்கு எழிலாம் என்றார். சிவம்–மங்களம், நலம். சிவக்கொழுந்து - சிறந்த நலம் என் சிந்தை புகுந்து தன் உருவைத் தந்தவனை– எனது உள்ளத்திலே அத்துவித இயைபானே இறைவன் விளங்கி வீற்றிருத்தலால் அவன், தீ இரும்பைச் செய்வது போல் எனது மலம் முற்றிலும் நீங்கிச் சிவம் ஆம்படி செய்து, தனக்குரிய எண்குணங்களும் எனது எண்குணங்களாகும்படி என்னிடத்தில் பதிய வைத்தான் என்பார், என் சிந்தை புகுந்து தன் உருவைத் தந்தவனை என்றார். புகுதல் - விளங்கி வீற்றிருத்தல்; உரு என்பது அருளுரு. அருளுருவைத் தருதலாவது அருட் குணங்களாகிய எண்குணங்களும் உள்ளத்திற் பதியச் செய்தலாகும். "சிவனுளத்தே தோன்றித் தீயிரும்பைச் செய்வது போற் சீவன் றன்னைப்- பந்தனையை யறுத்துத் தா னாக்கித் தன்னுருவப் பரப்பெல்லாங் கொடுபோந்து பதிப்பனிவன் பாலே" என்று சிவஞானசித்தியார் 9–வது சூத்திரம் 12ம் செய்யுள் கூறுதல் காண்க. எந்தை தன்னை–தன்–அசை. இறைவன்

எனது உயிர்த் தந்தையாய் என்னைக் காத்தல் கடனுதலின் இவ்வாறு செய்தான் என்று குறிப்பிப்பார், எந்தை தன்னை என்றூர். தலைப்படுவேன் - தலைப்படுதல், (இறைவனுடைய திருவடிகளிற்) பொருந்துதல். அதாவது இறைவனோடு அத்துவிதமாய்க் கலந்திருத்தல். இச்சொல் இறைவனுக்கும் உயிருக்குமுள்ள ஆண்டான் அடிமைத் தொடர்பைக் குறிக்கிறது. தலைப்பட்டிருக்கின்றேன் என்ற முக்காலத்துக்கும் பொதுவான நிகழ்காலம் தெளிவுபற்றி எதிர்காலத்தாற் கூறப்பட்டது. துலைப்படுப்பான் – துலை – சேய்மை, துலைப்படுத்தல் – சேய்மைப் படுத்தல். பான் - எதிர்கால வினையெச்ச விகுதி. தருக்கேல்மின் முன்னிலை ஏவற் பன்மை எதிர்மறை வினை முற்று. இறைவனுடைய திருவடிகளில் அன்புவைத்து ஒழுகுகிற சீவன் முத்தர்களுக்கு உலக விடய போகப்பற்று நீக்கமும், அவ்வுலக விடயபோகத்துக்குக் கருவியாயுள்ள செல்வப் பொருட்பற்று நீக்கமும் உண்டாகும் என்பது இந்தப் பாட்டினுற் பெறப்படுகின்ற கருத்தாகும். இதனுல், இச்செய்யுள் அணைந்தோர் தன்மையின் கீழ்வைக்கப்பட்டது.

## ௩௱ - ௬. மறுமாற்றத் – திருத்தாண்டகம்.

நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம்
நரகத்தி லிடர்ப்படோம் நடலை யில்லோம்
ஏமாப்போம் பிணியறியோம் பணிவோ மல்லோ
மின்பமே யெந்நாளுந் துன்ப மில்லை
தாமார்க்குங் குடியல்லாத் தன்மை யான
சங்கரனற் சங்கவெண் குழையோர் காதிற்
கோமாற்கே நாமென்றும் மீளா வாளாய்க்
கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகி னேமே.

(ப-ரை) நாம் ஆர்க்கும் குடியல்லோம் (1) - உலகிலுள்ள எந்த அரசருக்குங் கீழ் நாம் அவரால் ஆளப்படுங் குடிகளா யில்லோம்; நமனை அஞ்சோம் (2) - உலக அரசர்கள் அஞ்சு கின்ற நமனையும் அஞ்சமாட்டோம்; நரகத்தில் இடர்ப்படோம் (3) - மறுமை வாழ்வில் அடையக் கடவதாகிய நரகத்துன்பமும் நமக்கு இல்லை; நடலை இல்லோம் (4) - உலகில் திரோத மலம் வயப்பட்ட பொய்வாழ்வு நம்மிடத்தில் இல்லை; ஏமாப் போம் (5) - எம்மை எவரும் ஒன்றும் செய்யமுடியாது என்று இறுமாந்திருப்போம்; பிணியறியோம் (6) - நாம் மலப் பிணியைச் சிறிதும் அறியமாட்டோம்; பணிவோம் அல்லோம் (7) - எவருக்கும் அடங்கி அவரைப் பணிந்து நாம் நடக்க மாட்டோம்; எந்நாளும் இன்பமே துன்பமில்லை (8) - நாம் நுகர்வது நிலையாயுள்ள பேரின்பமன்றி உலகில் நுகரப்படும் நிலையில்லாத இன்பத்துன்பங்களில்லை (ஆதலால் நும்மை ஏவின அரசன் எம்மை உலகில் செய்யக்கடவது என்ன இருக் கிறது. நாம் எவருக்கும் எதற்கும் அஞ்சாமலிருத்தற்குக் காரணம் சொல்லுகிறோம் கேண்மின்); ஆர்க்கும் தாம் குடி அல்லாத் தன்மையான - தன்னை ஒருவரும் ஆளுந் தன்மையில்லாதவனாய; நற்சங்க வெண்குழை ஓர் காதிற் கோமான் சங்கரற்கே - நல்ல சங்கினாலாகிய வெள்ளிய குண்ட லத்தை ஒருகாதில் அணிந்திருக்கிற முழுமுதற்றலைவனாய் எல்லா உயிர்களுக்கும் இன்பமளிக்கின்ற சிவபெருமான் ஒரு வனுக்கே; மீளா ஆளாய்க் கொய்ம்மலர்ச்சேவடியிணையே குறுகினோம் - எப்பொழுதும் மீட்கப்படாத அடிமையாக மலர் நிறைந்திருக்கிற அவனுடைய செவ்விய இரண்டு திருவடிகளையே சேர்ந்து பேரின்பப் பெருவாழ்வு பெற் றோம். 8

(வி-ரை) திருநாவுக்கரசு அடிகள் தமக்கு வந்த சூலை நோயுடன் மலநோயும் இறைவனால் தீர்ந்து ஆண்டருளப் பெற்று திருவதிகை வீரட்டானத்திலிருந்த காலத்தில், பல்லவ அரசனால் ஏவப்பட்ட அமைச்சர்கள் சேனைகளோடும் தம்மிடம் வந்து உம்மை அரசன் அழைக்கின்றான் வாரும் எனக் கூறின சமயத்தில் அவர்களுக்கு விடைமொழியாகப் பாடிய தேவாரப்பதிகத்தின் முதலாவது பாட்டு இது. அப்பொழுது அடிகளுடைய உள்ளத்திருந்த கம்பீர உணர்வு இந்தப் பாட்டினால் ஒருவாறு நமக்குத் தெரிய வருகின்றது. இந்தக் கம்பீர உணர்வு அடிகளுக்கு இந்தப் பாட்டிற் கூறுகிறபடி இறைவனுடைய திருவடிகளிற் சேரப்பெற்ற பெருவாழ்வினா லுண்டாகிறது. நாம் ஆர்க்கும் குடி அல்லோம் (1)- நாம் என்ற தன்மைப்பன்மைச்சொல் நாம் உங்கள் அரசனுக்கு எளியோமல்லோம் என்ற அடிகளுடைய கம்பீர உணர்வைக் குறிக்கிறது, குடி - அரசன் ஒருவனால் ஆளப்படும் நாட்டு மக்கள். நாம் உங்கள் அரசனால் ஆளப்படும் குடிகளில் ஒருவன் அல்லன் ஆதலின் அவன் எம்மை அழைக்கவும் பொருத்தமில்லை என்பார், குடிஅல்லோம் என்றார். அல்லோம்- தன்மைப் பன்மைக் குறிப்புவினைமுற்று. 'துறவிக்கு வேந்தன் துரும்பு' என்ற பழமொழிக் கருத்துக் கூறப்பட்டது. நமனை அஞ்சோம் (2) - நமனையும் என்ற உயர்வு சிறப்பு உம்மை தொக்கி நிற்கிறது. நாம் உங்கள் அரசனுக்கு அஞ்சாதிருத்தலன்றி, அவன் அஞ்சுகின்ற நமனையும் அஞ்சோம் என்று குறிப்பிப்பார் நமனை அஞ்சோம் என்றார். நமனை அஞ்சோம்- "அச்சக்கிளவிக் கஞ்சுமிரண்டும் எச்சமிலவே பொருள் வயினான" தொல்- சொல். 100 சூ. கூறியபடி 2ம் வேற்றுமைப் பொருளில் வந்தது. நரகத்தில் இடர்ப்படோம் (3) - இம்மை

வாழ்வில் நாம் அஞ்சாதிருத்தலன்றி மறுமை வாழ்வில் அஞ்சப்படுகிற துன்பமுமில்லை என்பார் நரகத்தில் இடர்ப்படோம் என்றார். நடலை இல்லோம் (4) - நடலை என்பது பொய். அது இங்கே உலகில் வாழும் இழிகூற்றுத் தன்மையான (துவந்துவமுள்ள) பொய்வாழ்வைக் குறிக்கிறது. ஏமாப்போம் (5) - ஏமாப்பு என்பது இறுமாப்பு. இது உலகில் நிலையில்லாத செல்வம், அதிகார முதலியவற்றா லுண்டாகும் அறியாமையிறுமாப்பு அன்று; இறைவனுடைய அருட்டன்மையை அடையப்பெற்றதனா லுண்டாகும் மெய்யறிவிறுமாப்பு. "இறுமாந்திருப்பன்கொலோ" என்று அடிகள் திருவங்கமாலையிற் கூறியருளினமை காண்க. பிணி அறியோம் (6) - பிணி என்பது கட்டு. மலப்பிணிப்புச் சிறிதும் தமக்கு இல்லை என்பார், பிணி அறியோம் என்றார். பணிவோம் அல்லோம் (7) - 'நமக்கு எதிராவார் ஒருவருமில்லை' என்பார், பணிவோம் அல்லோம் என்றார். இன்பமே எந்நாளுந் துன்பமில்லை (8)- நம்அரசன் எமக்குச் செய்யக்கடவதொரு துன்பமுமில்லை என்று குறிப்பிப்பார், இன்பமே எந்நாளும் துன்பமில்லை என்றார். அடிகளுக்குத் துன்பவுணர்வில்லை என்பது, பின் அரசன் அவரை நான்கு வகையாகத் துன்புறுத்தியும் அடிகள் யாதொரு ஊறும் அடையவில்லை என்ற பின்னிகழ்ச்சி சான்றாகவுள்ளது. மேலே கூறப்பட்ட 1- முதல் 8 வரை உள்ள அடிகளுடைய கூற்றுக்கள் முறையே (1) தன்வயத்தனாதல் (2) தூய உடம்பினனாதல் (3) இயற்கை உணர்வினனாதல் (4) இயல்பாகவே பாசங்களினீங்குதல் (5) பேரருளுடைமை (6) முற்றுமுணர்தல் (7) முடிவிலாற்றலுடைமை (8) வரம்பிலின்பமுடைமை என்னும் இறைவனுடைய எண்குணங்களும் அடிகளிடத்தில் பதிந்ததன் பயனாக

வெளிப்பட்டன என்று நாம் கூறலாம். அடிகள் தாம் இறைவனோடு அத்துவிதமாய்க் கலந்ததனால் தம்மிடத்தில் இறைவனுடைய எண்குணங்களும் பதியப்பெற்றதை "என் குணத் தினோடே" என்று அவர் இத் தேவாரப் பதிகத்தின் இறுதிப் பாட்டின் இறுதியிற் கூறிய உரையால் நாம் அறியலாம். எட்டுக் கூற்றுக்களும் எண் குணங்களின் வெளிப்பாடுகளாய்ப்பொருந்தியிருப்பன என்பதை உய்த்துணர்ந்துகொள்க. தாம் ஆர்க்கும் குடி அல்லாத் தன்மையான நற்சங்க வெண் குழையோர் காதிற்கோமான் சங்கரற்கே- இவ்வாறு பதவுரையிற்கூறியபடி உரைநடை செய்து பொருள் கொள்க. குடியல்லாத் தன்மையான என்பது கோமான் என்ற சொல்லைக் கொண்டு முடிகிறது. கோமான் - அரசன், முழுமுதற்றலைவன். அவன் எப்பேர்ப்பட்ட தலைவன் என்றால் ஆர்க்கும் குடியல்லாத் தன்மையான தலைவன்; தனக்கு ஒப்பாரும் மிக்காருமில்லாத தலைவன். அவன் அத்தகைய தலைவனாயிருத்தலுடன் எல்லா உயிர்களுக்கும் இன்ப நலம் செய்கிறவன் என்பது, சங்கரன் என்ற வடமொழிச் சொல்லாற் கூறப்பட்டது. சம்—இன்பம், கரன்—செய்கிறவன். ஒப்பற்ற தலைவனாயிருந்து எல்லா உயிர்களுக்கும் இன்ப நலம் செய்கிறவன் என்றதனால் அவ்வாறு நலம் செய்தற்கு இன்றியமையாது வேண்டப்படுவனவாகிய எண் குணங்களும் குறிப்பால் உடன் கூறப்படலாயின. ஓர் காதிற் குழை - இறைவன் உமைமாதிருக்கும் பாதியன் ஆதலின் வலது காது குறிப்பிக்கப்பட்டது; இடது காது உமாதேவியார் காது ஆதலின் தோடு அணிதற்கு உரியது. ஏ - பிரிநிலைப் பொருளில் வந்தது. மீளா ஆளாய்க் கொய்ம்மலர் சேவடி யிணையே குறுகினோம் - ஆண்டானாகிய இறைவனுக்கு உயிர்கள் எப்பொழுதும் அடிமைகள் ஆதலின்,

மீளா ஆளா என்றார். "மீளா வடிமை யுமக்கே யாளாய்" என்றார் சுந்தரமூர்த்தி அடிகளும். குறுகுதல் - அடங்கி நிற்றல்; சிவத்தன்மை குறுகிச் சிவத்தன்மை அடைதல். சேவடியிணை குறுகுதல் என்பது அடிகளுடைய வேட்கை அறிவு செயல்கள், இறைவனுடைய வியாபக வேட்கை அறிவு செயல்களுக்குள் அடங்கி நின்று அவனோடு இரண்டறக் கலந்து அவனுடைய எண்குணங்களும் நிறையப்பெற்றுச் சிவமாம் பேரின்பப் பெருவாழ்வு அடைதல்.

## தனித்திருத்தாண்டகம்.

கூஉ. வெம்பவரு கிற்பதன்று கூற்ற நம்மேல்
வெய்ய வினைப்பகையும் பைய நையும்
எம்பரிவு தீர்ந்தோ மிடுக்க ணில்லோ
மெங்கெழிலென் ஞாயி றெளியோ மல்லோம்
அம்பவளச் செஞ்சடைமே லாறு சூடி
யனலாடி யானஞ்சு மாட்டு கந்த
செம்பவள வண்ணர்செங் குன்ற வண்ணர்
செவ்வான வண்ணரென் சிந்தை யாரே.

(ப-ரை) அம்பவளம் செஞ்சடைமேல் ஆறுசூடி - அழகுள்ள பவள நிறம்போன்ற சிவந்த சடையின்மேலே கங்கையாற்றினை அணிந்தும்; அனல் ஆடி - இடது கையில் அக்கினி ஏந்தி நட்டமாடியும்; ஆனைந்தும் ஆட்டு உகந்த - பசுவினுடைய பால் நெய் தயிர் சாணம் சிறுநீர் ஆகிய ஐந்தினாலும் கூடிய பஞ்சகவ்விய முழுக்கு விரும்பிய; செங்குன்ற வண்ணர் - சிவந்த மலைபோலும் நிறமுடையவரும்; செம்பவள வண்ணர் - சிவந்த பவளம்போலும் நிறமுடையவரும்;

செவ்வான வண்ணர் - சிவந்த வானம்போலும் நிறமுடைய வரும் ஆகிய சிவபெருமான் ; என் சிந்தையார் - எனது சிந்தையை உறைவிடமாகக் கொண்டு அதனிடம் வீற்றிருக் கின்றார் ; (ஆதலால்) கூற்றம் நம்மேல் வெம்பவருகிற்பது அன்று - தூல உடலினின்று உயிரைக் கூறுசெய்து பிரிக்கும் நமன், அடியார்களாகிய நாம் வாடி வருந்தும்படி நம்மிடத்து வருகிறதற்கு ஆற்றலுடையவன் அல்லன் ; வெய்ய வினைப் பகையும் பையுணையும் - அதுவன்றி நாம் முன் செய்த கொடிய நல்வினை தீவினைப் பகைமைகளும் நம்மை அணுகு தற்கு வழியின்றி மெல்ல மெல்லக் குறைந்து நசித்துவிடும் ; எம்பரிவு தீர்ந்தோம் - காமம் வெகுளி மயக்கம் என்னும் மூன்று குற்றங்களினின்று முற்றிலும் நீங்கினோம் ; இடுக்கண் இல்லோம் - முக்குற்றங்களும் நீங்கினதினால் உலகில் வரக் கடவதாகிய யாதொரு இன்பத் துன்பங்களும் எங்களுக்கு இல்லை ; ஞாயிறு எங்கு எழில் என் - ஞாயிறு உலகில் வழக்கம்போல் கிழக்கிலே தோன்றாது வேறு எந்தத்திக்குக் களிலே தோன்றினாலும் எங்களுக்கு அதனால் வரக்கடவது ஒன்றுமில்லை ; எளியோம் அல்லோம் - உலகில் அரசன் முதலிய எத்தகையோருக்கும் நாங்கள் எளிமையுடையவர்கள் ஆகமாட்டோம். 9

(வி-ரை) அனல் ஆடி - அழித்தற் றொழிலைக்குறிக்கிறது. "அனல்கை யேந்திக் கூத்தாடவல்ல குழகன்" என்று அடிகள் திருப்பாசூர்த்திருத்தாண்டகம் 3-வது பாட்டிற் கூறியிருத்தல் காண்க. செங்குன்ற வண்ணர் - சிவப்பு நிறம், குன்று முழுவதும் கலவாதிருத்தலால் இது இறைவன் பொருட்டன் மையால் உலகத்தினின்று பேதமாய்த்தோன்றுகிற அத்துவித நிலையைக் குறிக்கிறது. செம்பவள வண்ணர் - சிவப்பு நிறம்

பவளத்தின் உள்ளும் புறமும் கலந்திருத்தலால் இது இறைவன் உலகம் அனைத்திலும் கலப்புப்பற்றி அபேதமாய்த் தோன்றும் அத்துவித நிலையினைக் குறிக்கிறது. செவ்வான வண்ணர் - செஞ்ஞாயிற்றின் ஒளி அந்தி நேரத்தில் வானத்திற் பட்டு அதிற் சிவந்தநிறமுண்டாதலால் இது இறைவன் உயிரோடு உடனாய் நிற்கிற பேதாபேத அத்துவித நிலையைக் குறிக்கிறது. என் சிந்தையார் - மெய்ஞ்ஞானிகள் சிந்தையில் இறைவன் பேதம் அபேதம் பேதாபேதம் என்னும் மூன்று நிலைகளும் தனித்தனியே உடையவன் அல்லனாய் அம்மூன்றற்கும் பொதுமையான அத்துவித நிலையை உடையனாயிருத்தலான் அடிகள் அம்மூன்று அத்துவித நிலைக்குறிகளைச் சொன்னபின் என் சிந்தையார் என்றார். மேலே 90-வது பாட்டில் அடிகள் ' என் சிந்தை தன்னுருவைத் தந்தவனை ' எனக் கூறியவாற்றானும், திருமறுமாற்றத் திருத்தாண்டகம் 10-வது பாட்டில் " எண்குணத்துளோமே " என்று கூறியவாற்றானும் இறைவனுடைய உருவமாகிய அருளின் குணங்கள் அடிகளுடைய சிந்தையில் பதியப்பெற்றன என்பது கூறப்பட்டது. கூற்றம் நம்மேல் வெம்ப வருகிற்பது அன்று - கூற்றம்-தொழிற் பெயர்; அம் தொழிற் பெயர் விகுதி, அது இங்கேஆகுபெயராய்உயிரை உடலினின்றுகூறுசெய்கிற (பிரிக்கிற)நமனைக்குறிக்கிறது. கூறுபடுத்தல் என்பது பொருள். வருகிற்பது-கில் ஆற்றல்உணர்த்தும்இடைநிலை-ப-எதிர்கால இடைநிலை. து-தொழிற் பெயர் விகுதி. உலகிலுள்ளபொழுது சிவன் திருவடிப் பேற்றைத் தலைக்கூடிப் பேரின்பப் பெருவாழ்வை அடைந்த சீவன்முத்தர்களிடம் யமன் வரக்கடவதோர் செயலொன்றுமில்லை யாதலின் அடிகள் "கூற்றம் நம்மேல் வெம்ப

வருகிற்பதன்று " என்றார். என் சிந்தையார் என்று சொன்ன அடிகள் பின் நம்மேல் என்று பன்மையாகக் கூறியது அவர் அகநோக்கில் ஒருமையாகக் கூறிப் பின்புறநோக்கில் தம்மைப் போன்ற அடியார்கள் நிலையும் உணர்ந்ததைக் குறிக்கிறது. வெய்ய வினைப்பகையும் பையநையும் - அத்தகைய சீவன் முத்தர்களுக்கும் உடல் நீங்குமளவும் உடலூழாய்க் கழிய இருக்கிற பிராரத்தவினை மெல்லிதாய் வந்து தாக்கக்கூடியதா யுள்ளது ஆதலின் வெய்யவினை இல்லை என்று கூறாது பையநையும் என்றார். எம்பரிவு தீர்ந்தோம்-பரிவு என்ற சொல் இங்கே பஞ்சக்கிலேசங்கள் ஆகிய குற்றங்களைக் குறிக்கிறது. அஞ்சு குற்றங்களும் காமம் வெகுளி மயக்கம் மூன்றனு ளடங்கும். பஞ்சக் கிலேசங்கள்பற்றி மேலே சில பாட்டுக் களின்கீழ் எழுதப்பட்ட விளக்க உரையைக் கொள்க. பரிவு - சிலப்பதிகாரம் 7-வது காதை-க.வது கட்டுரையில்,"பண் வகை யிற் பரிவு தீர்ந்து " என்ற வரியில் வருகிற பரிவு என்றசொல் அடியார்க்கு நல்லார் குற்றம் என்று பொருள் செய்திருத்தல் காண்க. தீர்தல் - முற்றிலும் ஒழிதல் ; கடன் தீர்ந்தது என்று பேச்சு வழக்கிலும் வருதல் காண்க. ஞாயிறு எங்கு எழில் என்-உலகப்பற்றை முற்றிலும்விட்டுத் திருவருள் வழி நிற்கிற அடியார்களுக்கு இறைவன் ஆணைவழி உலகில்இயங்கும் ஞாயிற்றின் இயக்கம் சிறிதும் விகாரத்தை உண்டுபண்ண வல்ல தன்று ஆதலின் ஞாயிறு எங்கு எழில் என் என்றார். சிவஞான சித்தியார் 8-ஞ்சூ. 31 செய்யுளில் "எங்கெழிலென் ஞாயிறெமக் கென்று" என்றுகூறியிருத்தல்காண்க .மேலே 91-வதுபாட்டில் இறைவனுடைய எண்குணங்களின்வெளிப்பாடுகள் கூறப்பட் டன.இப்பாட்டில் அந்த எண்குணங்களி லடங்குவனவாகிய ஆறுகுணங்களின் வெளிப்பாடுகள் கூறப்பட்டன. கூற்றம் நம்

மேல் வருந்திற்பதன்று என்பதனால் பேரருளுடைமையும், வெய்யவினைகையும் என்பதனால் இயல்பாகவேபாசங்களினீங்குதலும், எம்பரிவு தீர்ந்தோம் என்பதனால் முற்றுமுணர்தலும், இடுக்கண்ணில்லோம் என்பதனால் வரம்பிலின்பமுடைமையும், ஞாயிறு எங்கெழிலென் என்பதனால்தன்வயத்தனாதலும், எளியோமல்லோம் என்பதனால் முடிவிலாற்றலுடைமையும், தமது சிந்தையில் பதியப்பெற்றமையை அடிகள் குறிப்பிட்டவாறாயிற்று. இயற்கை உணர்வினனாதல் இயல்பாகவே பாசங்களினீங்குதலினும், தூய வுடம்பினனாதல் பேரருளுடைமையினும் அடங்கும். இப்பாட்டில் இறைவன் திருவடிப்பேற்றினை அடையப்பெற்ற அடியார்களுடைய பெருமை கூறப்பட்டது. அடியார்களுடைய திருவேடத்தைக் கண்டு சீவன்முத்தர்கள் அவர்களை வழிபடுதற்குக் காரணம் கூறப்பட்டதாயிற்று.

## ௩௭-ரு. திருவீழிமிழலை-திருக்குறுந்தொகை.

௩௯௫. எடுத்த வெல்கொடி யேறுடை யான்றமர்
உடுப்பர் கோவண முண்பது பிச்சையே
கெடுப்ப தாவது கீழ்நின்ற வல்வினை
விடுத்துப் போவது வீழி மிழலைக்கே.

(ப-ரை) ஏறு எடுத்த வெல்கொடி உடையான் தமர் - ஏற்றினைத் தன்னால் எடுத்துக் கொள்ளப்பட்ட வெற்றிக் கொடியாக உடையவனாகிய சிவபெருமானுடைய அடியார்கள்; கோவணம் உடுப்பர்-கோவணமும் (கீளுமே) ஆடையாகத் தரித்துக்கொள்வர்; உண்பது பிச்சையே-தாம் உணவாக உண்பது வீடுகளிலிரந்து பெறும் பிச்சைச்சோறே; கெடுப்

பதாவது கீழ்நின்ற வல்வினை-முற்றிலுமில்லாமல் ஒழிப்பது தங்களை மேற்கொண்டு செல்ல வலியில்லாத நல்வினை தீவினைகளே; விடுத்துப் போவது வீழிமிழலைக்கே-பொருட்பற்று உயிர்ப்பற்றுக்களாகிய உலகப்பற்றுக்களை அறவே ஒழித்துவிட்டு வழிபடுவதற்குப் போவதாயுள்ள இடமானது சிவபெருமான் திருக்கோயில்கொண் டெழுந்தருளி யிருக்கின்ற திருவீழிமிழலை என்னும் தலமே. 10

**(வி-ரை)** ஏறு எடுத்த வெல்கொடியான் தமர் - எடுத்த என்பது எடுக்கப்பட்ட என்னும் செயப்பாட்டு வினைப் பொருளில் வந்தது; ஏற்றுக் கொடியானது ஆன்மாக்களைப் பசுபாசங்களினின்று நீக்கும் செயலுக்குக் குறியீடாய் விளங்குகிறது, அரசனொருவனுடைய கொடியானது அதன்கீழ் வாழுங் குடிகளைக் காத்தலுக்குக் குறியீடாயிருத்தல் போல. சிவபெருமானுடைய ஐந்தொழிற் செயலுக்கு என்றும் தோல்வியில்லை யாதலின் வெல்கொடி என்றார். வெல்கொடி வினைத்தொகை. தம்+அர்-தமர் - தம்மவர் அதாவது உறவோர். யாவராயினும் சிவபெருமானுடைய திருவடிகளில் அத்துவிதமாய்க் கலந்துள்ள அடியார்களெல்லாம் அவனுக்குத் தமராவர். உடுப்பர் கோவணம் உண்பது பிச்சையே - ஓடும் பொன்னும் ஒக்கநோக்கும் அடியார்கள் உலகிலுள்ள காலத்தில் அவர்களால் விரும்பத்தக்கது பிறிதொன்றுமில்லை யாதலின், உடுப்பர் கோவணம் உண்பது பிச்சையே என்றார். அவர்கள் விரும்புவது மெய்ஞ்ஞானச் செல்வம் ஒன்றுமே. பிச்சை - பிச்சைச் சோறு; ஆகுபெயர். கெடுப்பதாவது கீழ்நின்ற வல்வினை - பழைய வாசனைபற்றி ஒரோவழி பிராரத்துவ வினை உடம்புள்ளவரை வந்து அடியார்களைத் தாக்குதலும் கூடுமாதலின் வல்வினை என்றார் - வல்வினையாயினும் அடியார்

லை மேற்சென்றெழுக வலியிலது ஆதலின் கீழ்நின்ற வல்வினை என்றார். அவ்வாறு தங்கள்மேல் எழும் வல்வினையையும் சிக்கச் செய்வார் என்பார், கெடுப்பதாவது கீழ்நின்ற வல்வினை என்றார். "தன்னை யறிந்திடுந் தத்துவ ஞானிகள் முன்னை வினையின் முடிச்சை யவிழ்ப்பார்கள்" என்றார் திருமூலர். விடுத்துப்போவது வீழ்பிழைக்கே - இது உலகப் பற்றுக்கள் என்ற சொற்களை அவாவி நிற்பதால் அவைகளை வருவித்துப் பொருள் உரைக்கப்பட்டது. ஏ - பிரிநிலைப் பொருள் குறிக்கிறது. இப்பாட்டு அடியார்களுடைய பெருமையைக் கூறுகின்றது. சீவன்முத்தர்கள், தாங்கள் அடைந்த அத்துவித நிலையிலிருந்து வழுவாமல் நிலைத்திருத்தற்கு இத்தகைய பெருமையுடைய அடியார்களைத் தொழல்வேண்டும் என்பது குறிப்பிடப்பட்டது. 'உடுப்பர் கோவணம் உண்பது பிச்சையே' என்றதனாலே, சீவன்முத்தர்கள் புறப்பற்று அற்றிருப்பர் என்பதும், "கெடுப்பதாவது கீழ்நின்ற வல்வினை" என்றதனால் அவர்கள் அகப்பற்று அற்றிருப்பர் என்பதும் இப்பாட்டில் கூறப்பட்டன.

## நூ. - ச. திருப்பாதிரிப்புலியூர்த் திருவிருத்தம்.

கச. விடையான் விரும்பியென் னுள்ளத் திருந்தா
[னினி நமக்கிங்
கடையா வவல மருவினை சாரா நமனையஞ்சோம்
புடையார் கமலத் தயன்போல் பவர்பா திரிப்புலியூர்
உடையா னடியா ரடியடி யோங்கட் கரியதுண்டே.

(ப-ரை) எனது உள்ளத்து - என்னுடைய உள்ளத்தில்; விடையான் விரும்பியிருந்தான் - எருத்தினை ஊர்தியாக உடைய சிவபெருமான், உவந்து வீற்றிருக்கின்றான் (அவ்

வாறே அவன் பிற அடியார்களுடைய உள்ளங்களிலும் வீற் றிருக்கின்றான் என்று நான் அறிகின்றேன்) ; நமக்கு இங்கு இனி - அதனால் அடியார்களாகிய நமக்கு இந்த உலகத்தில் இனிமேல் ; அருவினை சாரா- முன் நம்மைவிட்டு நீங்குவதற்கு அரியனவாயிருந்த நல்வினை தீவினைகள் நம்மைச் சாரமாட்டா; அல்லல் அடையா - வினையின்மையால் எவ்வகைத் துன்பங் களும் நம்மை அணுகா ; நமனை அஞ்சோம் - நமனையும் பயப் படமாட்டோம் ; புடைசூழ் கமலத்து அயன்போல்பவர் - (தண்டில்) துளையுடைய தாமரை மலர்மேலிருக்கின்ற அய னுக்கு ஒப்பான அந்தணர்கள் வாழ்கிற ; பாதிரிப்புலியூர் உடையான் - திருப்பாதிரிப்புலியூரில் திருக்கோயில் கொண்டு வீற்றிருக்கின்ற ஆண்டவனுடைய ; அடியார் அடி அடியோங் கட்கு - அடியார்களுடைய திருவடிகளுக்கு ஆட்பட்டொழுகு கின்ற அடியார்களாகிய எங்களுக்கு ; அரியது உண்டே - கிடைத்தற்கு அரியபொருள் ஒன்றுமில்லை. 11

(வி-ரை) இப்பாட்டில் திருநாவுக்கரசு அடிகள் சிவபெரு மானுடைய திருவடிகளைச் சேரப்பெற்ற அடியார்களுடைய அளப்பருந்தன்மையைக் கூறுகின்றார். விடையான் விரும்பி என் உள்ளத்திருந்தான் - விரும்பியென் னுள்ளத்திருந்தான் என்றதனால் அடிகள் மும்மலங்களினின்றும் நீங்கி அயரா அன்பின் அத்துவிதமாய் அரன் கழல் அடைந்தார் என்பது பெறப்பட்டது. பசுகரணம் முற்றிலும் நீங்கிச் சிவகரண மாய் மாறிய தூய உள்ளத்திலேதான் சிவபெருமான் விரும்பி வீற்றிருப்பர் என்பது பெறப்பட்டது. நமக்கு இங்கு இனி அருவினை சாரா - மேலே அடிகள் என்னுள்ளத் திருந்தான் என்று தம்மை மாத்திரம் ஒருமையிற் கூறிப் பின் அதனால் நமக்கு அருவினைசாரா என்று பிறஅடியார்களையும் சேர்த்துப்

பன்மையிற் கூறியது, அடிகள் தமது உள்ளத்தில் இறைவனுடைய வியாபகத்தன்மையை அத்துவிதமாய்க் காணுங்கால், அவ்வியாபகத்தன்மையில் விளங்குகின்ற பிறஅடியார்களையும் தமது வியாபக உள்ளத்தில் காணுதல்பற்றியாகும். "தூய - ஞான நாட்டம் பெற்றபின் யானும் - நின்பெருந் தன்மையுங் கண்டேன் காண்டலும் - என்னையுங் கண்டேன் பிறரையுங் கண்டேன்" என்று பட்டினத்துப் பிள்ளையார் திருவிடைமருதூர் மும்மணிக்கோவை (செ. 13) கூறியிருக்கின்றமை காண்க. தூயமெய்ஞ்ஞானம் பெற்றபின் வினை சார்தற்கு இடமில்லை யாதலின், அருவினை சாரா என்றார். வினை சாதியொருமையாய் நல்வினை தீவினைகளைக் குறிக்கின்றது ஆதலின் சாரா என்ற பன்மைவினை கொண்டது. அவலம் அடையா - நல்வினை தீவினைகளே உலகிலுள்ள இன்பத்துன்பங்களுக்குக் காரணமாகலின் வினை நீங்கின காரணத்தால் துன்பங்களுமிலவாயின. பேரின்பத்தை நோக்க நல்வினையால் வரும் சிறிய இன்பமும் துன்பத்தோடு வைத்து எண்ணப்படுகின்றது. அவலம் - சாதி யொருமைப் பெயராய் உலகிலுள்ள பல துன்பங்களையும் குறிக்கின்றது ஆதலின் அடையா என்ற பன்மை வினை கொண்டு முடிந்தது. நமனை (உம்) அஞ்சோம் - சிறப்பு உம்மை தொக்கது. சிவன் திருவடிகளை உலகிலுள்ளபொழுது சேர்ந்த அடியார்களிடத்தில் நமனுல் செய்யக் கடவதொன்றுமில்லை யாதலால் நமனை யஞ்சோம் என்றார். நமனை அஞ்சோம் - இதற்குமுன் 91-வது செய்யுளிற்கூறிய விளக்கவுரையைக் கொள்க. அடியார் அடி அடியோங்கட்கு - அடி+ஒம்+கள்+கு - அடியோங்கட்கு; ஓம் - தன்மைப்பன்மை விகுதி, கள் - விகுதிமேல் விகுதி, கு - நான்காம் வேற்றுமை உருபு. "தம்மை யுணர்ந்து தமையுடைய தன்னுணர்வார் எம்மை உடையார்" ஆதலின் அடிகள் அடியார் அடி அடி

னோங்கட்கு என்றார். "இங்கிவர்மு தலாரடியா ரடியோ மென்று திரிந்திடுவர் சிவஞானச் செய்தியுடை யோரே" என்று சிவஞானசித்தியார் 12-ம் சூத்திரம் ௧-வது பாட்டுக் கூறுதல் காண்க. அரியது உண்டே - இங்கே ஏ மதிர்மறைப் பொருளில் வந்தது. குறைவிலா நிறைவாகிய சிவபெருமான் திருவடியைச் சேரப்பெற்ற அடியார்கள் யாதொரு குறைவு மிலர் ஆதலின் 'அரியதுண்டோ' என்றார். அடிகள் திருமறு மாற்றத் திருத்தாண்டகம் 5-வது பாட்டில் "சிவபெருமான் றிருவடியே சேரப்பெற்றோம் - ஒன்றினாற் குறையுடையோ மல்லோம்" என்று கூறி அருளினர். இந்தப் பாட்டில் அடிகள் நமனை அஞ்சோம் என்றதனால் சிவபெருமானுடைய சத்துத் தன்மையையும், அருவினைசாரா என்றதனால் அவனுடைய சித்துத்தன்மையையும், அவலம் அடையா என்றதனால் அவனுடைய ஆநந்தத் தன்மையையும் தம்மிடத்தில் விளங்கப் பெற்றார் என்பது கூறப்பட்டது. மேலே 90-வது பாட்டிற் கூறப்பட்ட எண்குணங்களின் வெளிப்பாடுகளும், 91-வது பாட்டிற் கூறப்பட்ட ஆறுகுணங்களின் வெளிப்பாடுகளும் இப்பாட்டிற் கூறப்பட்ட இறைவனுடைய சத்து சித்து ஆநந்தம் (உண்மை அறிவு இன்பம்) என்னும் மூன்று குணங்களின் வெளிப்பாடுகளாயடங்கும்.

நா - ௬. திருக்கன்றப்பூர் - திருத்தாண்டகம்.

௯௫. எவரேனுந் தாமாக விலாடத் திட்ட
திருநீறுஞ் சாதனமுங் கண்டா லுள்கி
உவராதே யவரவரைக் கண்ட போது
வுகந்தடிமைத் திறம்நினைந்தங் குவந்து [நோக்கி

இவர்தேவ ரவர்தேவ ரென்று சொல்லி
யிரண்டாட்டா தொழிந்தீசன் றிறமே பேணிக்
கவராதே தொழுமடியார் நெஞ்சி னுள்ளே
கன்றாப்பூர் நடுதறியைக் காண லாமே.

(ப-ரை) இலாடத்துத் திருநீறும் சாதனமும் இட்ட எவரேனும் - நெற்றியில் திருநீறும் (கழுத்தில்) கண்டியும் தரித்த அடியார்கள் எவராயிருந்தாலும்; கண்டால்- அவர்களைக் கண்டால் ; அவர் அவரைக் கண்டபோதே- அந்த அந்த அடியார்களைக் கண்ட அந்நேரத்திலேயே; உவராதே தாமாக உள்கி உகந்து- அவர்கள் உடலிற் காணப்படும் ஏதாயினும் ஒருகுற்றத்தைப் பார்த்து அருவருக்காமல் திருநீறும் கண்டியும் தரித்த அவர்களது திருவேடத்தை மாத்திரம் சிவபெருமானுடைய திருவேடம் என்று தமக்குள்ளே தாமாக நினைந்து அகமகிழ்ந்து ; அடிமைத்திறம் நினைந்து அங்கு உவந்து நோக்கி - புறவேடம் குறிக்கிறபடி அவர்கள் சிவபெருமானுக்கு மீளா அடிமைகளாய் ஆட்பட்டிருக்கும் தன்மையை உள்ளத்திலே நினைந்து, அந்நினைப்பினாலே உள்ளத்திலே மகிழ்ந்து அவர்களைப் புறத்திலே பார்த்து ; இவர் தேவர் அவர் தேவர் என்று சொல்லி இரண்டு ஆட்டாது ஒழிந்து - சிலரைக் குறிப்பாகச் சுட்டி இவர் சிறந்த அடியார், இவரைக் காட்டிலும் அவர் சிறந்த அடியார் என்று வேற்றுமை பாராட்டி இரண்டு தன்மைப்படப் பேசாது, அவ்வாறு பேசுதலைத் தவிர்ந்து ; ஈசன் திறமே பேணி - அவர்கள் எல்லாரையும் ஒரு தன்மையாகச் சிவபெருமானுடைய அடியார்கள் என்று மாத்திரம் நினைந்து அவர்களிடம் அன்பு செய்து ; கவராதே தொழும் அடியார் நெஞ்சினுள் - ஒருப்பட்ட கருத்தை உடையவராய் வணங்குகின்ற அடியார்களுடைய உள்ளத்தினுள் ; கன்றாப்பூர்

நடுதறியைக் காணலாம் - திருக்கன்றாப்பூரில் திருக்கோயில் கொண் டருளியிருக்கின்ற சிவலிங்கப்பெருமான் வீற்றிருந் தருளுதலை நாம் காணலாம். 12

(விளக்கவுரை) சிவஞானபோதம் 12-வது சூத்திரம் கூறுகிற படி இந்தத் தேவாரப்பாட்டு சீவன்முத்தர்கள் தாங்கள் அடையப்பெற்ற அத்துவித நிலையினின்று, மெலிதாகிய எஞ்சி நிற்கிற பிராரத்த வினையாற்றாக்கப்பட்டு வழுவாதிருக்கும் வண்ணம், அடியார்கள் திருவேடத்தைக்கண்டு அவர்களை அரன் எனத் தொழல்வேண்டும் என்று கூறுகின்றது. மேலே 35 முதல் 88 வரையுள்ள நான்கு தேவாரப்பாட்டுக்களில் முறையே சரியையாளர், கிரியையாளர், யோகிகள், ஞானிகள் வழிபட்டு அருள் விளக்கம் பெற்ற திருக்கோயிலை அர னைனச் சீவன்முத்தர்கள் தொழல்வேண்டும் என்பது கூறப் பட்டது. இறைவன், எல்லா உயிரில்பொருள்களிலும் உயிர்ப் பொருள்களிலும் நிறைந்திருப்பினும், மந்திர நியாசம் பெற் றும்; அருச்சகர்களாலும் அடியார்களாலும் வழிபடப் பெற் றும் அருள்விளக்கம் பெற்றிருக்கிற உயிரில்பொருளாகிய சிவலிங்கவடிவிலும், சிவோகம்பாவனை செய்தும், அஞ்செழுத் தோதியும், உள்ளமாகிய குறியில் வைத்து அவனை வழி பட்டும் மலத்தொடக்கு நீங்கி அருள் விளங்கப்பெற்றிருக்கிற உயிர்ப்பொருளாகிய அடியார் வடிவிலும் சிறப்பாய் வீற்றிருக்கின்றான் என்பதுபற்றித் திருக்கோயிலும் திருவேட மும் சீவன்முத்தர்களுக்குச் சிறந்த வழிபாட்டிடங்களாய்க் கூறப்பட்டன. ஏனையோர்கள் சிவனை மறவாதிருத்தற்கு அவ்விடங்களில் வழிபடல்வேண்டும் என்பது சொல்லாமலே அமையும். எவரேனும் என்றதனால் சாதி குலம் பால் நிறம்

முதலிய எவ்வகைய உலகவேற்றுமைகளும் பாராட்டக் கூடாது என்பது பெறப்படுகின்றது. சாதனம்- அடையாளம்; உருத்திராக்கமாலை கருணைக்கு அடையாளமா யிருத்தலின் அது இங்கே கண்டியைக்குறிக்கிறது. அவர் அவரைக் கண்ட போழ்தே திருவேடத்தைக் காண்டலும், அத்திருவேடத்தோடு தொடர்புடைய சிவபெருமானுடைய நினைவு, சமாதியை விட்டுப் பிரிந்த காலத்தில் ஒரோவழி மறந்திருக்கும் சிவன் முத்தர்களுடைய உள்ளத்தில் உடனே எழல் வேண்டும் என் பார் கண்டபோதே என்றார். சிவபெருமானுடைய திரு வேடங்களின் சிறப்பைப்பற்றித் திருஞானசம்பந்த அடிகள், திருவிய லூர்த் தேவாரப்பதிகம் பதினொரு செய்யுட்களிலும் கூறியருளினார். உவராதே தாமாக உள்கி உகந்து-உவர்த்தல் - அருவருத்தல். திருவேடத்தை ஒழிந்து உறப்புக்குறை, அழுக்கு உடல் முதலிய குற்றங்களை மனத்திலே நினைத்தல் கூடாது என்பார், உவராதே உள்கி உகந்து என்றார். தாமாக என்ற அடைமொழியை 'இலாடத்திட்ட' என்பதனோடாவது 'கண்டால்' என்பதனோடாவது சேர்த்துப் பொருள் கொள்ளு தல் பொருத்தமில்லையாதலின், 'உகந்து' என்பதனோடு சேர்த்துப் பொருள் உரைக்கப்பட்டது. பிறர் நினைப்பூட்டாமல் தாமாக இயல்பில் நினைந்து அகமகிழல் வேண்டும் என்பார் 'தாமாக உள்கி உகந்து' என்றார். சிவபெருமான் திருவேடத்தைத் தாங்கியிருக்கிற அடியாரைக் கண்டவுடன் அவரைச் சிவபெரு மான் தமர் என்று நினைந்து மகிழல் வேண்டும் என்பது கூறப் பட்டது. அடிமைத்திறம் நினைந்து அங்கு உவந்து நோக்கி - திருவேடத்தைக்கண்டு நினைந்து மகிழ்ந்தபின் அத்திருவேடம் குறிக்கிற ஆண்டான் அடிமைத் தொடர்புக் கருத்தைச் சிவன் முத்தர்கள் நினைந்து தாம் சிவபெருமானுக்கு ஆட்பட்டு நிற்கும்

அத்துவித நிலையை அத்திருவேடக் கருத்திற்கண்டு நினைந் தும் சிவபெருமானுக்கு ஆட்பட்டிருக்கும் அத்திருவேட முடைய அடியார்களுக்குத் "தம்மை யுணர்ந்து தமையுடைய தன்னுணர்வார் - எம்மை உடையார்" என்னும் முறைமை பற்றித் தாங்களும் ஆட்பட்ட அடியார்கள் என்று நினைந்து மகிழ்தல் வேண்டும் என்பார் அடிமைத்திறம் நினைந்து அங்கு உவந்து நோக்கி என்றார். இவர் தேவர் அவர் தேவர் என்று சொல்லி இரண்டு ஆட்டாது - தேவர் - இறைவனது அருள் விளக்கமுடையவர். ஆட்டாது - உரையாடாது ; ஆட்டாது —ஆடு + ஆ + த் + உ (வினையெச்சவிகுதி) டகரவொற்றிரட் டித்து ஆட்டாது என்றாயிற்று. இருதன்மைப்படப் பேசுதல் சீவன்முத்தர்கள் சிவபெருமானுடைய திருவடிகளிற் பற்றி யிருக்கும் கருத்தொருமைப்பாட்டுக்குத் தடையாயிருக்குமாத லின் இரண்டு ஆட்டாது என்றார். ஈசன் திறமேபேணி-ஈசன் திறம் பேணுதல் - அடியார்களை ஆன்மாக்களாகக் கருதாது அவர்கள் வேடத்தாலும் சிவோகம் பாவனை செய்தலினாலும் தங்கள் இருதயத்தானத்தில் ஒரு குறியின்கண் வைத்து சிவனைக் கூடும் செயலாலும் சிவனே யாவர் என உவந்து நினைத்தல். ஏ - தேற்றம். ஈசன் திறம் இறைவனுடைய மாறுதலில்லாத தன்மை. கவராதே தொழும் அடியார் - கவர்தல் - பிரிதல். அவர் தேவர் இவர் தேவர் என்று இரண்டு படப் பேசுதலினாலுண்டாகும் மனவேற்றுமை ; இந்த மன வேற்றுமை மன ஒருமைப்பாட்டுக்கு மாறாய், சீவன்முத்தர்க ளுடைய அத்துவித நிலையை வழுவச்செய்யுமாதலின் கவ ராது தொழும் அடியார் என்றார். கவராது தொழுதல் என்பது யாதொரு வேற்றுமையும் மனத்தில் நினையாமல் அடியார்களைச் சிவனே என்றும் சிவனுக்கு ஆட்பட்டிருக்கிற

அடியார்களுக்குத் தாங்களும் அடிமைகள் என்றும் ஒருமைக் கருத்துடன் நினைத்து வணங்குதல். நெஞ்சினுள்ளே கன்றாப்பூர் நடுதறியைக் காணலாம் - இப்பேர்ப்பட்ட சீவன்முத்தர்களாகிய அடியார்களுடைய உள்ளத்தில் சிவபெருமான் மகிழ்ந்து அவர்களைத் தானாக்கி அத்துவித நிலையிற் கலந்து விளங்கி யிருப்பன் ஆதலின் அவ்வுள்ளத்தில் திருக்கன்றாப்பூர் சிவலிங்கப்பெருமானைக் காணலாம் என்றார். படமாடும் திருக்கன்றாப்பூர்க்கோயிலில் தாவரவடிவில் வீற்றிருக்கும் சிவபெருமான், நடமாடும் கோயிலாகிய அடியாருடைய தூய உள்ளத்திலும் வீற்றிருப்பன் என்பது கூறப்பட்டது. இக் கருத்து, மேலே 80-வது பாட்டிலும் கூறப்பட்டிருத்தல் காண்க. நடுதறி - வினைத்தொகை. சைவப்பெண் ஒருத்தி வைணவனுக்கு வாழ்க்கைப்பட்டு, மாமியார் வீட்டார் காணாதபடி, கன்றுக்குட்டி கட்டியிருந்த ஆப்பையே சிவமாகப் பாவித்துப் பூசை செய்துவர, ஒரு நாள் அவள் கணவன் அதைக் கண்டு சினந்து அந்த ஆப்பை (முளையை)க்கோடரியால் வெட்ட, சிவபிரான் அவ்வாப்பிலிருந்து வெளிப்பட்டார். அக் காரணம்பற்றி இத்தலம் கன்றாப்பூர் என வழங்கப்படுகிறது. ஆகவே நடுதறி என்பது சிவலிங்கப்பெருமான் என்ற பொருள்பட வந்தது.

## நா - ரு. திருவீழிமிழலை — திருக்குறுந்தொகை.

கூகூ. கருவ னேகரு வாய்த்தெளி வார்க்கெலா
மொருவ னேயுயிர்ப் பாயுணர் வாய்நின்ற
திருவ னேதிரு வீழிமி ழலையுட்
குருவ னேயடி யேனைக் குறிக்கோளே.

(ப-ரை) கருவனே - உலகம் தோன்றுதற்கு நிமித்த காரணனு யிருக்கிறவனே ; கருவாய்த் தெளிவார்க்கு எலாம் - உன்னை முழுமுதற் கடவுளாகத் தெளிவாய் அறிந்தவர்கள் எல்லாருக்கும் ; ஒருவனே - ஒப்பற்ற தனிப்பொருளாயிருக் கிறவனே; உயிர்ப்பாய் (உம்)- இயங்குகின்றஉடலில் மூச்சாயும்; உணர்வாய் (உம்) - உயிரில் இயங்குகின்ற உணர்வாயும் ; நின்ற திருவனே - என்னுள்ளே நிலையாய் நிற்கின்ற அருட் சத்தியை உடையவனே; திருவீழிமிழலையுள் குருவனே- திரு வீழிமிழலையில் திருக்கோயில்கொண் டெழுந்தருளி, எல்லா உயிர்களுக்கும் அறியாமைக் காலத்தில் அறிவாய் உள்நின்றுணர்த்தியும், பருவம் வந்த காலத்தில் புறத்தி லே மானுட வடிவில் வந்து அறிவுணர்த்தியும் விளங்கு கின்ற குருவானவனே; அடியேனை (உம்) குறிக்கொள் - ஆண்டானாகிய உன்னால் ஆட்கொண்டருளப்பெற்ற அடிமை யாகிய என்னையும் ஒருவனாகக் குறிவைத்து அடியார் கூட்டத் திற் சேர்த்துக் காத்தருள்வாய். 13

(வி-ரை) கருவன்-கரு + அன் - கரு - நிமித்தகாரணம் (Efficient cause) இறைவன், 'உலகம் தோன்றல் வேண்டு மென்று சங்கற்பித்த பொழுது முதற்காரண மாகிய மாயை யிலிருந்து உலகம் தோன்றலால் கருவனே என்றார். ஏகான்ம வாதிகள் உலகம் தோன்றுதற்கு முதற் காரணனுயிருக் கிறவனும் இறைவனே என்று பிழைபடக் கூறுவர். கரு வாய்த் தெளிவார்க்கு எலாம் ஒருவனே - எல்லாம் என்பது எலாம் எனக்குறைந்தது. தெளிதல் என்பது உறுதியான படி உள்ளத்திற் றெளிந்து அறிதல். இந்தத் - தெளிவறிவு இறைவனுடைய சிறப்பியலை அவனோடு இரண்டறக் கலந்து

உணர்கிறவர்களுக்கு மாத்திரம் உண்டாகும். அவர்களே முழுமுதற் கடவுளாகிய இறைவனே ஐந்தொழில்களையும் செய்கிறவன் என்று அறிவார்கள். இறைவனுடைய பொது இயல்பைமட்டும் அறிகின்ற ஏனையோர் படைத்தல் முதலிய ஐந்தொழில்களில் ஒவ்வொரு தொழிலைச் செய்யும் மூர்த்தியையே கடவுள் என்று கொள்வர்; அத்தொழிலைச் செய்யும் மூர்த்திகளுக்குமேல் அவர்களுக்கு அறிவு செல்லாது ஆகலின். அவர்கள் உலகிற்கு முழுமுதற் கடவுள் ஒருவனே என்ற உண்மையையும் அவன் இலக்கணத்தையும் அறியாது, அம்மூர்த்தி பெரியர் இம்மூர்த்தி பெரியர் என்று கூறிப் பிணங்குவர். ஆதலின், அடிகள் 'கருவாய்த் தெளிவார்க்கெலாம் ஒருவனே' என்றார். தெளிவார்க்கு எலாம் - தெளிந்த எல்லாருக்கும். இந்தச் சொற்றொடரால் பெறப்படும் கருத்தால் இப்பாட்டு அணைந்தோர் தன்மையின்கீழ் வைக்கப்பட்டது. உயிர்ப்பாய் உணர்வாய் நின்ற திருவன் - நிற்கின்ற என்பது தெளிவுபற்றி நின்ற என வந்தது. திரு + அன் - திருவன் - அருளாகிய சத்தியை உடையவன். உயிர்ப்பு - சுவாசம், மூச்சு. அருட்சத்தி இயக்காமல் உடலில் உயிருக்கு ஆதாரமா யிருக்கிற மூச்சு நிகழ்தலும், உயிரில் இறைவனை உணரச் செய்தற்குக் காரணமாயுள்ள உணர்வு நிகழ்தலும் கூடா ஆதலின் உயிர்ப்பாயுணர்வாய் நின்ற திருவனே என்றார். அருட்சத்தி எப்பொழுதும் நீங்காமல் நிற்றலின் நின்ற திருவனே என்றார். அடியேனை என்பதில் உம் தொக்கது. உம்மை இழிவு சிறப்பு.

## ௬. — எ. திருவாரூர். பண். பழம்பஞ்சுரம்.

௬எ. இங்ஙனம்வந் திடர்ப்பிறவிப் பிறந்தயர்வே னயராமே

அங்ஙனம்வந் தெனையாண்ட வருமருந்தேன் னாரமுதை
வெங்கனல்மா மேனியனை மான்மருவுங் கையானை
எங்ஙனம்நான் பிரிந்திருக்கே னென்னாரூ ரிறை
[வனையே.

(ப-ரை) இங்ஙனம் வந்து இடர்ப்பிறவி பிறந்து அயர்வேன் - (நான் கைலாயமலையில் கமலினி அனிந்திதை என்னும் உமாதேவியாருடைய இரண்டு சேடிப் பெண்களையும் மனத்தில் நினைத்ததால் நிலவுலகில்) இப்படி திருநாவலூரில் சைவ அந்தணனாய் வந்து துன்பம் நிறைந்துள்ள மானுடப் பிறப்பில் பிறந்த காரணத்தை மறந்து திகைத்துக்கொண்டிருந்தவனாகிய என்னை; அயராமே - அங்ஙனம் மறவாமல் (நான் அடையப்போகும் உலக வாழ்வு இன்னது என்று அறியும்படி); அங்ஙனம் வந்து எனை ஆண்ட என் அருமருந்து ஆர்அமுதை - திருவெண்ணெய்நல்லூரில் அப்படி ஆதிசைவ அந்தணக் கோலங்கொண்டு வந்து, ஆவண ஓலை காட்டி, நான் செய்யப் புகுந்த மணத்தைத் தடுத்து, என்னை அடிமையாக அருள்செய்து ஆண்டுகொண்ட எனக்கு அருமையான மருந்துபோல்வானும், இனிமை நிறைந்த அமுதுபோல்வானும்; வெங்கனல் மாமேனியனை- வெம்மையான அனலுருவான பெருமை பொருந்திய திருமேனியை உடையவனும்; மான்மருவும் கையானை - தனது இடது கையில் தாருகா வனத்து இருடிகளால் ஏவிவிடப்பட்ட மான் ஒன்றை உடையவனும்; என் ஆரூர் இறைவனை - எனக்கு இவ்வுலகில் பல இன்ப நலங்களைச் செய்து திருவாரூரில் எழுந்தருளியிருக்கிற புற்றிடங் கொண்ட பெருமானுமாகிய சிவபெருமானை; நான் எங்ஙனம் பிரிந்திருக்கேன் - நான் எவ்வாறு பிரிந்திருக்க முடியும்? (முடியாது என்றபடி).

(வி-ரை) இந்தப் பாட்டு அடங்கிய தேவாரப் பதிகம் சுந்தரமூர்த்தி அடிகளால் எந்தச் சமயத்தில் பாடப்பட்டது என்பதற்கு மேலே 64-வது பாட்டிற் கூறப்பட்ட நிகழ்ச்சிக் குறிப்பைக் கொள்க. இங்ஙனம் அங்ஙனம் - இந்த இரண்டு சுட்டுப் பெயர்ச் சொற்களும் அறிசுட்டுக்களாய்ப் பதவுரையிற் கூறப்பட்டபடி சுந்தரமூர்த்தி அடிகளுடைய வரலாற்று நிகழ்ச்சிகளைக் குறிக்கின்றன. அடிகள் தமது மனத்து உணர்வுகளிலுள்ளனவற்றை வெளியே இங்ஙனம் அங்ஙனம் என்று கூறுகின்றார். அணிமையைக் குறிக்கிற இங்ஙனம் நிலவுலகிற் பிறந்ததையும், சேய்மையைக் குறிக்கிற அங்ஙனம் இறைவன் உலகிற்கு வந்து ஆண்டருளினதையும் குறிக்கின்றன. அடிகளுடைய வரலாறு தெரிந்தவர்களுக்கு அவை இன்ன என நன்கு விளங்குமாதலின், அந்நிகழ்ச்சிகள் சுருங்கிய பாட்டிற் கூறப்பட வேண்டாவாயின. அயர்வேன் - அயர்தல் - மறத்தல், என்ன காரணத்தினால் இந்தத் துன்பமுள்ள மானிடப் பிறவி வந்தது என்பதை யறியாது மறந்திருத்தல்; கைலாய மலையிலிருந்த பொழுது அறிந்திருந்தும், மானுடப் பிறவிக்கு வந்தபின் அறியாதிருந்ததனால் அயர்வேன் என்றார். அயராமே - மறவாமல் - அதாவது மறதியினின்று நீங்கி அறியும்படி. என் அருமருந்து ஆர் அமுது - இறைவன் பிறவி நோயைத் தீர்க்கிறவன் ஆதலின் அருமருந்து என்றும், பிறவி நோயைத் தீர்ப்பதுடன் பேரின்பமும் அளிக்கின்றவன் ஆதலின் ஆர் அமுது என்றும் அடிகள் உவமைகள் கூறினார். இறைவனாலன்றி வேறுவழியில் நீங்காத பிறவிநோய் என்பார் அருமருந்து என்றும், தெவிட்டாதிருக்கிற நிலையான பேரின்பம் அளிக்கிறவர் என்பார் ஆர் அமுது என்றும் அவர் அடைமொழிகள்

கொடுத்துக் கூறினார். அருமருந்து மலநீக்கத்துக்கும், (Negative aspect) ஆர்அமுது இன்பவிளக்கத்துக்கும் (Positive aspect) உவமைகளாய் வந்தன. என்ஆரூர் இறைவனை நான் எங்ஙனம் பிரிந்திருக்கேன் - அகமும் புறமும் ஒரு தன்மைக் காட்சியுள்ள அடிகள் அகத்தில் எப்பொழுதும் சிவபெருமானை அவனோடு அத்துவிதமாய்க் கலந்து நினைந்துகொண்டிருத்தல்போல், புறத்திலும் தமக்கு நீண்டகாலம் பழக்கமுள்ள திருவாரூர்க் கோயிலில் வீற்றிருக்கின்ற புற்றிடங்கொண்ட பெருமானைப் பிரிந்திருத்தல் தம் மனத்துக்கு முடியாதிருக்குந் தன்மையைக் கூறுவார் 'எங்ஙனம் நான் பிரிந்திருக்கேன்' என்றார். பிரிந்திருக்கேன் என்பதற்கு மேலே 64-வது பாட்டின்கீழ் எழுதப்பட்ட விளக்க உரையைக் கொள்க.

சு-எ. திருக்காளத்தி. பண்-நட்டராகம்.

கூ௪ மறிசேர் கையினனே மத மாவுரி போர்த்தவனே
குறியே யென்னுடைய குரு வேயுன்குற் றேவல் [செய்வேன்
நெறியே நின்னடியார் நினைக் குந்திருக் காளத்தியுள்
அறிவே யுன்னையல்லா லறிந் தேத்தமாட்டேனே.

(ப-ரை) மறிசேர் கையினனே - இடதுகையில் மானை ஏந்தியவனே; மத மா உரி போர்த்தவனே - மதம் பொருந்திய கயாசுரனென்னும் யானையினது தோலை உரித்து உடல்மேல் போர்த்துக்கொண்டவனே; குறியே - நான் அடையப் பெறும் பேரின்பப் பேற்றிற்குக் குறியாக இருக்கிறவனே; நெறியே - அக்குறியை அடைய வழியாயு மிருக்கிறவனே;

என்னுடைய குருவே - நான் பேரின்பம் அடைதற்கு எனக்கு அறிவுரை உணர்த்தி வழிகாட்டுகின்ற குருவாய் இருக்கின்றவனே; உன் குறு ஏவல் செய்வேன் - ஆண்டானாகிய நீ எனக்குப் பணித்த சிறிய ஏவல் வினைகளை அடிமையாகிய நான் உவந்து செய்வேன்; நின் அடியார் நெறியே நின்று நினைக்கும் - நினது மெய்யடியார்கள் அருள் அறிவு வழியில் நிலைபெற்று நின்று நின்னை மனத்தினால் நினைந்து, வாக்கினால் வழுத்திக் கைகளினால் வணங்குகின்ற; திருக்காளத்தியுள் அறிவே - திருக்காளத்தியில் திருக்கோயில்கொண் டெழுந்தருளி யிருக்கின்ற மெய்யறிவுப் பொருளே; உன்னையல்லால் - உன்னையன்றி வேறொருவரையும்; அறிந்து - முழுமுதற் கடவுளாக நினைந்து; ஏத்தமாட்டேன் - நான் வழிபடமாட்டேன்.

(வி-ரை) குறி - மக்கள் பேரின்பமடைதற்கு இறைவனுடைய திருவடிப்பேறு குறியாயிருத்தலின் குறியே என்றார். நெறி - அக்குறியை அடைதற்கு இறைவனால் வேதாகமங்கள் முதலிய கலைகளில் சமயங்கள் கூறப்பட்டிருத்தலின் நெறியே என்றார். அதுவன்றி இறைவனுடைய பொது இயலில் அமைக்கப்பட்ட திருவடிவங்களும் அவனை அடைதற்கு நெறியாயிருக்கின்றன. "நெறியேயென்னும் நெறிநின்றவர்கள் நினைக்கின்ற நீதி வேதாந்த நிலைக், குறியே யென்னுங் குணக்குன்றே யென்னுங் குலாத் தில்லை யம்பலக்கூத்தனையே" என்று திருமாளிகைத்தேவர் திருவிசைப்பா 4-ம் பாட்டிற் கூறப்பட்டிருத்தல் காண்க. அடியார் நெறி நின்று நினைக்கும் - நெறியானது இங்கே அருள் நெறி. அடியார்கள் திருவருளின் வழி அல்லது ஒன்றனையும் செய்வாரல்லர், ஆதலின் நெறிநின்று நினைக்கும் என்றார். அறிவு - அறிவுப்பொருளா

யிருக்கிறவன், உயிர்களிடம் அறிவு விளங்கிப் பேரின்பமடை தற்கு இறைவனுடைய பேரறிவே காரணமாதலின் அறிவே என்றார். சுந்தரமூர்த்தி அடிகள், திருஞான சம்பந்த அடிகளை 'வம்பறா வரிவண்டு மணநாற மலரும் மதுமலர்நற் கொன்றையா னடியலாற்பேணா - எம்பிரான் சம்பந்தன்'' என்றருளிச் செய்தனர். இந்தப் பாட்டிலும், இதற்கு முந்திய இரண்டு பாட்டுக்களிலும் சிவபெருமானை எப்பொழுதும் மறப்பு நினைப் பின்றி நினைந்துகொண்டிருக்கும் சீவன் முத்தரது இலக்கணம் கூறப்பட்டது.

ச. - க. திருவலிதாயம் - பண் - நட்டபாடை.

கூகூ. கடலி னஞ்சமு துண்டிமை
யோர்தொழு தேத்த நடமாடி
அடலி லங்கைய ரையன்வலி
செற்றரு எம்மா னமர்கோயில்
மடலி லங்குகமு கின்பல
வின்மது விம்மும் வலிதாயம்
உடலி லங்குமுயி ருள்ளளவ்
வுந்தொழ வுள்ளத் துயர்போமே.

(ப.ரை) நடம் ஆடி (உம்) - திருச்சிற்றம்பலத்துள் நின்று நடனம் செய்தும்; இமையோர் தொழுது ஏத்த - தேவர்களெல்லாரும் 'ஆலால நஞ்சம் எங்களை வருத்தா வண்ணம் காவாய்' என்று தன்னை வணங்கித் துதித்த பொழுது; கடலின் நஞ்சம் அமுது உண்டு (உம்)- கடலினின் றெழுந்த நஞ்சை, அமுதை உண்டதுபோல உண்டு (தேவர்

கனைக் காத்தும்) ; அடல் இலங்கை அரையன் வலி செற்று (உம்) - இலங்கைக்கு அரசனாகிய வலிமையுள்ள இராவணனுடைய வலியைக் கெடுத்தும் ; அருள் அம்மான் அமர் கோயில் - உயிர்களுக்கு அருள் செய்கின்ற தந்தையாகிய சிவபெருமான் திருக்கோயில்கொண் டிருக்கின்ற இடமாயிருக்கிற ; மடல் இலங்கு கமுகின் பலவின் - பூமுடிகளோடு கூடிய கமுக மரங்களிலும், பலா மரங்களிலும் ; மது விம்மும் வலிதாயம் - தேன் பொழிகின்ற திருவலிதாயம் என்னும் தலத்திலுள்ள திருக்கோயிலை ; உடல் இலங்கு உயிர் உள்ளளவும் தொழ - (சீவன்முத்தர்கள் தாங்கள் எடுத்த) உடலில் உயிரிருக்கும் காலமுழுவதும் அரன் எனத் தொழுதலினாலே; உள்ளத் துயர் போம் - தங்களுக்கு உடலூழாய்க் கழிய இருக்கின்ற பிராரத்த வினையால் வரக்கடவதாகிய மனத்துன்பம் சிறிதும் அணுகாது. 16

(வி-ரை) நடம் ஆடி - நடனம் ஆடுதல். உயிர்களெல்லாம் மும்மலங்களினின்று நீங்கிப் பேரின்பம் அடைதற்காக இறைவன் அவைகள்மேல் வைத்த பேரருளால் இடைவிடாது செய்துவரும் படைத்தல் முதலிய ஐந்தொழில்களையும் குறிக்கிறது. ஆடி, என்ற சொல்லின் பின் (உம்) தொக்கது. அவ்வாறு பின் வருகிற உண்டு, செற்று என்ற சொற்களுக்குப் பின் தொக்கி நிற்கிற 'உம்' விரித்துப் பொருள் உரைக்கப்பட்டது. கடலில் நஞ்சம் உண்டு - நஞ்சம் உண்ணல் உயிர்களைக் காத்தல் செய்யும் அநுக்கிரகத் தொழிலைக் குறிக்கிறது. அடல் இலங்கை அரையன் வலி செற்று - இராவணனுடைய வலி செற்றல், நிக்கிரக மூலமாய் அநுக்கிரகம் செய்தலைக் குறிக்கிறது. நல்லோர்களைக் காத்தற்கும், தீயோரை நல்வழிப்படச் செய்தற்கும் தீயோரைச்

செறுத்தல் வேண்டப்படுவது. இந்தப் பாட்டில் திருஞானசம்பந்த அடிகள் முதலாவது நடனம் ஆடுதல் ஆகிய இறைவனுடைய அருளைப் பொதுமையிற் கூறிப் பின் அதற்குத் துணைகளாயுள்ள தேவர்களைக் காத்தல், அசுரர்களைச் செறுத்தல் ஆகிய இரண்டு சிறப்புத் தொழில்களையும் உடன் கூறினார். மடல் இலங்கு கமுகின் பலவின் மது விம்மும் வலிதாயம்-என்பது திருவலிதாயம் என்ற தலத்தின்சிறப்பு. இத்தலம் இப்பொழுது பாடி என வழங்கப்படுகிறது. மடல், கமுகின் பூவை மூடி அதனைப் பொதிந்துகொண்டிருப்பது. மடலிலங்கு என்ற அடைமொழி கமுகு என்ற சொல்லை மாத்திரம் தழுவுகிறது. மதுவிம்முதல்-கமுகம் பூவிலிருந்தும் பலவின் சுளையிலிருந்தும் தேன்வெளிப்படுதல். உடல் இலங்கு உயிர் உள்ளளவும் தொழ உள்ளத்துயர்போம் - உடல் என்பது இங்கே தூல உடலை; தூல உடம்பின்றி உயிர் தூல உலகில் விளங்காது ஆதலின் உடலிலங்கு உயிர் என்றார். உள்ள அளவும் என்பது உள்ளளவும் என அகரம் தொகுத்தல் விகாரம் பெற்றது. திருவடிப்பேற்றினை அடைந்த சீவன்முத்தர்கள் தங்கள் சமாதி நிலையை விட்டுப் பிரிந்தகாலத்து ஒரோவழி பிராரத்துவ வினைவயத்தால் புறப்பொருள்களின்மேல் விருப்பு வெறுப்புக்கள் நிகழ்ந்து, அந்நிகழ்ச்சி காரணமாக மாயை மலமும் ஆணவ மலமும் தங்களை உடல் நீங்கும்வரை கூடாதிருத்தற்குத் தங்கள் அறிவு வேட்கை செயல்களை ஆலயத்தை அரனெனத் தொழுதற்கண் நிகழ்த்தல்வேண்டும் என்பார் உடலிலங்குயி ருள்ளளவுந்தொழ என்றார். தொழ என்பது காரணப்பொருளில் தொழுதலினால் என்னும் பொருள்பட வந்தது. உள்ளத்துயர் - உள்ளம்+துயர், மகரவீறுகெட்டு வல்லெழுத்து மிக்கது. பசு கரணம் நீங்கிச்

சிவகரணமாய் மாறின சீவன்முத்தர்களுடைய தூய உள்ளத்தில் பிராரத்த வினைபற்றி வரும் மலத்தொடர்பு காரணமாக ஒரோவழி அத்துவிதநிலையினின்று வழுவுதலினால் உண்டாகும் துன்பம் திருவலிதாயத்துள்ள ஆலயத்தைத் தொழுதலினால் உண்டாகாது ; ஆதலினால் உள்ளத்துயரும் உண்டாகாது என்பது கருத்து. சீவன்முத்தர்களல்லாத உலகர்க்கும் இந்தப் பாட்டின் கருத்துப் பொருந்தும். உலகர்க்குக் கூறும் பொழுது உள்ளத்துயர் என்பதற்கு முற்செய்த தீவினையின் பயனாக உள்ளத்தில் உண்டாகக்கடவதாகிய துன்பம் என்று பொருள் கொள்ளல்வேண்டும். சீவன்முத்தருக்காயினும் உலகருக்காயினும் துன்பமுண்டாதல் உள்ளத்திலே ஆதலின் உள்ளத்துயர் என்றார். ஆலயத்துக்குப்போய் இறைவனை அன்போடு வழிபடுகிறவர்கள் தத்தமக்கு வரக்கடவதாகிய உள்ளத்துன்பத்தினின்று நீங்கி நலம்பெறுவர் என்பது இந்தப் பாட்டிற் கூறப்பட்ட பொதுக் கருத்தாகும்.

திருச்சிற்றம்பலம்.

உமாபதி சிவம்

அருள்முறைத்திரட்டு மூலமும் உரையும் முற்றிற்று.

இறைவன் இன்னருள் எங்கும் விளங்குக.

உ

திருச்சிற்றம்பலம்

# வாழ்த்து.



## அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

அருள்கலை கண்ணு வெண்ணி யரசர்தம்
மாட்சி செய்க
மருளினி னீங்கி யெங்கு மாந்தரின்
புற்று வாழ்க
அருண்மறைத் திரட்டை யோதி யருளினிற்
றிளைக வன்பர்
திருவருள் விளங்கிச் செவ்வே திகழ்கவிவ்
வைய மெல்லாம்.

அருட் பெருநலம் உண்டாகுக.

கணேசன் பிரிண்டிங் பிரஸ், திருநெல்வேலி ஜங்ஷன்—1939

உ

# தேவார அருள்முறைத்திரட்டு.

## பிழை திருத்தம்.

### முகவுரை.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 1 | 15 | சிவாசரியரால் | சிவாசாரியரால் |
| 4 | 10 | தேவார பாட்டுக்கள் | தேவாரப் பாட்டுக்கள் |

### நூல்விளக்கம்.

| | | | |
|---|---|---|---|
| 28 | 10 | மேற்ப பண்படுத் | மேற்பப் பண்படுத் |
| ... | 26 | நாட்டமின்றி பொருள் | நாட்டமின்றிப் பொருள் |
| 29 | 21 | அருளை தங்கள் | அருளைத் தங்கள் |

### பதவுரையும் விளக்கவுரையும்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 20 | 25 | மாக உருத்திரன் | உருத்திரன் |
| 23 | 14 | கூறுவது | எனக்கூறுவது |
| 25 | 13 | தமபலம் | தமபவம் |
| 27 | 26 | அவ்னிடமிருந்து | அவனிடமிருந்து |
| 38 | 9 | பெருள் | பொருள் |
| 40 | 18 | இரத்தம் | — |
| 48 | 19 | நா - ச | நா - ௬ |
| 49 | 27 | விளங்கிற | விளங்குகிற |
| 60 | 15 | பெருளில் | பொருளில் |
| 61 | 12 | தன்னை | இறைவன் தன்னை |
| 62 | 22 | தம அடியார்க்கு | தம்மடியார்க்கு |
| 66 | 28 | என்பது | என்பு |
| 68 | 4 | அறிவுலுத்தின | அறிவுறுத்தின |
| 69 | 27 | (விருப்பம்) | விருப்பம் |
| 72 | 27 | உவமும்- | உவமமும் |

| | | | |
|---|---|---|---|
| 74 | 6 | கமுலடி | கழலடி |
| 74 | 8 | ஒருவர் தன்னுடைய | ஒருவர் தம்முடைய |
| 74 | 23 | கொடுக்கின்ற | கெடுக்கின்ற |
| 75 | 29 | உவமும் | உவமமும் |
| 76 | 8 | திருத்தாண்டகம் | திருத்தாண்டகம் |
| 77 | 2 | என்னிடத்திலுள்ளே | என்னிடத்திலுள்ள |
| 81 | 14 | யெங்ஙனங் | வெங்ஙனங் |
| 82 | 12 | உ.யிர்ப்பு - | உயிாப்பு உளே |
| 88 | 9 | விடயியாது | உயிர் விடயியாது |
| 99 | 15 | வெண்ணீறணிந்துப | வெண்ணீறணிந்தும் |
| 99 | 22 | மால் கொண் - ால் போல | மால் கொண்டால் போ |
| 100 | 8 | அறியலுற்ற | அறியலுற்று |
| 101 | 3 | கூறினார் | கூறினாள் |
| 102 | 8 | மயக்குவேன் | மயங்கு வேற்கு |
| 104 | 25 | அகமகிழ்சியினால் | அகமகிழ்ச்சியினால் |
| 108 | 23 | கூறினாள் | கூறினார் |
| 113 | 7 | திருக்குறுந்தெகைத் | திருக்குறுந்தொகைத் |
| 116 | 2 | திருநாவுகாசு | திருநாவுக்கரசு |
| 118 | 5 | பெண்ணே | பெண்ணை |
| 118 | 19 | தன்மை (இகழும்) | தன்மை |
| 119 | 4 | எ - | நா - |
| 128 | 18 | சமபத்தி | சமயத்தி |
| 129 | 16 | றுய்ந்கவாறே | றுயந்தவாறே |
| 142 | 21 | தீயி | தீயிலே |
| 145 | 1 | கூ. அறியுநெறி | ரு, அருளுருவிலே |
| 158 | 11 | முடியாது | முடியா |
| 171 | 4 | கத்திட்டோர் | கற்றிட்டோர் |
| 171 | 28 | செய்யுள் | செய்யுளிற் |
| 173 | 26 | பொறிகளைப் | பொரிகளைப் |
| 174 | 16 | கோயிலிலிருக்கும் | கோயிலிருக்கும் |
| 182 | 21 | விகுதி கெட்டது | விகுதி |
| 185 | 14 | அஃறினை | அஃறிணை |
| 189 | 8 | உள்ளளத்தில் | உள்ளத்தில் |
| 193 | 7 | பெயர்த்தும் மவனுக்கே | பெயர்த்துமவனுக்கே |
| 204 | 3 | புன்னை மலரினது | புன்னை மரத்தினது |
| 206 | 9 | எம்பிரானெக்கமுத | எம்பிரானெனக்கமுத |

| | | | |
|---|---|---|---|
| 209 | 10 | உருதுகலால் | உருகுதலால் |
| 211 | 6 | நோக்கப்படுதல் போல | நோக்குதல் போல |
| 216 | 27 | ரோதமலத்தால் | திரோதமலத்தால் |
| 218 | 21 | வானைக்காவல் | வானைக்காவில் |
| 224 | 7 | அழிவு அமைவும் | அழிவும் அமைவும் |
| 239 | 11 | கண்ணினார் | கண்ணினாற் |
| 239 | 24 | வழி | வழிபடு |
| 244 | 9 | வைச்சபொருணை நமக்கு | வைச்சபொருணமக்கு |
| 247 | 9 | தாமும் மகிழ்வர் | தாமு மகிழ்வர் |
| 264 | 8 | பலதாற் | பலகாற் |
| 270 | 24 | ஆனந்தவெள்ளத்துக்கும் | ஆனந்தவிளக்கத்துக்கும் |
| 275 | 4 | செய்யதலின் | செய்தலின் |
| 275 | 4 | அக்சுக்கும | அச்சுக்கும |
| 275 | 12 | துணைகளா | இணைகளா |
| 292 | 3 | பேணிக் | பேணிக் |
| 297 | 19 | efflcient | efficient |